10

சுய

பரப்பிரஹ்மணேநம:

# ஸ்ரீ வித்தியாரண்ணிய சுவாமிகள்

திருவாய்மலர்ந்தருளிய

# சர்வதரிசன சங்கிரகம்.

இது

விஷ்ணுபுரம் - பிரஹ்மஸ்ரீ

இராமசந்திர சாஸ்திரியாரவர்களால்

சம்ஸ்கிருதத்தினின்றும் தமிழில்

வசனவடிவமாக மொழிபெயர்க்கப்பட்டு,

சென்னை,

ஹிந்து தியலாஜிகல் ஹைஸ்கூல்

தமிழ்ப்பண்டிதர்-

கோ. வடிவேலுசெட்டியாரவர்களாலும்,

ம. சண்முகமுதலியாரவர்களாலும்,

செவ்வியநடையி லெழுதப்பட்டு,

சென்னை,

கோமளேசுவரன் பேட்டை,

சச்சிதானந்த அச்சியந்திர சாலையில்

பதிப்பிக்கப்பட்டது.



விலை ரூபா 2 - 8 - 0.

**1910.**




உ

# முகவுரை.

மக்களாய்ப்பிறந்த வொவ்வொருவருந் தத்தமது வாழ்நாளை நல்வழியி லுபயோகித்தற்குப் பரமசாதனமா யிருப்பது அவரவரது மதவிசாரமேயாம். மதவிசாரமாவது உடல், உயிர், பரம், உலகம், பந்தம் வீடு அவற்றின் சாதன மென்றற் றொடக்கத்தனவற்றின் தன்மைகளை நியாயவாயிலாக ஆராய்ந் தறிதலாம். இவற்றின் சொரூபங்களைப் பரஸ்பரம் வேற்றுமைப்பட விசாரவாயிலாகத்தீர்மானித்தவர் பலராதலின்,மதமும் பலவாயிற்று. அம்மதங்களெண்ணிறந்தனவா யிருப்பினும் அவையாவு முற்றுநோக்குழி லோகாயத (நாஸ்திக) மதமுதல் சாங்கர(வேதாந்த)மதமீறாயுள்ள 16 மதங்களுள், இலக்கணவகையால் பெரும்பான்மையும், அந்தர்க்கதமாம். இவற்று ளொவ்வொருமதமு மெவ்வாற்றானும் 'நல்லனவற்றைப் புரிதல் வேண்டும், தீயனவற்றை யொழித்தல்வேண்டும்' என்று வற்புறுத்திக் கூறி, முடிவில் மேனிலையை யடையச் செய்தலின் மொவ்வொருவருந் தத்தம் வாழ்நாளை நல்வழியி லுபயோகிப்பதற்கு மதவிசாரம் பரமசாதனமாமென்பது நன்கு விளங்கும்.

மேற்குறித்த 16 மதசித்தாந்தங்களையு முறைபாக வகுத்துக்கூறும் நூல் சம்ஸ்கிருதத்தி லிருப்பதுபோ லேனைய பாஷையிலின்றென்பது பிரசித்தம்.

அப்பதினறுமத சித்தாந்தங்களையும் நந் தமிழ்மக்கள் நன்குணர்ந்து யுக்திபுத்தி பெரிது முடையராமாறு, இற்றைக்கேறக்குறைய 600 வருடத்திற்குமுன் ஸ்ரீசங்கரபீடத்தாசிரியராயெழுந்தருளியிருந்த ஸ்ரீவித்தியாரண்யசுவாமிகள் திருவாய்மலர்ந்தருளிய சர்வதரிசன சங்கிரக மென்னும் நூல் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டது. இந்நூல் சம்ஸ்கிருதத்தில் மிகப் பிரசித்திபெற் றிருப்பதென்பது வெளிப்படையாம். இது பிரபோதசந்திரோதயம், சிவஞானசித்தியார் பரபட்சமுதலிய நூல்களியற்றுவதற்குக் கருவூல (பொக்கிஷ)மா யிருந்ததென்பது இந்நூலை வாசிப்பதால் செவ்வே புலப்படும்.

ஒவ்வொருமத சித்தாந்தத்தையும் சுருங்கச் சொல்லலும் விளங்கவைத்தலுமாக வினிதுகூறு மிந்நூலைச் சம்ஸ்கிருதத்தினின்றும் பேரன்புடன் மொழிபெயர்த்துத்தந்த வியாசசூத்திர சங்கரபாஷியத்தின் தமிழ்மொழிபெயர்ப் பாசிரியரும், தார்க்கிக சிரோமணி அப்பாசாஸ்திரியா ரவர்கள் சிஷ்யரும் தௌகித்திரருமாகிய நன்னிலந் தாலுக்கா-விஷ்ணுபுரம்-பிரஹ்மஸ்ரீ-இராமசந்திர சாஸ்திரியா ரவர்களது நன்றி யொருபோதும் மறக்கத்தக்க தன்

றும். இதனைச் சாங்கர தரிசனத்தோடும் அச்சிட்டு வெளிவந்த சம்ஸ்கிருத மூலத்தோடு கைம்மாறின்றிப் பேரன்புடன் ஒத்துப் பார்த்துப் பிழைதிருத்த மெழுதித்தந்த ஸ்ரீகோவிலூர்மடாதிபதியாயெழுந்தருளி யிருக்கும் ஸ்ரீவீரசேகர ஞானதேசிகரவர்களது பாதசேகரராகிய ஸ்ரீசுப்பையசுவாமிக ளவர்களது நன்றியும் ஒருபோதும் மறக்கற் பாலதன்றும்.

இந்நூல் முன்னர் மொழிபெயர்த்தபோது சார்வாகதரிசன முதல் பதஞ்சலி தரிசனமீறுயுள்ள 15 மத சித்தாந்தங்களடங்கிய சம்ஸ்கிருத புத்தகமே கிடைத்தது. இங்ஙனமே இஃதாங்கிலேயபாஷையிலு மொழிபெயர்த் தச்சிடப்பட்டிருக்கின்றது. சாங்கர தரிசனத்தோடு 16 மத சித்தாந்தங்க ளடங்கிய சம்ஸ்கிருத புத்தகம் ஷை 15 மத தரிசனங்களின் தமிழ் மொழிபெயர்ப்பு அச்சிட்ட பிறகு கிடைத்தமையின் ஷை சாஸ்திரியா ரவர்களையும் ஷை சுவாமிகளையுங்கொண்டே சாங்கரதரிசனத்தையு மொழிபெயர்த்துப் பின்னர்ச் சேர்க்கப்பட்டது. முன்னர் மொழிபெயர்த்த சம்ஸ்கிருத மூலத்திற்கும் பின்னர்க்கிடைத்த சம்ஸ்கிருத மூலத்திற்கும் சிற்சிலவிடங்களில் வேறுபாடு காணப்பட்டமையின், அவ்வேறுபாட்டிற் கிணங்கப் பிழைதிருத்தம் பெரும்பாலு மாராய்ந்ததி னிமித்தம் அது சிறிததிகமாயிற்று.

15 மத தரிசனங்களடங்கிய சர்வதரிசனசங்கிரகத்தின் ஆங்கிலேய மொழிபெயர்ப்புப் புத்தகம் ரூ 7—14—0 க்கு விற்கப்படுகின்றது.

சாங்கரதரிசனத்தோடு 16 மத சித்தாந்தங்க ளடங்கிய இத்தமிழ் மொழிபெயர்ப்புப்புத்தகம் யாவருக்கு முபயோகமாமாறு ரூ 2—8—0 விலைக்கே வைக்கப்பட் டிருக்கின்றது.

இவ்வரிய பெரிய சம்ஸ்கிருத கிரந்தத்தைத் தமிழில் மொழிபெயர்த்தச்சிட்டு வெளிப்படுத்துவது கஷ்டசாத்தியமா மென்பது அறிவுடையோர்க்கு விளங்காமற் போகாது.

இந்நூல் சமஸ்கிருதத்தினின்றும் மொழிபெயர்த் தச்சிட்டு முடியுமாறின் னருள்புரிந்த எல்லாம்வல்ல விறைவன் இஃதென்றுந் தமிழுலகத்தில் நிலவுமாறுங் கருணை புரிவாராக.

1—3—1910.

கோ - வ.

ம - ச.

ஓம்

பரப்பிரஹ்மணே நம:.

ஸ்ரீசங்கரபீடத்தாசிரியரா யெழுந்தருளியிருந்த

# ஸ்ரீ வித்தியாரண்யசுவாமிகள்

## சரித்திரச் சுருக்கம்.



ஸ்ரீபரதகண்டத்தில் வசிக்கும் வேதப்பிரமாணவாதிகள் செய்த தபோ விசேடத்தினால் ஸ்ரீவித்தியாரண்யசுவாமிகள் இச் சென்னைமாநகரத்திற்கு வடக்கேயுள்ள கர்நாடகதேசத்திலே, துங்கபத்திராநதிக்கரையில், டம்பை யென்னும் க்ஷேத்திரத்தின் ஒருபாகமாகிய கிஷ்கிந்தா, கோல் கொண்டா வென்று சொல்லப்படுகின்ற விஜய நகரத்தில், இற்றைக் கேறக் குறைய 600 வருடங்கட்குமுன்னர்ப் போதாயன சூத்திரம், கிருஷ்ண யசுர்வேதத்தின் போதாயனிசாகை, பாரத்துவாஜகோத்திரமுடைய பிராமணகுல திலகராகிய மாயனரென்பாரும் அவரதுபத்தினியாராகிய ஸ்ரீமதியென் பாருஞ் செய்த தவப்பேறாக அவதாரஞ்செய்தனர். இவரது சகோதரர் சாயணர், சோமநாதர். இவரது இயற்பெயர் மாதவர்; சிறப்புப்பெயர் மாதவாரியர், மாதவாசாரியர், மாதவபட்டர், மாதவாமாத்தியர் என்றற்றொடக்கத்தனவாம்; வித்தைக்கு ஆரண்யம்போன் றிருத்தலையின் வித்தியாரண்ய ரென்று பெயர் பெறுவாராயினர். ஈசுவரனது கலையே வித்தியாரண்யராக அவதரித்ததென்று கூறப்படுகின்றது. இவரிளமையிலேயே சகல கலைகளிலும் வல்லவராய்ப்பம்பாவனத்திற்சென்று ஒருபர்ணசாலையிற்றவஞ்செய்து கொண் டிருக்கும்போது கி. பி. 1334 வது வருடம், மகம்மது டோக்ளாக் (Mahomed Taghlak) காலத்தில் மாலிக்காபூர் (Malikkafur)என்பவன் ஆனைகுந்தி நகரத்தையழித்தபோது அந்நகரத்தரசனாகிய பூபராயலு தீப்பாய்ந்திறக்க அவனது சேனாதிபதிகளாகிய ஹரிஹரராயலு புக்கராயலு வென்னுஞ் சகோதரரிருவரும் மிகவும் நடுக்கமுற்று மேற்படி வனத்திற் கரந்துறையுமாறு சென்றபோது ஆண்டுத் தவஞ்செய்துள்ள வித்தியாரண்யரைக்கண்டு தமது குறைகளைக் கூறிவருந்தினர். அவர் தமது தபோமகிமையால் வித்தியாரண்யமென்றொரு நகரத்தையுண்டாக்கி அதனைஹரிஹரராயலு அரசுசெய்துவருமாறு ஆக்ஞாபித்தனர்; அவன்காலத்தின் பின்னர் அவன் சகோதரனாகிய புக்காராயலு அந்நகரத்தை யரசாண்டுவந்தனன். அவ்விருவரது பிரார்த்தனைக்கிணங்கி, வித்தியாரண்ய சுவாமிகள் அவர்களுக்கு மந்திரியாகவும் வசிட்டராதியோர்போல் புரோகிதராகவுமிருந்தனர். இவர் மந்திரியாயிருந்தகாலத்தில் கோவாநகரத்தில் அதிக்கிரமித்துத் துன்பஞ் செய்திருந்த மகம்மதியர்களை யொழித்துத் தமதரசனதாணை ஆண்டுஞ் செல்லுமாறுசெய்வித்துச் சப்தநாதரென்னும்மகாவிக்ரஹத்தை ஸ்தாபனஞ் செய்தனர்; கசரமென்னுங் கிராமத்திற்கு மாதவபுரமெனப் பெயர்தந்து

அந்தணர்கட்குத் தானஞ்செய்தனர். ஆங்குள்ள நதி இவரது ஞாபகார்த்தமாக மாதவ தீரமென்று வழங்கப்பட்டு வருகின்றது. இவர் வித்தியாசாலை, அன்னசத்திரம், தேவாலயம் முதலியனவற்றை யளவின்றி ஏற்படுத்தினர். இவர் விவேக வைராக்கியாதி சகலசற்குணங்களாலும் நிறைந்து கிருகஸ்தாஸ்ரமத்தில் பிரஹ்மாத்மவிசார நிஷ்டாபரரா யிருந்தபோது காயத்திரி தேவியைப் பிரத்தியட்சமாகத் தரிசிக்கவேண்டிப் பலதேயத்துமிருந்து அந்தணர்களை யழைப்பித்துக் காயத்திரிஜபஞ் செய்யுமாறு செய்தனர்;அங்ஙனஞ்செய்தும் அதன்பலமாகிய தேவி பிரத்தியட்ச மாகாமையின், தீவிர வைராக்கியமுண்டாய் வித்வத்சந்நியாசஞ் செய்துகொண்டனர். பிறகு அவருக்குக் காயத்திரிதேவி பிரத்தியட்சமாகி வேண்டிய வரத்தைப் பெற்றுக் கொள்ளென்று திருவாய்மலர்ந்தருள, அவரொன்றும் வேண்டாமென் றுபேட்சித்துப் போகும்போது அத்தேவி அவர் பின் சென்று நீ ஏதாவதொன்று பெற்றுக்கொள்ளவேண்டுமென்று வற்புறுதத அவரிக் கர்நாடகதேசமுற்றும் மக்களின் வறுமைப்பிணியகலுமாறு பொன் மழை வருஷிக்கவேண்டுமென்று வரங்கேட்டனர். அவ்வாறே வரந்தந்து தேவிமறைய, ஒன்றேகால் ஜாமபரியந்தம் பொன்நாணயமழை பெய்தது. அதனால் அந்நாட்டா ரியாவரும் வறுமைப் பிணியினின்றும் நீங்கினர்.

வித்வத் சந்நியாசத்தை மேற்கொண்ட ஷை சுவாமிகள் யாக்ஞவல்கியரைப்போல வுபரதி யுடையவராய்ப் பிரஹ்ம விசாரத்திலேயே கருத்துடையவராயிருக்கும்போது ஒருநாள் மலவிசர்ச்சனஞ் செய்ய வெளியிடத்திற் சென்றனர். அப்போது ஒருமகம்மதியமன்னனது பொற்செங்கல் அங்கே வீழ்ந்து கிடக்க அதனைவேறொரு கல்லோடுசேர்த்து அவற்றின்பேரி லுட்கார்ந்து மலோபாதை தீர்த்தனர். அதனை யறிந்த அம்மன்னன் இவருக்குக் கிராமமுதலியனகொடுக்க அவற்றை இவர் அங்கீகரியாது போயினர். அதனாலும் இவரது வைராக்கியம் நன்குவிளங்கும்.

இவர் யாத்திரையாகக் காசிமாநகரஞ் சென்றபோது ஆண்டுள்ள பண்டிதர்களிடத்துத் தாமியற்றிய வேதபாஷியத்தைக்காட்ட அவர்கள் வேதவியாச ரங்கீகரித்தா லிஃதங்கீகரிக்கப் பட்டதாமென்று கூற, இவர் வேதவியாசரைநோக்கித் தவங்கிடந்து பிரார்த்திக்க, அவர் பிரத்தியட்சமாக, அவரை நமஸ்கரித்துத் துதித்து அப்பாஷியத்தைக்காட்ட, அதைக் கண்ணுற்ற வியாசர் இதிலொருசிறிதும் பிழையின்று ...னக்கு வித்தியாரண்யரென்னும் பெயருண்டாகுக என்று திருவாய்ம... நதருள, இவருக்கு அன்றுமுதல் வித்தியாரண்ய ரென்னும் பெயருண்டாயிற்றென்று கூறப்படுகின்றது. பிறகவர் யாத்திரைசெய்யச்சக்தியற் றிருந்தபோது தமது குருவின் கட்டளைப்படி ஸ்ரீசங்கரபகவத் பாதாசாரியசுவாமிகளால் ஸ்தாபிக்கப்பட்ட மடாலயங்களு ளொன்றாகிய சிருங்ககிரிமடாலயத்தி னதிபத்தியத்தையடைந்து, ஸ்ரீசங்கராசாரிய சுவாமிகளின் பன்னிரண்டாவது பதவியால் பிரசித்திபெற்றுப் பேதமத கண்டனஞ்செய்து அத்வைத சித்தாந்தத்தைப் பிரகாசப்படுத்தினர். இவருக்குச் சர்வஞ்ஞவிஷ்ணு, சங்கரானந்த

சுவாமிகள், ஸ்ரீவித்யாதீர்த்தர், பாரதி கிருஷ்ணதீர்த்தர் என்றற் றொடக்கத்தவர் ஆசிரியர்களாவர்.

இவர் ஸ்ரீசங்கராசாரிய பதவியிலிருக்கும்போது காயத்திரி தேவியினனுக்கிரகத்தால் ஸ்ரீபஞ்சதசியை யருளினரென்று கூறப்படுகின்றது.

இவர் பூர்வாசிரமத்திலும் உத்தராசிரமத்திலும் செய்த நூல்கள் வருமாறு:—

1. சதுர்வேத பாஷியம்.
2. அநுபூதிப் பிரகாசம்.
3. பிரஹ்மகீதை.
4. பஞ்சதசி.
5 ஜீவன்முத்தி விவேகம்.
6. திருக்குத்திருசிய விவேகம்.
7. மாதவ விருத்தி (வியாகரண நூல்).
8. நிதாநமாதவம் (வைத்தியநூல்).
9. காலமாதவம்.
10. சதப்பிரஸ்நகல்பலதிகா.
11. பராசரஸ்மிருதி வியாக்கியானம்.
12. ஜைமிநீய நியாயமாலா விஸ்தாரம்.
13. ஆசார மாதவம்.
14. வியவகார மாதவம்.
15. வித்தியாரண்ய காலஞானம்.
16. சங்கரதிக்விஜயம்.
17. சூதசங்கிதையின் வியாக்கியானம்.
18. சங்கரவிலாசம்.
19. விவரணப் பிரமேய சங்கிரகம்
20. உபநிஷத் தீபிகை.
21. பிரஹ்ம விதாசீ.
22. கர்மவிபாகமாதவியம்.
23. பாட்டசாரம்.
24. பாட்டசார வியாக்கியானம்.
25. வேதாந்த விஜயம்.
26. பஞ்சசாரவியாக்கியானம்.
27. சங்கரபாஷிய டீகா.
28. கீதாதாற்பரியம்.
29. ஸ்மிருதிசங்கிரகம்.
30. சர்வதரிசனசங்கிரகம் முதலியனவாம்.

இவர் தாமியற்றியருளிய நூல்களுள், சிலவற்றை மடங்களிலும் சிலவற்றை க்ஷேத்திரங்களிலும் பிரித்துக்கொடுத்துச் சிலவற்றை மலைக்குகைகளில் வைத்துச் சிலவற்றைப் பூமியிற் புதைத்து வைத்தனர் என்றும் சொல்லப்படுகின்றது. இவர்செய்தநூல்களுள், சில வைத்தியசாஸ்திரமும் சில ஜோதிஷ சாஸ்திரமும் சில வியாகரண சாஸ்திரமும் ஏனையவை வேதாந்த சாஸ்திரமும் பிறவுமாம்.

இவ்வாறு அளவிறந்த நூல்கட்காசிரியராயும் பிரஹ்மநிஷ்டராயு மற்புத வித்வச்சிரோமணியாயும் கற்றோராலும் மற்றோராலும் புகழப்படும் பூஜ்ஜியராயு மெழுந்தருளியிருந்த ஸ்ரீவித்தியாரண்ய சுவாமிகள் தேகபதன பரியந்தம் தமது ஆத்மநிஷ்டைக்கு விரோதமின்றி உலோகோபகாரஞ்செய்து முடிவில் சிந்தையும் வாக்கும் செல்லாநிலைமைத்தாய அந்தமில் வீட்டையடைந்தன ரென்பது அவரது திவ்யசரித்திரத்தின் சங்கிரகமாம்.

# சர்வதரிசன சங்கிரகத்தின்

## விஷய அட்டவணை.







# சர்வதரிசன சங்கிரகத்தின்

## பிழை திருத்தம்.



| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 1 | 15 | சாயனு | சாயணு |
| 1 | 21 | சாயன | சாயண |
| 1 | 23 | அனேக | விசித்திர |
| 2 | 23-24 | வெற்றிலைப்...சேர்ந்ததனுல் | கிண்வாதிகளால் |
| 3 | 9 | சுகத்துடன்சேர்ந்துள்ள | தடுக்கமுடியாதடைந்த |
| 3 | 31 | சித்தார்த்தி | ஹிதார்த்தி |
| 3 | 32-33 | என்று...கூறப்பட் டிருக்கின்றது. | என்றுகூறப்பட்டிருக்கின்றது. |
| 4 | 6 | யவை | வியவை |
| 5 | 4 | தாம்பூலாதிகளின் | கிண்வாதி திரவியங்களின் |
| 5 | 15 | அக்கினியின்ஞானம் | அக்கினியின்கண்பிரவிர்த்தி |
| 5 | 17 | ஏன் | ஆற்றங்கரையில் ஏன் |
| 9 | 15 | மாணி | அசுவத்தின்மாணி |
| 10 | 14 | அன்வய | (ஆ) அன்வய |
| 10 | 16 | (ஆ) பட்சத்தில் | எனப்பட்சத்தில் |
| 10 | 17 | (பிறட்சியின்மை) | (பிறழ்ச்சியின்மை) நிச்சயித்தல் முடியாது; |
| 10 | 18-19 | எதுவிலும் நிச்சயித்தல் முடியாது. | எதுவிலும |
| 12 | 30 | இவ்வள்வோடு | இவ்வளவோடு |
| 14 | 25-27 | நிகழ்கால | எதிர்கால |
| 16 | 27 | யுண்டெண்ணிக் | யங்கீகரித்துக் |
| 17 | 2 | உற்பற்றி | உற்பத்தி |
| 19 | 13 | இப்படிட்பட்டதுமன்று. | (இப்படிப்பட்டதுமன்று). |
| 20 | 2 | அநுகதத்தன்மை | அநநுகதத்தன்மை |
| 21 | 4 | சாமனியம் | சாமாநியம் |
| ,, | 9 | நிழுகம் | நிகழும் |
| 22 | 8 | சம்பவிக்கும் | சத்துவம் சம்பவிக்கும் |
| ,, | 9 | அர்த்தஜரிதீய | அர்த்தஜரதீய |
| 25 | 9 | (மட்) பிண்டம் | பிண்டம் |
| 25 | 24 | விஷயத்திற்குச் | (விஷய)த்திற்குச |
| 25 | 28 | கிராககம் (சாதனம்) | கிராகசம் |
| ,, | 33 | கிரகம்-ஞானம், கிராககம்-ஞானசாதனம் | கிராககம=அறிவு. |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 27 | 13 | பேதமாகத்தோன்று | பகிர்முகமாயிருக் |
| 28 | 8 | அபேதசாத்திய | அபேதசாதக |
| 29 | 12 | எதுவிருந்தாலும் | எதுவிருந்தா லேதோ |
| ,, | 19 | ஒரு | ஏதோ ஒரு |
| 30 | 3 | வாசனை | வாசனைகளாகிய |
| 31 | 11 | ரூபிக்க | நிரூபிக்க |
| 32 | 2-4 | பிரத்தியோப | பிரத்தியயோப |
| ,, | 20 | அவுஷ்ணிகத்தை | அவுஷ்ணியத்தை |
| 33 | 8 | காரணத்திற்குக் | தர்மமாகிய காரணத்திற்குக் |
| 33 | 31 | (காரியகாரணங்களின்) | (காரணங்களின்) |
| 36 | 21 | ஆத்மீக | ஆத்மீய |
| 38 | 29-30 | (இலை), ஸ்கந்தம் (பெருங்கிளை), சாகை (சிறுகிளை) | (பூந்தண்டு), சாகை (பெருங் கிளை), ஸ்கந்தம் (சிறுகிளை) |
| 38 | 30 | மூலமாய்ப் | மூலமாய்ப் பரம்பரையாகப் |
| 39 | 3 | மூளை | முளை |
| 39 | 31 | சீயாத்வாதி | ஸ்யாத்வாதி |
| 40 | 7-8 | ஞானவியக்தி களுக்குச் சந்தானம் | வியக்திகளுக்குச் சந்தானி; அதுவும் |
| 40 | 31 | ஞானம் | ஞானத்திற்கு |
| 41 | 78 | நானென்றுகடாதி விஷயமாக | நாநானென்று கடாதிஞான மாக |
| 41 | 15 | ஜாகரூப | ஜாகரூக |
| 41 | 21 | உண்டாகிற | அர்த்தத்தாலுண்டாகின்ற |
| 42 | 4 | ஞானம் | அர்த்தம்போன்று ஞானம் |
| 42 | 25 | மார்த்தாண்ட | மார்த்தண்ட |
| 43 | 5 | சர்வக்ப | சர்வக்ய |
| 43 | 8-9 | தௌதாதிகரால்...சொல் லப்பட்டிருக்கின்றது | தௌதாதிகரால் சொல் லப்பட் டிருக்கின்றது. |
| 43 | 23 | அவனுன்டென்று | அவனுண்டென்று |
| 44 | 29 | சித்திக்கின்றதென்ப தின்று | சித்திக்கின்றதின்றென்ப தின்று |
| 45 | 3-4 | அனேகாந்தாத்மகமாம் (பல முடிபினையுடையனவாம்); | அனேகாந்தாத்மகமா மென்று கூறற்க; |
| 45 | 17 | நிர்மலஞான | நிர்மலஞானமாகிய முக்கியப் [பிரத்தியட்ச |
| 48 | 22 | எப்படி | வியாபாரித்துக்கொண்டு எப் [படி |
| 48 | 26 | சம்யக்தரிசன...லுண் டாய | அசம்யக்தரிசனமுதலிய குணத்தாலுண்டாய |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 48 | 27 | நித்தமாக இடைவிடாம லுண்டாகிற | நித்தமாய அவச்சின்ன விஷய |
| 48 | 29 | அருமையென்னும் | ஈரிஷைஷியவதானத்தோடு கூடிய |
| 48 | 30 | அர்த்தத்தின்ஞானம் | அர்த்தத்தின் ஸ்புடமான பரிச்சேதக ஞானம். |
| 52 | 3 | ஔதைகமும் | ஔதாயிகமும் |
| 52 | 17 | ஔதைகமாம் | ஔதாயிகமாம் |
| 52 | 18 | ஔபசமிக | கர்மோபசம |
| 53 | 2 | அயுக்தபாதகமிருப்பதில் | பாதகமிருப்பதில் |
| ஷை | 23 | திரசய | திரச |
| 54 | 23 | லோகாசாச | லோகாகாச |
| 55 | 8 | அங்ஙனமன்றே | ஆகையினாற்றான் |
| 55 | 31 | ஜீவாஜீவங்கள் | ஜீவாஜீவர்கள் |
| 56 | 10 | நிறைந்த | நனைந்த |
| 56 | 16 | மானம், லோபம் | மானம், பயம், லோபம் |
| 57 | 26 | அநுபவம் | அநுபாவம் |
| 57 | 29 | திற்குத் | திற்கு ஞான |
| 58 | 8 | மோகநீயமான | சாரித்திரத்தில் மோகநீயன |
| 58 | 28 | பதினைந்து | முப்பது மான |
| 59 | 10 | மந்தமென்னும் | மந்தமென்பனவாதி தன் மையால்தனதுகாரியத் தைச் செய்வதில் |
| 59 | 11 | புத்கலகங்ளில் | கர்ம புத்கலங்களில் |
| 59 | 12 | அநுபவம் | அநுபாவம் |
| 59 | 16 | பிரவேசித்த | பிரவேசித்துக் |
| 60 | 28-29 | எந்தக்...செய்கின்றனே | எந்தக்கர்மந் தபோபலத்தி னால் தனதுகாமஙயஉதயா வலியைப் பிரவேசித்துப் பொருந்துகின்றதோ. |
| 61 | 16 | தண்டத்தினாற் | அஸ்த தண்டாதிகளாற் |
| 61 | 17 | தண்டசையோக | அஸ்த தண்டசையோக |
| 61 | 28 | அக்கினிபோலும் | அக்கினியின் சிகைபோலும் |
| 64 | 6 | ஏகாநதத்தை | ஏகாந்தத்தை |
| 69 | 8 | நிர்த்தாரணம் | நிர்த்தாரணமாய பலம் |
| 69 | 22 | விநாசம் | விநாசமும் |
| 69 | 23 | பிரசாத | பிரபா பிராசாத |
| 72 | 6 | எளிதாகச் | அத்தியந்தஞ் |

## சர்வதரிசன சங்கிரகத்தின்

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 73 | 21 | சைதன்னியம் | வஸ்து |
| 74 | 28 | பலனைக் | அற்பபலலனைக் |
| 75 | 27 | தத்துவம் பதங்கள் | தத்துவம் பதங்களின் |
| 76 | 16 | லக்ஷகத்தன்மை | லக்ஷணை |
| 84 | 29 | மரணத்தையும் அவித்தையையுங் | அவித்தையினுல் மரணத்தைக் |
| 85 | 32 | விதேயமன்று | வேதனமன்று |
| 89 | 2 | வெகுவிரீகி | வெகுவிரீகி சமாசம் |
| 89 | 5 | ஸ்தம்பரியந்த | ஸ்தம்பபரியந்த |
| 89 | 7 | பிரத்நீகசொரூப | பிரத்யநீகசொரூப |
| 89 | 31 | தத்சமன்வயாத் | தத்துசமன்வயாத் |
| 89 | 32 | சப்தம் | சப்தம் பிராப்தமான |
| 91 | 15 | வியாஜ்ஜியத்தினுல் | வியாஜத்தினுல் |
| 92 | 18 | தர்மிபேத | தர்மபேத |
| 92 | 30 | பிரமாணத்துடன் | பரிமாணத்துடன் |
| 93 | 4 | கொண்டிருக்கின்றன | கொண்டிருக்கின்றது |
| 94 | 16 | தாரத்துவம் | தாத்ருத்துவம் |
| 94 | 33 | உதாரத்துவம் | தாத்ருத்துவம் |
| 98 | 18-19 | (பேத) தரிசனத்தா | அதரிசனத்தா |
| 99 | 13 | அர்சுனு | அர்ச்சுனு |
| 102 | 3 | பலவற்றின் | எல்லாவற்றின் |
| 102 | 22 | அபகிர்தம் | அவிகிருதம் |
| 105 | 20 | சராசரங்கட்கு | க்ஷராக்ஷரங்கட்கு |
| 105 | 23 | தத்சமன்வயாத் | தத்துசமன்வயாத் |
| 107 | 8-10 | பாரமேசுவரிய | பாரமைசுவரிய |
| 107 | 17 | பதயாகவிதிம்வியாக்கியாஸ்வியாமஃ | பதயோகவிதிஃ வியாக்கியாஸ்யாமஃ |
| 107 | 18 | சப்தத்திற்குப் | சப்தத்திற்குப் பூர்வப்பிரகிருதாபேக்ஷையென்பது பொருள்; |
| 107 | 23 | தேகநித்தியத்துவம் | தேவநித்தியத்துவம் |
| 109 | 4 | ஐவகைமதத்தையும் | ஐவகைமலத்தையும் |
| 109 | 5 | பைஷம் | பைக்ஷயம் |
| 109 | 8 | ஆகாரத்தி | ஆகாத்தி |
| 109 | 15 | யாகமும் | யோகமும் |
| 109 | 17 | அந்தியந்த | அத்தியந்த |
| 110 | 5 | காணுதிருஷ்டாதிருத்துவம் | காணுதிஷ்டாத்திருத்துவம் |
| 110 | 8 | சம்பந்தம் | சம்பந்தித்தன்மை |

## பிழைதிருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 110 | 12 | பசுக்கணம் | பசுக்குணம் |
| 113 | 17 | நித்தியமான பசுவாதி | பசுவாதி நித்தியம் |
| 114 | 23 | சர்வகாரணன் | சர்வகாரண காரணன் |
| 117 | 30 | அநு | பரமேசுவராநு |
| 118 | 17 | போக்கியம் | போகம் |
| 118 | 18 | உபாதனம் | உபாதானம் |
| 119 | 21 | திரோதானம் | திரோபாவம் |
| 120 | 4-5 | கற்பிப்பதில் | கிரகிப்பதில் |
| 120 | 12 | திரோபவம் | திரோபாவம் |
| 120 | 31 | நீயாயமதத்திற் | நியாயமதத்திற் |
| 127 | 25 | காரணம் | காரணம் அதனிவிர்த்தி |
| 134 | 21 | காலத்தாற் | கலையாற் |
| 139 | 22 | காணப்படுகின்றதோ | காணப்படுகின்றதின்றோ |
| 141 | 5 | துக்கமற்றிருப்பினும் | துக்கத்தோடு கூடியதாயும் |
| 141 | 6 | இந்திரிய | புத்தி இந்திரிய |
| 143 | 5 | இரசதரிசனத்தினல் | இரசலிங்கார்ச்சனத்தினல் |
| 143 | 7 | இரசதரிசனம் | இரசலிங்கார்ச்சனம் |
| 148 | 5 | கருமம்...யிருக்கின்ற மையின் | கருமத்திற்குச் சாமானியத்துடன் கூடியிருக்கின்ற தன்மை சாம்யமா யிருத்தலின் |
| 149 | 7 | சங்கியை (எண்) | சாதிருசியம் (ஒப்பு) |
| 149 | 18 | சமவாயிகாரணத்திற்கு | சமவாயிகாரணத்திற்கும் அசமவாயி காரணத்திற்கும் |
| 151 | 20 | உருத்துவ | உருவத்துவ |
| 153<br>154 | 29 to 32<br>2-3 | ஏகத்துவ...கூறப்பட்டிருக்கின்றது. | துவித்துவ சாமானிய ஞானத்தினல் துவித்துவகுணபுத்திகாலத்தில் நாசமடைகின்றது;அதன்பின், துவித்துவம் அபேட்சாபுத்திநாசத்தால்திரவியஞானமுண்டாங் காலத்தில் நிவிர்த்தியடைகின்றது;திரவியஞானத்தினல் குணபுத்தி சம்ஸ்காரம் உற்பத்தியாகும் போது நாசமடைகின்றது.சம்ஸ்காரத்தினல் திரவிய புத்தியும் நாசமடைகின்றது" என்று நாசக்கிரமம் கூறப்பட்டிருக்கின்றது. |
| 154 | 7-8 | (க்ஷணிகமானவிபு) | (க்ஷணிகமாயும் விபுவின் குணமாயுமிருப்பது) |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம் |
|---|---|---|---|
| 154 | 18 | நாசஜனகமான நாசப்பிர தியோகி | விநாசக விநாசப்பிரதியோகி |
| 162 | 17 | சாதனத்தினும் | சாதனுஸ்ரயத்தினும் |
| 162 | 20 | (அறியப்) | (அறிய)ப் |
| 164 | 10 | அபிமானுக்கப்பட்டு | அபிமானிக்கப்பட்டு |
| 164 | 11-12 | அஃது...அதீதகாலம் | அது சவ்வியபிசாரம், விருத்தம், பிரகரணசமை, சாத்தியசமை, அதீதகாலம் |
| 164 | 25 | அவிசேஷசமை | விசேஷாபத்திசமை |
| 165 | 34 | பட்சித | பட்சில [ளில் |
| 166 | 12 | தேகாதிகளில் | அனுத்மாக்களாய தேகாதிக |
| 167 | 30 | ஜாதியத்திற்கு | சஜாதீயத்திற்கு |
| 171 | 16 | புருஷனுக்குச் | புருஷனேடு |
| 171 | 16-17 | சம்பவிப்பது போலாம் | சம்பவித்தலின் |
| 173 | 16 | அதுசித்திக்காது. | அதுசித்திக்காது;அசித்திவரு |
| 173 | 31 | சங்கரகிங்கராற் | சங்கரகிங்கரராற் [தலின். |
| 174 | 6 | ஆசிரயாசித்தி-வருகின்றன | ஆசிரயாசித்தி வருகின்றது |
| 175 | 18 | ஒருடகத்து | ஒருடக்கத்து |
| 175 | 22 | அஃதுண்டகாமையின் | அஃதுண்டாகாமையின் |
| 177 | 7 | லிங்காதிதேசத்தின் அதிதேசவிசாரஞ் | லிங்க அதிதேச அபவாத விசாரஞ் |
| 178 | 22 | வெளிப்டுத்தப்படினும் | வெளிப்படுத்தப்படினும் |
| 179 | 33 | சாதனமவதில்லை | சாதனமாவதில்லை |
| 180 | 9 | அஸ்தத்தாலும் | அஸ்தனுலும் |
| 180 | 15-6 | சப்தபாவனை | சாப்தீபாவனை |
| 180 | 24 | (வியாபகமாகையாலும்) | (வியாபகமா) கையாலும். |
| 180 | 32 | பிரிணமம் | பரிணமம் |
| 181 | 18 | வியர்த்தமாகாது | வியர்த்தமாகாது |
| 181 | 31 | நிருத்தத்தினு | நிருக்தத்தினு |
| 181 | 33 | நிருத்தியென | நிருக்தியென |
| 182 | 5 | ஸ்தானம் | ஸ்நானம் |
| 182 | 30 | கூறப்படடிருக்கின்றது | கூறப்பட்டிருக்கின்றது |
| 183 | 21 | விஷயப்பிர | விஷயப்பிர |
| 185 | 25 | யநுமானங்களுளாம் | யநுமானஙகளாம் |
| 189 | 33 | அபேதம் | பேதம் |
| 190 | 5 | சம்பவின்றபேதமோ | சம்பவிக்கின்றபேதமோ |
| 190 | 20 | கிரக்கப்படாத | கிரகிக்கப்படாத |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 191 | 18 | பிரமாண்ய | பிராமாண்ய |
| 191 | 30 | அநுபலத்தி | அநுபலப்தி |
| 192 | 8 | ஜானசாமக்கிரி | ஞானசாமக்கிரி |
| 194 | 12 | சப்பவித்தலின் | சம்பவித்தலின் |
| 195 | 2 | தோஷ (குற்ற) | தோஷாபாவ |
| 195 | 25 | எதுப்போலியாம் | ஏதுப்போலியாம் |
| 196 | 12 | கிரக | கிரகண |
| 197 | 10 | அந்விதாபிஹி | அந்விதாபி |
| 198 | 10 | பிரகிருதிக்கு | சப்தத்திற்கு அதிகாரமெ ன்பது பொருள்; அதிகார மென்பதற்கு |
| 198 | 16 | பிரகிருதி | சப்தம் |
| 198 | 17 | சப்தார்த்தமானது | சப்தப்பிரயோகபலத்தால் |
| 204 | 27 | வேங்கியம் | வியங்கியம் |
| 205 | 2 | அஃதர்வது சப்த | அஃதாவது திங்கோடு கூடச் [சப்தசுப் |
| 206 | 8 | ஐவகைக் | ஐவகை |
| 206 | 20-21 | வேறானதென்னு | வேறானவொருபதமென்னு |
| 206 | 27 | ஆராய்சி | ஆராய்ச்சி |
| 207 | 17 | கருத் | கருத |
| 208 | 21 | மீமாம்ச | மீமாம்சா |
| 209 | 30 | நீகமான | நிகமான |
| 211 | 15 | இல்லை. | இல்லை” |
| 211 | 15-16 | கூறுவையாயின்...டிருக்கின்றது. | கூறுவையாயின் |
| 211 | 17 | (ச.) உனக் | (ச) அதுவுஞ்சரியன்று உனக் |
| 212 | 2 | துதலமுதலிய | துவதலமுதலிய |
| 312 | 8 | அபரசமாந்யம் | அபரசாமாந்யம் |
| 212 | 24 | துதலாதி | துவதலாதி |
| 212 | 26-27 | அது...நித்தியமா | அச்சத்தை யுற்பத்தி விநாச மற்றிருப்பதால் நித்யமா |
| 213 | 15 | திரவிய | சர்வ |
| 214 | 25 | அந்த | ஒரு |
| 215 | 2 | வேதார்த்த | வேதாந்த |
| 217 | 4 | ஜாகரூபமாயிருக்க | ஜாகரூகமாயிருக்க |
| 217 | 28 | தன்மாத்திரங்கள் | தன்மாத்திரைகள் |
| 218 | 5 | பிரகிருதியாயு | பிரகிருதியாயும் மூலப்பிர கிருதியின் விகிருதியாயு |
| 221 | 29-31 | பிராவாண | பிராவரண |
| 222 | 21-22 | சம்பவிக்காயின் | சம்பவியாமையின் |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 223 | 2 | முகுண | முக்குண |
| 223 | 7 | அவளே | அவனே |
| 223 | 10 | உபேட்சையு | மோகமு |
| 223 | 10 | அவளே | அவனே |
| 229 | 1 | சாங்கியதரிசனம் | பதஞ்சலிதரிசனம் |
| 231 | 25 | சிஷ்யப்பிரவசனம் | சிஷ்யப்பிரஸ்சனம் |
| 231 | 27 | மிவற்றிற்குப் | மிவற்றினுபயோகத்திற்குப் |
| 237 | 8 | தாது (பகுதி)க்களும் | தாதுக் (பகுதி)களும் |
| 239 | 18 | தன்னம | தன்மை |
| 240 | 20 | பிராணுமாதி | பிரமாணுதி |
| 250 | 14 | தமசை | நம என்பதை |
| 253 | 5 | போகாவது | போதாவது |
| 253 | 29 | சாரூபம் | சாரோபம் |
| 256 | 1I | சமர்ம்பிக்கும் | சமர்ப்பிக்கும் |
| 256 | 24 | ஆரட்டகடிப் | ஆரகட்டகடிப் |
| 260 | 6 | யோகங்களே | யோகாங்கங்களே |
| 260 | 24 | சத்தியைத் | சத்தியத்தை |
| 261 | 29 | அதிர்ஷ்டாத்ருத்வ | அதிஷ்டாத்ருத்துவ |
| 26I | 31 | அன்னியத்துவக் | அன்னியதாக் |
| 261 | 32 | திருஷ்டாத்திருத் | திஷ்டாத்திருத் |
| 262 | 6 | சர்வபாவாதிருஷ்டாத் | சர்வபாவாதிஷ்டாத் |



ஓம்

தத்சத்

பரப்ரஹ்மணேநம꞉.

# சர்வ தரிசன சங்கிரகம்.



**நமஸ்காரரூப மங்கலம்.**

1. நித்தியஞானத்திற் காசிரயமாயும், மோக்ஷத்திற்கு நிதியா (மோக்ஷத்தைக் கொடுக்கின்றவரா)யுமுள்ள சிவனை நமஸ்காரஞ் செய்கின்றேன். பிருதிவியாதி பூதங்கள் எவராலே யுண்டுபண்ணப் பட்டனவோ அவரே இவ்வுலகத்திற்குக் கர்த்தா.

2. சகல சாஸ்திரங்களாகிய சமுத்திரத்தின் கரையையடைந் தவரும், ஆத்மசப்தத்தின்பொருளிஃதென்னும் பிரதிபாதனத்தால் சர்வஜனங்களுக்குந் திருப்தியை யுண்டாக்கினவரும், சாரங்கபாணி யென்பவரின் புத்திரருமாகிய சர்வஞ்ஞ - விஷ்ணு வென்னுங் குருவை நான் தினந்தோறும் நமஸ்காரஞ் செய்கின்றேன்.

3. ஸ்ரீமானன சாயனாசாரிய ரென்னும் பாற்கடலுக்குக் கௌஸ்துப ரத்தினமாயும் மிக்க சமர்த்தராயு மிருக்கின்ற மாத வாசாரியராலே சர்வதரிசனசங்கிரக மென்னுநூல் செய்யப்படு கின்றது. (சகல சாஸ்திரங்களும் சுருக்கமாகச் சொல்லப்படுகின் றன வென்பதுகருத்து).

4. முன்னோர்களின் அதிகடினமான சாஸ்திரங்களை நன்றாக வாராய்ந்து சமர்த்தரான சாயன - மாதவாசாரியர் சத்துக்களின் பிரீதியின்பொருட் டுபந்யாசஞ் செய்தார். மாற்சரியத்தை நீக்கி நன்மனதுடன் இதனைச் சாதுக்கள் கேட்டல்வேண்டும்; அனேக புஷ் பங்களாற் றொடுக்கப்பட்ட மாலை யார்க்குத்தான் பிரீதியை யுண்டு பண்ணமாட்டாது?

# முதலாவது

# சார்வாக தரிசனம்.

1. ["நித்தியஞானத்திற் காசிரயமாயும் மோக்ஷத்திற்கு நிதி யாயுமுள்ள சிவனை நமஸ்காரஞ் செய்கின்றேன்" றென்று மங்கலங் கூறியதினால்] எங்ஙனம் பரமேசுவரன் மோக்ஷத்தைக் கொடுத் தல் கூடும்? பிருகஸ்பதி மதத்தை அநுசரித்த நாஸ்திக சிரோமணி யான சார்வாகனால் ஈசுவரனுண்டென் றங்கீகரிக்கப்படவில்லை. அந் தச் சார்வாகனின் சேஷ்டையைப் பரிகரித்தல் முடியாது; அநேக மாக எல்லாப் பிராணிகளும் "உயிருள்ள பரியந்தம் சுகமாக ஜீவித்தல்வேண்டும்; மிருத்துவிற்கு (யமனுக்கு) வசமாகாமல் ஒரு வருமிருக்கப்போகின்றதில்லை; சரீரம் சாம்பராய்ப் போயபின்னரஃ தெங்ஙனம் திரும்பிவருதல்கூடும்?" என்னு மிவ்வுலகவழக்கை மேற் கொண்டிருத்தலின்.

2. சாதாரண ஜனங்கள், நீதிசாஸ்திரத்தையும் காமசாஸ் திரத்தையும் அநுசரித்து, அர்த்தகாமமென்னு மிவற்றையே புரு ஷார்த்தமாக அங்கீகரித்தும், பாரலௌகிகமான அர்த்தங்களை அங்கீ கரிக்காமலும், சார்வாகமதத்தை அநுசரித்தவர்களாகவே காணப் படுகின்றார்கள். ஆகையினாற்றான், சார்வாகமதத்திற்கு லோகாயத மெ(உலகத்தில் விஸ்தாரமாயிருப்பதெ)ன்றோர் காரணப்பெயர் உண் டாயிற்று.

3. இந்தமதத்தில் பிருதிவி, அப்பு, தேயு, வாயு வென்னும் நான்குபூதங்களும் தத்துவங்களாம்.தேகாகாரமாய்ப் பரிணமத்தை யடைந்த பரமாணுவடிவான அந்தப் பூதங்களினின்றும், வெற் றிலைப் பாக்குச் சுண்ணம்பு வென்னு மிம்மூன்றும் சேர்ந்ததனால் மதசக்தி உண்டாதல் போன்று, சைதன்னிய முண்டாகின்றது; அவை நாசத்தையடையும்போது சைதன்னியமு (ஆத்மாவு)ம் நாசத்தையடைகின்றது.

* "விஞ்ஞானமானது இந்தப் பூதங்களினின்றும் உண்டாகி அவை நாசத்தை யடையும்போது தானும் நாசத்தையடைகின்றது;

* பிருகதாரணிய உபநிஷத்-ii-4-12.

மரித்தபிறகு ஞானமில்லை'' என்னுமிச் சுருதி இதற்குப் பிரமாண மாம். ஆகையால், சைதன்னியசகித தேகமே ஆத்மா. தேகத்தினும் வேறாக ஆத்மாவொன்றிருக்கின்றதென்பதிற் பிரமாணமில்லை. பிரத்தியக்ஷமாத்திரம் பிரமாணம். அநுமானாதிகளை அங்கீகரிக்காமையின் அவைகட்குப் பிராமாணியம் சம்பவிக்கமாட்டாது.

4. ஸ்திரீகளின் ஆலிங்கனமுதலியவற்றாலுண்டாகுஞ் சுகமே புருஷார்த்தம். இது துக்கசகிதமாயிருக்கின்றமையின் புருஷார்த்தமன்றென்று கருதுதல்கூடாது; சுகத்துடன் சேர்ந்துள்ள துக்கத்தைப் பரிகரித்துக் கூடியவரையில் சுகமாத்திரத்தை அநுபவித்தல் மக்கியற்கையாயிருத்தலின்.

எங்ஙனம் மச்சத்தைப் புசிக்க விரும்புகின்றவன் முள்ளெலும்பு முதலியவற்றோடுகூடிய மச்சத்தைக் கிரகித்து (அதில்) எவ்வளவு வேண்டுமோ அவ்வளவெடுத்துக்கொண்டு மற்றவற்றை நீக்கி விடுகின்றானோ, அல்லது தானியத்தை விரும்புகின்றவன் வைக்கோலுடன்கூடிய தானியத்தைக் கிரகித்து (அதில்) எவ்வளவு கிரகிக்கவேண்டுமோ அவ்வளவு கிரகித்துக்கொண்டு மற்றவற்றை நீக்கிவிடுகின்றானோ, அங்ஙனமே சுகத்தோடுகூடிய துக்கத்தைப் பரிகரித்துச் சுகமாத்திரத்தை அநுபவித்தல்வேண்டும்.

ஆகையினால், துக்கசகிதமாயிருக்கின்றதென்னும் பீதியினால் அநுகூலமாயறியத்தகுந்த சுகத்தை நிக்கிரகிப்பதுசிதமன்று. (காட்டு) மிருகங்களழித்துவிடுமென்றெண்ணி வேளாண்மை செய்யாதிருக்கின்றதில்லை; பிக்ஷுக்களிருக்கின்றார்களென்றெண்ணிப் பாகம் (சமையல்) செய்யாமலிருக்கின்றதில்லை. எவனொருவன் பயத்தினால் திருஷ்ட (பிரத்தியக்ஷ) மான சுகத்தை விடுகின்றானோ, அவன் பசு (நாற்கால் பிராணியை)ப் போல் மூர்க்கனவன்.

"புமான்களுக்கு விஷயசம்பந்தத்தினாலுண்டாகுஞ் சுகம் துக்கசகிதமாயிருக்கின்றதென்னுங் காரணத்தினால் நிக்கிரகிக்கத் தகுந்ததென்பது மூர்க்கருடைய விசாரம்; உத்தமமும் வெண்மையுமான அரிசியோடுகூடிய நெற்கள் சிறிது உமியோடுகூடியிருக்கின்றனவென்னுங் காரணத்தால் சித்தார்த்தியான (இதத்தைவிரும்பியவனான) எவராவது பரித்தியாகம் செய்கின்றனரா?'' என்று (பிரபோத சந்திரோதயத்திற்) கூறப்பட்டிருக்கின்றது.

5. (ஆ.) பாரலௌகிகமானசுகமிராவிடின்,பகுதனவிரயத்தினாலும் சரீரப் பிரயாசத்தினாலும் சாத்தியமான அக்கினிஹோத்ர முதலிய கர்மங்களில் வித்வான்கள் எங்ஙனம் பிரவிர்த்திப்பார்கள்?

(ச.) அதுவும் பிராமாணிகமன்று;அக்கினிஹோத்ரமுதலவை ஜீவனோபாய நிமித்தம் உபயோகிக ளாகின்றமையாலும், வேதம் அநிர்தம் (பொய்) வியாகாதம் (பூர்வோத்ர விரோதம்) புனருக்தி (கூறியது கூறல்) என்னு மூன்றுதோஷங்களால் தூஷிக்கப்பட்டிருக்கின்றமையாலும், தம்மை வைதிகர்களென் றெண்ணிக் கொண்டிருக்கும் சிலவஞ்சகர்களான கர்மகாண்டப் பிராமாணிய வாதிகள் ஞானகாண்டத்தை அப்பிராமாணிகமாகவும் ஞானகாண்டப் பிராமாணிய வாதிகள் கர்மகாண்டத்தை அப்பிராமாணிகமாகவும் ஒருவரை யொருவர் தூஷித்திருக்கின்றமையாலும், மூன்று வேதமும் வஞ்சகர்களாற் கூறப்பட்ட பூர்வோத்ர விரோதமுள்ளனவா யிருக்கின்றமையாலுமென்க.

"அக்நிஹோத்ரங்களும், மூன்று வேதாத்தியயனமும், சந்நியாசமும், விபூதி தாரணமுமாகிய இவை புத்தியும் புருஷத்தன்மையும் அற்றவர்கட்கு ஜீவனோபாயமாம்" என்று பிருஹஸ்பதி கூறுகின்றனர்.

6. ஆகையினாற்றான் (இவையாவும் ஜீவனோபாயமாத்திரமாகவும், பாரலௌகிகமான சுகதுக்கங்களை யொப்புக்கொள்ளாமையாலும்)

(1.) கண்டக (முள்) முதலியவற்றாலுண்டாகும் துக்கமே நரகம்; (இஃதன்றி நரகமென்பதொன்று வேறாயிருப்பதில்லை);

(2.) லோகப்பிரசித்தனான ராஜா பரமேசுவரன்;

(3.) தேகநிவிர்த்தியே மோக்ஷம்;

(என்று பெறப்படுகின்றது).

தேகாத்மவாதத்தில் நான் இளைத்திருக்கின்றேன், நான் பருத்திருக்கின்றேன் என்றற்றொடக்கத்து வியவகாரங்கள் பொருந்துகின்றன. இளைத்தல் முதலிய தர்மமும் அறிதல் தர்மமும் ஒரு தர்மியை (தேகத்தை) யாசிரயித்துக்கொண் டிருக்கின்றன. எனது சரீரமென்னும் வியவகாரம், இராகுவின்தலை என்றற்றொடக்கத்து வியவகாரம் போன்று ஔபசாரிகமாம்.

"இம்மதத்தில் பிருதிவி, அப்பு, தேயு, வாயுவென்று நான்கு பூதங்களுள; பரமாணுவடிவமான இந்நான்கு பூதங்களின் சையோகத்தால் தாம்பூலாதிகளின் சையோகத்தாலுண்டாகும் மதசக்தி போல் சைதன்னிய முண்டாகின்றது. நான் பருத்திருக்கின்றேன் இளைத்திருக்கின்றேன் என்னும் வியவகாரங்களால் ஸ்தூலத்தன்மை முதலிய தர்மங்கள் சரீரத்தையே யாசிரயித்துக் கொண்டிருக்கின்றமையின் சரீரமே ஆத்மா, மற்றது (ஆத்மா) அன்று; எனது தேகமென்னும் வியவகாரம் ஔபசாரிகம்."

இங்ஙனம் இம்மதசித்தாந்தத்தைப் பெரியோர்கள் சுருக்கமாகக் கூறியிருக்கின்றனர்.

**7.** (ஆ.) அநுமானாதிகட்குப்பிராமாணியம்சித்திக்காவிடத்து உனது மனோரதம் (கருத்து) சித்திக்கும். பிராமாணியமோ விருக்கின்றது; இல்லாவிடின், புகையைக்கண்ட பிறகு காண்பவனுக்கு அக்கினியின் ஞானம் எங்ஙனம் உண்டாதல்கூடும்? அல்லது, "ஆற்றங்கரையிற்பழங்களிருக்கின்றன" என்னும் வசனத்தைக்கேட்டவிடத்துப் பழத்தை விரும்பியவர்கட்கு ஏன் பிரவிர்த்தியுண்டாகின்றது?

(ச.) இவையாவும் உன்மனோராஜ்ஜிய விருத்தியே.

அநுமானத்திற்குப்பிராமாணியத்தை அங்கீகரித்துள்ளவாதிகளால் வியாப்திபக்ஷதர்மத்துடன்கூடிய லிங்கம் ஹேதுவென்று அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றது. வியாப்தியோ (அன்வய, வியதிரேகமென்னும்) இருவித உபாதியற்ற சம்பந்தம். அச்சம்பந்தமும் சொரூப சத்தாயிருப்பதால் சக்ஷுராதிகளைப் போன்று சாதனமாவதின்று; ஆனால் அறியப்பட்டதாயிருப்பதால் சாதனமாகின்றது. அந்தச் சம்பந்தத்தை யறியும் உபாயம் யாது?

**8.** அது பிரத்தியக்ஷமன்று. பிரத்தியக்ஷமென்று கூறினும், அந்தப் பிரத்தியக்ஷமும் (1) பாஹியமா? (2) ஆந்தரமா?

i. முதலாவது பக்ஷங்கூடாது; அந்தப்பாஹியப் பிரத்தியக்ஷம் இந்திரிய சம்பந்தமுடைய விஷயஞானத்தை யுண்டுபண்ணுகின்றமையின். வர்த்தமான (நிகழ்கால) த்தில் வியாப்தி சம்பவிக்கினும், இறந்த (சென்றகாலத்) திலும் வரப்போவ (எதிர்காலத்) திலும் இந்திரிய சம்பந்தமுடைய விஷயஞானம் சம்பவிக்காமையின் சர்வோபசம்மாரத்துடன் கூடிய வியாப்தியை அறிதல் முடியாது.

(ஆ.) வியாப்தி ஞானம் சாமானிய (ஜாதி)விஷயமெனக் கூறுகின்றோம்.

(இ.) வியக்தி (புகைதீக்) களுக்கு அவிநாபாவம் (நீக்கமின்றியிருத்தல்) இல்லாமற்போம்.

ii. இரண்டாவது பக்ஷமுங்கூடாது. அந்தக்கரணம் பஹிரிந்திரியத்திற்கு அதீன (வச)மா யிருக்கின்றமையின், பாஹியமானவிஷயத்தில் அதற்குச் சுதந்திரமான பிரவிர்த்தி பொருந்த மாட்டாது.

"சக்ஷுராதிகளுடன்கூடிய விஷயத்தை யுடைத்தாயிருக்கும் மனது வெளியிற் பிரவிர்த்திப்பதிற் பராதீனமா யிருக்கின்றது" என்று சொல்லப்பட்டிருக்கின்றது.

9. வியாப்தி ஞானத்திற்கு உபாயம் அநுமானமென்றுஞ் சொல்லுதல் கூடாது; ஆண்டும் இவ்வநுமானத்திற்கு வியாப்தி ஞானம் காரணம், அந்த வியாப்தி ஞானத்திற்கு உபாயம் வேறு அநுமானம், அந்த அநுமானத்திற்கு வேறு வியாப்தி ஞானங் காரணம் என அநவஸ்தையைப் பரிகரிக்க முடியாமையின்.

10. சப்தமும் வியாப்தி ஞானத்திற்கு உபாயமென்று சொல்லுதல் கூடாது; கணாதமதத்தை அநுசரித்தோ அநுமானத்திலேயே சப்தம் அடங்கிவிடுகின்றமையின்.

அநுமானத்திற் சப்தம் அடங்குவதன்றென்று கூறுமிடத்து (போதத்தை யுண்டுபண்ணுஞ்சப்தம்) விருத்த வியவகாரரூபமா யிருக்கின்ற லிங்க (ஹேது) ஞானத்தை யபேக்ஷிக்கின்றமையின் மேற்கூறிய தூஷணத்தைப் பரிகரித்தல் முடியாது; தூமாக்நிகட்கு அவிநாபாவ மிருக்கின்ற தென்னும் வசனமாத்திரத்தில், மனுமுதலியோர் வாக்கியத்தில் நம்பிக்கை யிராமைபோல் நம்பிக்கையிராமையாலும், இந்தப் பதார்த்தங்கள் அவிநாபாவரூப சம்பந்தமுடையன வென்று உபதேசம் பெறுமலிருக்கின்ற புருடனுக்கு அர்த்தாந்தரத்தை (தூமத்தை)ப் பார்ப்பதினால் அர்த்தாந்தர (அக்நி) அநுமிதி யுண்டாகாம லிருக்கும்போது சுவார்த்தாநுமானம் கதையாக மிஞ்சுகின்றபடியாலு மென்க.

11. உவமாநாதிகளோ வெகுதூரத்திற்றள்ளப்பட்டன; அவை சமிக்ஞா (பதம்) சமிக்ஞி (அர்த்தம்) சம்பந்தங்களைப் போதிப்ப

தால் அநௌபாதிக (உபாதியின்றிய) சம்பந்த போதகத்தன்மை சம்பவிக்கமாட்டாமையின்.

மேலும், உபாதியபாவமும் அறியமுடியாது; உபாதிகள் பிரத்தியட்சமா யிருக்கவேண்டு மென்னும் நியமம் சம்பவிக்காமையின்.

பிரத்தியக்ஷங்களின் அபாவம் பிரத்தியக்ஷமா யிருப்பினும் அப்பிரத்தியக்ஷங்களின் அபாவம் அப்பிரத்தியக்ஷமா யிருத்தல் வேண்டும்; அங்ஙனமாக இவ்விடத்திலும் அநுமானத்தை அபேக்ஷிக்கவேண்டி யிருத்தலின் மேற்கூறிய தோஷத்தினின்றும் நிவிர்த்தியாதல்முடியாது. மேலும், சாதனத்திற்கு அவ்வியாபகமாயும்; சாத்தியத்திற்குச் சமவியாப்தியாயு மிருப்பது உபாதி யென்று லக்ஷணங்கற்பித்தல் வேண்டும்.

"எது சாதன அவ்வியாப்தமோ, எது சாத்தியத்திற்குச் சமவியாப்தமோ, அது உபாதி" என்று சொல்லப்பட்டிருக்கின்றது.

சப்தத்தில் அநித்தியத்தன்மை சாத்தியமா யிருக்கும்போது சகர்த்திருகத்துவம் (கர்த்தாவுடன் கூடியிருக்குந்தன்மை), கடத்துவம், அசிராவணத்துவம் என்னும் இவற்றை வியாவிர்த்திக்கும் (நீக்கும்) பொருட்டுக் கிரமமாக மூன்று விசேஷணங்கள் கொடுக்கப்பட்டன.

"சமாசமா விநாபாவௌ ஏகத்திரஸ்தோ யதாததா, ஸமே யதிநோவியாப்த: தயோர்ஹீந: அப்பிரயோஜக:."

என்று ஆசிரியரால் யாது கூறப்பட்டதோ அது தோஷமற்றது; ஆண்டு நிஷேத அத்தியவசாயம் (அபாவநிச்சயம்) பிரதியோகி நிச்சயத்தாலுண்டாகின்றமையின். உபாதி ஞானம் உண்டாயிருக்கும்போது அவ்வுபாதியபாவத்துடன் கூடிய சம்பந்தமாகிய வியாப்திஞான முண்டாகின்றது.

உபாதி ஞானமோ வியாப்தி ஞானத்தின் அதீனமாயிருக்கின்றது. ஆகையினால் அந்நியோந்நியாசிரய (ஒன்றை யொன்று பற்றுதல்) தோஷமென்னும் வச்சிரப்பிரகாரம் (வச்சிராயுத அடி) ஏற்படுகின்றது. ஆகையால் அவிநாபாவ மென்பது அறியமுடியாமையின் அநுமானாதிகளுக்கிடமில்லை.

**12.** தூமாதிஞானம் வந்தபின்னர் அக்கினியாதி ஞானத்திற் பிரவிர்த்தி பிரத்தியக்ஷமூலமா யாவது பிராந்தியினாலே யாவது பொருந்தும்.

சிலவிடத்துப்பிரயோசனப் பிராப்தியோ மணிமந்திர ஔஷதாதிகளைப்போல் யதிர்ச்சையா (தற்செயலா) யுண்டாகின்றது.

13. ஆகையால் அதிர்ஷ்டாதியும் பெறப்படுவனவல்ல; அநுமானுதீனமாயிருக்கின்றமையின்.

(ஆ.) அதிர்ஷ்டத்தை அங்கீகரிக்காவிடத்து ஜகத்தின் வைசித்திரிய (பேத)த்திற்குக் காரணமில்லாமற் போம்.

(ச.) நீகூறியதுசிதமன்று; சுபாவத்திஞலேயே அது (பேதம்) பொருந்திவிடுகின்றமையின்.

"அக்கினி உஷ்ணமாயிருக்கின்றது; ஜலம் சீதமாயிருக்கின்றது; வாயு சீதஸ்பரிசமாயிருக்கின்றது; யாவரால் இவை விசித்திரமாகச் செய்யப்பட்டன? விசித்திரத்தன்மை சுபாவத்திஞலேயே யேற்பட்டிருக்கிறது" என்று சொல்லப்பட்டிருக்கின்றது.

இவையாவும் பிருஹஸ்பதியிஞலும் அடியில்வரும் சுலோகங்களாற் சொல்லப்பட்டிருக்கின்றன.

"சுவர்க்கமில்லை; மோக்ஷமில்லை; பரலோகத்தை யடையக்கூடிய ஆத்மாவில்லை; வர்ணுசிரமாதிகளின் கர்மங்கள் பலத்தைக் கொடுக்கமாட்டா." (க)

"அக்நிஹோத்ரம், மூன்று வேதம், சந்நியாஸம், பஸ்மதாரணம் என்னுமிவை புத்தி, புருஷத்தன்மை யற்றவர்கட்கு ஜீவஞேபாயமாகப் பிரஹ்மாவிஞற் சிருஷ்டிக்கப்பட்டன." (உ)

"ஜோதிஷ்டோமயாகத்திற் கொல்லப்பட்டபசு சுவர்க்கத்தை யடையுமேயாயின் யாகம்செய்கிறவன் தன்னுடைய பிதாவை (அதில்) ஏன் கொல்லாதிருக்கிருன்?" (ங)

"இறந்தவனை யுத்தேசித்துச் செய்கின்ற சிரார்த்தம் அவனுக்குத் திருப்தியை யுண்டுபண்ணுமாயின் இவ்வுலகத்திலேயும் பிரயாணிகட்குப் பிரயாண சமயத்திற் கட்டுச்சோறு கொடுப்பது வியர்த்தம்." (ச)

"பூலோகத்திற் கொடுக்கும் பிண்டத்திஞல் சுவர்க்கத்திலிருப்பவர் திருப்தியடைவார்களாயின் மாளிகையின்மீ திருக்கின்றவனை யுத்தேசித்துக் கிருகத்தில் ஏன் அன்னங் கொடுக்கிறதில்லை?" (ரு)

"உயிருள்ளபரியந்தம்சுகமாக ஜீவித்தல்வேண்டும். கடன்வாங்கி
பணும் கிருத (நெய்) பானம் பண்ணல்வேண்டும். தேகம் சாம்ப
ன பிறகு அஃது எங்ஙனம் திரும்பிவருதல் கூடும்?" (சு)

"இந்தச் சரீரத்தினின்றும் வெளிப்பட்ட ஒருவன் பரலோ
ம் போனுனேயாயின் பந்துமித்திரர்முதலிய யாவரையும் விட்டுப்
பானேமேயென்னுங் கவலையுடன் ஏன் திரும்பிவருகிறதில்லை?" ()

"ஆகையினுல், இறந்தவர்களை யுத்தேசித்துப் பிரேதகாரியங்
ர் செய்யவேண்டுமென்று பிராமணர்களால் ஜீவனுேபாயமாக
ற்படுத்தப்பட்டது. அக்கர்மங்கள் வேறொரு பிரயோசனத்தையும்
நவனவாகக் காணப்பட வில்லை." (அ)

"மூன்றுவேதத்திற்கும் பண்டன், தூர்த்தன், நிசாசர (இராட்
) னென்பவர்கள் கர்த்தாக்களாவர்." (கூ)

"ஜர்ப்பரி, துர்ப்பரி முதலிய பண்டிதர்க ளனுசரித்துவரும்
ரசித்தமான கொள்கைகளும் அசுவமேதயாகத்தில் பத்னி மாணி
பக்கிரகிக்கவேண்டுமென்றுவிதித்திருக்கும் கேவலக்கிரியைகளும்,
வைபோன்றவைகளும் பண்டர்களாலேற்படுத்தப்பட்டவை." (ய)

"இங்ஙனமே மாம்சபட்சணமும் நிசாசரர்களால் கூறப்பட்
ருக்கிறது." (யக)

ஆகையினுல் அனேகருக்கு அநுக்கிரகஞ் செய்யும்பொருட்டுச்
ர்வாகமதத்தை அங்கீகரித்தல் தகுதியாம். இது மிகவும் சுத்தம்.

சார்வாக தரிசனம்

முற்றிற்று.

---

## இரண்டாவது

# பௌத்த தரிசனம்.



14. இது விஷயத்திற் பௌத்தர்களின் அபிப்பிராயம் வருமாறு:—

சாத்திய (தீ) சாதனங் (புகை) கட்கு அவிநாபாவ (நீக்கமற்ற) சம்பந்தம் அறிய முடியாதென்று சார்வாகமதஸ்தர்களால் யாது கூறப்பட்டதோ அதனைச் சாதித்தல் முடியாது; தாதாத்மியம் (ஒற்றுமைச் சம்பந்தம்), அத (காரியத்தி)னுற்பத்தி யென்னு மிவற்றால் அவிநாபாவ சம்பந்தம் எளிதிற் கொள்ளக்கிடத்தலின்.

“காரியகாரண பாவத்திலாவது சுபாவமான நியாமகத்தாலாவது அவிநாபாவநியமமுண்டு. அங்ஙனமே வேறு சாஸ்திரங்களிலும் அவிநாபாவ சம்பந்தங் காணப்பட்டிருக்கின்றது” என்று கூறப்பட்டிருக்கின்றது.

அந்வய வியதிரேகங்கள் அவிநாபாவ நிச்சாயகங்கள் (நிச்சயத்தை யுண்டுபண்ணத் தக்கவை).

(ஆ.) பட்சத்தில் சாத்திய சாதனங்கட்கு அவ்வியபிசாரம் (பிறட்சியின்மை) பூத (இறந்தகால) ஏதுவிலும், பௌஷ்ய (எதிர்கால) ஏதுவிலும், காணப்படாத வர்த்தமான ஏதுவிலும் நிச்சயித்தல் முடியாது; வியபிசார சங்கை நிவிர்த்தியாக மாட்டாமையின். உன்மதத்திலும் அப்படிப்பட்ட ஸ்தலத்தில் வியபிசாரசங்கையைப் பரிகரித்தல் முடியாது.

(ச.) இங்ஙனங் கூறுவ துசிதமன்று. காரண மின்றிக் காரியமுண்டாகலா மென்னுஞ் சங்கை *வியாகாத தோஷம் வருவதால் நிவிர்த்தி யாகின்றது. எதனை ஆசங்கிக்கின் வியாகாதாதி தோஷம் வாராமலிருக்குமோ அதனையே கொள்ளல் வேண்டும்.

---

*ஒன்றற்கொன்று விரோதமுள்ள இரண்டு தர்மங்கள் ஒருதர்மியி (அதிகரணத்தி)ற் கூடியிருத்தல் வியாகாத தோஷமாம். அது என்றாய் மலடி, எனக்கு நாக்கில்லை என்றாற் போல்வதாம்.

"வியாகாத தோஷமுள்ள விடத்து ஆசங்கைக் கிடனின்று (ஆசங்கைகள் யாவும் வியாகாத தோஷம் வருகின்ற வரையிற்றன்)" என்று உதயனாசாரியராற் குசுமாஞ்சலியி(iii-7)ல் கூறப்படுகின்றது.

**15.** ஆகையால் அதனுற்பத்தி நிச்சயத்தினுல் அவினாபாவம் நிச்சயிக்கப்படுகின்றது. அதனுற்பத்தி நிச்சயமும் காரண காரியங்களின் பிரத்தியட்ச உபலம்பம் (ஞானம்) பிரத்தியட்ச அநுபலம்பம் என்றற் றொடக்கத்து ஐந்தினுல் உண்டாகின்றது.

(1.) காரியோற்பத்திக்கு முன்னர்க் காரியாநுபலம்பம் (காரியங் காணப்படாமை), (2) காரணங் காணப்படுதல், (3) காரியங் காணப்படுதல், (4) காரியங் காணப்படாமை, (5) உபாதான காரணங் காணப்படாமை என்னு மிவ்வைந்தினுலும் தூமாக்கினிகட்குக் காரியகாரணபாவம் நிச்சயிக்கப்படுகின்றது.

**16.** அங்ஙனமே, தாதாத்மிய நிச்சயத்தாலும் அவினாபாவ சம்பந்தம் நிச்சயிக்கப்படுகின்றது. சிம்சுபை (அசோக விருட்சம்) விருட்சத்தன்மையை விட்டுவிடுமாயின் தன்னை (சொரூபத்தை)யே விட்டுவிடும்; விபட்சத்தில் பாதகதர்க்கம் பிரவிர்த்தித் திருத்தலின் (தன்னுடைய சொரூபத்தை விடமாட்டாது). இந்தப் *பாதகதர்க்கம் பிரவிர்த்திக்காவிடத்து அனேகவிடங்களிற் சாகசரியம் (வியாப்தியோரிடத்திருத்தல்) காணப்பட்டாலும் வியபிசார சங்கையுண்டாயின் அதனை நிவிர்த்திப்பவர் யாவர்? சிம்சுபைக்கும் விருட்சத்திற்கும் தாதாத்மிய நிச்சயமோ இந்த விருட்சம் சிம்சுபையென்னும் சாமானுதிகரண்ணிய (ஒரு நிலைக்களத்திருக்கும்) பலத்தினுற் பொருந்துகின்றது; அத்தியந்த அபேத மிருப்பின் தாதாத்மியம் பொருந்தாது. (அத்தியந்த அபேதத்தை யொப்புக்கொள்ளின்) காரியகாரண சப்தங்கள் பரியாய மாகையால் ஏககாலத்திற் காரியகாரண சப்தங்கட்குப் பிரயோகம் வருதல் கூடாது.

அத்தியந்தபேத மிருக்குமிடத்தும் தாதாத்மியம் பொருந்தாது; கோ அஸ்வங்களில் தாதாத்மியம் காணப்படாமையின்.

ஆகையால் காரிய சொரூபத்தால் காரண சொரூபம் அநுமானிக்கப்படுகின்றதென்பது பெறப்பட்டது.

---

* காரணமின்றாயின் காரியமின்றாமென்பது **பாதகதர்க்கமாம்.** அது தீயில்லையாயின் புகையுமின்றா மென்றாற்போல்வது.

17. ஒருவன் அநுமானத்திற்குப் பிராமாணியத்தையங்கீகரி காமற் போவானேயாயின் அவனைக் கேட்கவேண்டியதாவது:

i. அநுமானம் பிரமாணமாக மாட்டாதென்று மாத்திரப கூறுகின்றனையா?

ii. அதிற் சாதனமொன்றும் உபந்நியாசம் செய்யவில்லை யென்று கூறுகின்றனையா? என்பது.

i. முதலாவது பட்சங்கூடாது; பிரதிஞ்ஞை மாத்திரப பிரதிஞ்ஞாதமான (பிரதிஞ்ஞையினால் வெளிப்பட்டதான) அர்த் தத்தைச் சாதிக்கா தென்னும் நியாயமிருக்கின்றமையின்.

ii. இரண்டாவது பட்சமுங்கூடாது; அநுமானம் பிரமாண மாக மாட்டாதென்று கூறுகிற நீ தலையின்றி உபந்நியாசஞ் செய் வதில் என்றாய் மலடி என்று கூறுவது போலும் வியாகாததோஷம் வரும்.

மேலும், பிரமாணம் அதன் ஆபாச மென்னும் வியவஸ்தை சமான ஜாதீயத்தன்மையா லேற்படுமென்று கூறும் உன்னாலேயே சுபாவாநுமானம் (இயல்பேது) தாதாத்மியத்தா லுண்டாகின்ற தென் றங்கீகரிக்கப்பட்டுளது.

பிறனிடத்திலுள்ள விப்பிரதிபத்தியோ (சந்தேகமோ) வசன லிங்கத்தால் (வசனவடிவஹேதுவால்) அறியக்கூடியதென்று கூறு கிற உன்னால் காரியலிங்க அநுமானம் அங்கீகரிக்கப்பட்டுளது.

ஒரு பதார்த்தங் காணப்படாமை பற்றி அதனை நிஷேதிக் கின்ற உன்னால் அநுபலப்திலிங்க அநுமானமும் அங்கீகரிக்கப் பட்டுளது.

"ஒரு ஞானம் போயினபின்னர் வேறுபிரமாணம்சாமானியமா யிருக்கின்றது. ஒரு பிரமாணத்தை நிஷேதிக்கின் பிரமாணாந்தர மிருக்கின்றது" என்றிவ்விஷயத்தில் வித்வான்கள் லோகாயதர்களை வென்றார்களென்று இங்ஙனம் பௌத்தர்களாற் கூறப்பட்டிருக் கின்றது. நூல் பெரிதாகுமென்னு மச்சத்தால் இவ்விஷயத்தை இவ்வளவோடு நிறுத்தி மேற்செல்வாம்.

18. அந்தப் பௌத்தர்கள் நால்வகைத்தாய பாவனையாற் பரமபுருஷார்த்தத்தைக் கூறுகின்றனர். அவர்கள் மாத்தியமிகர், யோகாசாரர், சௌத்திராந்திகர், வைபாஷிகர் என்னும் பெயர்களாற் பிரசித்தமானவர்கள்.

i. மாத்தியமிகர் சர்வசூனிய வாதத்தை அவலம்பித்தவர் (மேற்கொண்டவர்); ii. யோகாசாரர் பாஹ்ய சூனியத்தை அவலம்பித்தவர்; iii. சௌத்திராந்திகர் பாஹ்யபதார்த்தங்கள் அநுமேயம் (அநுமானத்தால் அறியத்தக்கவை) என்னும் வாதத்தை அவலம்பித்தவர்; iv. வைபாஷிகர் பாஹ்யபதார்த்தம் பிரத்தியக்ஷம் என்னும் வாதத்தை அவலம்பித்தவர். பகவானுன புத்ததேவனொருவனே (நால்வகைப்பட்ட பௌத்தர்களுக்கும்) உபதேஷ்டா (உபதேசம் பண்ணினவர்); ஆயினும் சிஷ்யர்களின் புத்திபேதத்தால் நால்வகையினவாய மதங்களேற்பட்டன. எங்ஙனம்? சூரியன் அஸ்தமனமாயினனென்று கூறுமிடத்து ஜாரன் (வியபிசாரஞ் செய்பவன்), சோரன் (திருடன்), அநூசானன் (அத்தியயனஞ் செய்பவன்) முதலாயினோர் தத்தமக்கிஷ்டமான ஜாரிணியை உத்தேசித்துக் கமனத்திலும் (நடத்தலிலும்), பிறன்பொருளை அபகரித்தலிலும், சத்கர்மாநுஷ்டானத்திலும், பிறவற்றிலும் பிரவிர்த்தித்தற்குச் சமயமென்றறிந்து கொள்ளுகின்றனர். (அதுபோல)

i. சர்வம் க்ஷணிகம் க்ஷணிகம்

ii. சர்வம் துக்கம் துக்கம்

iii. சர்வம் சலக்ஷணம் சலக்ஷணம்

v. சர்வம் சூனியம் சூனியம்

என்று பாவனுசதுஷ்டயம் (புத்ததேவனுல்) உபதேசிக்கப்பட்ட காலத்து ஒவ்வொருவர் ஒவ்வொன்றை மேற்கொண்டனர்.

### i-சர்வம் க்ஷணிகம்.

19. அவற்றுள், க்ஷணிகமான நீலபீதாதி வஸ்துக்களுக்கு க்ஷணிகத்துவம் சத்துவத்தால் அநுமானிக்கத் தகுந்தது.

எது சத்தோ அது க்ஷணிகம்; எங்ஙனம்? ஜலதரபடலம் (மேகக்கூட்டம்); இப்பதார்த்தங்களும் சத்தாயுள்ளனவே; (ஆகை

யால் க்ஷணிகம்). (சத்துவத்தாலென்னும்) இவ்வேது அசித்த மென்று சொல்லுதல் கூடாது; அர்த்தக்கிரியா காரியத்துவமாகிய சத்துவம் நீலபீதாதி க்ஷணிக வஸ்துக்களிற் பிரத்தியக்ஷ சித்தமா யிருப்பதாலும், வியாபக வியாவிர்த்தியால் (நீக்கத்தால்) வியாப்பிய வியாவிர்த்தி யுண்டாகின்ற தென்னும் நியமத்தாலும், வியாபகங்களின் கிரமாக் கிரமங்களின் வியாவிர்த்தி வரும்போது வஸ்துக்களுக்கு க்ஷணிகத்துவம் போய்விடுகின்றது, க்ஷணிகத்துவம் போய்விடுவதால் சத்துவவியாவிர்த்தி சித்தமாகின்றமையாலு மென்க.

அந்த அர்த்தக்கிரியா காரியத்துவம் கிரமாக் கிரமங்களினால் *வியாப்தமாகின்றது. கிரமாக்கிரமங்களினும் வேறு பிரகாரமின்று.

"பரஸ்பர (ஒன்றற்கொன்று) விரோதமிருக்குமாயின் வேறு பிரகாரமான ஸ்திதியில்லை; விருத்தமான வஸ்துக்களுக்கு ஏகத்துவமுமில்லை; அங்ஙனங் கூறுவதே விரோதமாகையால்" என்னும் நியாயத்தினால் வியாகாததோஷம் சம்பவிக்கின்றது.

அந்தக் கிரமாக்கிரமங்கள் ஸ்தாயியா (ஸ்திரமா) ன வஸ்துவினின்றும் நீங்கி அர்த்தக்கிரியையையும் நீக்கி க்ஷணிகத்துவ பக்ஷத்திலேயே சத்துவத்தை ஸ்தாபிக்கின்றன வென்பது சித்தித்தது.

(ஆ.) அக்ஷணிகமா (ஸ்தாயியா) ன வஸ்துவிற்கு அர்த்தக்கிரியா காரியத்துவம் ஏன் வரமாட்டாது?

(ச.) இது கூடாது; விகற்பத்தைச் சகிக்கமாட்டாமையின். அங்ஙனமன்றோ, வர்த்தமானமான அர்த்தக்கிரியையைச் செய்யுங்காலத்தில் இறந்தகால நிகழ்கால அர்த்தக்கிரியா விஷயத்தில் ஸ்தாயியானவஸ்துவிற்குச் சாமர்த்திய மிருக்கின்றதா? இன்றா? முதற்பக்ஷத்தில் அதீத அநாகதங்கள் (இறந்தகால நிகழ்கால அர்த்தக்கிரியைகள்) நிராகரிக்கப்படாமற்போம்; சமர்த்தமான வஸ்து தள்ளத்தகாமையின்.

எந்தவஸ்து எப்பொழுது எதைச்செய்வதற்குச் சமர்த்தமா யிருக்கின்றதோ அந்தவஸ்து அப்பொழுது அதைச் செய்யாம லிருப்பதில்லை;

* வியாப்தம்-வியாப்தியுடன் கூடியது.

எங்ஙனம்? சாமக்கிரியா (காரணமா)னது தன்னுடைய காரியத்தைச் செய்யச்சமர்த்தமா யிருப்பதுபோல இந்தப் பதார்த்தமும் சமர்த்த மாயிருக்கிற தென்னும் பிரசங்காநுமான மிருக்கின்றமையின்.

இரண்டாவது பக்ஷத்திலும் ஒருபோதும் (கடம்) *அர்த்தக் கிரியையைப் பண்ணமாட்டாது; அர்த்தக்கிரியா காரியத்துவம் சாமர்த்திய மாத்திரத்தாலுண்டாவதால். எந்தவஸ்து எப்போது எதைச் செய்யவில்லையோ அந்த வஸ்துவிற்கு அப்போது அது விஷயத்திற் சாமர்த்தியமின்று. எங்ஙனம்? பாஷாண சகலத்திற் (கருங்கல் ஜல்லிக்)கு அங்குரத்தில் (முளையை யுண்டுபண்ணுவதில்) சாமர்த்திய மில்லாமைபோலும். இந்தப் பதார்த்தம் வர்த்தமான அர்த்தக்கிரியையை (காரியத்தை)ச் செய்யுங்காலத்தில் இறந்தகால எதிர்கால அர்த்தக்கிரியையைப் பண்ணமாட்டாது.

இங்ஙனம் விருத்த தர்மமிருக்கின்றது.

(ஆ.) அங்ஙனமன்று. கிரமத்துடன் கூடிய சககாரி கிடைக்காமையின் ஸ்திரவஸ்துவிற்கு இறந்தகால எதிர்காலங்களின் கிரமத்தினால் கிரமம் பொருந்துகின்றது.

(ச.) இவ்விஷயத்தில் உன்னைக் கேட்கவேண்டியதாவது: சககாரிகள் பாவத்தி (வஸ்துவி)ற்கு உபகாரம் பண்ணுகின்றதா? அன்று? என்பது.

இரண்டாவது பக்ஷத்தில் அவை (சககாரிகள்) அபேக்ஷிக்கத் தக்கனவல்ல. யாதொன்றுஞ் செய்யாத அவற்றிற்குத் தாதர்த்தியம் (அதற்காக ஏற்படுந்தன்மை) பொருந்தாது.

முதற்பக்ஷத்தில் அவ்வுபகாரம் பாவத்தைக்காட்டிலும் வேறு? அன்று? வேறென்னுமிடத்து ஆகந்துகமா (இடையிலுண்டாவ தா)ன அவ்வுபகாரத்திற்கே காரணத்துவம் பொருந்துமன்றி அக்ஷணிகமான பாவத்திற்குப் பொருந்தமாட்டாது; ஆகந்துக விசேஷத்தின் அன்வய வியதிரேகத்தை யநுசரித்துக் காரியமிருக்கின்றமையின்.

---

* அர்த்தக்கிரியாகாரியத்துவம் - ஜலமுதலியவற்றைக் கொண்டுவருங் காரியத்தைச் செய்யுந்தன்மை.

"மழையாலும் வெயிலாலும் *ஆகாயத்திற்கு யாது பிரயோசனம்? இவ்விரண்டற்கும் சர்மத்தி (தோலி)ற் பிரயோசனமிருக்கின்றது. சர்மத்திற்குச் சமமாக ஆகாயத்தைக் கூறுமிடத்து ஆகாயம் அநித்தியமாய் விடும். சர்மம் ஆகாயத்திற்குச் சமமாமென்று கூறுமிடத்துப் பலன் அசத்தாய்விடும்" என்று சொல்லப் பட்டிருக்கின்றது.

**20.** பாவ (காரண) மானது அந்தச் சககாரிகளுடன் கூடியே காரியத்தை யுண்டுபண்ணுகின்றதியல்பென்று கூறுவையாயின், அப்பொழுது சககாரிகளும் பாவவஸ்துக்களைவிட்டுப் பிரியக்கூடா; விட்டுப்பிரிந்தோடிப் போயினும் கழுத்திற் கயிற்றினாற் சுருக்கிட்டிழுத்து அவற்றால் காரியத்தைப் பண்ணல் வேண்டும். சுபாவமோ (இயல்போ) கேடின்றி யிருக்கின்றது. மேலும், சககாரியாலுண்டான விசேஷம் வேறு விசேஷத்தை யுண்டுபண்ணுகின்றதா? இன்றா? இவ்விரண்டு பக்ஷத்திலும் மேற்கூறிய தூஷணவடிவ கல் மழை வரும்.

வேறு விசேஷத்தை யுண்டுபண்ணுகின்ற தென்று கூறுமிடத்துப் பல்வகைத்தாய அநவஸ்தா தோஷம்நேரிடும். ஒருவிசேஷத்தை யுண்டுபண்ணவேண்டிய விஷயத்தில் வேறு சககாரியின் அபேக்ஷை வேண்டும்; வேண்டவே, இங்ஙனமே பரம்பரையாக அநேக விசேஷங்களும் சககாரிகளும் கற்பிக்கவேண்டி யிருக்கின்றமையின், அநவஸ்தா தோஷம் சம்பவிக்கும். அங்ஙனமன்றோ, எப்போது சககாரி காரணங்களாய ஜலம், காற்று முதலியவை பீஜத்திற்கு ஒரு விசேஷத்தை யுண்டுபண்ணுகின்றனவோ அப்போது பீஜத்தை உத்பாதகமெ (உண்டுபண்ணத்தக்கதெ)ன் றங்கீகரித்தல் வேண்டும். இல்லாவிடின், பீஜமின்றிய விடத்தும் விசேஷமுண்டாதல் வேண்டும். பீஜமும் விசேஷத்தை யுண்டுபண்ணிக் கொண்டு சககாரியை அபேட்சிக்கின்றது. இல்லாவிடின், எப்போதும் சககாரிகளிருக்குமிடத்து அங்குரமும் எப்போது முண்டாதல்வேண்டும். ஆகையால், விசேஷார்த்தத்தை யபேக்ஷித்த சககாரி காரணங்களென்னும் வேறுவிசேஷத்தைப் பீஜத்திற் சேர்த்தல்வேண்டும். அந்த உபகாரத்திலும் மேற்கூறிய நியாயப்படி சககாரியை

* ஆத்மாவிற்கென்றும் பாடமுண்டு.

அபேக்ஷித்த பீஜம் ஜனகமெ(உற்பத்திசெய்வதெ)ன் றங்கீகரிக்கின் சககாரியினுல் சம்பாதிக்கப்பட்ட பீஜத்திலுள்ள விசேஷத்தின் அநவஸ்தை முதலாவதாம்.

மேலும், உபகாரமானது காரியத்தை யுண்டுபண்ணும்பொருட்டுக் காரணத்தினு லபேக்ஷிக்கப்படினும் பீஜாதிகளை யபேக்ஷிக்காமலே காரியத்தை யுண்டுபண்ணுகின்றதா? அல்லது அபேக்ஷித்து உண்டுபண்ணுகின்றதா?

முதலாவது பக்ஷத்தில் பீஜாதிகட்குக் காரணத்தன்மை சம்பவியாது. இரண்டாவது பக்ஷத்தில் அபேக்ஷிக்கப்பட்ட பீஜாதிகளினுலே உபகாரத்தில் ஓர் விசேஷத்தை யுண்டுபண்ணல் வேண்டும். அந்த விசேஷத்தில் மற்றொரு விசேஷம் வேண்டும்; இங்ஙனம்பீஜாதிஜன்னிய அதிசயத்திலுள்ள அதிசய பரம்பரை சம்பவிக்குமாகலின் இரண்டாவது அநவஸ்தை ஸ்திரமாம்.

இங்ஙனம் அபேக்ஷிக்கப்படுகின்ற உபகாரத்தினுல் பீஜாதிதர்மியில் வேறு உபகாரம் வேண்டப்படுகின்றது. அவ்வுபகாரத்தினுல் பீஜாதிசயத்தை (பீஜமுதலிய விசேஷத்தை) ஆசிரயித்துக்கொண்டுள்ள வேறு அதிசயம் வேண்டப்படுகின்றது. இங்ஙனம் அதிசயபரம்பரை வரம்பின்றிச் சம்பவிக்குமாதலின் மூன்றுவது அநவஸ்தை சித்தமாம்.

பிறகு அதிசயம் பாவ (காரண)த்துடன் அபின்னமா யிருக்கின்றது. அவ்வதிசயம் சககாரிகளாலுண்டுபண்ணப்படுகின்றதென் றங்கீகரிக்கப்படுகின்றது. ஆனுல், முற்கூறிய பாவமானது விசேஷமற்றதாயிருந்து நிவிர்த்தி யடைகின்றது. மற்றொன்றும் (அதிசய வடிவ மற்றொருபாவமும்) அதிசய ரூபமாக விருந்து உண்டுபண்ணுகிற ரூபமுதலியவற்றின் பதங்களால் அறியப்படுகின்றதாக வுண்டாகின்றது. இங்ஙனம் என் மனோரதவிருக்ஷம் (சங்கற்பம்) பலித்தது.

ஆதலின், அக்ஷணிகமான வஸ்துவிற்கு அர்த்தக்கிரியை பொருந்தாது; அக்கிரமமாகவும் பொருந்தாது; விகற்பத்தைச் சகிக்காமையின். அங்ஙனமன்றே, அப்பாவம் (காரணம்) ஏககாலத்

தில் சர்வ காரியங்களையும் உண்டுபண்ணுவதிற் சமர்த்தமாயிருக்கின்றதா? அல்லது அவற்றின் உத்தரகாலத்திலும் அநுவர்த்தித்துக் கொண்டிருக்கின்றதா?

முதற்பக்ஷத்தில் (அப்பாவத்திற்கு) அக்காலம்போல் காலாந்தரத்திலும் காரியத்தை யுண்டுபண்ணும்படி சம்பவிக்கும். இரண்டாவது பக்ஷத்தில் ஸ்தாயியெ(ஸ்திரமெ)ன்னும் பிரத்தியாசை (விருப்பம்) எலிகடித்த விதையில் முளையையுண்டுபண்ணும் பிரார்த்தனையை யொக்கும்.

21. எது விருத்ததர்ம அத்தியாசத்துடன் கூடியிருக்கின்றதோ அது நாநாவாம்; எங்ஙனம்? சீதோஷ்ணங்கள் போலும். இதுவும் அங்ஙனம் (விருத்ததர்ம அத்தியாசத்துடன் கூடியதே); ஆதலின் இங்ஙனம் (ஜலதர படல நியாயம்போல). இந்த ஏது அசித்தமென்று சொல்லுதல் கூடாது; ஸ்தாயியான வஸ்துவில் காலபேதத்தினால் சாமர்த்திய அசாமர்த்தியங்கள் பிரசங்க விபர்யயங்களால் சித்தித்திருக்கின்றமையின். அவற்றுள், அசாமர்த்திய சாதகங்களாகப் பிரசங்கவிபர்யயங்கள் எவை சொல்லப்படுகின்றனவோ அவை சாமர்த்திய சாதகங்களாகச் சொல்லப்படுகின்றன.

எது எப்போது எந்த வஸ்துவை யுண்டுபண்ணுவதற்கு அசமர்த்தமாயிருக்கின்றதோ அது அப்போது அந்தவஸ்துவை யுண்டுபண்ணமாட்டாது; எங்ஙனம்? சிலாசகலம்(கருங்கற்சல்லி)அங்குரத்தை (முளையை) யுண்டுபண்ணுவதற்கு அசமர்த்தமா யிருப்பது போலும். இதுவும் வர்த்தமான அர்த்தக் கிரியையைப் பண்ணுங் காலத்தில் இறந்தகால எதிர்கால அர்த்தக்கிரியா விஷயத்தில் அசமர்த்தமா (சாமர்த்தியமின்றியதா) மென்பது பிரசங்கம்.

எது எப்போது எதைப்பண்ணுகின்றதோ அது அப்போது அதிற் சமர்த்தமாம்; எங்ஙனம்? சாமக்கிரி தன் காரியத்திற் சமர்த்தமாயிருப்பது போலும்; இதுவும் (ஸ்தாயியும்) இறந்தகால எதிர்காலத்திலுள்ள அர்த்தக்கிரியையைப் பண்ணுவதால் பாவமாம். ஆகையால் பிரசங்கத்தின் விபர்யயமாம்.

*விபக்ஷத்திற் கிரமமும் ஏககாலத்தி லிருப்பதுமாகிய இவற்றின் வியாவிர்த்தியா (நீக்கத்தா)ல் வியாபகத்தின் அநுபலம்பம் (விளங்காமை) உண்டாகின்றது. அதனால்கிரகிக்கப்பட்ட வியதிரேக வியாப்தியுடையதாயும் பிரசங்கம் அதன் விபர்யயமாகிய இவற்றின் பலத்தாற் கிரகிக்கப்பட்ட அந்வய வியாப்தியுடன் கூடினதாயு முள்ள சத்துவம் க்ஷணிகத்துவ பக்ஷத்திலேயே ஸ்திரமா யிருக்கின்றதென்பது சித்தித்தது.

22. "எது சத்தோ அது க்ஷணிகம்; ஜலதர படலம்போல்; இந்தப்பாவங்களும் சத்துக்களே. (அவற்றிற்கு) இந்த அர்த்த (காரிய)த்தைப் பண்ணுவதில் சத்தாசக்தி யிருக்கின்றது; ஞானத்தினுற் சித்தித்த வஸ்துவில் அந்தச் சக்தி சித்திக்கவில்லை.

அந்தச் சக்தி ஒன்றுமன்று; இப்படிப்பட்டதுமன்று. வேறு பிரகாரமாக அங்கீகரிக்கின், பரகிருதத் (மற்றொன்றா லாக்கப் பட்ட)தினாலும் அர்த்தக்கிரியை முதலியவை யுண்டாதல்வேண்டும்.

க்ஷணபங்க சம்பந்தம் இரண்டுவிதமா யிருக்கின்றதாகலின் சாத்தியத்திலும் முடிவுபெறுகின்றது"

என்று ஞான ஸ்ரீ என்பவரால் கூறப்பட்டிருக்கின்றது.

(ஆ.) கணாத கௌதம முதலியோர் மதங்களை யநுசரித்துச் சத்தாரூபஜாதிசம்பந்தத்தையே சத்துவமாக அங்கீகரிக்கின்றோம்.

(ச.) அது கூடாது; சாமானியம், விசேஷம், சமவாய மென்னு மிவைகள் அசத்தென்று சம்பவிக்கின்றமையின்.

(ஆ.) சாமானிய முதலியவைகளில் சத்து என்னும் வியவகாரம் சொரூபசத்தையினா லேற்பட்டதன்றோ?

(ச.) இங்ஙனங் கூறுதலடாது; †காரணகௌரவம் வருகின்றமையாலும், அநுகதத்தன்மை (தொடர்ந்திருக்குந்தன்மை)

---

* துணியப்பட்ட சாத்தியமின்மைக்கிடம் விபக்ஷம்.

† ஒருவஸ்துவினாலே ஒருகாரியஞ் சித்திக்கக்கூடியதாயிருக்க, அதற்குப் பலவஸ்துக்களை யேதுவாகக்கொள்ளல் காரண கௌரவமாம்.

அநுகதத்தன்மை யென்னும் விகற்பத்தால் பாதிக்கப்படுவ தாலும், கயிற்றிற் கோக்கப்பட்ட ரத்னங்களிற் கயிறு தொடர்ச்சியா யிருப்பதுபோலக் கடுகு மலை முதலிய விலக்ஷணமான (வேறான) க்ஷணிகவஸ்துக்களில் அநுகதமான வொன்றுங் காணப் படாமையாலு மென்க.

மேலும், சாமானியமென்பது சர்வகதமா (எல்லாவற்றிலு மிருக்கின்றதா)? அல்லது சுவா (தனக்கா)சிரயமான எல்லாவற்றிலு மிருக்கின்றதா? முதற்பக்ஷத்தில் சர்வ வஸ்துக்களுக்கும் சாங்கர்யம் (கலப்பு) உண்டாகும்; அபசித்தாந்தமும் சம்பவிக்கும்.

"சாமானியம் தனக்காசிரயமான எல்லாவற்றிலு மிருக்கின்றது" எனப் * பிரசஸ்தபாதரால் கூறப்பட்டிருக்கின்றது.

மேலும், வர்த்தமான கடத்திலுள்ள சாமானியம் மற்றோரிடத்துண்டாகின்ற கடத்துடன் சம்பந்தப்படுகின்றது. அது வர்த்தமான கடத்திலிருந்து வந்து சம்பந்திக்கின்றதா? வாராமலே சம்பந்திக்கின்றதா? முதற்பக்ஷத்தில் திரவியத்தன்மை சம்பவிக்கும். இரண்டாவது பக்ஷத்தில் சம்பந்தம் பொருந்தாது. மேலும் (1) நஷ்டமான கடத்தில் சாமானிய மிருக்கின்றதா? (2) நசித்துப்போகின்றதா? (3) அல்லது வேறிடத்திற்குப் போகின்றதா?

i. முதற்பக்ஷத்தில் அது நிராதாரமாய் விடும்;

ii. இரண்டாவது பக்ஷத்தில் நித்திய மென்று கூறியது அமையாது;

iii. மூன்றாவது பக்ஷத்தில் திரவியமாய் விடும்.

இத்தோஷங்களுடன் கூடியிருப்பதால் சாமானியம் அப்பிரமாணிகமாம்.

i. "ஓரிடத்திலுள்ள சாமானியம் வேறோரிடத்துண்டாகின்ற கடத்தில் அவ்விடத்தினின்றும் அசையாமற் போகின்றதெனல் யுக்திவிருத்தம்;

ii. எவ்விடத்திலிந்தப் பாவ (கட) மிருக்கின்றதோ அவ்விடத்தில் அதனுடன் (சாமானியம்) சம்பந்தப் படுவதின்று;

* இவர் கணாத சூத்திரத்தின் பாஷியகாரர்.

ஆனால், அந்தத்தேச (கட)த்தையும் வியாபித்துக் கொண்டிருக்கின்றது: இதென்ன ஆச்சரியம்!

iii. (சாமனியம்) போவதுமன்று, அங்கே யிருந்தது ன்று, பிறகுவருவதுமன்று, அம்சத்துடன் கூடினது மன்று, முந்திய ஆதாரத்தை விடுகின்றது மன்று; எவ்வளவுகஷ்டம்!"

இங்ஙனம் சொல்லப்பட்டிருக்கின்றது.

(ஆ.) அநுகதப் பிரத்தியய (இது கடம் இது கடமென்று தொடர்ச்சியாய் நிழுகம் ஞான)த்திற்கு ஆலம்பனம் (விஷயம்) யாது?

(ச.) அடே! "அந்நியாபோகம் - அது (படம்) அன்றென்று விலக்கல்" அநுகதப் பிரத்தியயத்திற்கு விஷயமாம்- விஷயமிருக்கின்றமையின் சந்தோஷத்தை யடையலாம். அதிகமாகப் பேசியதமையும்.

ii-சர்வம் துக்கம்.

23. சர்வசம்சாரமும் துக்கவடிவமா யிருக்கின்றனவென்பது சகல சாஸ்திரகாரர்களின் சம்மதம். இல்லாவிடின், சம்சாரத்தை நிவிர்த்திக்க வேண்டு மென்னு மிச்சையுள்ளவர்கட்கு அதன் நிவிர்த்தி சாதனத்தில் பிரவிர்த்தி பொருந்தாமற் போம். ஆகையினால் எல்லாம் துக்கம் துக்கமென்றே பாவனைசெய்தல் வேண்டும். எதுபோன்றென்று கேட்கின் திருஷ்டாந்தம் சொல்லல் வேண்டுமென் றுட்சேபித்தல்கூடாது.

iii-சர்வம் சுலட்சணம்.

24. சுலக்ஷணங்களான வஸ்துக்கள் க்ஷணிகமா யிருப்பதால் (அவற்றிற்கு) சாதிருசியமின்று. அது இதற்குச் சமானமா யிருக்கின்றதென்று சொல்லுதல் முடியாது. ஆகையினால் எல்லாம் சுலக்ஷணம் சுலக்ஷணமென்றே பாவனை செய்தல்வேண்டும்.

iv-சர்வம் சூனியம்.

25. இங்ஙனமே எல்லாம் சூனியம் சூனியமென்றும் பாவித்தல் வேண்டும்; என்றாற் காணப்பட்ட இராஜாதிகள் சொப்பனத்

திலும் ஜாக்கிரத்திலுமில்லையென்று விசிட்டநிஷேதங் காணப்படு கின்றமையின்.

பார்க்கப்பட்டது சத்தாயிருக்குமாயின் அப்போது அத னுடன்கூடிய ஞானத்திற்கும் இதந்துவத்திற்கும் (இதுவெனுந் தன் மைக்கும்) அதிஷ்டானத்திற்கும் அதில் அத்தியஸ்தமான இரஜ த்துவாதிகளுக்கும் அவற்றின் சம்பந்தமான சமவாயங்கட்கும் சம்பவிக்கும். இது ஒருவாதிக்கும் சம்மதமன்று.

அர்த்தஜரிதீய நியாயம் (உடம்பினொருபாகம் யௌவனமா யிருக்கின்றது, மற்றொருபாகம் வார்த்திகமா யிருக்கின்றதென்னும் நியாயம்) உசிதமன்று; குக்குடி (பெட்டைக் கோழி) யின் ஒருபாகம் பாகத்திற் (சமையலுக்) கும், மற்றொருபாகம் முட்டையிடுவதற்கு மென்றுகற்பிப்பதும் உசிதமன்று. ஆகையால் அத்தியஸ்தம், அதிஷ் டானம், அவற்றின் சம்பந்தம், தரிசனம், திருஷ்டா (காண்பவன்) என்னு மிவற்றுள் ஒன்றற்காவது அனேகத்திற்காவது அசத்துவ மிருந்தால் நிஷேத விஷயமாயிருப்பதால் எல்லாவற்றிற்கும் அசத் துவம் சம்பவிக்கு மென்று புத்தபகவானாலே உபதேசிக்கப்படும் போது உத்தமப்பிரஞ்ஞர்களான மாத்தியமிகர் இவ்வாறு சொல் லினர்.

**26.** பிக்ஷுபாதபிரசாரண நியாயத் (பிச்சைக்காரன் காலை நீட்டின் நியாயத்) தினால் க்ஷணபங்க முதலியவைகளைக் கூறுவதால் ஸ்தாயித்துவம், அநுகூலமாய்நியுந்தன்மை, சர்வாநுகதம் (எல்லா வற்றிலுந் தொடர்ந்திருத்தல்) சத்தியத்துவ மென்னும் பிராந்திகளை விலக்குவதனால் எல்லாம் சூனியமென்றே முடிந்தன. ஆகையால் சத்து, அசத்து, உபயம் (சதசத்து) அநுபயம் (சதசத்தின் வேறு) என்னு மிந்நான்கு கக்ஷிகளினின்றும் விடுபட்ட சூனியமேதத்துவம்.

அங்ஙனமன்றே, கடாதிகளுக்குச் சத்துவம் சுபாவமாயிருந் தால் அப்போது காரகவியாபாரம்(காரணத்தாற்செய்வது)வியர்த்த மாய்ப்போம். அசத்துவம் சுபாவ மென்று கூறின் மேற்சொன்ன பக்ஷத்திற் கூறிய (காரகவியாபாரம் வியர்த்தமாய் விடுதலென்னுந்) தோஷம் சம்பவிக்கும்.

ஆகாசாதிகளைப்போலச் சத்திற்குக்காரணாபேக்ஷை பொருந்தாது. வான்மலர் முதலியவற்றைப்போல அசத்தான காரியத்திற்கு ஹேது சம்பவிக்கமாட்டாது" என்று கூறப்பட்டிருக்கின்றது.

ஏனைய (சதசத்து, சதசத்தின் வேறு என்னும்) இரண்டு பக்ஷங்களும் விருத்தமா யிருப்பதால் அங்கீகரிக்கத்தக்கனவாகா.

"புத்தியால் விவேசனம் (பிரித்துப்பார்த்தல்) பண்ணப்பட்ட பதார்த்தங்களுக்குச் சுபாவம் நிச்சயிக்கப்படாமையின் அவை இன்னவென்று குறிப்பிட்டுச் சொல்லத்தகாதவை. சுபாவமற்றவை யென்றும் காட்டப்பட்டிருக்கின்றன" என்றும்,

"எது வித்வான்களால் கூறப்படுகின்றதோ அந்த வஸ்து பலத்தால் வந்துவிடுகின்றது. எப்படி யெப்படி அர்த்தங்கள் சிந்திக்கப்படுகின்றனவோ அப்படி யப்படியே சிதறிவிடுகின்றன" என்றும் அலங்காராவதாரமென்னுங் கிரந்தத்தில்பகவானால் கூறப்பட்டிருக்கின்றன.

ஒரு பக்ஷத்திலும் பதார்த்தமிருக்கின்றதென்பது பெறப்படவில்லை.

திருஷ்டார்த்த (காணப்பட்ட அர்த்த) வியவகாரங்களும் சொப்பனவியவகாரம்போல்மறைந்திருக்கவில்லை. ஆகையினாற்றான் 'ஒரு ஸ்திரீயின் சரீரத்தில் சந்நியாசிக்குக் குணப(சப)மென்றும், காமுகனுக்குக் காமினியென்றும், சுனகத்திற் (நாய்க்) குப் பட்சியமென்றும் மூன்றுவித கற்பனை ஏற்படுகின்றன" என்று கூறப்பட்டிருக்கின்றது.

ஆகையினால் இவ்வித பாவனாசதுஷ்டயத்தினால் நிகில சமஸ்த) வாசனைகளும் நிவிர்த்தியாகச் சூனியவடிவ நிர்வாணம் மோட்சம்) சித்திப்பதால் நாம் கிருதார்த்தர்கள். நமக்கு உபதேசிய மொ(உபதேசிக்கத்தக்கதொ) ன்று மின்று.

சிஷ்யர்கள் யோகம், ஆசாரமென்னு மிவ்விரண்டையும் அநுஷ்டித்தல் வேண்டும்.

அவற்றுள் தெரியாத அர்த்தத்தைத் தெரியும் பொருட்டுப் பிரஸ்னை செய்வது (கேட்பது) யோகமாம்.

குருகூறிய அர்த்தத்தை அங்கீகாரஞ் செய்வது ஆசாரமாம்.

குருகூறிய அர்த்தத்தை அங்கீகாரஞ் செய்வதால் உத்தமர்களாகவும், பிரஸ்னை செய்யாமையால் அதமர்களாயு மிருக்கின்றார்கள். ஆகையால் அவர்களுக்கு மாத்தியமிகர்க ளென்று பிரசித்தி யுண்டாயிற்று.

**27.** குருவினாற் கூறப்பட்ட பாவனா சதுஷ்டயத்தை யங்கீகாரஞ் செய்வதுடன், பாகியார்த்தம் சூனியமென்றும் அங்கீகாரஞ் செய்து ஆந்தரமான பதார்த்தத்தைச் சூனியமென்று எங்ஙன மங்கீகரித்தல் கூடுமென்று பிரஸ்னைபண்ணுவதால் சிலருக்கு யோகாசாரர்க ளென்று பிரசித்தி யுண்டாயிற்று. அவர்களுடைய பரிபாஷை அடியில் வருமாறு:—

ஞானம் சுயம்வேதனம் (சொப்பிரகாசம்) என்று ஒப்புக்கொள்ளல்வேண்டும். இல்லாவிடின் ஜகத்திற் காந்தியம் (குருட்டுத்தன்மை) வரும்.

"ஞானம் அப்பிரத்தியக்ஷமாயிருந்தால் அர்த்தஞானம்சித்திக்க மாட்டாது" என்று தர்மகீர்த்தியால் சொல்லப்பட்டிருக்கின்றது.

விஷயம் பாகியமெ (வெளியிலிருக்கிறதெ) ன்று ஒப்புக் கொள்வது பொருந்தாது; விகல்பம் பொருந்தாமையால். ஞானத்தால் கிரகிக்கக்கூடிய அர்த்தமானது பாவ (காரணவடிவ பாவபதார்த்த)த்தினின்றுமுண்டாயிற்றா? இன்றா?

முதற்பக்ஷங் கூடாது; உண்டானதற்கு ஸ்திதியிராமையின்.

இரண்டாவது பக்ஷமுங்கூடாது; உண்டாகாதவஸ்து இராமையின்.

அதீத (சென்ற) பதார்த்தமே ஞானக்கிராகியம்; ஞானத்தையுண்டுபண்ணுவதால் என்று கருதின் அதுவும் பாலபாஷிதமா (குழந்தைகளின் வார்த்தையா)ம்; வர்த்தமான பதார்த்தம்தோன்றுகின்ற தென்பதற்கும் விரோதமா யிருத்தலின், இந்திரிய முதலியவைகளும் கிராகிய(அறியப்படு)மென் றேற்படுகின்றமையின்.

மேலும், கிராகியபதார்த்தம் பரமாணு வடிவமா? அவயவி வடிவமா?

இரண்டாவதுபக்ஷங் கூடாது; அவயவிவடிவத்தில் ஏகதேசங் கிரகிக்கப்படுகின்றதா? முற்றுங் கிரகிக்கப்படுகின்றதா? என்னும் விகற்பாதிகளால் அதற்கு நிராகரணம் ஏற்படுகின்றமையின்.

முதற்பக்ஷமுங் கூடாது; அதீந்திரியமாகலின், அதற்கு ஆறு பரமாணுக்களின் சம்பந்தம் ஒரு காலத்திற் சம்பவியாமையின்.

"ஒரு காலத்தில் ஆறு பரமாணுக்களின் சையோகமுண்டாயின் பரமாணுவிற்கு ஆறு அம்சமுண்டாகும்; அவ்வாறம்சத்திற்கும் ஏகதேசத்தன்மை கூறுமிடத்து (மட்) பிண்டம் அணுமாத்திரமாய்விடும்" என்று கூறப்பட்டிருக்கின்றது.

ஆகையால், தன்னினும் வேறான கிராகியமின்மையின் கிராகியவடிவ புத்தி சூரியாதிப்பிரகாசம் போன்று தானாகவே சுவாத்மரூபப் பிரகாசகமா யிருக்கின்றதென்பது சித்தித்தது.

"புத்தியைப் பார்க்கிலும் அநுபவிக்கத்தக்கது வேறொன்றுமின்று. அதற்கு வேறு அநுபவமுமில்லை. *கிராகிய கிராககமிராமையின் சுயமாகவே அப்புத்தி பிரகாசிக்கின்றது" என்று கூறப்பட்டிருக்கின்றது.

**28.** கிராகிய கிராககங்கட்கு அபேதமும் அநுமானத்தாலறியத்தக்கதாம். எது எந்தஞானத்தா லறியப்படுகின்றதோ அது அந்த ஞானத்திலும் வேறுபட்டிருப்பதன்று. எங்ஙனம்? ஞானத்தாலறியப்படும் ஆத்மா அந்த ஞானத்திற்கு வேறுபட்டிராமை போலும். ஞானங்களால் நீலாதி க்ஷணிக பதார்த்தங்க ளறியப்படுகின்றன. (ஞானஞேயமென்னு மிரண்டற்கும்) பேதமிருப்பின் இப்போது இந்த ஞானத்தோடு அர்த்தவிஷயத்திற்குச் சம்பந்தமுண்டாகமாட்டாது; (தாதாத்மியத்தைச் சம்பந்தமாகக் கூறலாமெனின் அது கூடாது;) தாதாத்மியத்திற்கு நியமமான ஏதுவிராமையின். அத்தாதாத்மியத்தி னுற்பத்தியும் நியமமுடையதாகாது. கிராகியம் (விஷயம்) கிராககம் (சாதனம்) சம்வித் (பிரகாசம்-ஞானம்) என்னு மிவற்றிற்கு எப்பேதங் காணப்படுகின்றதோ அது சந்திரனொருவனே பிராந்தியா லிரண்டாகக் காணப்படுதல் போலவாம். ஈண்டும் (பேதஞானத்திலும்) அநாதி அவிச்சின்னப் (இடையீடின்றிய) பிரவாக பேதவாசனையே நிமித்தமாம்.

* கிரகம்-ஞானம்; கிராககம்-ஞானசாதனம்; கிராகியம்-அறியப்படுவது.

"சேர்ந்து காணப்படுவதென்னும் நியம மிருக்கின்றமையின் நீலத்திற்கும் அதன் ஞானத்திற்கும் அபேத மிருக்கின்றது. பேதமோ ஒரு சந்திர னிரண்டாகக் காணப்படுவதுபோல் பிராந்தி ஞானத்தால் தோற்றுகின்றது" என்று கூறப்பட்டிருக்கின்றது.

"புத்திவடிவ ஆத்மாவிற்குப் பேதமின்றாயினும் அது பிராந்தி ஞானத்தினால் கிராகியம், கிராககம், சம்வித் என்னு மிவற்றின் பேதத்துடன் கூடியதுபோல் காணப்படுகின்றது" என்றுங் கூறப்பட்டிருக்கின்றது.

ஆகையினால் மனோராஜ்ஜிய மோதகத்தி(கொழுக்கட்டையி)னா லுண்டான ரசம், வீரியம், விபாகம் என்னுமிவை வாஸ்தவமோத கத்தினாலுண்டாகும் ரசமுதலியவற்றிற்குச் சமானமென்று கருது தல் கூடாது; உண்மையில் புத்தி * வேத்தியவேதகங்களின் ஆகார (வடிவ)மற்றிருப்பினும் அது வியவகாரகர்த்தாவின் ஞானத்தை யநு சரித்துப் பின்னமான கிராகிய கிராகக வடிவத்துடன் கூடியிருப்ப தால் திமிராதி (இருட்டு முதலிய) தோஷசகித நேத்திரமுள்ளவர் கட்குக் கேசம் (மயிர்), இந்திரநாடி (மிகச் சிறியதோர் கறுப்புநிற முள்ள நாடி) முதலியவற்றிற்கு ஞான அபேதமாவது அல்லது பேத மாவது தோன்றுவதுபோல் அநாதி உபப்பிலவ (உபத்திரவமுள்ள) வாசனாதிடத்தினால் அதற்கு வியவஸ்தை பொருந்துகின்றது.

இங்ஙனம் வினவுவதால்

"வேத்தியம் வேதகமென்னு மிவற்றின் ஆகாரமற்றஞானம் (புத்தி) பிராந்திஞான முள்ளவர்கட்கு எங்ஙனம் கிராகியம் கிரா ககமென்னு மிவற்றின் ஆகாரத்துடன் கூடியதாகக் காணப்படுகின் றதோ, எப்போது அங்ஙனம் கேசாதி ஞானபேதம்போல் விய வஸ்தை பொருந்துகின்றதோ அப்போது கிராகிய கிராககமான புத்தி விசாரிக்கத்தக்கதன்று" என்று சொல்லப்பட்டிருக்கின்றது.

ஆகையால், புத்தி அநாதிவாசனாவசத்தால் அனேகாகார மாகத் தோன்றுகின்றதென்பது சித்தமாம்.

மேற்கூறிய நால்வகைத்தாய பாவனாபலத்தினால் நிகில (சர்வ) வாசனைகளும் போய்விடுகின்றன. பின்னர்ப் பல்வகைத்தாய விஷயா காரம் நிவிர்த்தியாவதால் சுத்தஞான முண்டாகின்றது. அதுவே மகோதயமாம் (மோக்ஷமாம்).

* வேத்தியம்-அறியத்தக்கவிஷயம்; வேதகம்-அறிவதற்குச் சாதனம்.

29. பாகியமானவஸ்துக்களில்லை யென்று சிலர் (சௌத்திராந்திகர்) கூறுவதுபொருந்தாது; பிரமாணமின்மையின். (பாகியவஸ்துக்களில்லை யென்பதில்) சேர்ந்து காணப்படுகின்றதென்னும் நியமமும் பிரமாண மென்று சொல்லுதல் கூடாது; கிராகியகிராககங்களின் அபேதத்திற்குச் சாதகமென் றங்கீகரித்த ஏது அப்பிரயோஜக மாகையால் விபக்ஷத்தினின்றும் வியாவிர்த்தி (நீக்கம்) சந்தேகமாயிருக்கின்றமையின்.

(ஆ.) (கிராகிய கிராககங்கட்குப்) பேதம் அங்கீகரிக்குமிடத்துச் சகோபலம்பநியமம் (விஷயமும் ஞானமும் சேர்ந்து தோன்றுங் கிரமம்) சாதனமாக மாட்டாது.

(ச.) இங்ஙனம் ஆசங்கித்தல் அடாது; ஞானம் அந்தர்முகமாயிருக்கின்றமையானும், விஷயம் பேதமாகத் தோன்றுகின்றமையானும், ஒரேதேச காலங்களிலிருக்குந் தன்மையாகிய சகோபலம்பநியமம் சம்பவியாமையானுமென்க. நீலாகாரமான அர்த்தம் ஞானகாரமென்று கூறுமிடத்து அது நானென்று தோன்ற வேண்டுமேயன்றி இது வென்று தோன்றுதல் கூடாது; ஞானத்தினும் பேதமின்மையின்.

(ஆ.) நீலாகாரம் ஞானசொரூபமா யிருந்தாலும் பிராந்தியினால் பாஹியத்திலிருக்கின்றதுபோல் பேதமாகத் தோன்றுகின்றது; ஆண்டு நானென்று தோன்றுவதின்று.

"ஞானத்தின் எந்தப்பாகம் வெளியிலிருக்கின்றது போன்றிருக்கின்றதோ அந்த அபின்னமான ஞானத்திற்குப் பேதப்பிரதிபாசம் (தோற்றம்) பிராந்தி" என்றும்,

"எது அகத்திலிருக்கின்றதோ அது புறத்திலிருக்கின்றது போற்றோற்றுகின்றது" என்றும் கூறப்பட்டிருக்கின்றன.

(ச.) அங்ஙனம் கூறியது தகுதியன்று; பாஹியார்த்த (வெளி விஷய) மிராத விடத்து ஞானத்தினுற்பத்தி யிராமையின், "பாஹியத்திலிருக்கின்றதுபோல்" என்று உபமானங் கூறியது பொருந்தாது. வசுமித்திரன் வந்தியாபுத்திரன் (மலடிமகன்) போல் விளங்குகின்றா னென்று எந்தப் புத்திசாலியுங் கூறமாட்டான். பேதத்தோற்றம் பிராந்தியென்று கூறின், அபேதத் தோற்றத்திற்குப் பிராமாணியம் சம்பவிக்கும். அதற்குப் பிராமாணிய

யிருக்கும்போது பேதத்தோற்றம் பிராந்தியாய் விடும். இவ்வாறு அந்நியோந்நியாசிரயம் (ஒன்றையொன்று பற்றுத லென்னும் தோஷம்) சம்பவிப்பதாலும், *விசம்வாதம் இராஸ்மையால் நீலக்கா முதலியவற்றைக் கிரஹித்துக்கொண்ட சம்வித் (ஞானம்) உலகத்தில் பாஹியத்தைக்கிரஹிக்கின்றதேயன்றி ஆந்தரபதார்த்தத்தை கிரஹிக்கின்றதின்றென்னும் வியவஸ்தை கண்டிருப்பதாலும், இந்த அபேத சாத்தியமான ஏது கோமயபாயசீய [கோமய (சாணி)த் தாற்செய்த பாயச] நியாயம்போல் ஆபாசமடையும்.

ஆகையால் 'பாஹியத்திலிருக்கின்றதுபோல்' என்று கூறும் யோகாசாரன் பாஹியம் கிரஹிக்கத்தக்கதென்றே பாவனை செய்தல்வேண்டும். ஆகையால் உன்னுடைய பாணமே உன்னை யடிக்கின்றது.

(ஆ.) ஞானபின்னகாலத்தை யுடைய அர்த்தத்திற்கு (ஞானமோடபின்னமான காலத்தையுடைய பதார்த்தத்திற்கு) பாஹியத்தன்மை பொருந்தாது.

(ச.) இங்ஙனங் கூறுவதுசிதமன்று; இந்திரிய சம்பந்த முடைய விஷயத்தின் ஞானமுண்டாகும்போது விஷயம் ஞானத்திற்குத் தன்னுடைய ஆகாரத்தைக் கொடுக்கின்றது; அந்த ஆகாரத்தால் அந்த அர்த்தத்திற்கு அநுமேயத்துவம் (அநுமானிக்கத் தக்கதென்பது) பொருந்துகின்றமையின்.

"ஞானமும் அர்த்தமும் வெவ்வேறு காலத்திருப்பின் எங்ஙனம் கிரஹிக்க (அறிய)ப்படும்? கிரஹிக்கத்தக்கதென்று சொல்லுகின்றனர்; வியக்திக்கு ஞானகாரத்தைக் கொடுக்கக்கூடியதே ஏதுவென்றும் கூறுகின்றனர்" என்று வினவிடையாகக் கூறியிருக்கின்றனர்.

எங்ஙனம் புஷ்டியினால் போஜனம் அநுமிக்கப்படுகின்றதோ, எங்ஙனம் பாஷையினால் தேசமநுமிக்கப்படுகின்றதோ, எங்ஙனம் பரபரப்பினா (மிகு பிரீதியைக் காட்டுவதா)ல் சிநேகம் அநுமிக்கப் படுகின்றதோ அங்ஙனமே ஞானகாரத்தினால் ஞேயம் (விஷயம்) அநுமிக்கப்படுகின்றது.

---

பயனில் முயற்சியைப் பிறப்பிக்கும் இச்சை முதலியன விசம்வாதி பிராந்தி)யாம். பயனுள் முயற்சியைப் பிறப்பிக்கும் இச்சை முதலியன சம் பாதியா (யதார்த்தமா)ம்.

"எக்காரணத்தினல் பாதிரூபத்தைவிட்டுப் பாதிரூபத்துடன் இந்தஞானம் சேரமாட்டாதோ அக்காரணத்தினல் பிரமேயம் (விஷயம்) அறியப்படுவதால் பிரமை (ஞானம்) பிரமேயரூபமாயிருப்பது பிரமாணமாம்" என்று கூறப்பட்டிருக்கின்றது.

"வித்தி (ஞான)சத்தையே பிரமேய ஞானமென்று கூறுவதுசிதமன்று; அந்த வித்திசத்தை யாண்டும் சமானமா யிருக்கின்றமையின். ஆனல், சாரூப்பியம் (சமானவடிவத்தன்மை) வித்திசத்தையிற் பிரவேசித்துச் சரூப (சமானவடிவ)மாகச் செய்து சேர்க்கின்றது" என்றும் கூறப்பட்டிருக்கின்றது.

பாஹியார்த்தமிருப்பதில் அநுமானப்பிரமாணம் வருமாறு:—

**30.** எவ்வஸ்துக்கள் எதுவிருந்தாலும் ஒரு சமயத்துண்டாகின்றனவோ அவையாவும் அதுவன்றி மற்றொன்றையபேட்சித்துக் கொண்டிருக்கின்றன; எங்ஙனம்? பேசவும் நடக்கவும் விரும்பாதிருக்கின்ற என்னிடத்தில் வசன கமன பிரதிபாச(தோற்ற)ங்கள் பேசவும் நடக்கவும் விருப்பமுள்ள மற்றையபுருஷர்களது சந்தானத்தை (தொடர்ச்சியை) அபேட்சித்துக்கொண் டிருக்கின்றமை போலும். அங்ஙனமே, விவாதத்திற்கு விஷயமான பிரவிர்த்தி விஞ்ஞானம் ஆலயவிஞ்ஞானமிருந்தும் ஒருசமயத்திலேயே நீலாதிகளை விஷயமாக்கிக் கொண்டிருக்கின்றது. அவற்றுள்,

i. ஆலயவிஞ்ஞானம் அகமாஸ்பத (நானெனும்வடிவ) விஞ்ஞானம்.

ii. பிரவிர்த்தி விஞ்ஞானம் நீலாதிகளை விஷயமாகவுடைய விஞ்ஞானம்.

"எந்தஞானம் அகமாஸ்பதமா யிருக்கின்றதோ அஃது ஆலயவிஞ்ஞானம். எந்த ஞானம் நீலாதிகளை விஷயமாகவுடைத்தாயிருக்கின்றதோ அது பிரவிர்த்திவிஞ்ஞானம்" என்றுகூறப்பட்டிருக்கின்றது.

ஆதலால், ஆலயவிஞ்ஞான சந்தானத்தினும் வேறுய பிரவிர்த்திவிஞ்ஞானத்திற் கேதுவாயும் ஒருசமயமிருப்பதுமான பாஹியமான அர்த்தம் கிராகியமேயன்றி ஒருசமயத்துண்டாகின்ற வாசனுபரிபாகஞானம் கிராகியமன்றென்றறிக.

31. விஞ்ஞானவாதி மதத்தில் ஏகசந்தானத்தி லிருக்கும் வாசனை ஆலயவிஞ்ஞானங்கட்கு அந்தந்தப் பிரவிர்த்தியை யுண்டு பண்ணுவதிற் சக்தியிருக்கின்றது. அந்தச் சக்திக்கும் தனது காரிய உற்பத்தியைக் குறித்து அபி (எதிர்) முகமாவதே பரிபாகம். அதற்கும் தனது சந்தானத்திலிருக்கும் பூர்வக்ஷணத்தையுடைய பிரத்தியயம் (ஞானம்) காரணமென்றபேக்ஷிக்கின், சந்தானாந்தர நிபந்தனமா (வேறு சந்தானத்தை யேதுவா)க அங்கீகரிப்பதில்லை. ஆகையால், பிரவிர்த்திஞானத்தை யுண்டுபண்ணுகின்ற ஆலயவிஞ்ஞானத்திருக்கும் வாசனை பரிபாகத்தைக் குறித்து ஆலயவிஞ்ஞானத்திருக்கின்ற எல்லா க்ஷணிகங்களும் சமர்த்தங்களென்றே சொல்லல்வேண்டும். ஒன்றும் சமர்த்தமன்றென்று சொல்லுதல் கூடாது; (ஏனெனின்) ஆலயவிஞ்ஞான சந்தானத்திலிருக்கின்ற யாவும் சமானமா யிருக்கின்றமையின்.

யாவும் சமர்த்தமென்னுமிடத்துக் காரியத்தைத் தள்ளுதல் கூடாது. ஆகவே, ஒருசமயத்திற்றான் காரியத்தை யுண்டுபண்ணச் சமர்த்தமென்று நிர்வாகம் பண்ணும்பொருட்டுச் சப்தம் ஸ்பரிசம்,ரூபம்,ரசம்,கந்தம், சுகாதி என்னும் இவ்வாறுவிஷயங்களையுடைய ஞானங்கள் நான்கு பிரத்தியயங் (ஞானங்) களையடைந்து உண்டாகின்றன.

உண்டாகின்றனவென்று புத்திமானையும், விரும்பாமலுமுள்ள புருஷன் தனதநுபவத்தை மறுத்துக்கொள்ளாமல் அறிந்துகொள்ளல்வேண்டும்.

அந்நான்கு பிரத்தியயங்கள் ஆலம்பனம், சமநந்தரம், சககாரி அதிபதி என்பனவாம். அவற்றுள்,

(1.) ஞானபதத்தினை லறியக்கூடியதாயும் நீலாதிகளின் ஆகாரத்துடன் கூடியதாயுமுள்ள சித்தத்திற்கு நீலாலம்பன (விஷய மான ஞானமுண்டாவதால் நீலாகாரத்தன்மை யுண்டாகின்றது

(2.) சமநந்தரப் பிரத்தியயமான பிராசீன (முந்திய)ஞானத்தினால் போதரூபத்தன்மை யுண்டாகின்றது.

(3.) சககாரிப் பிரத்தியயமாய ஆலோகத் (பிரகாசத்)தினாலும் (4.) அதிபதிப்பிரத்தியயமாய சக்ஷுவினாலும் ரூபாதி விஷயக் கிரஹணநியமமுண்டாகின்றது.

அறியப்பட்ட ஞானத்திற்கு ரசாதி சாமானியம்வருவதால் நியாமகமான (அடக்கியாளுவதான) சக்ஷுவானது அதிபதியாகவேண்டும்; உலகத்தில் நியாமகனே அதிபதியாகக் காணப்பட்டிருப்பதால்.

இங்ஙனம் சித்தசைத்த (மனத்தின்சம்பந்த) ரூபமான சுகாதிகட்கு இந்நான்கும் காரணமென் றறியவேண்டும்.

சித்தசைத்த ரூபமான ஸ்கந்தம் (உலகம்) ரூபம், விஞ்ஞானம், வேதனை, சமிக்ஞை, சம்ஸ்காரமென்று ஐந்துவிதமாம். அவற்றுள்,

(1.) எவற்றால் விஷயங்கள் நிரூபிக்கப்படுகின்றனவோ அவை இந்திரியங்கள். இந்திரியங்களால் எவை ரூபிக்கப்படுகின்றனவோ அவை விஷயங்கள் என்னும் வியுத்பத்தியால் (சொற்பொருளுணர்ச்சியால்) சவிஷயமான இந்திரியங்கள் ரூபஸ்கந்தம். (அஃதாவது விஷயத்துடன் கூடிய இந்திரியம் ரூபஸ்கந்தமாம்.)

(2.) ஆலயவிஞ்ஞானம் பிரவிர்த்தி விஞ்ஞானமாகிய இவற்றின் பிரவாகம் விஞ்ஞானஸ்கந்தமாம்.

(3.) மேற்கூறிய இரண்டு ஸ்கந்த சம்பந்த ஜன்னிய சுக துக்காதி பிரத்தியய (ஞான)ப்பிரவாகம் வேதனஸ்கந்தமாம்.

(4.) கோ முதலிய சப்தத்தை விஷயமாகவுடைய விஞ்ஞானப்பிரவாகம் சமிக்ஞாஸ்கந்தமாம். (சமிக்ஞை-பெயர்.)

(5.) வேதனஸ்கந்தத்தினு லுண்டான ராகத்துவேஷாதிகளான கிலேசங்களும், மதமானுதிகளான உபக்கிலேசங்களும், தர்மாதர்மங்களும் சம்ஸ்காரஸ்கந்தமாம்.

அந்த இவை யாவும் துக்கம், துக்கத்திற்கிருப்பிடம், துக்க சாதனமெனப் பாவித்து இவற்றின் நிரோதத்திற்கு உபாயமான தத்துவஞானத்தைச் சம்பாதித்தல்வேண்டும்.

ஆகையினுற்றான் "துக்கசமுதாய நிரோதமார்க்கங்களான நான்கும் புத்தருக்கு அபிமதமான தத்துவங்கள்" என்று சொல்லப்பட்டது. அவற்றுள்,

i. துக்கம் பிரசித்தமாம்.

ii. சமுதாயம் துக்ககாரணமாம். அது

(1.) பிரத்தியோப நிபந்தனம், (நிபந்தனம்-கட்டப்பட்டது.)

(2.) ஹேதூப நிபந்தனம் என்றிருவகைப்படும்.

அவற்றுள், பிரத்தியோப நிபந்தனத்தைச் சங்கிரகித்துக் கூறும் சூத்திரம் அடியில் வருமாறு:—

"அந்நிய ஹேதுக்கள் இந்தக்காரியத்தை அடைகின்றன" என்பது.

இந்தக்காரியத்தை யெந்த ஏதுக்க ளடைகின்றனவோ அந்த ஏதுக்களுக்குக்காரண சமவாய(சம்பந்த)ம் அதற்கு (காரணத்திற்கு) மாத்திரம் பலம் (பிரயோஜனம்). ஒருசேதனனுக்கும் பலமன்று. (காரணசமவாயத்திற்குச்சேதனன் காரணனன்றென்பதாம்) என்பது சூத்திரார்த்தம்.

எங்ஙனமென்னில்,

ஆறுதாதுக்களின் சேர்க்கையினால் பீஜத்தை ஹேதுவாக வுடைய அங்குரமுண்டாகின்றது. அவற்றுள்,

(1.) பிருதிவித்தாது அங்குரத்திற்குக் காடின்னியத்தையும் கந்தத்தையு முண்டுபண்ணுகின்றது.

(2.) அப்புத் தாது சிநேகத்தையும் ரசத்தையு முண்டு பண்ணுகின்றது.

(3.) தேஜோதாது ரூபத்தையும் அவுஷ்ணிகத்தையு (சூட்டையு) முண்டாக்குகின்றது.

(4.) வாயுத்தாது ஸ்பரிசத்தையும் சலனத்தை (அசைவை)யு முண்டுபண்ணுகின்றது.

(5.) ஆகாய தாது அவகாசத்தையும் சப்தத்தையு முண்டு பண்ணுகின்றது.

(6.) ருது (கால) தாது அங்குரமுண்டாவதற்குத் தக்க பிருதிவியாதிகளை யுண்டுபண்ணுகின்றது.

ஹேதூபநிபந்தனையைப் பற்றிய சங்கிரக சூத்திரம் அடியில் வருமாறு:—

"புத்தமதத்தில் காரியகாரணவடிவதர்மங்களுக்கு பரமதாகு காரியகாரண பாவவடிவ தர்மதை(தர்மத்தன்மை)யுண்டோ அந்தத் தர்மதையானது உற்பாதத்திலாவது அனுற்பாதத்திலாவது இருக்கின்றது. எதுவிருந்தால் எதுவுண்டாகின்றதோ அவ்வுண்டாகின்ற வஸ்து அந்தக் காரணத்தின் காரியமாம்.

32. தர்மமாகிய காரியத்திற்குக் காரணத்தை அதிக்கிரமிக்காமையால் ஸ்திதி ஏற்படுகின்றது. காரணத்திற்குக் காரியத்தைக் குறித்து நியாமகதை(நியமமாயிருக்குந்தன்மை)யு மேற்படுகின்றது. காரிய காரண பாவமானது சேதனமன்றிச் சம்பவிக்கமாட்டாதெனச் சங்கித்தல் கூடாது. காரணமிருந்தால் அதையடைந்து உண்டாவதை அநுசரிப்பது எதுவோ அதுவே தர்மத்துவமாம். இஃது உற்பாதத்திலாவது அநுற்பாதத்திலாவது தர்மங்களிடத்திருக்கின்றது. இவ்விஷயத்தில் சேதனனான அதிஷ்டாதா (கர்த்தா) ஒருவனும் காணப்படவில்லை."

(இதுவரையிற் சூத்திரார்த்தமாம்.)

எங்ஙனம் காரியத்தின் உற்பத்தி காரணத்தை அடைந்தே உண்டாகின்றது?

பீஜத்தினின்று அங்குரமும், அங்குரத்தினின்று காண்டமும் (தண்டும்), காண்டத்தினின்று நாளமும் (காம்பும்), நாளத்தினின்று கர்ப்பமும், கர்ப்பத்தினின்று சூகமும் (மொக்கும்), சூகத்தினின்று புஷ்பமும், புஷ்பத்தினின்று பலமும் உண்டாகின்றன.

பாஹ்யமான சமுதாயத்தில் காரணமான பீஜாதியாவது காரியமான அங்குராதியாவது நான் அங்குரத்தை யுண்டுபண்ணுகின்றேன், நான் பீஜத்தினால் முடிக்கப்பட்டேனென்று சேதனம் போல் ஆசரிக்கின்றதில்லை. இங்ஙனம் அத்தியாத்மிகங் (சரீரசம்பந்தவிஷயங்)களிலும் காரணத்துவயத்தை யறிதல்வேண்டும். பிரமேயத்தைப்பற்றிக் கூறவேண்டியது அதிக மிருப்பதாலும், இவ்விஷயத்தைப்பற்றி விரிக்கில் நூல் பெருகுமென்னும் பயத்தாலும் சுருக்கியுரைத்தனம்.

இவ்விரண்டன் (காரியகாரணங்களின்) நிரோதமாவது அல்லது அதன்பிறகு விமலமான ஞானோதயமாவது முத்தியாம்; அவற்றின் நிரோத உபாயம் மார்க்கமாம்; அதுதான் தத்துவ ஞானம்.

அந்த ஞானமும் *பிராசீனமான †பாவனுபலத்தா லுண்டாகின்ற தென்பது பரமரகசியம்.

33. சூத்திரத்தின் அந்தம் (முடிவு) கேட்கின்றவர்கட்குச் சொல்லப்பட்டது. நீங்களும் சூத்திரத்தின் அந்தத்தைக் கேட் கின்றவர்களாக இருக்கின்றீர்கள். ஆகையால் நீங்கள் சௌத்திராந் திகர்களா யிருங்களென்று பகவானாற் கூறப்பட்டமையின், இவர் களுக்குச் சௌத்திராந்திகர்க ளென்று பெயருண்டாயிற்று.

34. சிலபௌத்தர்களுக்குப் பாஹ்யமான ஸ்கந்தாதிகளும் ஆந்தரமான ரூபாதி ஸ்கந்தங்களும் இருந்தாலும், அவற்றில் அநாஸ்தை (வைராக்கியம்) உண்டுபண்ணுவதற்காக எல்லாம் சூனியமென்று பகவானானவர் முதற் சிஷ்யர்கட்குக் கூறினார்.

இரண்டாவது சிஷ்யர்கட்கு விஞ்ஞானமொன்றே சத்தென் றுபதேசித்தார்.

இரண்டும் சத்தியமென் றங்கீகரித்த மூன்றாவது சிஷ்யர்கட்கு விஷயம் அநுமிக்கத்தக்கதென் றுபதேசித்தார்.

அவர்கள் அந்த இந்த விருத்தமான பாஷையை வர்ணித்து (கூறி)க்கொண்டிருப்பதால் வைபாஷிகரென்னும் பேருள்ளவர்க ளானார்கள். அவர்களுடைய சமிஞ்ஞை (சங்கேதமான வார்த்தை) அடியில் வருமாறு:—

பதார்த்தங்களெல்லாம் அநுமேயமென்று கூறும் வாதத்திற் பிரத்தியக்ஷசித்தமான ஒருவஸ்துவு மிராமையின், வியாப்திஞான முண்டாகக்கூடிய ஸ்தலமின்றாம். ஆகையால் அநுமானப்பிரவிர்த்தி பொருந்தாது.

சகலலோக அநுபவத்திற்கும் விரோதம் வருகின்றதாதலின் அர்த்தம் 1. கிராகியம் 2. அத்தியவசேயம் என்றிருவகைத்தாம்.

அவற்றுள், i. கிரஹணமாவது நிர்விகல்பகஞான வடிவாகவும் பிரமாணமாகவு மிருக்கின்றது; கற்பனையற்றிருப்பதால். (கிரஹ ணத்திற்கு விஷயம் கிராகியமாம்).

---

* பிராசீனம் - பழைமை.

† பாவனுபலம் - பாவனையின் முதிர்ச்சி.

ii. அத்தியவ சாயமாவது சவிகல்பக ஞானம், அஃது அப் பிரமாணமாம்; கற்பனு ஞானமாகையால். (அத்தியவ சாயத்திற்கு விஷயம் அத்தியவசேயமாம்).

"கற்பனையற்ற (நிர்விகற்ப) ஞானம் பிரமாணம். அது நிர்விகல்பகமான பிரத்தியக்ஷம். வஸ்துவினிடத்தில் ஆபாசமாய்த் தோன்றுவதாலும் விசம்வாதத்தினுலும் சவிகற்ப ஞானம் அப் பிரமாணம்" என்றும்,

ii. "கிராகியமான வஸ்து பிரமாணமாயின் ஞானமானது இதைவிட வேறுவிதமா யிருக்கின்றது. சப்தம், லிங்கம், இந்திரியமென்னு மிவற்றாலுண்டாகிற ஞானம் பிரமாணமன்று. அவற்றிற்கு விஷயமானவை வஸ்துக்களன்று" என்றும் சொல்லப் பட்டிருக்கின்றன.

(ஆ.) சவிகல்பக ஞானம் அப்பிராமாணிய மெனின் அதனுல் பிரவிர்த்தித்தவனுக்கு அர்த்தப்பிராப்தி எங்ஙனங்கூடும்? சம்வாதமும் எங்ஙனம் பொருந்தும்?

(ச.). அங்ஙனங் கூறுவது கூடாது; மணிப்பிரபையை விஷயமாகவுடைய மணிவிகற்ப (பிராந்தி) நியாயத்தினுல் பரம்பரையாக அர்த்தப்பிராப்தி சம்பவிப்பதால் அது பொருந்தும். மற்றை யெல்லாம் சௌத்திராந்திகப் பிரஸ்தாப (நிரூபிக்குமிட) த்தில் விஸ்தாரமாகச் சொல்லப்பட்டிருக்கின்றமையின் இங்கு விஸ்தார மாகச் சொல்லப்படவில்லை. சிஷ்யர்களை அநுசரித்து வெவ்வேறாக உபதேசிப்பது சம்பிரதாயமல்லவென்று சொல்லுதல் கூடாது;

"உலகநாதரான புத்ததேவருடைய உபதேசமானது பிராணிகளின் அபிப்பிராயத்தை அநுசரித்ததாம். அஃதுலகத்தில் அநேக உபாயங்களால் பேதத்தை யடைந்திருக்கின்றது" —

"*கம்பீரம், †உத்தானமென்னும் பேதத்தினுல் சிலவிடங்களில் இரண்டுரூபமாகவும் அத்வைத சொரூபமான சூனியமாகவும் அவருடைய உபதேசம் பின்னபின்னமா யிருக்கின்றது" என்று போதசித்த விவரணத்திற் கூறியிருப்பதால்.

35. "அர்த்தங்களை மிகுதியாகச் சம்பாதித்தபிறகு துவாதசாயதனங்களை (12 இடங்களை) நன்றாகப் பூஜித்தல் வேண்டும். இவ்

* கம்பீரம்-ஆழ்ந்தகருத்து. † உத்தானம்-சாமானியகருத்து.

வுலகத்தில் மற்றைய வஸ்துக்களைப் பூஜிப்பதில் யாது பிரயோச னம்? ஞானேந்திரியம் ஐந்து, கன்மேந்திரியம் ஐந்து, மனம், புத்தி யென்னும் இப்பன்னிரண்டையும் துவாதசாயதனமென்று சொல்லு கின்றனர்'' என்று துவாதசாயதன பூஜை பௌத்தமதத்தில் பிர சித்தமாம்.

விவேகவிலாசமென்னும் கிரந்தத்தில் பௌத்தமதம் அடியில் வருமாறு கூறப்பட்டிருக்கின்றது:—

"பௌத்தர்கட்குத் தேவன் சுகதன்; பிரபஞ்சமோ க்ஷண * பங்குரம். ஆரியர்களே! சத்துவமென்னும் பெயரினால் நான்கு தத்துவங்கள் கிரமமாகவுண்டு.

"துக்கம், ஆயதனம், சமுதாயம், மார்க்க மென்பன நான்கு தத்துவங்களாம். இவற்றின் வியாக்கியானம் கிரமமாக மேல் வருவதால் கேட்கலாம்;

"விஞ்ஞானம், வேதனை, சமிஞ்ஞா, சம்ஸ்காரம், ரூபமென்னு மிவ்வைந்தும் ஸ்கந்தங்களென்று சொல்லப்பட்டிருக்கின்றன; இப் பஞ்சஸ்கந்தங்களும் சம்சாரிக்குத் துக்கமாம்."

"பஞ்சேந்திரியங்களும், சப்தாதி ஐந்துவிஷயங்களும், மனதும், புத்தியும் ஆகிய இப்பன்னிரண்டும் தர்மாயதனங்களாம்."

"இராகாதிகளின் கூட்டம் மனிதர்களின் இருதயத்தி லுண் டாகின்றன. மீண்டும் அஃது ஆத்ம சுபாவமென்றும், ஆத்மீக சுபாவமென்றும் பெயருடைய சமுதாயமாம்."

"சம்ஸ்காரங்கள் க்ஷணிகமென்று எந்த வாசனை ஸ்திரமாக வுண்டாகின்றதோ அதனை மார்க்கமென்றறிதல் வேண்டும். அதுவே மோக்ஷமென்றும் சொல்லப்படும்."

"பிரத்தியக்ஷம் அநுமானமெனப் பிரமாணம் இருவகைத் தாம். வைபாஷிகமுதலிய நான்குமார்க்கங்களை யடைந்த பௌத்தர் கள் பிரசித்தமாம்".

"ஞானத்துடன் கூடிய அர்த்தம் வைபாஷிகனால் ஒப்புக் கொள்ளப்பட்டது.

---

* பங்குரம்-பங்க(நாச)த்தையடைவது.

பிரத்தியக்ஷத்தினு லறியக்கூடிய அர்த்தம் பாஹியத்தினில்லை யென்று சௌத்திராந்திகனு லங்கீகரிக்கப்பட்டது.

ஆகாரத்துடன்கூடிய புத்தி (ஞானம்) யோகாசாரனு (க்ஷணிக விஞ்ஞானவாதி)க்குச் சம்மதம்.

மாத்தியமிகர்கள் கேவலஞானமாத்திர மிருக்கின்றதென் றங்கீகரிக்கின்றனர்

"நான்கு பௌத்தர்கட்கும் இராகமுதலிய ஞான சந்தானத்தினு லுண்டான வாசனையின் நாசத்தினு லுண்டாவதே மோக்ஷமென்று கூறப்பட்டிருக்கின்றது"

"தோல், கமண்டலம், தலைமொட்டை, மரப்பட்டை, முற்பகலிற் போஜனம், கூட்டம், சிவப்புவஸ்திர மென்னு மிவற்றைப் பௌத்தபிட்சுக்கள் (சந்நியாசிகள்) மேற்கொண் டிருக்கின்றார்கள்."

பௌத்த தரிசனம்

முற்றிற்று.

# மூன்றாவது
# ஆருகத தரிசனம்.

—ooo—

அவதாரிகை.

36. ஆகையா லிங்ஙனம் முக்தகச்சர் (பௌத்தர்) மதத்தைச் சகிக்காமல் திகம்பரர் (திக்கைவஸ்திரமாகவுடையவர், அவதூதர்) ப்ரயாசத்தால் (பிரபஞ்சத்திற்கு) ஸ்திரத்தன்மையை யங்கீகரித்து க்ஷணிகத்துவபக்ஷத்தை நிராகரிக்கின்றார்.

ஸ்தாயியா (ஸ்திரமா)ன ஆத்மா இராதபட்சத்தில் அப்போது இவ்வுலகத்தில் பலத்தை யநுபவிக்கக்கூடிய சாதன சம்பாதனம் வியர்த்தமாம். ஒருவன் சாதனத்தைச் சம்பாதிக்கின்றான், மற் றொருவன் பலத்தை அனுபவிக்கின்றானென்பது பொருந்தாது ஆகையால் "எந்த நான் முன்னர்க் கர்மத்தைச்செய்தேனோ அந் நானே இப்போது பலத்தை யனுபவிக்கின்றேன்" னென்று பூர்வ அபர (முன்பின்) காலசம்பந்தமுடையனாகவும், ஸ்தாயியானவனு மான ஆத்மா ஸ்பஷ்டமான பிரமாணத்தினால் நிச்சயிக்கப்பட டிருக்கின்றான். பூர்வ அபர விபாகம (பிரிவு) ற்ற காலத்தின் ஒரு கலையி (ஒருபகுதியி) லிருக்கக்கூடிய க்ஷணிகத்துவம் ஆராய்ச் யுடையவராய ஆருகதரால் அங்கீகரிக்கப்படவில்லை.

(ஆ.) தொடர்ந்துள்ள (க்ஷணிக விஞ்ஞானத்தின்) பி வாகம் பிரமாணத்துடன் கூடியிருப்பதால் அது யாவரால் நிவிர் திக்கக் கூடுமென்னும் நியாயத்தாலும், எது சத்தோ அது க்ஷணி மென்றற் றொடக்கத்துப் பிரமாணத்தினாலும், க்ஷணிகத்துவ நிச்சயிக்கப்பட் டிருக்கின்றது. அதையநுசரித்துச் சமானமான ச தானத்து (தொடர்ச்சியு) டன் கூடின ஞானத்திற்குள் முந்திய ஞானம் கர்மத்தைப் பண்ணுகின்றது, பிந்திய ஞானம் பலத்தை யனுபவிக்கின்றதென் றங்கீகரிப்பதில் யாதொருதோஷமு மின்றாம்; காரியகாரணபாவம் நியாமகமாயிருப்பதால். எங்ஙனம்? மதுரரசத்தி லூறிய மாங்கொட்டையை உழுதபூமியில் நட அதனினின்றும் அங்குரம், காண்டம் (இலை), ஸ்கந்தம் (பெருங்கிளை), சாகை (சிறு கிளை), தளிர், புஷ்ப மென்னு மிவற்றின் மூலமாய்ப் பழத்தில் மதுர

முண்டாகின்றது. அல்லது, அரக்குச்சாயத்தினால் நனைக்கப்பட்ட பருத்திக்கொட்டையைப் பூமியிற்போட அதன் முளை முதலியவற்றின் வாயிலாகப் பஞ்சில் சிவப்புநிறம் காணப்படுகின்றது.

"எந்தச் சந்தானத்தில் கர்மவாஸனை யுண்டாயிருக்கின்றதோ, அந்தவிடத்திலேயே பலனுண்டாகின்றது; பஞ்சில் இரக்தநிறம் போலும். மாதுளம் புஷ்பம் அரக்குச்சாயத்தால் நனைக்கப்படின் அதனினின்றும் சக்தியுண்டாகின்றது. நீ அதைக் கவனிக்கவில்லையா?" என்று சொல்லப்பட்டிருக்கின்றது.

(ச.) நீ கூறியது (நீரில் முழுகிப்போகின்றவன்) நாணலையும்குசத்தை(தருப்பையை)யும் ஆதாரமாய்ப்பிடித்ததற்குச்சமானமாம்; விகற்பத்தைச் சகிக்காமையால். ஜலதரா(மேகபடலமா)திருஷ்டாந்தத்தில் க்ஷணிகத்துவம் இந்த (அநுமான)ப் பிரமாணத்தினால் நிச்சயிக்கப்பட்டிருக்கின்றதா? அல்லது, பிரமாணாந்தரத்தால் நிச்சயிக்கப்பட்டிருக்கின்றதா?

நற்பக்ஷங்கூடாது; உனக்கபிமதமான (நீ ஒப்புக்கொ[illegible] க்ஷணிகத்துவம் ஓரிடத்தும் காணப்படாமையி[illegible] திருஷ்டாந்தம் சித்திக்காதிருக்கும்போது இந்த அநுமானமே உண்டாகமாட்டாது.

ii. இரண்டாவது பக்ஷமுங் கூடாது; அந்நியாயத்தாலே (வேறு பிரமாணத்தினாலே)யே எங்கும் க்ஷணிகத்துவம் சித்திக்கும்போது சத்துவாநுமானம் விபல (நிஷ்பல)மாய்விடும்.

அர்த்தக்கிரியா காரியத்துவம் சத்துவமென் றங்கீகரிக்கி[illegible] (கயிற்றிலாரோபமான) மித்தியாசர்ப்பத்தின் கடியும் அர்த்த[illegible] கிரியாகாரியமாகையால் (பயத்தை யுண்டுபண்ணுவதால்) அதற்கு சத்துவம் வரக்கூடும். ஆகையினாற்றான் உற்பத்தி, நாசம், ஸ்திர[illegible] யிருக்குந்தன்மையென்னு மிவற்றுடன் கூடியது சத்துவமென்[illegible] கூறப்பட்டிருக்கின்றது.

(ஆ.) சாமர்த்திய அசாமர்த்திய மென்னு மிவற்றி[illegible] விருத்ததர்ம அத்தியாசத்தினால் அது (சத்துவம்) சித்திக்கின்ற[illegible]

(ச.) அதுவும் அங்கீகரிக்கத்தக்கதன்று. சியாத்வா[illegible] கட்கு (ஆருகதர்கட்கு) அனேகாந்தவாதம் இஷ்டமாகையா[illegible] விரோதம் சித்திக்காது. நீ கூறிய செம்பஞ்சு முதலிய திரு

டாந்தம் அங்கீகரிக்கத்தக்கதன்று; வார்த்தைமாத்திரமன்றி யுக்தி யின்மையின். ஆண்டும் அன்னுவயமற்ற நாசம் ஒப்புக்கொள்ள வில்லை. மேலும், சந்தானியை (தொடர்ச்சியுள்ளதை) விடச் சந்தானம் (தொடர்ச்சி) பிராமாணிகமாகமாட்டாது.

"கிரமமாயுண்டாகியும் பரஸ்பரம் (ஒன்றோடொன்று) நெருங் கியுமிருக்கின்ற சஜாதியங்க (ஒத்த வினங்க)ளாய ஞானவியக்தி களுக்குச சந்தானம் ஒன்று" என்று கூறப்பட்டிருக்கின்றது.

**37.** காரிய காரணபாவ நியமமானது [கிருதப்பிரநாசம் (செய்த கன்மத்தின்பல முண்டாகாமற் போவதும்) அகிர்தாப்பி யாகமம் (பண்ணுதகன்மத்தின் வரவும்) ஆகிய] அதிப்பிரசங்கத்தை (ஆக்ஷேபத்தை) நிவிர்த்திக்கமாட்டாது. அங்ஙனமன்றோ, உபாத்தி யாயர்புத்தியா லநுபவிக்கப்பட்டது சிஷ்யனுடைய புத்தி ஸ்மரிக்க வேண்டும்; அல்லது சிஷ்யன் அவராற் செய்யப்பட்ட கர்மத்தின் பலத்தை அநுபவிக்கவேண்டும். ஆகையால் கிருதப்பிரநாசம் அகிர் தாப்பியாகமம் என்னும் தோஷம் சம்பவிக்கும்.

"கிருதப்பிரநாசம், அகிர்தாப்பியாகமம், இவற்று லுண்டான மோக்ஷம்(வஸ்துக்களின்நாசம்), ஸ்மிருதிபங்கம் ஆகிய இத்தோஷங் களைக் கவனிக்காமல் க்ஷணபங்கவாதத்தைப் பௌத்தன் நிர்த்தார ணஞ் செய்ய யோசிப்பது ஆச்சரியமே" என்று சித்தசேன வாக்கி யத்திற் சொல்லப்பட்டிருக்கின்றது.

மேலும், க்ஷணிகத்துவபக்ஷத்தில் ஞானகாலத்தில் ஞேயமில் லாததுபோல் ஞேயகாலத்தில் ஞானமுமின்மையின் கிராகிய(ஞேய) கிராகக (ஞான) பாவத்திற்கு அநுபபத்தி (பொருந்தாமை) யிருக் கின்றது. அங்ஙனமிருக்கும்போது சகலலோக வியவகாரத்திற்கும் நாசமுண்டாகும். ஆயின் வலக்கோடிடக்கோடுபோல ஏககாலத் தில் கிராகிய கிராககங்க ளிருக்கட்டுமே யென்றுஞ் சங்கித்தல் கூடாது; காரியகாரணபாவம் சம்பவிக்காமையின். அக்கிராகியத் திற்கு (கிரகிக்கப்படாததற்கு) ஆலம்பனப்பிரத்தியயம் (விஷய ஞானம்) பொருந்தாது.

(ஆ.) பின்னகாலமாயிருந்தாலும் ஞானம் ஆகாரத்தைக் கொடுப்பதால் கிராகியமாயிருக்கின்றது.

(ச.) இதுவும் பொருந்தாது. க்ஷணிகமான ஞானம் ஆகாரத்தைக் கொடுப்பதாகவும் ஆகாரத்திற்கு ஆசிரயமாயிருப்ப

தாகவும் நிரூபிக்கமுடியாமையின் * சாகாரஞானவாதம் (யோகாசாரமதம்) நிராகரிக்கப்பட்டது.

† நிராகாரஞான வாத (வேதாந்த)த்திலும் யோக்கியதையை அநுசரித்து § பிரதிகர்மவியவஸ்தை யிருக்கின்றது.

அங்ஙனமன்றே, பிரத்தியக்ஷத்தினால் விஷயாகாரமற்ற ஞானமே புருஷன்தோறும் நானென்று கடாதிவிஷயமாக அறியப்படுகின்றது; ஆனால் அது தர்ப்பணாதிபோல் பிரதி பலனத்தைக் கிரியையற்றுக் கிரஹிப்பதன்று.

மேலும், ஞானத்திற்கு விஷயாகாரத்துவம் அங்கீகரிக்குமிடத்து விஷயம் சமீபத்திலிருக்கின்றது, விலகியிருக்கின்ற தென்னும் வியவகாரமற்றுப்போய்விடும். இஃது இஷ்டந்தானென் றங்கீகரித்தல்கூடாது; இந்தப்பர்வதம் சமீபத்திலிருக்கின்றது, தூரத்திலிருக்கின்றது, தீர்க்கமா யிருக்கின்றது, பெரிதா யிருக்கின்றது என்னும் வியவகாரம் பாதம(கெடுதிய)ற்று ஜாகரூபமாயி (விழித்துக் கொண்டி)ருப்பதால்.

(ஆ.) ஆகாரத்தை யுண்டுபண்ணக்கூடிய ஞானம் சமீபமுதலிய தன்மையோடு கூடியிருப்பதால் அவ்வியவகாரம் நிகழுகின்றது.

(ச.) அவ்வாறு சொல்லுதல் கூடாது; தர்ப்பணாதிகளில் அங்ஙனம் காணப்படாமையின். மேலும், உண்டாகின்ற

---

* ஞானம்: சாகாரம், நிராகாரமென் றிருவகைப்படும். அவற்றுள், வட்டம், சதுரம், கறுப்பு, சிகப்பு என்றற் றொடக்கத்துவடிவிற்றாய் அகத்தே தோன்றும் ஞானம் சாகாரமெனப்படும். பந்தம் நீங்கியவிடத்து அவ்வேறுபாடின்றித் தொடர்ச்சியாய் நிகழுவதாய ஞானம் நிராகாரமெனப் படும் என்று யோகாசாரர் கூறுவர்.

† ஞானம் ஏக (நித்திய)ம். கடஞானம் படஞானம் என்றற் றொடக்கத்து வியவகாரம் கடமுதலிய வுபாதியினால் நிகழுகின்றது. யாண்டும் ஞானம் ஞானமென் றேகவடிவாய் வியவகாரம் நிகழுதலின் அது நிராகாரமே என்று வேதாந்திகள் கூறுவர்.

§ ஒரு சமயத்திலேயே ஒரு புருஷனாலேயே ஒன்றே யறியப்படுகின்ற தென்னும் காலவிசேஷ முதலியவைகளுடன் கூடிய ஞானவிஷயத்தின் வியவஸ்தா (வேறுபாட்டின்) நியமம் பிரதிகர்ம வியவஸ்தை யெனப்படும்.

ஞானம் விஷயத்தின் நீலாகாரத்தன்மையை அநுசரிப்பதுபோல் ஜடத்தன்மையையும் அநுசரித்தல் வேண்டும். அங்ஙனமாயின், ஞானம் ஜடமாய்விடும். அப்போது விர்த்தியை (வட்டியை) விரும்பிய உனக்கு மூலமு(முதலு)ம் இஷ்டமா(கிடைக்)காது. இது பெரிய கஷ்டமாம்.

இந்தத் தோஷத்தைப் பரிகரித்தற்பொருட்டு ஞானம் ஜடத்தன்மையை அநுசரிக்கமாட்டாதென்று கூறுவையாயின், ஜடத்தின் கிரஹணம் ஏற்படமாட்டாது. ஆகையால் ஒன்றை ஸ்தாபிக்க வேண்டி மற்றொன்றை நழுவவிடவேண்டி வருகின்றதென்னும் நியாயம் சம்பவிக்கும்.

(ஆ.) ஜடத்தன்மையைக் கிரகிக்காமல், நீலாகாரத்தைக் கிரகிப்பதில் எங்களுக் கியாது நஷ்டம்?

(ச.) இவற்றிற்குப் பேதம் ஏகாந்தமா (நியமமா)? அன்று? விஷயத்தின் ஜடத்தன்மை கிரகிக்கப்படாமல் அதன் நீலாகாரத்தன்மைமாத்திரம் கிரகிக்கப்படுகின்றதென்று கூறின், அவ்விரண்டும் கடபடங்கள்போல் பின்னமாம்; அல்லது அவற்றிற்கு அநிர்வாச்சியத்தன்மை சம்பவிக்கும். மேலும், நீலாகாரத்தைக் கிரகிக்கும் சமயத்தில் ஜாட்டியமா (ஜடத்தன்மையா)னது கிரஹிக்கப்படாம லிருப்பின், ஞானம் விஷயத்திற்கு அநுரூப (சமான)மாக எங்ஙனமாம்? இல்லாவிடின் கிரகிதமான (அறியப்படுவதான) ஸ்தம்பத்திற்குக் கிரகிக்கப்படாம லிருக்கின்ற மூன்று லோகமும் ரூப (சம்பந்த) மாக ஆகும். இவ்விஷயங்களெல்லாம் ஆருகதமதத்தை அநுசரித்த பிரதாபசந்திரன் முதலிய வித்வான்களால் பிரமேயகமலமார்த்தாண்ட முதலிய கிரந்தங்களில் விஸ்தாரமாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. ஆதலால், நூல் பெரிதாய்விடுமென்னும் பீதியால் இங்கு விரித்துக் கூறவில்லை.

38. ஆகையால், புருஷார்த்தத்தை விரும்பியவர்கள்சௌகத (பௌத்த) மார்க்கத்தை விரும்புதல் தகுதியுடையதன்று. ஆனால், ஆருகதமார்க்கத்தையே யங்கீகரித்தல் வேண்டும். அருகமுனியின் சொரூபம் சந்திரசூரியென்னும் பண்டிதரால் ஆப்தநிச்சயாலங்காரமென்னும் நூலில் அடியில் வருமாறு கூறப்பட்டிருக்கிறது.

"பரமகுருவான அருகதேவன் பரமேசுவரன்; சர்வக்ஞன்; ராக (ஆசை) முதலிய தோஷத்தை ஜயித்தவன்; திரிலோகங்களாலும் பூஜிக்கப்பட்டவன்; உள்ளவா றர்த்தத்தைக் கூறுபவன்".

(ஆ.) சர்வக்ஞபதத்தா லறியக்கூடிய வொருபுருஷனும் பிராமாணிகமாகக் காணப்படவில்லை; அவனது இருப்பைக் கிரகிக்கக்கூடிய *பிரமாணபஞ்சகங்கள் காணப்படாமையின். இங்ஙனமே தௌதாதிகரால் (மீமாஞ்சகரு ளொருவரான குமாரில பட்டரால்) சொல்லப்பட்டிருக்கிறது. அது வருமாறு:—

(1.) "இவ்வுலகில் நம்மனோராதியரால் சர்வஞ்ஞனொருவனும் காணப்படவில்லை; எந்த ஏகதேசமானது அனுமானத்திற்கு லிங்கமா (குறியா)க வேற்படுமோ அந்த ஏகதேசமும் காணப்படவில்லை."

(2.) "நித்தியனான சர்வஞ்ஞனைப் போதிக்கிற விதிவாக்கியம் வேதத்திலில்லை. அர்த்தவாத வாக்கியங்கட்கும் அவனிடத்திற் றற்பரியத்தைக் கற்பித்தல் முடியாது"

(3.) "அந்நியார்த் (வேறர்த்) தத்திற் கருத்துள்ள அர்த்தவாத வாக்கியங்களால் அந்த ஈசுவரனுண்டென்று நிச்சயிக்கப்படவில்லை. விதிவாக்கியத்தினால் போதிக்கப்படாத அர்த்தமானது அர்த்தவாத வாக்கியத்தினால் அநுவாதம் செய்யமுடியாது".

(4.) "அநாதியான வேதத்திற்குச் சாதியான (உற்பத்தியுடைய) சர்வஞ்ஞன் அர்த்தமாக மாட்டான். சாதியும் அசத்தியமுமான வேதத்தால் அவனுண்டென்று எங்ஙனம் நிச்சயித்தல் கூடும்?"

(5.) "அவன் கூறிய வாக்கியத்தினால் அவன் சர்வஞ்ஞனென்றறியப்படுகிறானென்று கற்பிக்கின் எங்ஙனம் ஈசுவரன் சித்திப்பன்? அந்நியோந்நியாசிரய தோஷம் வருகின்றமையின்."

(6.) "சர்வஞ்ஞனால் சொல்லப்பட்ட படியால் அவ்வாக்கியம் பிரமாணம்; அதனால் அவனிருக்கின்றானென்றறியப்படுகின்றது. அவனிருக்கின்றானென்பதும், அவன்வாக்கியம் சத்தியமென்பதும் சித்தமான மூலமன்றி எங்ஙனம் சித்திக்கும்?"

---

*பிரமாணபஞ்சகங்கள் பிரத்தியட்சம், அனுமானம், சப்தம், உவமானம், அருத்தாபத்தி யென்பனவாம்.

(7. "ஆதாரமின்றிப் போதிக்கு மொருவன் வாக்கியத்தினல் சர்வஞ்ஞனெருவ னுண்டென்று அங்கீகரிக்கின்றவர்கள் உண்மையில் சர்வஞ்ஞன் கூறும் வாக்கியங்களின் அர்த்த மறியாதவர்களே."

(8.) "மேலும் இப்போது சர்வஞ்ஞனுக்குச் சமானமாக ஏதாவதொன்றைப் பார்ப்போமாயின் உவமானப் பிரமாணத்தினல் சர்வஞ்ஞனை அறியக்கூடும்."

(9.) "தர்மாதர்மாதிகளை விஷயமாக்கிக் கொண்டிருக்கின்ற புத்தருடைய உபதேசமும், அவருக்குச் சர்வஞ்ஞத்தன்மை பிரர்விடத்துப் பிராமாணிகமாக மாட்டாது."

(ச.) ஈசுவர னிருக்கின்றானென்னும் கிராககப் பிரமாண பஞ்சகம் காணப்படாமையின் சர்வஞ்ஞபதத்தா லறியக்கூடிய புருஷனொருவனு மின்றென்று பூர்வபக்ஷி கூறியது அங்கீகரிக்கத்தக்கதன்று; சர்வஞ்ஞனை ஈசுவரனிருக்கின்ற னென்பதில் அநுமானதிப் பிரமாணமிருப்பதால். அங்ஙனமன்றோ, ஓர் ஆத்மா சகல பதார்த்தத்தையும் சாக்ஷாத்கரிக்கின்றான் (பிரத்தியக்ஷமா யறிகின்றான்); அவற்றைக் கிரகிக்கிற சுபாவத்துடன் கூடியும் பிரதிபந்தகமற்ற ஞானத்துடன் கூடியுமிருக்கிற தன்மையால். எது எந்தப் பதார்த்தக் கிரஹண சுபாவத்தோடு கூடியும் பிரதிபந்தகமற்ற ஞானத்துடன் கூடியு மிருக்கின்றதோ அஃது அந்தச் சாக்ஷாத்காரத்துடன் கூடியது. எங்ஙனம்? திமிர (இருட்டு) முதலிய பிரதிபந்தக மற்ற லோசன (நேத்திர) விஞ்ஞானம் ரூப சாக்ஷாத்காரமாம். பதார்த்தத்தைக் கிரகிக்கும் சுபாவமுள்ளவனும் பிரதிபந்தக மற்ற ஞானமுடையவனும் ஓர் ஆத்மாவிருக்கின்றான். ஆகையால் அவன் சகல பதார்த்த சாக்ஷாத்காரமுமுடையவன்.

(ஆ.) எல்லா அர்த்தத்தையும் கிரகிக்கின்ற சுபாவம் ஆத்மாவிற்குச் சித்திக்கின்ற தென்பதின்று; சோதனபலத்தால் (ஆராய்ச்சியின் வலியால்) சகல அர்த்த ஞானமும் உண்டாவதால்.

---

மூலத்திற்கு விருத்தமாயும் கிஞ்ஜிஞ்ஞனைற் செய்யப்பட்டதாயுமுள்ள வசனத்தினல் சர்வஞ்ஞனை யறிகின்றவர்கள் அவ்வாக்கியத்திற்கூறிய அர்த்தத்தையறியாதவர்களே என்றும் பாடமுண்டு.

(ச.) அங்கியதாநுபபத்தியினுல் (அன்னியத்தின் பொருந்தாமையினுல்) எல்லாம் அனேகாந்தாத்மகமாம் (பலமுடிபினையுடையனவாம்); சத்துவ மிருப்பதாலும், வியாப்திஞான முண்டாவதாலுமென்க. சோதனையோ பூதம் (இறப்பு), பவத் (நிகழ்வு), பௌஷ்யம், (எதிர்வு), சூக்ஷ்மம், விலகியிருக்கின்றது, மறைபட்டிருக்கின்றது என்றற்றொடக்கத்து அர்த்தங்களைத்தெரியப்படுத்துகின்ற தென்றும், விதிப்பிரதிஷேத (விதிநிஷேத) விசாரத்தினுல் சகல அர்த்தஞானமுமுண்டாகின்ற தென்றும், பிரதிபாதித்துக்கொண்டிருக்கின்ற அத்துவர (யாக) மீமாம்சகுருக்களால் சகலார்த்தக்கிரஹண சுபாவம் ஆத்மாவிற்கு அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றது. சகல அர்த்தங்கட்கும் பிரதிபந்தகமான ஆவரண நிவிர்த்தி பொருந்தாமை யில்லை; ஆவரண நிவிர்த்திக்கு ஹேதுவான சம்யக்தரிசனம் நிர்மலஞானம்) முதலிய மூன்று சாமக்கிரி விசேடம் தோன்றுவதால். இவ்வாறே ஏனைய ஆசங்கைகளும் நிராகரிக்கத்தக்கனவாம்.

(ஆ.) ஆவரண நிவிர்த்தியினுல் எல்லாவற்றையும் விஷயமாகவுடைய நிர்மலஞான முண்டாகின்றதென்று நீகூறிய தடாது. அந்தச்சர்வஞ்ஞன் அநாதிமுக்தனுகையால் ஆவரணமே சம்பவிக்காது.

(ச.) நீ கூறிய தடாது; அநாதிமுக்த னொருவ னுண்டென்பதிற் பிரமாண மின்மையின். அநாதி முக்தனுன சர்வஞ்ஞனில்லை; முக்தத்தன்மை யிருப்பதால்; ஏனைய முக்தன் போல். பந்தனை அபேக்ஷித்து முக்தனென்று வியவகார மேற்பட்டது. பந்தமின்றி யிருக்கின்றவனிடத்தில் முக்தியுமின்று; ஆகாசம்போல்.

(ஆ.) அநாதியான பூமிமுதலிய காரியங்கட்குக் கர்த்தாவாயிருப்பதால் அவனுக்கு அநாதித்துவம் சித்திக்கின்றது. அங்ஙனமன்றோ, பூமிமுதலியவை கர்த்தாவுடன் கூடியவை; காரியமா யிருப்பதால்; கடம்போல.

(ச.) அங்ஙனங் கூறுவதுமுசிதமன்று; காரியத்துவமே சித்திக்காமையின். சாவயவமாயிருப்பதால் காரியத்தன்மையைச் சாதிக்கின்றோ மென்று கூறுதலுங் கூடாது; விகற்பத்தைச் சகிக்காமையின். அந்தச் சாவயவத்துவம் (1.) அவயவ சம்யோகத்துடன்கூடிய தன்மையா? (2.) அவயவ சமவாயத்துடன் கூடிய

தன்மையா? (3.) அவயவ ஜன்னியத்துவமா? (4.) சமவேத திரவியத்துவமா? (5.) சாவயவ புத்தி விஷயத்துவமா?

i. முதற்பக்ஷங் கூடாது; ஆகாசாதிகளில் வியபிசாரம் வருவதால். ii. இரண்டாவது பக்ஷமுங்கூடாது; சாமானி (ஜாதி) யாதிகளில் வியபிசாரம் வருவதால். மூன்றாவது பக்ஷமுங் கூடாது? சாத்தி (காரி) யத்திற்குச் சமானமாயிருப்பதால். iv. நான்காவதுபக்ஷமுங்கூடாது; இரண்டு விகற்பத்துடன் கூடியிருப்பதால்.

(1.) சமவ்ாய சம்பந்தமாத்திரத்தோடு கூடிய திரவியத்துவம் சமவேததிரவியத்துவமா? அல்லது (2.) மற்றோரிடத்தில் சமவாய சம்பந்தத்தினு லிருக்கின்ற திரவியத்துவம் ஹேதுவா?

(1.) முதற்பக்ஷத்தில் ஆகாசாதிகளில் வியபிசாரம்வருகின்றது; ஆகாசத்திற்கும் குணாதிகளின் சமவாயமும், திரவியத்துவமும் சம்பவிப்பதால். (2) இரண்டாவது பக்ஷத்தில் சாத்தியத்தோடு ஒன்றாயிருக்குந் தன்மையாகிய தோஷம் வருகின்றது. அன்னிய சத்தார்த்தமா (வேறுசொற்பொருளா) கிய சமவாய காரண அவயவங்களில் சமவாயத்தைச் சாதிக்கவேண்டிய தாகையால் இச்சமாதானம் சமவாயத்தை யங்கீகரித்துக் கூறப்பட்டது. உண்மையில் சமவாயமே யின்று; பிரமாணமின்மையின்.

v. ஐந்தாவது பக்ஷமுங்கூடாது; ஆத்மா முதலியவற்றில் வியபிசாரம் வருகின்றமையின், ஆத்மா சாவயவபுத்திக்கு விஷயமா யிருப்பினும் காரியமாயிராமையின். ஆத்மா நிரவயவமாயிருந்தாலும் அவயவத்தோடு கூடிய அர்த்தத்துடன் சம்பந்தப்பட்டிருக்கின்றமையின் சாவயவபுத்திக்குவிஷயமாயிருக்குந்தன்மை ஔபசாரிக (கௌண) மென் றெப்புக்கொள்ளுதல் கூடாது; பரமாணுபோன்று நிரவயவமாயிருந்தால் வியாபிக்குந் தன்மைக்கு விரோதம் வருகின்றமையின்.

மேலும், கர்த்தா ஏகனென்று சாதிக்கின்றீர்களா? அல்லது சுதந்தரனென்று சாதிக்கின்றீர்களா? (இவ்விரண்டனுள்) முதலாவது பக்ஷத்தில் பிராசாத (தேவாலய) முதலிய விடத்து வியபிசாரம் வருகின்றது; சிற்பிகளநேகர் அவ்விஷயங்களில் கர்த்தாவாகக் காணப்படுகின்றமையின். (இரண்டாவதுபட்சத்தில்) இவனாலேயே சகல ஜகத்தின் உற்பத்தி சித்திக்குமிடத்து மற்றவர்களின் அபேட்சை வேண்டப்படுவ தின்றாம்.

"ஜகத்திற்கு நித்தியனான கர்த்தாவொருவனிருக்கிறான், அவன் எங்கு மிருக்கின்றவன், அவன் சுவசன் (தன்வசத்திலிருப்பவன்), அவன் சத்தியன். (அப்படிபட்ட) நீ எவர்க்கு அனுசாசகனு(சிட்சிக்கிறவனு) யில்லையோ அவர்களின் வார்த்தைகள் தள்ளத்தக்கனவாம்".

இங்ஙனம் வீதராகஸ்துதியில் சொல்லப்பட்டிருக்கிறது.

"இவ்வுலகத்தில் தன்னிஷ்டப்படிசெய்யக் கூடிய கர்த்தாவொருவனுங் காணப்படவில்லை. அங்ஙனமிருப்பின், பாய் நெய்வதிலும் அவனிச்சை சம்பவிக்கும். மூன்றுலகத்தையும் ஈசுவரன் உண்டாக்குமிடத்து உன்னாலும் தச்சன் முதலியவர்களாலும் என்ன செய்யக்கூடும்" என்று மற்றோரிடத்துஞ் சொல்லப்பட்டிருக்கிறது.

39. ஆகையால், முன்னர்க்கூறிய மூன்று காரணபலங்களால் ஆவரணத்தின் நிவிர்த்தி யுண்டாகும்போது சர்வஞ்ஞத்தன்மை சம்பவிக்கின்றது. இவனுக்கு உபதேஷ்டா (உபதேசஞ்செய்கிறவன்) இராமையின் சம்யக்தரிசன முதலிய மூன்றும் பொருந்தாவென்றுரைத்தல் கூடாது. முன்னே சர்வஞ்ஞ ஜீனர்களாற் செய்யப்பட்ட ஆகமத்தினால் இவனுக்கு எல்லா அர்த்தஞானமு முண்டாகின்றன. (ஈண்டு) அந்நியோந்நியாசிரய தோஷமுதலியவைகளில்லை; ஆகமபரம்பரையும் சர்வஞ்ஞ பரம்பரையும் பீஜாங்குரம்போல அநாதியென்றெங்களா லங்கீகரிக்கப்பட்டிருக்கின்றமையின். ஆகையால் இதுவே போதும்.

40. இரத்தினத்திரயமென்னும் பதத்தா லறியக்கூடியனவாயும் பிரசித்தமாயுமுள்ள சம்யக்தரிசன முதலிய மூன்றும் ஆருகத மதத்தின் சங்கிரகமான பரமாகமசார மென்னும் நூலில் நன்றாக நிரூபிக்கப்பட்டிருக்கின்றன. சம்யக்தரிசனம், ஞானசாரி (சரி) த்திரம், சம்யக்சாரித்திர (நல்லொழுக்க) மென்னு மிம்மூன்றும் மோக்ஷமார்க்க மென்று யோகதேவரால் அடியில்வருமாறு விவரிக்கப்பட்டிருக்கின்றது.

(1.) எந்தரூபத்தால் ஜீவன்முதலிய அர்த்தங்கள் வியவஸ்தாபனம் (சித்தாந்தம்) பண்ணப்பட்டிருக்கின்றனவோ அந்தரூபமான தத்துவார்த்தங்கள் அருகமுனியால் பிரதிபாதிக்கப்பட்

டிருக்கும்போது அது விபரீதயாவுமையற்றதென்று சத்தியபுத்தி வசிப்பது சம்யக்தரிசனமாம்.

"தத்துவார்த்தங்களை சந்தேகமற உணர்வது சம்யக் தரிசனம்" என்று தத்துவார்த்த சூத்திர மேற்பட்டிருக்கின்றது

"பர(பிற)னுடைய உபதேசத்தை யபேக்ஷிக்காமலிருக்கின், ஆத்மசொரூபம் நிசர்க்கம்; வியாக்கியான முதலிய பரோபதேசத்தாலுண்டான ஞானம் அதிகமம்; எந்தச் சுபாவத்தினால் ஜீவாதி பதார்த்தங்கள் வியவஸ்திதமா யிருக்கின்றனவோ அந்தச் சுபாவத்தினால் மோஹமும் சம்சயமுமின்றி யுண்டாகின்ற ஞானம் சம்யக் ஞானமாம்" என்று சொல்லப்பட்டிருக்கின்றது.

(2.) பிராந்தி சம்சயமின்றி ஆத்மா முதலிய அர்த்தங்களின் சொரூபமான தத்வார்த்தஞான முண்டாவது ஞானசாரித்திரமாம்.

"உள்ளவாறிருக்கின்ற பதார்த்தங்களின் சுருக்கமாகவும் விஸ்தாரமாகவும் எந்த ஞானமுண்டாகின்றதோ அதனை ஞானசாரித்திரமென்று வித்துவான்கள் சொல்லுகின்றனர்" என்று சொல்லப்பட்டிருக்கின்றது.

அந்தஞானம் மதி, சுருதம், அவதி, மனப்பரியாயம், கேவலம் என ஐந்துவிதமாம். "மதிசுருதாவதி மனப்பரியாய கேவலானி ஞானம்" என்று சொல்லப்பட்டிருக்கின்றது.

i. ஞானத்தின் ஆவரணம் நசிக்குமிடத்து இந்திரியமனங்களின்வாயிலாக எப்படி அர்த்தமிருக்கின்றதோ அப்படி கருதுகின்ற ஞானம் மதியாம்.

ii. ஞானத்தின் ஆவரணத்திற்கு க்ஷய (நாச) முண்டாமிடத்து மதியினாலுண்டான ஸ்பஷ்டமான ஞானம் சுருதமாம்.

iii. சம்யக்தரிசன முதலியவற்றினாலுண்டாய ஆவரண நிவிர்த்தி நிமித்தமாக இடைவிடாமலுண்டாகின்ற ஞானம் அவதியாம்.

iv. அசூயை யென்னும் ஞானாவரணத்தின் நிவிர்த்தியுண்டாமிடத்துப் பிறருடைய மனதிலிருக்கின்ற அர்த்தத்தின் ஞானம் மனப்பரியாயமாம்.

தபசிகள் தபசாகின்ற ஓர் கிரியா விசேஷங்களை எதன் பொருட்டுச் செய்கின்றார்களோ அந்தச் சுத்தமான ஞானம் கேவல மாம்.

அவற்றுள், முதலாவதாகிய மதி பரோக்ஷமாம்; ஏனையவை பிரத்தியக்ஷமாம்.

"தன்னையும் பிறவற்றையும் பிரகாசம் செய்வதும் பாதமன்றி யிருப்பதும் விஞ்ஞானமாம். அது பிரமாணமாம்; பிரமேய நிச்ச யத்தினால் பிரத்தியக்ஷமென்றும் பரோக்ஷமென்றும் அஃதிரு வகைத்தாம்" என்றிங்ஙனங் கூறப்பட்டிருக்கின்றது.

இதன் உட்பகுப்பு அந்தக்கிரந்தத்திலேயே விரிவாக அறியத் தக்கது.

(3.) சம்சாரநிவிர்த்தியில் முயற்சியுள்ளவனாகவும், சிரத் தையுடையவனாகவும், ஞானமுடையவனாகவுமிருக்கின்ற புருஷனுக் குப் பாப முண்டாகின்றதற்குக் காரணமான கிரியையின் நிவிர்த்தி சம்யக்சாரித்திர (நல்லொழுக்க) மாம்.

இவையாவும் விரிவாக அருகதேவரால் சொல்லப்பட்டிருக் கின்றன.

41. "தோஷசம்பந்தங்களை முற்றிலும் பரித்தியாகஞ்செய் (நீக்கு) வதே சாரித்திர மென்று சொல்லப்படுகின்றது. அஃது அஹிம்சைமுதலிய விரதபேதத்தால் ஐவகைத்தாமெனக் கூறப் பட்டிருக்கின்றது.

அஹிம்சை, சூன்ருதம், அஸ்தேயம், பிரஹ்மசரியம், அபரிக் கிரகம் என்று (விரதம்) ஐவகைத்தாம்.

(i.) "பிரமாதத்தி (மறதியி) னால் சராசரங் (இயங்குதிணை நிலைத்திணை)களின் உயிரைக் கொலைசெய்யாமை அஹிம்சா விரத மாம்.

(ii.) "பிரிய (காதிற்கின்ப) மாயும், பத்திய (இத) மாயும், யதார்த்தமாயு முள்ள வார்த்தை சூன்ருத (சத்திய வசன) விரத மென்று கூறப்படுகின்றது. எது பிறருக்கு அப்பிரியமாயும் அஹித மாயு மிருக்கின்றதோ அது யதார்த்தமாயிருந்தாலும் யதார்த்த மன்றாம்.

(iii.) "(ஒருவன் தனக்குக்) கொடாதுள்ள பொருளை யபகரியாமையே அஸ்தேய விரத மென்று சொல்லப்படுகின்றது.

தனம் (பொருள்), (மனிதனது) வெளியிலிருக்கின்ற பிராணன்; அதை அபகரித்தால் அதனையுடையவனைக் கொன்றதுபோலாம்.

(iv.) "*திவ்யமான காமங்கள், † ஔதரியமான காமங்களென்னுமிவற்றை மனோவாக்குக் காயங்களினால் விடுவதே பிரஹ்மசரியமாம். அது பதினெண் வகைப்படும்.

(1.) திவ்யமான காமங்கள் ஒன்பது வகைப்படும். எங்ஙனம்?

மனத்தினால் { செய்கின்றது, அநுமதிகொடுக்கின்றது, செய்துவைக்கின்றது }

வாக்கினால் ௸

காயத்தினால் ௸

என அவை ஒன்பது பகுப்பினவாம்.

(2.) இங்ஙனமே ஔதரியமான காமங்களும் ஒன்பது பகுப்பினவாம்.

(v.) "சர்வ அபாவ(பதார்த்த)ங்களிலும் மூர்ச்சையின் தியாகமே அபரிக்கிரகமாம். (சத்தான வஸ்துக்களிலன்றி) அசத்தான வஸ்துக்களிடத்திலும் சித்தவிகாரம் உண்டாவதே மூர்ச்சை.

"ஐந்துபாவனைகளினால் பாவிக்கப்பட்ட ஐந்துவிரதங்களும் கிரமமாக மக்களுக்கு நித்தியமான பதத்தைச் சாதி (கொடு)க்கின்றன" இவ்வாறு ஐந்துபாவனையும் விஸ்தாரமாக நிரூபிக்கப்பட்டன.

சிரிப்பு, லோபம், பயம், குரோதம், எப்போதும் பிறரை நிந்தித்தலென்னு மிவற்றை விட்டுச் சூன்ருத விரதத்தை யனுஷ்டித்தல் வேண்டும்" என்றற்றொடக்கத்து வாக்கியங்களாலும் நிரூபிக்கப்பட்டிருக்கின்றன.

சம்யக்தரிசனம், ஞான சாரித்திரம், சம்யக்சாரித்திரமென்னு மிவை சேர்ந்தே மோட்சகாரணமாம்; தனித்தனியே காரண

---

* பரலோகவிச்சை † இகலோகவிச்சை.

மன்றும். எங்ஙனம்? *ரசாயனக்ஞானம் சிரத்தானம் அநாவரண மென்னு மிவை சேர்ந்தே ரசாயன பலத்தை யுண்டுபண்ணுவது போலும்.

42. இம்மதத்தில் ஜீவன், அஜீவனென்று சங்கிரகமாக இரண்டு தத்துவங்களுளவாம். அவற்றுள், போதரூபன் ஜீவன், ஜட ரூபன் அஜீவன்.

"சித் அசித்துக்கள் பரமான தத்துவங்கள். இது கிரகிக்கத் தகுந்தது கிரகிக்கத்தகுந்தது, இது தள்ளத்தகுந்தது தள்ளத்தகுந் தது என்று அனுஷ்டித்து வருகின்றவனுக்கு அவற்றின் விவே சனம் (ஆராய்ச்சி) விவேகம்.

"அவிவேகியால் கொள்ளத்தக்க கர்த்துருராகாதிகள் தள்ளத் தக்கனவாம். உபயோகத்தின் லட்சணம் தக்கபரஞ்சோதியை (மேலான ஞானத்தை)க் கிரகித்தலாம்" என்று பத்மநந்தியால் சொல்லப்பட்டிருக்கிறது.

சகஜமான சித்ரூபபரிணதி எந்த ஞானத்தா லறியப்படுகின் றதோ அது (ஞானதரிசனம்) உபயோக மென்னும் பெயருடைய தாம்.

ஆனால், ஆத்மாவானது பிரதேச (இட)த்தாலும் அவயவ (தேக)த்தாலும் கட்டுப்பட்டுக் கிரியையோடு சம்பந்தப்பட்டிருப்ப தாகக் கருதுமளவும் அஃதிவற்றினும் வேறுபட்டதென் றறிவதற் குக் காரணமாயிருப்பது ஞானமென்று இலக்கணங் கற்பிக்கல் வேண்டும்.

சகலஜீவ சாதாரணமானது சைதன்னியம். அஃது ஆத்மாவின் சொரூபம். ஆனால், உபசமக்ஷயம், க்ஷயோபசமம் என்னுமிவற்றால் அது மிசிரபாவத்தினால் இரண்டோடு கூடியதாகக் காணப்படுகின் றது. அல்லது கர்மோதயத்தாலும் அஃது கலுஷமானதாகக் காணப்படுகின்றது.

* மருந்து இத்தன்மைய தென்றறிவது ரசாயனக்ஞானம்; அஃதித் தன்மையபயனைத்தருமென்னும் நம்பிக்கை சிரத்தானம்; அதனால் பிரதிபந் தக நிவிர்த்தி (நோய்நீக்கம்) அநாவரணம். ரசாயனபலம்-மருந்தின் பிரயோ ஜனம்.

"ஔபசமிக க்ஷயிக மிசிரபாவங்கள் ஆத்மாவின் சொரூபமாம்; ஔதைகமும் பரிணாமமும் சொரூபமாம்" என்று வாசகாசாரிய ரால் சொல்லப்பட்டிருக்கின்றது.

(i.) * அநுதயப்பிராப்தி வடிவமான கர்மத்தின் உபசமம் (அடக்கம்) வரும்போது ஜீவனுக்கு உண்டாகக்கூடிய பாவம் (தன்மை) ஔபசமிகம். எங்ஙனம்? சேறு ஜலத்திற்குக் கலக்கத்தை யுண்டுபண்ணும்போது தேற்றாங்கொட்டை முதலிய திரவிய சம்பந்தத்தால் அது (சேறு) கீழ்ப்போகவே அதற்குத் தெளிவுண்டாதல் போலும்.

(ii.) கர்மத்திற்குக் க்ஷயோபசம (நாச)முண்டாகும்போது உண்டாகின்றபாவம் (தன்மை) க்ஷயிகம். எங்ஙனம்? மோக்ஷம் போலும்.

(iii.) உபயாத்மபாவம் மிஸ்ரம். எங்ஙனம்? ஜலத்தின் ஏக தேசத் தெளிவுபோலும்.

(iv.) கர்மோதயம் வரும்போது இருக்கிறபாவம்(தன்மை) ஔதைகமாம்.

ஔபசமிக முதலியவற்றை யபேட்சியாத சகஜமான சேதனத்தன்மை முதலிய பாவம் பரிணாமிகமாம்.

இச்சத்துவமானது சம்பவித்தவரையில் பவ்விய (துக்கமுடையவு)ள்ள ஜீவனுக்காவது அபவ்வியமுள்ள ஜீவனுக்காவது தத்துவமான சொரூபமென்று (வாசகாசாரியரின்) சூத்திரத்திற்கு அர்த்தமாம்.

"ஆத்மா ஞானத்தினும் பின்னமுமன்று; அபின்னமுமன்று; ஆனால் பின்னபின்னம். முன்னும் பின்னுமிருக்கின்ற ஞானமெதுவோ அஃது ஆத்மாவென்று சொல்லப்பட்டிருக்கின்றது" என்று சுவரூபசம்போதன மென்னும் நூலில் சொல்லப்பட்டிருக்கிறது.

(ஆ.) பேதா பேதங்கள் (தம்முள்) ஒன்றையொன்று பரிகரிப்பதாயிருப்பதால் இரண்டிலொன்று வாஸ்தவமாயிருத்தல் வேண்டும். ஆதலின் இரண்டு ரூபமாகச்சொல்வது அயுக்தமாம்.

---

* அநுதயம்-உதயமாகாமை.

(ச.) நீ கூறுவது சரியன்று; (அயுக்த)பாதகமிருப்பதில் பிரமாண மின்மையின். அநுபலம்பமே (தோன்றாமையே) பாதகப் பிரமாணமாம். அந்த அநுபலம்பமோ இவ்விடத்தின்று; சமஸ்த வஸ்துக்களும் அனேகரசரூபமாக விருக்கின்றனவென்று சியாத்வாதி மதத்தில் பிரசித்தமாயிருப்பதால். இதுபற்றிப் பேசியதமையும்.

43. தத்துவத்தை வேறுசிலர் வேறுவகையாகவும் சொல்லுகின்றனர். ஜீவ, ஆகாச, தர்ம, அதர்ம, புத்கல அஸ்திகாய மென்று ஐந்துதத்துவங்களுள.

இவ்வைந்து தத்துவங்களுக்கும் காலத்திரய சம்பந்தமிருப்பதால் இருக்கின்றதென்னும் வியவகாரமேற்படுகின்றது; (சரீரம்போல). அவை அனேகப் பிரதேச (அவயவ)த்துடன் கூடியிருப்பதால் காயமென்று சொல்லப்படுகின்றன.

(i.) அவற்றுள், (1.) சம்சாரி (2.) முக்தனென்று ஜீவர்களிரண்டு விதமாம்.

(1.) ஜன்மாந்தரப்பிராப்தியுடையவன் சம்சாரியாம்.

சம்சாரியும் (A.) அகவிந்திரியமுடையவன் சமனஸ்கன் (B.) அஃதின்றியவன் அமனஸ்கனென் றிரண்டுவிதமாம்.

அவற்றுள், (A.) சமனஸ்கர்கள் மிஞ்ஞர்கள். சிக்ஷை, கிரியை, ஆலாபம், கிரஹணரூபம் சமிஞ்ஞையாம்.

(B.) சமிஞ்ஞை அற்றவர்கள் அமனஸ்கர்கள்.

a. திரசய b ஸ்தாவரபேதத்தால் அமனஸ்கர்களுமிரண்டு விதமாம்.

அவற்றுள், a. சங்கம் கண்ட முதலியவற்றைப் போன்று குறைந்தது (துவக்கு, இரசனமென்னும்) இரண்டிந்திரியங்களையுடையன திரசயமாம். அஃது இரண்டு, மூன்று, நான்கு, அல்லது ஐந்து இந்திரியங்களை யுடைமையால் நான்கு பாகுபாடுடையதாம்.

b. பிருதிவி, அப்பு, தேயு, வாயு, வனஸ்பதிகள் (மரங்கள்) ஸ்தாவரங்களாம்.

---

சமிஞ்ஞர்கள்-சமிஞ்ஞையோடு கூடினவர்கள்.

அவற்றுள், (க) மார்க்கங்களிலிருக்கின்ற தூளி பிருதிவி. (உ) ஆனால் இஷ்டகாதி (செங்கல் முதலியன) பிருதிவியின் சேர்க்கையாலுண்டான காயமாம். (௩) பிருதிவியானது எதனால் (எந்த ஆத்மாவால்) காயமாகக்கிரஹிக்கப்படுகின்றதோ அது பிருதிவி காயமாம் (ச) எவன் பிருதிவியைக் காயமாகக் கிரஹிக்கப் போகின்றானோ அவன் பிருதிவி ஜீவன்.

இவ்வாறே அப்பு முதலியவற்றிலும் நான்கு பேதங்களைக் கிரகித்துக்கொள்ளல் வேண்டும்.

பிருதிவியாதிகளைக் காயமாகக் கிரகித்துக்கொண்டும், கிரகிக்கப்போவதுமான ஆத்மாக்கள் ஸ்தாவரமென்று அறியப்படுகின்றன. ஆனால் பிருதிவியாதிகளும், சேர்க்கையாலுண்டான பிருதிவியாதிகாயங்களும் அங்ஙனம் கருதப்படுவதில்லை; அவற்றிற்கு ஜீவனின்மையால்.

(2.) பரிசன ஏகேந்திரியமு(துவக்கிந்திரிய மொன்று)டையனவாகிய அந்த ஸ்தாவரங்கள் முக்தஜீவர்களாம்; (ஏனெனின்) அவற்றிற்கு வேறுபாவத்தை (ஜன்மாந்தரத்தை) யடையுந் தன்மையின்மையின்.

தர்மம், அதர்மம், ஆகாசம் என்பனவற்றுள் ஒவ்வொன்றும் தனித்தனி அஸ்திகாயமாம். அவற்றிற்குக் கிரியையின்று. ஆனால் அவை திரவியத்திற்குத் தேசாந்தரப்பிராப்தியில் (வேறிடத்தை யடைவதில்) காரணமாயிருக்கின்றன.

அவற்றுள், தர்மாதர்மங்கள் பிரசித்தமாம். லோகாகாச மென்னும் பதத்தினால் அறியத்தக்கதும் பிரகாசத்துடன் கூடியதுமான ஆகாயத்தில் ஜீவர்கள் பிரவிர்த்தி ஸ்திதி யடைவதில் அவை(தருமா தருமம்) உபயோகப்புடுகின்றன. ஆகையினாற்றான்,

(ii.) தர்மாஸ்திகாயம் பிரவிர்த்தியினால் அநுமேயம்.

(iii.) அதர்மாஸ்திகாயம் ஸ்திதியினால் அநுமேயம்.

(iv.) ஒருவஸ்து அந்நியவஸ்துவிருந்தவிடத்திற் பிரவேசித்தல் ஆகாசத்தின் கிர்த்தியம்.

(v.) ஸ்பரிசம், ரசம், வர்ணமென்னு மிவற்றுடன் கூடிய காயம் புத்கலமாம். அது (க) அணு, (உ)ஸ்கந்தமென விருவகைத்து.

(க) புஜி (அநுபவி)க்க முடியாதன அணுக்களாம். (உ) துவியணுகாதிகள் ஸ்கந்தங்களாம். அவற்றுள், துவியணுகாதிகளின் விபாகத்தினால் அணுக்களுண்டாகின்றன. அணுக்களின் சையோகத்தினால் துவியணுகாதிகளுண்டாகின்றன.

சிலவிடத்து (அணுக்கள்) சேராமலும், சேர்ந்தும் ஸ்கந்தங்களுண்டாகின்றன.

அங்ஙனமன்றே, அவை பூரணம்பண்ணுவதாலும், பிரிவதாலும் புத்கல மென்று பெயர்பெறுகின்றன.

காலத்திற்கு அனேகப் பிரதேச (அவயவ) மிராமையால் அஸ்திகாயத்துவ மில்லாவிடினும், திரவியத்துவ மிருக்கின்றது' அதன் (திரவிய) லக்ஷண மிருக்கின்றமையின்.

A. "குணி யென்னும் பரியாயத்தினை யுடையது திரவியம்" என்றுகூறப்பட்டிருக்கின்றது. திரவியம் குணக்கிரியையுடையதாம்.

B. குணங்கள் திரவியத்தை யாசிரயித்துநிற்குணங்களாயிருப்பனவாம். எங்ஙனம்? ஜீவனுக்கு ஞானத்துவமுதலிய சாமானிய ரூபங்களும், புத்கலத்திற்கு ரூபத்துவ முதலிய சாமானிய சுபாவங்களும், தர்மாதர்மம் ஆகாச காயமுதலியவைகட்கு முறையே கதி, ஸ்திதி, அவகாசம், ஹேதுத்துவ முதலிய சாமானியங்களும் குணங்களா யிருத்தல்போல.

அந்தத் திரவியத்திற்கு மேற்கூறிய வாயிலாகப் பவனம், உற்பாதம், தத்பாவம், பரிணமம், பரியாயமென்னும் பரியாயநாமங்களுண்டு.

எங்ஙனம்? ஜீவனுக்குக் கடாதி ஞானம், சுகம், கிலேசாதிகள் பரியாய நாமங்களாம்.

புத்கலத்திற்கு மிருத்பிண்டம், கடாதிகள் பரியாயங்களாம்.

தர்மாதிகளுக்குக் கத்தியாதி (கமனமுதலிய) விசேஷங்கள் பரியாயங்களாம். ஆகையினாற்றான், ஆறுதிரவியங்கள் பிரசித்தமாம்.

44. சிலர்-ஜீவ, அஜீவ, ஆசிரவ, பந்த, சம்வர, நிர்ஜர, மோக்ஷ மென்னு மிவ்வேழும் தத்துவங்களாமென்று கூறுகின்றனர். அவற்றுள், ஜீவாஜீவங்கள் நிரூபிக்கப்பட்டன. ஆசிரவம் நிரூபிக்கப்படுகின்றது.

ஔதாரிகாதி காயாதி சலனத்தின் வாயிலாக ஆத்மாவிற்குச் சலனம் யோக (காரண) பதத்தினால் அறியக்கூடிய ஆசிரவமாம்.

ஜலத்தில் முழுகுவதற்கு நதியின் பிரவாகம் காரணமாயிருப்பதால் அஃது எங்ஙனம் ஆசிரவமென்று சொல்லப்படுகின்றதோ அங்ஙனமே யோகாப்பியாசத்தினால் கர்மமானது சிரவித்து(நழுவி)ப் போவதால் அஃது ஆசிரவமாம். எங்ஙனம் நனைந்தவஸ்திரமானது நான்குபக்கங்களினின்றும் காற்றினாற் கொண்டு வரப்பட்ட தூளிகளைக் கிரகிக்கின்றதோ அங்ஙனமே கஷாயமாகிய ஜலத்தினால் நிறைந்த ஆத்மா யோகத்தினா லுண்டான கர்மத்தை எல்லாப் பிரதேசங்களினாலும் கிரகிக்கின்றான்.

அல்லது, எங்ஙனம் காய்ச்சிய இரும்பில் நீரை விட்டால் அந்த நீரை அது நான்கு பக்கங்களிலும் கிரகிக்கின்றதோ அங்ஙனமே கஷாயத்தினா லுஷ்ணமான ஜீவன் யோகத்தினா லுண்டான கர்மத்தை நான்குபக்கங்களினாலும் கிரகிக்கின்றான்.

கஷாயமாவது குரோதம், மானம், லோபமாம். கஷதி யென்னும் பகுதிக்கு ஹிம்சையென்பது பொருள். இவை ஆத்மாவைத் தீயவழியிற் கொண்டுபோய்ச் சேர்ப்பதால் கஷாயமென்றும் சொல்லப்படுகின்றன. அது (ஆசிரவம்)சுபம் அசுபமென் றிருவகைத்தாம்.

அவற்றுள், அஹிம்சாதிகள் சுபகாய யோகமாம். சத்தியமாயும் மிதமாயும் ஹிதமாயு முள்ள வார்த்தைகள் சுபவாக் யோகமாம்.

அந்த இந்த ஆசிரவ பேதம் "காய வாக்கு மனக் கர்மயோகம் ஆசிரவம். இது புண்ணியசாலிக்குச் சுபமாயும் பாவிக்கு அசுபமாயுமிருக்கின்றது" என்னும்சூத்திரத்தினால் நிரூபிக்கப்பட்டிருக்கிறது.

சிலர் புருஷர்களை விஷயங்களில் பிரவிர்த்திக்குமாறு செய்கின்றமையின் இந்திரியங்களின் வியாபாரமே ஆசிரவ மென்றும், இந்திரியங்களின் வாயிலாகப் புருஷனுடைய ஜோதிஸானது விஷயாகிகளை [illegible] ரூபாதி ஞானவடிவாய்ப் பரிணமிக்கின்றதென்றும் சொல்லுகின்றனர்.

மித்தியா தரிசனம், அவிரதி, பிரமாதம், கஷாய மென்னுமிவற்றின் வசத்தாலும், யோகவசத்தாலும் ஆத்மாவானது சூட்சும

மான ஒரு சரீரத்திற் பிரவேசித்தும், அநந்தப்பிரதேசங்க (அவய வங்க) ளுடையதாயும், கர்மபந்தத்திற்கு யோக்கியமாயுமுள்ள புத் கலங்களின் எந்த ஆதானத்தை (கிரகித்தலை)ச் செய்கின்றதோ அது கிரகித்தலைச் செய்தல்) பந்தமாம்.

"ஜீவன் கஷாயத்துடன் கூடியிருப்பதால் கர்மத்தையடைய யோக்கியமான புத்கலங்களைக் கிரகிப்பதே பந்தம்" என்று கூறப் பட்டிருக்கிறது.

ஈண்டுக் கஷாயமெனக் கூறியது சர்வபந்த ஹேதுவிற்கும் உப லக்ஷணமாம்.

"மித்தியாதரிசனம், அவிரதி, பிரமாதம், கஷாய மென்னு மிவை பந்தஹேதுக்கள்" என்று வாசகாசாரியர் கூறியிருக்கின் றனர்.

i. மித்தியாதரிசன மிருவகைத்தாம். அவற்றுள், மித்தை யான கர்மத்தினுதயத்தினுல் பரோபதேசத்தை விரும்பாது தத்து வத்திற் சிரத்தையின்றிச் சுதசித்தமாயிருப்பது ஒன்று; மற்றொன்று பரோபதேசத்தாலுண்டானது.

ii. பிருதிவியாதி யாறனிடத்திருந்துண்டான ஆறிந்திரியங் களையு மடக்காமலிருப்பது அவிரதி.

iii. ஐவகையான சமிதி குப்தி முதலியவற்றி லுற்சாக மின்றியிருப்பது பிரமாதம். iv. குரோதாதிகள் கஷாயமாம்.

அவற்றுள், கஷாயம் வரையிலுள்ளவை ஸ்திதி, அநுபவ மாய பந்த ஹேதுக்களாம்.

பிரகிருதி, பிரதேச பந்தத்திற்குஹேது யோகம் (ஆசிரவம்).

பந்தம் நால்வகைத்தாமெனக் கூறப்பட்டது. பிரகிருதி, ஸ்திதி, அநுபவம், பிரதேசமென்னு மிவை அதன் பேதமாம்.

(1.) பிரகிருதியாவது சுபாவகுணமுடையது; எங்ஙனம்? வேம்பு, வெல்லமிவைகட்குக் கசப்பு, தித்திப்பு சுபாவம்போலும்.

ஆவரணீயத் (மறைக்கத்தகுந்த) திற்குத் தரிசனுவரணத் தன்மை சுபாவம்; சூரியனுடைய பிரபையை மறைக்கின்ற மேகம் போலும்; தீபப்பிரபையை மறைக்கின்ற கடம்போலும். இதற்கு ஞானுவரணமென்றும், தரிசனுவரணமென்றும் பெயராம்.

சதசத்தினை லறியக்கூடிய வஸ்துவிற்குச் சுகதுக்க உத்பாதகத் துவம் (உண்டுபண்ணுந்தன்மை) யிருக்கின்றது; கத்திமுனையிலுள்ள தேனை நக்குதல்போலும். இதற்கு வேதநீயமென்று பெயராம்.

தரிசன மோகநீயத்திற்கு (பார்த்தவுடன் மோகத்தை யுண்டு பண்ணுவதற்கு)த் தத்துவத்தில் சிரத்தையை யுண்டுபண்ணுந் தன்மை யிருக்கின்றது; நற்சரித்திரத்தில் துர்ஜனசங்கம் போலும்.

மோகநீயமான வஸ்துவிற்கு இந்திரியங்களை அடக்காமலிருக் கும் ஹேதுத்தன்மை யிருக்கின்றது; மத்தியத்தின் (சாராயத்தின்) மதம்போலும்.

ஆயுசுக்குத் தேகபந்த கர்த்திருத்தன்மை யிருக்கின்றது; ஜலம் போலும்.

நாமத்திற்கு விசித்திரமான பெயரையுண்டுபண்ணுந் தன்மை யிருக்கின்றது; சித்திரம்போலும்.

கோத்திரத்திற்கு மேல்கீழாகச்செய்யுந் தன்மை யிருக்கின் றது; குயவன் போலும்.

அந்தராயத்தி (மறைப்பி)ற்குத் தானாதிகளை விலக்குவதில் மூலகாரணமாயிருக்குந்தன்மை சுபாவம்; பொக்கிஷாதிபதிபோலும்.

இங்ஙனம் பிரகிருதிபந்தம் எண்வகைத்தாம். அது திரவிய, கர்மமான அவாந்தர பேதத்தினாலும், மூலப்பிரகிருதியினாலும் அறியத்தக்கது.

"முதலாவது பந்தத்தின் பேதம் ஞானாவரணம், தரிசனாவர ணம், வேதநீயம், மோகநீயம், ஆயுசு, நாமம், கோத்திரம், அந்த ராயமாம்" என்று ஆத்தியரான வாசகாசாரியர் கூறியிருக்கின் றனர்.

இவற்றின் பேதத்தை ஐந்துவிதமாகவும், ஒன்பதுவிதமாக வும், இருபத்தெட்டுவிதமாகவும், நான்குவிதமாகவும், இரண்டுவித மாகவும், நாற்பதுவிதமாகவும், பதினைந்துவிதமாகவும் கிரமப்படி வாசகாசாரியர் சங்கிரகித்திருக்கின்றனர்.

இதுபற்றி வித்தியானந்தர் முதலியவர்கள் விவரமாய்க் கூறி யிருக்கின்றனர். அது விரிக்கிற் பெருகுமென்னும் பயத்தால் ஈண் டுச் சுருக்கமாகக் கூறப்பட்டது.

(2.) "அஜம் (ஆடு), கோ, மகிஷம் (எருமை) என்னுமிவற்றின் க்ஷீரங்கட்கு இவ்வளவு காலபரியந்தம் மாதுரிய சுபாவத்தினின்றும் நீங்காமலிருப்பதென்பது எங்ஙனமோ அங்ஙனமே ஞானாவரண முதலிய முதல் மூன்று மூலப்பிரகிருதிகட்கும், ஈற்றிலுள்ள அந்தராயத்திற்கும் அநேககோடி ஸ்திதியுண்டு" என்று சொல்லப்பட்டிருக்கின்றது; காலதுர்த்தானம் போலத் தனது சுபாவத்தினின்றும் நழுவாமலிருப்பது ஸ்திதி.

(3.) எங்ஙனம் அஜம், மகிஷமென்னுமிவற்றின் க்ஷீரத்தில் தீவிரதரம், தீவிரம், மந்தமென்னும் சாமர்த்திய விசேஷமிருக்கின்றதோ அங்ஙனமே புத்கலங்களில் தம்முடைய காரியத்தைச் செய்வதற்கான விசேஷ சாமர்த்தியம் அநுபவம்.

(4.) கர்மத்தினால் பரிணாமத்தையடைந்த புத்கல ஸ்கந்தங்கள் அனந்தப் பிரதேசமுள்ளவை. அவை ஆத்மப்பிரதேசத்தில் பிரவேசிப்பது பிரதேசபந்தமாம்.

ஆசிரவ நிரோதம்-ஸம்வரம். எதனால் ஆத்மாவில் பிரவேசித்த கர்மம் நிஷேதிக்கப்படுகின்றதோ அது குப்தி, சமிதி முதலிய சம்வரமாம்.

சம்சாரகாரண யோகத்தினின்றும் ஆத்மாவை அடக்குதலே குப்தியாம். அது காய, மன, வாக்கு நிக்கிரகமென மூவகைத்து.

பிராணிகளின் பீடையைப் பரிகரிப்பதால் நல்வழியிற் செல்வது சமிதியாம். அது ஈரிஷை, பாஷை முதலிய பேதத்தினால் ஐவகைத்தாம்.

i. "ஜனங்களாற் சஞ்சரிக்கப்பட்டும் சூரியகிரணங்களின் சம்பந்தத்தையு மடைந்த மார்க்கத்தில் பிராணிகளை இரக்ஷிக்க வேண்டியதற்காகப் பார்த்து நடப்பது ஈரிஷை யென்பது சாதுக்களின் சம்மதமாம்.

ii. "சர்வஜனப் பிரசித்தமான மித சம்பாஷணம் மௌனத்தையுடைய பெரியோர்கட்குப் பிரிய முள்ளது. அதுவே பாஷா சமிதி யென்று சொல்லப்படுகின்றது.

iii. "நாற்பத்திரண்டு பிக்ஷா தோஷங்களால் எப்போதும் தூஷிக்கப்படாம லிருக்கின்ற எந்த அன்னத்தை முனி சாப்பிடுகின்றானோ அது ஏஷணாசமிதி யென்று சொல்லப்படுகின்றது.

iv. "ஆசனாதிகளை நன்றாகப் பார்த்துப் பிரயத்தனத்தாலவற்றைத் தாண்டிக் கிரஹிக்கவேண்டும், விடவேண்டும், தியானஞ் செய்யவேண்டு மென்பது ஆதானசமிதி யென்று சொல்லப்படுகின்றது.

v. "கப, மூத்திர,மலங்களை ஜனசஞ்சாரமில்லாத விடத்தில் எவன் பிரயாசத்தால் விடுகின்றானோ அது உத்சர்க்கசமிதி யென்று சொல்லப் படுகின்றது". இவ்வாறு ஹேமசந்திராசாரியரால் கூறப்பட்டிருக்கின்றது.

ஆகையினாற்றான், ஆசிரவம் சுரோதாவின்துவாரத்தை மறைக்கின்றபடியால் அதனைச் சம்வர மென்று சொல்லுகின்றனர்.

**ஆசிரவம் சம்சாரத்திற்குக் காரணமாகவும், சம்வரம் மோக்ஷத்திற்குக் காரணமாகவு மிருக்கின்றன.**

இதுவே ஆருகத சித்தாந்தத்தின் முக்கிய அபிப்பிராயம்; மற்றைய வெல்லாம் இவற்றின் விஸ்தாரமாம். இங்ஙனம் பெரியோர்களாற் கூறப்பட்டிருக்கின்றது.

**45.** செய்த கர்மத்தைத் தபசு முதலியவற்றால் ஒழிப்பது நிர்ஜரமென்னும் பெயருள்ள தத்துவமாம்.

சுக்துக்கங்களைத் தேகத்தோடு நாசம் பண்ணுவதால், மழித்தல் (மொட்டையடித்துக் கொள்ளுதல்) முதலியன (செய்தல்) தபசென்று சொல்லப்படுகின்றது.

அந்தநிர்ஜரம்: காலம் உபக்கிரமிகமென் றிருவகைத்தாம்.

அவற்றுள், முதலாவது எந்தக்காலத்தில் எந்தக்கர்மம் பலத்தைக் கொடுப்பதாக அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றதோ அந்தக் காலத்திலேயே (அந்தக்கர்மம்) பலத்தைக் கொடுப்பதால் (அது) நிர்ஜரையென்றும், காமாதி பாகத்தாலுண்டாகின்ற தென்றும் சொல்லப்படுகின்றது.

எந்தக் கர்மத்தைத் தபோபலத்தினால் தனது காமியத்தையடையும்பொருட்டு உதயாவளியிற் பிரவேசித்துச் செய்கின்றானோ அந்தக் கர்மம் நிர்ஜரமாம்.

"சம்சாரத்திற்குக் காரணமான கர்மங்களை நாசம்பண்ணுவ ால் நிர்ஜரம் என்று பெயராம். அது சகாம அகாமமென இரு கைத்தாம்.

"காமத்துடன் கூடிய நிர்ஜரை சந்நியாசிகட்கும், அகாமி ான நிர்ஜரை மற்றைப் பிராணிகட்கும்" என்றும் சொல்லப்பட் -ருக்கின்றது.

மித்தியாதரிசனமுதலிய பந்தஹேதுக்களின் நிரோதம் புதி ான கர்மநிராமைையா லுண்டாகின்றது.

நிர்ஜரையாகிய ஹேதுவின் சந்நிதானத்தினாற் சம்பாதிக்கப் ட்ட கர்மத்தை நிக்கிரகிப்பதால் ஆத்யந்திகமான கர்மமோக்ஷ ுண்டாகின்றது. அதுவே மோக்ஷம்.

பந்தஹேது, சம்சாரஹேதுவாகிய நிர்ஜரத்தினின்றும் சர்வ ர்மங்களையும் விடுதல் மோக்ஷம்.

46. இதற்குப் பிறகு, மேலே ஆலோகம் வரையிற் போய்க் 'காண்டிருக்கின்றான். எங்ஙனம்? தண்டத்தினாற் சுற்றப்பட்ட ுலால சக்கரம் தண்டசையோக மொழிந்தாலும் முன்னர்ச்சுற்றிய லத்தினாலுண்டான சம்ஸ்கார முடியும் வரையும் சுற்றிக்கொண் .ருக்கின்றதோ, அங்ஙனமே சம்சாரியான ஆத்மா மோக்ஷத்தை டையும் பொருட்டுத் தியானத்தைச் செய்திருக்கின்றான்.

முத்தனுக்கு அஃதில்லாவிடினும் முன் சம்ஸ்காரத்தினால் ுலோகம் வரையில் கமனம் (போதல்) பொருந்தும்.

அல்லது, எங்ஙனம் மண்ணினாற் பூசப்பட்ட சுரைக்குடுக்கை ரில் முழுகிப்போய் அம்மண் கரைந்துபோனபிறகு மேற்கிளம்பு ன்றதோ அங்ஙனமே, கர்மரஹித் ஆத்மா ஒன்றுடனும் சம்பந்தப் டாமையால் ஊர்த்துவமுக (மேல்) நோக்கிப் போகின்றான்.

பந்தச்சேத முதலியவற்றால் பக்ஷிகள்போலும், ஊர்த்துவகதி பாவமிருப்பதால் அக்கினிபோலும், ஊர்த்துவகமன மிவனுக்குப் பாருந்தும்.

ஒன்றற்கொன்று பிரதேசத்தில் (அங்கங்களில்) பிரவேசித்து க்கமின்றி யிருப்பதே பந்தம்.

ஒன்று மீற்றொன்றை யடைவது மாத்திரம் சங்கமாம்.

"முன்னரநுஷ்டித்த கர்மத்தின் சம்பந்த மிராமையாலும், பந்தச் சேதம் வந்தமையாலும், கதி (கர்மகதி) பரிபாகத்தை யடைந்ததினுலும், குலால சக்கரம் போலும், (பூசிய)மண் நீங்கிய சுரைக் குடுக்கைபோலும், ஆமணக்குவித்துப்போலும், அக்கினியின் சிகை போலும் (ஆத்மா) ஊர்த்துவமுக நோக்கிப் போவது விருத்த மன்று" என்று சொல்லப்பட்டிருக்கின்றது.

ஆகையினுற்றுன் "சந்திரசூரியாதி கிரஹங்கள் கமனுகமனங்களை யடைகின்றன (போய்ப்போய் வருகின்றன). ஆலோகாகாசத்தை யடைந்தவ (முத்த)ர்க ளின்னும் திரும்பிவரவில்லை" என்று சொல்லுகின்றனர்.

**47.** சிலர் "சமஸ்தகிலேசமும், அவற்றின் வாசனையுமற்றவனுயும், ஆவரணமற்ற ஞானத்தை யுடையவனுயும், சுகசொரூபனுயுமுள்ள ஆத்மாவிற்கு உபரி (மேல்) தேசத்திலிருப்பது முக்தி" என்று சொல்லுகின்றனர்.

**48.** இன்னும் சிலர் சுகதுக்க சாதனங்களாய புண்ணிய பாபங்களையுங் கூட்டி மேற்கூறிய சப்தபதார்த்தங்களுடன் பதார்த்தங்கள் ஒன்பதென ஒப்புக்கொண்டிருக்கின்றனர்.

"ஜீவா ஜீவம், புண்ணியபாவம், ஆசிரவம், சம்வரம், நிர்ஜரணம், பந்தம், மோக்ஷமென தத்துவங்கள் ஒன்பது" என்று சித்தாந்தத்திற் சொல்லப்பட்டிருக்கின்றது. இவ்விஷயம் விரிக்கிற் பெருகுமாகலின் சுருக்கமாக்க் கூறப்பட்டது.

**49.** இம்மதத்தில் எல்லாப் பதார்த்தங்களிலும் சப்தபங்கி நியாயத்தை ஜையினர் சொல்லுகின்றனர்.

"ஸ்யாதஸ்தி ஸ்யாந்நாஸ்தி ஸ்யாதஸ்திச நாஸ்திச
ஸ்யாதவக்தவ்யஃ ஸ்யாதஸ்தி சாவக்தவ்யஃ
ஸ்யாந்நாஸ்தி சாவக்தவ்யஃ ஸ்யாதஸ்திச
நாஸ்திசாவக்தவ்யஃ".

(1) "அஸ்தி - உண்டு, (2) நாஸ்தி - இல்லை, (3) அஸ்தி நாஸ்தி - உண்டில்லை; (4) அவக்தவ்யம்-சொல்லத்தகாதது, (5) அஸ்தி அவக்தவ்யம், (6) நாஸ்தி அவக்தவ்யம், (7) அஸ்தி நாஸ்தி அவக்தவ்யம்" என்று சப்தபங்கி நியாயமிருக்கின்றது.

(1.) "ஒருபதார்த்தமிருக்கிறதென்னு மிடத்து ஸ்யாதஸ்தி யென்று பிரயோக மேற்படுகின்றது. பிரயாசத்தின் பேரிலிருக்கின்றதென்பது (ஸ்யாதஸ்தி என்னும்) பிரயோகத்தினர்த்தமாம்.

(2.) கடமின்றென்று நிஷேதிக்கும்போது ஸ்யாந்நாஸ்தி யென்று பிரயோக மேற்படுகின்றது.

(3.) விதிநிஷேத மிரண்டையும் தனித்தனியே யபேக்ஷிக்கும்போது மேற்கூறிய விரண்டு விதமான பிரயோக மேற்படுகின்றது.

(4.) ஏககாலத்தில் விதிநிஷேதங்களை யிச்சிக்கும்போது அவக்தவ்யஃ (சொல்லத் தகுந்ததன்று) என்று பிரயோக மேற்படுகின்றது; சக்தியிராமையின்.

(5.) இருக்கின்றதென்றும்சொல்லத்தகுந்த தன்றென்றும் கூறுமிடத்து அஸ்திசாவக்தவ்யஃ என்னும் பிரயோக மேற்படுகின்றது.

(6.) இல்லை யென்றும் சொல்லத்தகுந்த தன்றென்றுங் கூறுமிடத்து ஸ்யாந்நாஸ்தி சாவக்தவ்வியஃ என்னும் பிரயோக மேற்படுகின்றது.

(7.) இருக்கின்றது, இல்லை, சொல்லத்தகுந்ததன்றென்று கூறுமிடத்து "ஸ்யாதஸ்திச நாஸ்திசாவக்தவ்யஃ" என்னும் பிரயோக மேற்படுகின்றது."

இவ்வாறு அனந்த வீரியர் கூறியிருக்கின்றனர்.

**50.** "ஸ்யாத்" என்னும் சப்தமானது வினைச்சொல்லிற்குச் சமானமான நிபாதம் (அவ்வியயம் - வேற்றுமை யுருபேற்காத சொல்).

"வாக்கியங்களில் அநேகாந்த தியோதக (சூசக) மான விசேஷணம் கொடுத்தல்வேண்டும். அஃதாவது ஸ்யாத் என்னும் சப்தம் வினைச்சொல்லிற்குச் சமானமாயும் அவ்யயமாயு மிருக்கின்றது. அதுவே விசேஷணமாம்" என்று சொல்லப்பட்டிருக்கின்றது.

"ஸ்யாத்" என்னும் சப்தமானது அநேகாந்த சூசகமாகா திருந்தால் அப்போது "ஸ்யாதஸ்தி" என்னும் வாக்கியத்தில் 'ஸ்யாத்" என்னும் பதம் வியர்த்தமாய் விடும்.

அனேகாந்த சூசகமென்று கூறுமிடத்து "ஸ்யாதஸ்தி" என்னும் வாக்கியத்திலிருக்கின்ற "ஸ்யாத்" என்னும் பதத்தினால் பிரயாசத்தின் பேரிலிருக்கின்றது என்னும் அர்த்தம் கிடைப்பதால் வியர்த்தமாவதின்று.

"ஸ்யாத்வாதமானது சர்வப்பிரகாரத்தாலும் ஏகாந்தத்வத்தை (ஒருவடிவை) விடுவதால் சப்தபங்கியின் நியாயத்தையபேட்சித்தும் ஹேயாஹேய (தள்ளத் தகுந்தது கொள்ளத் தகுந்ததாய) விசேடங்களைச் செய்துகொண்டு மிருக்கின்றது" என்று கூறப்பட்டிருக்கிறது.

51. வஸ்து ஏகாந்த (ஒருவடிவ)மாகச் சர்வப் பிரகாரத்தினாலும், எப்பொழுதும், எங்கும், எந்தச் சொரூபத்தினாலு மிருந்ததாயின் கிரஹிக்கவேண்டுமென்னு மிச்சையாலும், பரிகரிக்கவேண்டுமென்னு மிச்சையாலும் ஓரிடத்தில், ஓர்சமயத்தில் ஒருவன் பிரவிர்த்திக்கவாவது,நிவிர்த்திக்கவாவது மாட்டான்;பிராரத்துவத்தை அடைய வேண்டி யிருப்பதாலும், தள்ளத்தகுந்த தென்கிற ஞானத்திற்குப் பொருந்தாமை யிருப்பதாலு மென்க.

52. வஸ்து அநேகாந்தமென்று சொல்லுமிடத்தோ பிரயாசத்தினால் ஓரிடத்தில் ஒரு சத்துவ மிருப்பதால் விடத்தகுந்ததும் கிரஹிக்கத் தகுந்ததும், பிரவிர்த்திக்கின்றவர்கட்குப் பொருந்துகின்றன.

மேலும், வஸ்துவிற்குச் சத்துவம் சுபாவமா, அசத்துவம் சுபாவமா? என்று வினவுதல் வேண்டும்.

வஸ்துவிற்குச் சத்துவம் சுபாவமாகாது; ஏனெனின், கடத்திற்கு அஸ்தி, (இருக்கின்றது), சமஸ்தி (நன்றாக விருக்கின்றது) என்னு மிவ்விரண்டு (பதமு)ம் பரியாய மாகையாலும், இரண்டு பதங்கட்கும் ஏககாலத்தில் பிரயோகம் சம்பவியாமையாலும், நாஸ்தியென்னும் பிரயோகத்துடன் விரோதம் வருவதாலுமென்க.

இவ்வாறே ஏனைய விடங்களிலும் சேர்த்துக்கொள்ளல் வேண்டும்.

"எந்தக்காரணத்தினால் கடம் சத்தன்றோ அந்தக்காரணத்தினால் கடமிருக்கின்ற தென்றும் சொல்லுதல் கூடாது;

இல்லையென்றும் சொல்லுதல் கூடாது; சத்துவாசத்துவங்கட்கு விரோதம் வருவதால்". இவ்வாறு ஓர்கிரந்தத்திற் கூறப்பட்டிருக்கின்றது.

ஆகையினால் அடியில் வருமாறு கூறல் வேண்டும்:—

**53.** சத், அசத், சதசத், அநிர்வசநீயவாத பேதத்தினால் பிரதிவாதிகள் நால்வருளர்.

**54.** மீண்டும், முதல் மூன்றுவாதத்தில் ஏதாவதொன்றுடன் அநிர்வசநீயவாதத்தையும் மேற்கொண்டுள்ள வாதிகள் மூவருளர். இவ்வாதிகள் வஸ்துவிருக்கின்றதா வென்று வினவுமிடத்து அது ஒருபிரகாரமாக இருக்கின்றதென்று பிரதிவசனம் சம்பவிப்பதால் அவ்வாதிகளியாவரு மேல்வார்த்தைக் கிடனின்றி மௌனமாயினர்; ஆகையினால், பூரணநிச்சயமுள்ள ஸ்யாத் வாதத்தை யொப்புக் கொண்டவர்கட்கு அங்கங்கே ஜயமேற்படுகின்றது. ஆகையினால் எல்லாம் பொருந்துகின்றன.

**55.** ஸ்யாத்வாத மஞ்சரியில் அடியில் வருமாறு சொல்லப் பட்டிருக்கின்றது:—

அநிர்வசநீய சொரூபத்துடன் கூடிய வஸ்து சர்வஞ்ஞனுக்கு மாத்திரம் விஷயமாயுள்ளது; ஏகதேசமாக அறியப்பட்டவஸ்துவே நியாயப்பிரவிர்த்திக்கு விஷயமாம்.

ஒருவஸ்துவி லுள்ள நியாயத்தின் பிரவிர்த்தி சுருதி சகித மாயிருப்பின் அப்போது அது பூரண அர்த்த நிச்சயத்துடன் கூடியதாம்; அதுவே ஸ்ருதமென்று சொல்லப்படுகின்றது.

எங்ஙனம் ஏனையவாதிகள் இது சுபக்ஷம், இது பரபக்ஷமென்னும் அபிப்பிராயத்தினால் அசூயையோடு வாதம் பண்ணுகின்றார்களோ அங்ஙனம் ஆருகதர் பக்ஷபாதத்தோடு வாதம் பண்ணாது எல்லாச் சாஸ்திரங்களையும் சமானமாகக் கருதிப் பக்ஷபாதமின்றி இருக்கின்றனர்."

**56.** ஜீனதத்தசூரியின் ஜயினமத வபிப்பிராயம் வருமாறு:—

(1.) பலம், (2.) போகம், (3.) உபபோகம், (4.) தானம், (5.) லாபம், (6.) நித்திரை, (7.) பயம், (8.) அஞ்ஞானம்,

(9.) ஜுகுப்சிதம் (அருவருப்பு), (10.) சிரிப்பு, (11.) பிரீதி, (12.) அப்பிரீதி, (13.) இராகம், (14.) துவேஷம், (15.) உபேக்ஷை, (16.) காமம், (17.) சோகம், (18.) மித்தியா ஞானமென்னும் பதினெண்தோஷங்கள் எவர்க்கில்லையோ அவர் ஜினதேவர்; தத்துவ ஞானோபதேசிகரான குரு.

ஞானம், தரிசனம், சாரித்திரமென்னுமிவை மோக்ஷத்திற்குச் சாதனங்களாம்.

**57.** ஸ்யாத் வாதத்திற் பிரத்தியக்ஷம் அநுமானமென்றிரண்டு பிரமாணங்களுள.

**58.** நித்தியாநித்திய சொரூபமான சர்வவஸ்துக்களும் ஏழு விதமாகவாவது, ஒன்பதுவிதமாகவாவது இருக்கின்றன.

ஜீவா ஜீவங்கள், புண்ணியபாவங்கள், ஆசிரவம், சம்வரம், பந்தம், நிர்ஜரம், முக்தியெனத் தத்துவங்கள் ஒன்பதுவகையாம். இவற்றின்விவரம் சொல்லப்படுகிறது:—

சேதனசொரூபன்-ஜீவன்;
அசேதன சொரூபம்-அஜீவம்;
சத்கர்மத்துடன்கூடிய புத்கலங்கள்-புண்ணியம்;
அதன்விபர்யயம் (மாறுபாடு)-பாவம்;
கர்மங்களின் பந்தம்-ஆசிரவம்;
கர்மபந்த நிவிர்த்தி-நிர்ஜரம்;
அஷ்டகர்ம நாசம்-மோக்ஷம்.

சிலர் புண்ணியம் சம்வரத்திலும், பாவம் ஆசிரவத்திலும் அந்தர்க்கதமாமெனச் சொல்லுகின்றனர்.

புண்ணியத்தின் சம்சிரவம் (பிரவிர்த்தி) இருந்தால் பாபத்திற்காசிரவம் (நிவிர்த்தி) உண்டாகின்றது.

**59.** யோகாப்பியாசத்தினால் அநேக கண் (ஞானங்) களையுடைய யோகிக்கு அஷ்டகர்மங்கள் நசித்துப்போவதால் முத்தியுண்டாகின்றதென்று ஜினனால் சொல்லப்பட்டிருக்கின்றது.

சுவேதாம்பரர் இரஜோகுண தமோகுணங்களற்றும், பிக்ஷான்னத்தைச் சாப்பிட்டுக் கொண்டும், முண்டனம்பண்ணிக்கொண்டும்,

பொறுமையுள்ளவர்களாயும், சங்கமற்றவர்களாயு மிருக்கின்றனர்; அவர்கட்கு ஜயின சாதுக்களென்று பெயர்.

திகம்பரர் பாணி (கர) பாத்திரர்களாயும், மயிற்றோகையைக் கையில் வைத்துக்கொண்டும், முண்டனம்பண்ணிக்கொண்டு மிருக்கின்றனர்.

இன்னும் சிலர் பிச்சையிடுபவன் வீட்டிலேயே யிருந்து அவன் மனைவிமக்கள் சாப்பிட்டபிறகு சாப்பிட்டுக்கொண்டருக்கின்றனர்.

ஸ்திரீ தத்துவ ஞானத்தையு மடைகின்ற தில்லை; மோக்ஷத்தையு மடைகின்றதில்லை யென்று திகம்பரர் கூறுகின்றனர்.

சுவேதாம்பரத்தை (வெள்ளாடையை)த் தரித்துள்ள சந்நியாசிக்கும், திகம்பரசந்நியாசிக்கு மிதுவே பேதமென்று சொல்லுகின்றனர்.

## நான்காவது

# இராமாநுஜ தரிசனம்.

60. இந்த ஆருகதமதம் பிராமாணிகர்களால் நிந்திக்கத்தக்கதாம். ஒருவஸ்து பாரமார்த்திகமாயிருக்கும்போது அதில் ஒருகாலத்தில் பாரமார்த்திகமான சத்துவாசத்துவாதி தர்மங்களின் சமாவேசம் (பிரவேசம்) பொருந்தமாட்டாது. பரஸ்பரம் விருத்தமாயுள்ள சத்துவாசத்துவங்களின் சமுச்சயம் (சேர்க்கை) பொருந்தாவிடினும் விகற்பம் ஏன் பொருந்தமாட்டாதென்று வினவுதல் கூடாது; கிரியை வேறுபடுமேயன்றி வஸ்து வேறுபடமாட்டாதென்னும் நியாயமிருக்கின்றமையின். விநாயகர், நரசிம்மரென்னுமிவர்களைப்போல் சர்வஜகத்தும் அநேக ரூபமென் றங்கீகரித்தல் கூடாது. (உவமானத்தில்) ஓர்பாகத்தில் கஜத்தன்மையும் சிம்மத்தன்மையும், மற்றோர்பாகத்தில் மனிதத்தன்மையு மிருக்கின்றமையின் விரோதமின்று. ஒரேயிடத்தில் சத்துவாசத்துவாதிக ளிருக்கின்றமையின் அனேக ரூபமெனக் கூறுமிடத்துத் திருஷ்டாந்தம் பொருந்தாது.

(ஆ.) திரவியவடிவால் சத்துவமும், மற்றொரு வடிவால் அதன் அபாவமும் (அசத்துவமும்) இருக்கின்றமையின் இரண்டும் பொருத்தமாம்.

(ச.) இங்ஙனங் கூறுதலமையாது; கால வேறுபாட்டினாற் சில பதார்த்தத்திற்குச் சத்துவமும் அசத்துவமும் இயல்பாயிருக்கின்றமையின் அதில் யாதொரு தோஷமுமின்று.

(ஆ.) ஒரெழுத்திற்குக் குறுமையும் நெடுமையு மிருப்பதுபோல் ஜகத்திற்கு அனேகரூப மிருப்ப தமையும்.

(ச.) பிரதியோகி (தருமி) பேத மிருக்கின்றமையின் விரோதமின்று. ஆகையால் பிரமாணமின்மையின் ஒரு காலத்திற் பரஸ்பரவிருத்தமாயுள்ள சத்துவாசத்துவங்கள் ஒரு வஸ்துவிலிருத்தலமையாது. இங்ஙனமே ஏனையபங்கி (சித்தாந்தங்)களும் பொருந்தா.

மேலும், இவற்றிற்கெல்லாம் மூலமான சப்தபங்கியின் நியாயம் சுவயம் (தானே) ஒருருவமா? பல வுருவமா? முதற்பக்ஷத்தில்,

சர்வமும் அனேகாந்தமென்னும் பிரதிஞ்ஞைக்கு வியாகாத (விரோத)ம் வருகின்றது. இரண்டாவதுபக்ஷத்தில், விரும்பிய அர்த்தம் சித்திப்பதில்லை; அநேகாந்தமாக விருப்பதால் சாதகமாவதில்லை. ஆகையால், ஸ்யாத்வாதிக்கு உபயரஜ்ஜுபாசம் (இருபுறமும் கயிற்றால் கட்டப்படுதல்) ஏற்படுகின்றது.

மேலும், நவத்துவம் (9), சப்தத்துவம் (7) என்றற் றொடக்கத்து எண்களின் நிர்த்தாரணம் செய்யும் பிரமாதா, அதன் கரணமாகிய பிரமாணம், பிரமேயமாகிய நவத்துவாதிகள் (ஒன்பது முதலியவை)என்னு மிவற்றிற்கு நியமமிராவிடத்து இந்த ஆருகதமதப் பிரவர்த்தகனை *தேவனும்பிரியனால் (தேவனுக்குப் பிரியமா யுள்ளவனால்) தனக்குச் சாஸ்திரகர்த்திருத்துவம் நன்றாகச் சமர்த்திக்கப்பட்டது.

அங்ஙனமே, ஜீவனுக்குத் தேகாகாரமான பரிணாமத்தையங்கிகரிப்பதிலும் சாஸ்திரகர்த்திருத்துவம் நன்றாக நிரூபிக்கப்பட்டது. யோகபலத்தினால் அனேக சரீரத்திற் பிரவேசிக்கின்ற யோகிக்குச் சரீரந்தோறும் ஜீவவிச்சேதம் (சேதிக்கப்படுதல்) நேரிடும். மேலும், மனிதசரீர பரிமாணமுள்ள ஜீவன் கர்மவசத்தால் யானையின் தேகமுற்றும் பிரவேசிக்கச் சமர்த்தனாகமாட்டான். மேலும், யானை முதலிய சரீரத்தினின்றும் நீங்கி எறும்பின் சரீரத்திற் பிரவேசிக்கின்றவனுக்கு முன் சரீரத்தின் (ஆத்ம) பரிமாணத்திற்கு விநாசம் சம்பவிக்கும்.

எங்ஙனம் தீபப்பிரபையின் விசேஷம் பிரசாத (கோயில்) முதலிய விடங்களில் சங்கோச (குவிவு) விகாசத்தை (விரிவை) யடைகின்றதோ அங்ஙனமே ஜீவனும் மனிதன் யானை என்றற் றொடக்கத்துச் சரீரங்களிலும் சங்கோச விகாசத்தை யடைகின்றானெனின், (ஜீவன்) பிரதீபம் (விளக்குப்)போன்று விகாரியாயின் அநித்தியனாவன். அங்ஙனமாயின், கிருதப்பிரநாசமும் அகிர்தாப்பியாகமமும் சம்பவிக்கும்.

இங்ஙனம் பிரதானமல்ல நிபர்கண நியாயத்தினால் (மல்யுத்தம் செய்வதிற் றலைமையாயுள்ளவனை வென்றதினால் ஏனைய மல்லர்களும் ஜயிக்கப்பட்டார்க ளென்னும் திருஷ்டாந்தத்தினால்) ஜீவ

* இஃது இழிவைக்காட்டுங் குறிப்புச் சொல்.

பதார்த்த (ஜீவனுக்குக் கூறிய லக்ஷண) தூஷணத்தால் (மறுத லைச் செய்ததால்) ஏனைய பதார்த்தங்களிலும் தோஷமிருக்கின்ற தென் றாகித்தல் வேண்டும்.

ஆகையால், நித்தியமாயும் தோஷமற்றதாயு மிருக்கிற சுருதி யுடன் முரணுவதால் இந்த ஆருகதமதம் (முமுட்சுக்களால்) ஏற் றுக்கொள்ளத்தக்கதன்றாம்.

"(தம்முள்) மாறுபட்ட பல தர்மங்கள் ஒரு வஸ்துவி லிருத்த லமையா" என்று பகவானான வியாசர் (ii-2-33) கூறியிருக்கின்ற னர். இராமாநுஜாசாரியரும் இச்சூத்திரம் ஜயினமத நிராகரணத் திற் றுற்பரிய முள்ளதென வியாக்கியானஞ் செய்திருக்கின்றனர். அவருடைய சித்தாந்தம் வருமாறு:—

**61.** சித்து, அசித்து, ஈசுவரனென்னும் வேறுபாட்டால் போக்திரு, போக்கியம், நியாமகனெனப் பதார்த்தங்கள் மூன்று.

"ஈசுவரன், சித்து, அசித்து எனப் பதார்த்தம் மூன்று வகைத்து. விஷ்ணு ஈசுவரன், சித்து ஜீவன், அசித்து திருசியம்" என்று கூறப்பட்டிருக்கின்றது.

சிலர் (அத்வைதிகள்) நிர்விசேஷமாயும் சின்மாத்திரமாயு முள்ள பிரஹ்மமே பரமார்த்தம். அந்தப் பிரஹ்மம் நித்தியசுத்த, நித்தியபுத்த, நித்தியமுக்த சுபாவத்தை யுடைத்தாயிருப்பினும் தத்துவமசி முதலிய வாக்கியங்களால் ஜீவப்பிரஹ்மங்களின் ஐக் கியம் தெரியவருகின்றது. அந்த ஐக்கியத்திற்குத்தான் பந்தமும் மோக்ஷமுமாம். அதனினும் வேறாய நாநாவித போக்திரு போக்கிய மான சகலப் பிரபஞ்சமும் ஐக்கியவடிவ சுத்தப் பிரஹ்மத்தில் அவித்தையினாற் கற்பிக்கப்பட்டிருக்கின்றன. "ஓ பிரியமுள்ள வனே! இந்த ஜகத்து சிருஷ்டிக்கு முன்னர்ச் சத்தாகவே யிருந்தது; ஒன்றே (உள்ளது) இரண்டாவதில்லை" என்றற் றொடக்கத்துச் சுருதிகளுக்குப் பிராமாணியத்தை அங்கீகரித்துக் கூறுகின்றார்கள். "ஆத்மஞானி சோகத்தைக் கடக்கின்றான்" என்றற் றொடக்கத் துச் சுருதிகளால் ஜீவப்பிரஹ்ம ஐக்கிய சாக்ஷாத்காரத்தினால் அநாதியான அவித்தையின் நிவிர்த்தியை யங்கீகரிக்கின்றார்கள். "எவன் இந்தப் பிரஹ்மத்திற் பேதத்தைக் காண்கின்றானோ அவன் மிருத்துவினின்றும் மிருத்துவையடைகின்றான்" என்னும்

சுருதி பேதத்தை நிந்தித்திருப்பதால் பாரமார்த்திக பேதத்தை பங்கீகரியாது தம்மைச் சமர்த்தர்களாகக் கருதி இவ்விதத்தை யேற்றுக்கொள்ளவில்லை. அதுபற்றிச் சமாதானங் கூறப்படுகின்றது.

அவித்தை யுண்டென்பதிற் பிரமாண மிருப்பின் அவர் கூறியது சித்திக்கும். (பிரமாணமோ இல்லை). அங்ஙனமன்றோ, அநாதி பாவவடிவமும் ஞான நிவிர்த்தியமுமான அஞ்ஞானம் நான் அஞ்ஞன், நான் என்னையும் பிறவற்றையும் அறிய வில்லை என்னும் பிரத்தியக்ஷப் பிரமாணத்தாற் சித்திப்பதில்லை. "வித்துவான்கள் அநாதிபாவ ரூபமான யாது ஞானத்தால் மறைபடுகின்றதோ அது அஞ்ஞானமென்று அஞ்ஞானத்திற் கிலக்கணங் கூறியிருக்கின்றனர்" என்று கூறப்பட்டிருக்கின்றது. நான் அஞ்ஞனென்னும் ஞானத்திற்கு ஞானபாவம் விஷயமென்றுசங் கித்தல் கூடாது. (ஏனெனின்) யார் யாரைப்பார்த்துச் சொல்லு கின்றான்? பிரபாகரமதத்தை மேற்கொண்டவன் கூறுகின்றானா? அல்லது பட்டர் மதத்தை மேற்கொண்டவன் கூறுகின்றானா? முதலாவது பக்ஷம் பொருந்தாது; "தனது ரூபங்களாலும் அன்னியத்தின் ரூபங்களாலும் எப்போதும் சத்தசத்ரூபமான வஸ்துவில் சிலரால் ஓர் சமயம் சில ரூபம் அறியப்படுகின்றது. ஒருவித சம்பந்தத்தினால் பாவமானது அபாவமாயிருக்கின்றது. பாவாந்தரமானது வேறு அபாவமாகவில்லை; (ஏனெனின்) நிரூபிக்கக் கூடாமையின்" என்று கூறுபவனால் பாவத்தின் வேறாய அபாவம் அங்கீகரிக்கப்படாமையின். அபாவம் ஆறாவது (அநுபலப்திப்) பிரமாணத்திற்கு விஷயமாக விருக்கின்றமையானும், ஞானம் எப்போதும் அநுமேயமாகையானும், அதனபாவம் பிரத்தியக்ஷத் திற்கு விஷயமாகமாட்டாது.

அபாவம் பிரத்தியக்ஷத்திற்கு விஷயமாமென்று கூறும் வாதி யொருவன் மேற்கூறியவாறு நானஞ்ஞானி யென்னும் அநுபவத்தை ஞானபாவமெனக் கூறுவானாயின் அவனைக் குறித்துக் கூறவேண்டியதாவது:—நான் அஞ்ஞானியென்னும் அநுபவத்தில் நானென்று விளங்குகிற ஆத்மா (ஞானத்தின்) அபாவத்திற்குத் தர்மியாகவும் ஞானம் பிரதியோகியாகவும் அறியப்படுகின்றனவா?

அன்று ? அறியப்பட்டனவேயாயின் அறிவாகிய ஞானத்துடன் விரோதம் வருவதால் ஞானபாவஅநுபவம் பொருந்தாது. தர்மி (ஆத்மா), பிரதியோகி (ஞானம்) என்னுமிவற்றின் ஞானத்தை ஞானபாவஅநுபவம் அபேக்ஷிக்காம லிருந்ததேயாயின் அந்த அநுபவம் எளிதாகச் சம்பவியாது. அவ்வஞ்ஞானம் பாவரூபமென்று கூறுமிடத்து மேற்கூறிய தூஷணமிராமையின் இந்த அநுபவப் பாவரூப அஞ்ஞானத்தை விஷயமாக வுடைத்தா யிருக்கின்றதென்றே அங்கீகரித்தல் வேண்டும்.

மேற்கூறியது ஆகாசத்தை யுண்பதுபோ லிருக்கின்றது (ஏனெனின்) பாவரூப அஞ்ஞானம் ஞானபாவத்திற்குச் சமானமாயிருக்கின்றமையின். அங்ஙனமன்றோ, அஞ்ஞானத்திற்கு விஷயமாகவும், ஆசிரய மாகவும், ஞானவியாவர்த்தகமா (பிரித்துக் காட்டுவதா)கவும் பிரத்தியகாத்மா அறியப்பட்டதா? அன்று! அறியப்படுமிடத்து, சொரூபஞானத்தால் அந்த அஞ்ஞானம் நிவிர்த்தியாய்விடும். ஆதலின், அறியப்பட்ட அந்தப்பிரத்தியகாத்மாவில் எங்ஙனம் அஞ்ஞானமிருக்கும்? பிரத்தியகாத்மா அறியப் படாவிடத்து வியாவர்த்தக, ஆசிரய, விஷயமற்ற அஞ்ஞானம் எங்ஙனம் அநுபவித்தல் கூடும்?

(ஆ.) அஞ்ஞான விரோதியான ஞானத்தால் சொரூபப் பிரகாசமானது நன்றாக விளங்குகின்றது. ஆசிரயஞானம் விஷய ஞானமிருப்பினும் அஞ்ஞான அநுபவத்திற்கு விரோதமின்று.

(ச.) இஃதாச்சரியமே! ஆனால் இது (தர்மியின் ஞானம்) ஞானபாவத்திலும் ஒக்கும்; மற்றோரிடத்தில் அபினிவேச மிருப்பதால். ஆதலின், உபயவாதிகளாலும் அங்கீகரிக்கப் பட்ட ஞானபாவமே "நான் அஞ்ஞானி என்னையும் பிறரையும் அறியமாட்டேன்" என்னும் அநுபவத்திற்கு விஷயமா யிருக்கின்றதென் றறிதல் வேண்டும்.

(ஆ.) விவாதத்திற்கு விஷயமான பிரமாண ஞானம் (இது கடம் இது படம் என்னும் ஞானம்) தனது பிராகபாவத்தினும் வேறாகவும், தனது விஷயத்திற்கு ஆவரணமாக (மறைப்பாக)வும், தன்னால் நிவிர்த்திக்கக்கூடியதாகவும், தன்னிடத்திலிருக்கின்றதுமான வேறு வஸ்துவை முன்னிட்டுக்கொண்டிருக்கின்றது;

அப்பிரகாசிதமான (விளங்காத) அர்த்தத்தைப் பிரகாசப்படுத்துவ தால்; அந்தகாரத்தில் முதலிலுண்டாய தீபப்பிரபை போல என்னும் அநுமானம் பிரமாணமாகும் (என்று வேதாந்தி கூறின்),

(ச.) அதுவும் விசாரணையில் நிற்கமாட்டாது; அஞ் ஞானத்திலும் அநபிமதமான (இஷ்டமற்றதான) வேறு அஞ் ஞானத்தைச் சாதிப்பதில் அபசித்தாந்தம் வருவதாலும் அதைச் சாதிக்காதவிடத்து வியபிசாரம் வருவதாலும் திருஷ்டாந்தத் தில் ஹேது சித்திக்காமையாலுமென்க. தீபப்பிரபைக்கு அப்பிரகாசிதமான அர்த்தத்தைப் பிரகாசப்படுத்துந்தன்மை பொருந்தாது; தீபமிருப்பினும் ஞானத்திற்கே பிரகாசப்படுத்துந் தன்மை யிருப்பதால். தீபமில்லாமலும் அர்த்தப்பிரகாசம் ஞானத் தினுற்சித்தமாம்; தீபப்பிரபையோ ஞானத்தையுண்டுபண்ணும்நேத் திரேந்திரியத்திற்கு விரோதியான தமசை (இருட்டை) நிவிர்த்திப் பது மூலமாக உபகாரஞ்செய்கின்றது. அதிகமாகக் கூறுவதமையும்.

**63.** விவாதத்திற்கு விஷயமான அஞ்ஞானம் ஞானசொரூப மாத்திரமான பிரஹ்மத்தை யாசிரயித்துக்கொண்டிருத்த லமை யாது; அஞ்ஞானத்தன்மையால்; சுத்தியாதிகளின் அஞ்ஞானம் போல என்னும்மாறுய அநுமானமு மிருக்கின்றது.

(ஆ.) சுத்தியாதி யஞ்ஞானத்திற்கு ஆசிரயமான பிரத் தியக் அர்த்தம் (ஆந்தரமான சைதன்னியம்) ஞானமாத்திர சுபாவ முடைத்தா யிருக்கின்றது (என்றொருவன் ஆக்ஷேபிக்கின்),

(ச.) இவ்வாறுக்ஷேபித்தல் கூடாது; அநுபவமானது தானிருந்துகொண்டே ஒரு வஸ்துவிற்கு வியவகார அநுகுணத் தன்மையைச் செய்யுஞ் சுபாவமுடையதாயும், ஞானம் அவகதி சங்கதி வித் என்னும் பெயர்களுடையதாயும், விஷயத்தோடு கூடிய அநுபவிக்கு ஆத்மத்துவமாயும், ஞானத்துவமாயும் இருக்கின்ற தென் றங்கீகரித்திருப்பதால்.

(ஆ.) ஞானவடிவ ஆத்மா எங்ஙனம் ஞானத்தைக் குணமாக வுடையதாம்?

(ச.) இவ்வாசங்கை சாரமுடையதன்று; இரத்தினம், சூரியன் என்றற் றொடக்கத்துத் தேஜோதிரவியங்கள் பிரபை

வடிவாயிருந்து பிரபையென்னுங் குணத்திற்கு ஆசிரயமா யிருக்கின்றன. பிரபையானது தனது ஆசிரயத்தைவிட வேறொரிடத்துமிருப்பதாலும் ரூபத்தோடுகூடியிருப்பதாலும் திரவியசொரூபமா யிருக்கின்றது. ஆயினும், அது தேஜோதிரவியத்திற்குச் சேஷ (அங்க)மா யிருப்பதால் குணமென்று வியவகரிக்கப்படுகின்றது. அங்ஙனமே, இவ்வாத்மாவும் சொப்பிரகாச சித்ரூபமா யிருந்து அதனை (சித்ரூபத்தை)க் குணமாக வுடைத்தா யிருக்கின்றது. (இதற்கு) "எங்ஙனம் உப்புக்கட்டியானது உள்வெளிமுற்றும் உப்புமயமா யிருக்கின்றதோ அங்ஙனம் இவ்வாத்மாவும் உள்வெளிமுற்றும் பிரஞ்ஞானகனமா யிருக்கின்றது. இவ்வவஸ்தையில் இந்தப் புருஷன் சொப்பிரகாசனுகிவிடுகின்றான்; விஞ்ஞான ஆத்மாவின் ஞானத்திற்கு லோபம் (கெடுதி) வருவதின்று. இதனை நான் முகருகின்றேன் என்று எவன் அறிகின்றானே அவன் ஆத்மா; எவன் விஞ்ஞானமயனே அவன் பிராணுதிகளிலும் இருதயத்திலுமிருக்கின்ற ஜோதிரூப புருஷன். இவனே திருஷ்டா, சுரோதா, இரசத்தைக் கிரகிக்கின்றவன், முகருகின்றவன், மனனஞ் செய்கின்றவன், அறிகின்றவன், கர்த்தா, விஞ்ஞான ஆத்மாவான ஒருவன்" என்றற் றொடக்கத்துச் சுருதிகள் பிரமாணமாம்.

63. "அந்ருதத்தால் மறைபட்டவர்கள்" என்னுஞ் சுருதியும் அவித்தை யுண்டென்பதிற் பிரமாணமாக மாட்டாது. ரித் சப்தமானது கர்மத்தைக் கூறுகின்றது. "ரிதம்பிபந்தௌ-கர்மபலத்தைப் புசிக்கின்றார்கள்" என்னும் சுருதி இதற்குப் பிரமாணமாம். அந்த ரித (கர்ம)மானது பலனைக் கருதாது செய்யப்பட்டதேயாயின் பரமபுருஷாராதனமாயிருந்து அவனை யடைதற்குச் சாதகமாக விருக்கின்றது; ஈண்டு அதனினும் வேறாயும் பிரஹ்மப் பிராப்திக்கு விரோதியாயும் சாம்சாரிகமான (சம்சாரத்தை யடையக்கூடியதான) பலனைக் கொடுக்கின்றதாயு முள்ள கர்மம் **அந்ருதமாம்.** "அந்ருதத்தால் மறைபட்டவர்கள் இந்தப் பிரஹ்மலோகத்தை யடைவதில்லை" என்னும் சுருதி இதற்குப் பிரமாணமாம். மாயாந்து பிரகிருதிம் வித்யாத் - மாயையைப் பிரகிருதியாக அறிதல் வேண்டும்" என்னும் சுருதியிலுள்ள மாயாசப்தம் விசித்திரமான சிருஷ்டியை யுண்டுபண்ணக் கூடிய சத்துவ, ரஜஸ், தமோகுண வடிவப் பிரகிருதியைக் கூறுகின்றதேயன்றி அநிர்வச

நீயமான அஞ்ஞானத்தைக் கூறுவதில்லே. "சேனத்தால் (பருந்தி ஞல்) இம்சிக்கப்பட்டிருக்கின்ற வேடர்களின் குழந்தையின் சரீரத்தைக் காப்பாற்றுகின்ற புருஷனாற் பல மாயை காட்டப்பட்டன" என்னுமிடத்து மாயாசப்தம் விசித்திர சிருஷ்டியை யுண்டு பண்ணச் சமர்த்தமான பாரமார்த்திகவடிவ அசுராதி அஸ்திர விசேஷங்களைக் கூறுவதாகக் கண்டிருப்பதால் சுருதியானது ஒருகாலும் அநிர்வசநீய அஞ்ஞானத்தைப் பிரதிபாதிக்கமாட்டாது.

(ஆ.) ஜீவப்பிரஹ்ம ஐக்கிய உபதேசத்திற்கு அஞ்ஞான மங்கீகரிக்காவிடத்துப் பொருத்தமிராமையின் அது பொருந்து நிமித்தம் அஞ்ஞானம் அருத்தாபத்திப் பிரமாணத்தி ஞற் சித்தமாம்.

(ச.) அங்ஙனங்கூறுவ துசிதமன்று; தத்துவம் பதங்கள் சவிசேஷ (சகுண)ப் பிரஹ்மத்தைக் கூறுகின்றமையின் தம்முள் விருத்ததர்மமுள்ளஜீவப்பிரஹ்மங்களின்ஐக்கியம்அறிய முடியாது. ஆதலால், அருத்தாபத்திப் பிரமாணம் சாதகமாகாது. அங்ஙனமன்றே, தத்பதமானது சமஸ்ததோஷமுமற்றதாயும் அநேக கலியாணகுணங்களுக் காஸ்பதமாயும் ஜகத் சிருஷ்டியாதி லீலேயுள்ளதாயுமுள்ள பிரஹ்மத்தைப் பிரதிபாதிக்கின்றது. "நான் வெகு பிரஜையாக வாகின்றேனென்று சங்கற்பித்தது" என்று ஜகத் காரணமான பிரஹ்மத்தைச் சுருதி பிரதிபாதித்திருப்பதால் தத் பதத்திற்குச் சமாநாதிகரணமான துவம்பதமும் சமஸ்தஜீவர்களையும் சரீரமாகவுடைய பிரஹ்மத்தைக் கூறுகின்றது; சமாநாதிகரணியமாவது இரண்டு பிரகார (விசேஷண)த்துடன் கூடிய ஒரு வஸ்துவிற் ருற்பரிய முடையதாகையால்.

(ஆ.) "அந்தத்தேவதத்தன்ருனிவன்" என்பதுபோல் தத்துவம்பதங்கள் விருத்தமான அம்சங்களைப் பாகத்தியாக (விட்டுவிடாத)லக்ஷணையால் நீக்கி நிர்விசேஷமான ஜீவப்பிரஹ்ம ஐக்கியத்தைப் பிரதிபாதிப்பதாக ஏன் அங்கீகரித்தல் கூடாது? "அவன் இவன்" என்னுமிடத்து அவன் என்னும் சப்தமானது தேசாந்தர காலாந்தர சம்பந்தமுள்ள புருஷனைத் தெரிவிக்கின்றது; இவன் என்னும் சப்தமானது இந்தத் தேசத்தில் இந்தக் காலத்திலுள்ள புருஷனைக் கூறுகின்றது. ஆகையால், இருவருக்கும் ஐக்கியம்

காணப்படுகின்றது; ஆண்டொருவனுக்கு ஏககாலத்தில் விருத்த மான தேசகாலப் பிரதீதி(தோற்றம்) சம்பவிக்காமையின். இரண்டு பதங்கட்கும் சொரூபத்திற் குற்பரிய மிருத்தலின் சொரூபத் திற்கு ஐக்கியம் சம்பவித்தல் பொருந்தும். அதுபோல, ஈண்டும் தத் துவம்பதங்கள் சர்வஞ்ஞத்துவம் கிஞ்சிஞ்ஞத்துவ மென்றற் ஜொடக் கத்து விருத்தாம்சங்களைப் பரித்தியாகம்பண்ணி இலக்கணையால் அகண்ட சொரூபத்தைப் பிரதிபாதிக்கின்றன.

(ச.) நீ கூறிய திருஷ்டாந்தம் அங்கீகரிக்கத்தக்கதன்று. திருஷ்டாந்தத்திலும் விரோதமின்மையின் லக்ஷணையின் கந்தங் கூடச் சம்பவிப்பதில்லை. ஒருவஸ்துவிற்குப் பூதவர்த்தமானமென்னு மிரண்டுகால சம்பந்தம் விருத்தமன்று. தேசாந்தரஸ்திதி சென் றது; சமீபதேசஸ்திதி வர்த்தமானமா யிருக்கின்றது. ஆகை யால் தேசபேதத்தாலுள்ள சம்பந்த விரோதமும் காலபேதத்தாற் பரிகரிக்கத்தக்கதாம். லக்ஷணையை யங்கீகரிக்குமிடத்தும் ஒரே பதத்திற்கு லக்ஷகத்தன்மையை யங்கீகரிப்பதனால் விரோதபரிகா ரம் சம்பவிக்குமிடத்து இரண்டு பதங்கட்கும் லக்ஷணஸ்வீகாரம் பொருந்தாது. அன்றியின், தத்துவம் (அதன் றன்மை), இதந்துவம் (இதன்றன்மை) என்பவற்றோடு கூடியதாக ஒருவஸ்துவின் பிரத்தியபிஞ்ஞை யுண்டாகின்றது; அதற்குப் பிராமாணியத்தை யங்கீகரிக்காவிடத்து ஸ்தாயித்துவம் சித்திப்பதின்று; ஸ்தாயித் துவம் சித்திக்காவிடத்து க்ஷணபங்கவாதியான பௌத்தன் வெற்றி பெறுவன். இங்ஙனம் ஈண்டும் (தத்துவமசியிலும்) ஜீவாத்ம பர மாத்மாக்கட்குச் சரீராத்மபாவத்தால் தாதாத்மியம் விருத்தமன் றென்று பிரதிபாதிக்கப்பட்டது. பிரஹ்மத்திற்குச் சரீரமாகவிருப் பதால் ஜீவாத்மா பிரகாரமா (விசேஷணமா)கவிருக்கின்றான்; ஆகை யால் பிரமாத்மகன்(பிரஹ்மத்தை யாத்மாவாகவுடையவன்).

"எவன் ஜீவாத்மாவிலிருந்து ஜீவாத்மாவினும் ஆந்தரமாக விருக்கின்றானோ, எவன் ஜீவாத்மாவை யறிகின்றானோ, எந்தப் பர மாத்மாவிற்கு ஜீவாத்மா சரீரமாகவிருக்கின்றானோ" என்று வேறு சுருதியிற் கூறப்பட்டிருக்கின்றது.

**64.** இதுவும் (இச்சமாதானமும்) அற்பமாகக்கூறப்பட்டது. எல்லாச்சப்தங்களும் பரமாத்மாவையே கூறுகின்றன. அவைபரியா யங்களென்றும் சொல்லுதல்கூடாது; ஏனெனின், துவார (காரண)

பேதம் சம்பவிக்கின்றமையின். அங்ஙனமன்றே, தேவ மனுஷியாதி சரீரங்களியாவும் ஜீவசரீரமா யிருத்தல் போன்று சர்வவஸ்துக் களும் ஈசுவரனுக்குச் சரீரமாக விருக்கின்றன. ஆகையால் இவை யாவும் பிரஹ்மாத்மகங்கள்.

ஆதலால் தேவ, மனுஷிய, யக்ஷ, பிசாச, உரக (சர்ப்ப) ராக்ஷச, பக்ஷி, விருக்ஷ, லதா (கொடி), காஷ்டம் (உலர்ந்த கட்டை), சிலை, திருணம், கடம், படம் என்றற் றொடக்கத்துச் சர்வசப்தங்க ளும் பிரகிருதி பிரத்தியயத்தினல் (பகுதிவிகுதிகளால்) அர்த்தங்க ளைக் கூறுகின்றனவென்பது உலகத்திற் பிரசித்தமாம். இந் தப் பதங்களால் வாச்சியமாகத் தோன்றுகின்ற அந்தந்தச் சரீரத் தோடு கூடிய வஸ்துவாயிலாக அதனதன் அபிமானியான ஜீவன், அவனுக்கு அந்தர்யாமியான பரமாத்மா பரியந்தமுள்ள சரீரங்க ளைத் தேவாதிசப்தங்கள் கூறுகின்றன.

"தேவாதி சப்தங்கள் ஈசுவரனிலும் அப்பிரதக்சித்த பாவத்தை (அச்சுதந்தரத்தன்மையை)யுடைய சீவர்களைக்கூறுகின் றன; இவ்விஷயத்தில் தாற்பரிய நிச்சயத்துடன் கூடிய பிரயோகம் பல உலகத்திலும் வேதத்திலும் திடமாயிருக்கின்றன. தேவர் மனி தர் முதலிய ரூபமான சீவாத்மாவின் சம்பந்தமிராதபோது ஈசுவர னது ஸ்திதி யறியப்படுவதில்லை. அவ்வீசுவரன் விபுவாயிருப்பினும் ஜீவாத்மாவின்கண் அநுப்பிரவேசஞ் செய்வதால் இவ்வுலகத்தில் அநேக நாமரூபங்களை யடைகின்றனன்".

இதனல் தேவாதி சப்தங்கள் சரீரத்தைக் குறிப்பிக்கின்றன வென்று கூறி "சமஸ்தாநைக்யாத்யபாவ" என்றற் றொடக்கத்துச் சுலோகங்களால் சரீரலட்சணத்தைக் காட்டி, "சப்தைஸ்தத்வஸ்வ ரூபபிரதிகிருதிபி:" என்றற்றொடக்கத்துச் சுலோகத்தால் விசுவேச னிலும் அப்பிரதக்சித்தத்தன்மையைக்கூறி, "நிர்கர்ஷாகூத" என் றற்றொடக்கத்துச் சுலோகங்களால் சர்வசப்தமும் முடிவில் பரமாத் மாவைப் பிரதிபாதிக்கின்றன. இவ்வெல்லாம் தத்வமுக்தாவலி யென்னும் நூலிலறியலாம். இவ்வர்த்தத்தை இராமாநுஜாசாரியர் வேதாந்த சங்கிரகமென்னும் நூலில்-நாமரூபசுருதிக்கு வியாக்கியா னஞ் செய்யுமிடத்து நன்ருகக் கூறியிருக்கின்றனர்.

**65.** மேலும், எல்லாப் பிரமாணங்களும் சவிசேஷப் பிரஹ் மத்தை விஷயமாகவுடையனவா யிருத்தலின் நிர்விசேஷவஸ்துவில்

ஒரு பிரமாணமுமில்லை. நிர்விகற்பப் பிரத்தியக்ஷத்திலும் சவிசேஷமான வஸ்துவே காணப்படுகின்றது. அன்றாயின், சவிகற்பஞானத்தில் அவன்றானிவனென முன்னறியப்பட்ட விசேஷணத்தோடு கூடிய ஞானம் பொருந்தமாட்டாது. மேலும், தத்துவமசி முதலிய வாக்கியங்கள் பிரபஞ்சத்திற்குப் பாதகமாகமாட்டா; பிராந்திமூலமாகலின்; பிராந்தியாற் பிரயோகித்த ரஜ்ஜு சர்ப்பவாக்கியம் போல. ஜீவப்பிரஹ்ம ஐக்கியஞானமும் பிரபஞ்சநிவர்த்தகமாகமாட்டாது; ஆண்டுப் பிரமாணமின்மை முன்னரே கூறப்பட்டிருக்கின்றமையின்.

**66.** பிரபஞ்சத்தைச் சத்தியமென்றங்கீகரிக்குமிடத்து "ஒன்றன் ஞானத்தினால் பலவற்றின் ஞானமுண்டாகின்றது (காரணமாகியவொன்றை யறிந்ததினால் காரியமாகிய யாவும் அறியப்பட்டனவாம்)" என்னும் பிரதிஞ்ஞைக்கு விரோதமுண்டாகின்றதென்றாசங்கிக்கின், அதுவும் உசிதமன்று. பிரகிருதி, புருஷன், மகத், அகங்காரம், தன்மாத்திரைகள், பூதங்கள், இந்திரியங்களென்னு மிவற்றோடு கூடிய பதினான்கு புவனமாகிய பிரஹ்மாண்டம், அதன்கணுள்ள தேவ, மனுஷ்ய, திரியக்,ஸ்தாவர முதலிய சர்வப்பிரகாரமாயுள்ள காரியமியாவும் பிரஹ்மமேயென்று காரணபூதமான பிரஹ்மாத்ம ஞானத்தினாலேயே சர்வ விஞ்ஞானம் (பலவற்றின்ஞானம்) உண்டாகின்றது; ஆகையால், ஏகவிஞ்ஞான (ஒன்றன் ஞான)த்தினாலேயே சர்வவிஞ்ஞானம் பொருந்துகின்றது. மேலும், பிரஹ்மபின்னமெல்லாம் மித்தையென்று கூறுமிடத்து எல்லாமசத்தாகின்றமையின் ஏகவிஞ்ஞானத்தினால் சர்வவிஞ்ஞானம் பாதிக்கப்படுகின்றது.

**67.** நாமரூப விபாகத்திற்குத் தகுதியற்ற சூக்ஷ்மதசையோடு கூடிய பிரகிருதி புருஷர்களைச் சரீரமாகவுடையதாயும், காரணாவஸ்தையை யடைந்ததாயுமுள்ள பிரஹ்மத்தை ஜகத்தானது அடைவதே பிரளயம். நாமரூப விபாகத்தினாற் பிரிக்கப்பட்ட ஸ்தூலமான சித்அசித்வஸ்துக்களைச் சரீரமாகவுடைய பிரஹ்மமானது காரியாவஸ்தையையுடையது. அந்தப் பிரஹ்மத்திற்கு அப்படிப்பட்ட ஸ்தூலபாவம் சிருஷ்டி என்று கூறப்படுகின்றது. இங்ஙனமிருந்தாற்றான் காரியகாரணங்கட்கு ஆரம்பணாதிகரணத்திற் (பிரஹ்ம சூத்திரம், இரண்டாவது அத்தியாயம், முத

ாவது பாதத்திற்) கூறிய அநந்நியத்துவம் நன்ருகப் பொருந்தும். நிர்க்குணவாதங்களும் (பிரஹ்மம் நிர்க்குண மென்பதும்) ரகிருதியினு லேற்பட்ட ஹேய (தள்ளத்தகுந்த) குணங்களை ஷேதிப்பதாக வியவஸ்தித (தீர்மான)மா யிருக்கின்றன. நாநாத்வ (பேத) நிஷேதவாதங்களும் பிரஹ்மமொன்றற்கே சேதன சதனமான யாவும் சரீரமா யிருத்தலின் சர்வத்திற்கும் அது ந்மாவா யிருக்கின்றது; ஆகையால், சர்வத்திற்கும் ஆத்மாவான ரஹ்மத்தினும் வேருனவஸ்து வின்றென்று நிஷேதிக்கின்றன.

**68.** ஈண்டுத் தத்துவம் பேதமா? அபேதமா? பேதாபேத கிய யாவுமா? அவற்றுள் பிரஹ்மமோ சர்வத்தையும் சரீரமாக டைத்தா யிருக்கின்றமையின் சர்வப்பிரகாரமா யிருக்கின்ற தன்று அபேதம் அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றது. ஒரே பிரஹ்ம் பலவித சிதசித்வடிவமா யிருப்பதால் பேதாபேதங்கள் அங்கீரிக்கப்பட்டிருக்கின்றன. சித், அசித், ஈசுவரன் என்னு மிவற்றிற்குச் சொரூபமும், சுபாவமும் வெவ்வேருயிருப்பதாலும், ஒன்றற்கான்று சாங்கரியம் (கலப்பு) இன்மையாலும் பேதம் அங்கீகரிக்ப்பட்டிருக்கின்றது.

அவற்றுள், சித்ரூபர்களாகவும் அசங்குசிதமா (குறுகுதலற்ற)யும் அபரிச்சின்னமாயும் நிர்மலமாயுமுள்ள ஞானத்தைச் சாரூபமாகவுடையவர்களாகவும்,அநாதி கர்மவடிவஅவித்தையால் ழப்பட்டவர்களாகவுமுள்ளஜீவாத்மாக்கட்குஅந்தந்தக்கன்மங்கட்னுகுணமான ஞானத்தின் சங்கோச விகாசங்களுண்டாகின்றன. யாக்கியபூதமான (அனுபவித்தற்குத் தகுதியான) சித்திற்கோ்பலனை யநுபவிக்கின்றதும்,கர்மாநுகுணமாகச் சுகதுக்கங்களின் நுபவம் உண்டானபிறகு பகவத்பிரபத்தி அல்லது பரலோகப் ராப்தியுண்டாகின்றதும் சுபாவங்களாம். அநுபவித்தற்குத் தகுதின அசித்வஸ்துவிற்கோ அசேதனத்துவம், அபுருஷார்த்தத்வம், விகாராஸ்பதத்துவம் முதலியன சுபாவங்களாம். பரமசுவரனுக்கோ, போக்திரு போக்கியங்களில் அந்தர்யாமிபமாயிருக்குந்தன்மையும், அளவிடப்படாத ஞானம் ஐசுவரியம் ரியம் சக்தி தேசசு முதலிய கணக்கற்ற கலியாண குணகணத்துன் கூடியிருக்குந்தன்மையும், தனது சங்கற்பத்தாற் பிரவிர்த்த தன்னினும் வேருன சித் அசித்துக்க ளெல்லாவற்றையும்

உடைத்தாயிருக்குந்தன்மையும், தனக்கபிமதமாயும் தனக்கனுகுண மாயும் ஏகரூபமாயும் திவ்யரூபமாயும் நிரதிசயமாயும் அனேக விதமாயுமுள்ள பல ஆபரணங்களை யுடைத்தாயிருக்குந் தன்மையும் சுபாவங்களாம்.

**69.** "தத்துவம் (பதார்த்தம்) திரவியம், அத்திரவியமென் றிருவகைத்து. திரவியமும் ஜடம் அஜடமென் றிருவகைத்து. ஜடமும் அவ்யக்தம், காலமென்றிருவகைத்து. அஜடமும்-பிரத்யக் (உள்) பராக்கென் றிருவகைத்து. அவற்றுள், பிரத்தியக் ஜீவன் ஈசுவரனென் றிருவகைத்து. பராக் நித்தியபூதி நித்தியமதி யென் றிருவகைத்து. சிலர் நித்தியபூதியை ஜடமென்றனர். அவற்றுள், திரவியம் அனேக அவஸ்தைகளுடன் கூடியது. அவ்யக்தமான பிருகிருதியோ சத்துவ,ரஜஸ்,தமோகுணங்களுடன் கூடியது காலமோ வருஷ முதலியவற்றை ஆகார (வடிவ)மாக வுடையது ஜீவனோ ஞானத்தோடு கூடியவன்; அணுபரிமாணன். ஈசனோ ஜீவனிலும் வேறான ஆத்மா. நித்தியவிபூதியோ முக்குணசகிதபிரகிருதியினும் மேன்மையான சத்துவகுணத்தோடு கூடியதென்று சொல்லப்படுகின்றது. ஞாதாவுக்கு ஞேயத்தின்பிரகாசம் மதி. சங்கிரகமாய்த் திரவியத்திற்கு லக்ஷணங்கூறப்பட்டது" என்றற் றொடக்கத்து வாக்கியங்களால் வேங்கடநாத வித்துவானால் (வேதாந்த தேசிகரால்) பதார்த்தத்தின்பாகுபாடு நிச்சயம்பண்ணப்பட் டிருக்கின்றது.

அவற்றுள், சித்சப்தத்தினாற் கூறப்பட்ட ஜீவாத்மாக்கள் பரமாத்மாவினும் வேறுபட்டவர்களாயும் நித்தியர்களாயு மிருக்கின்றனர். *"இரண்டுபக்ஷிகள் சேர்ந்து சினேகமா யிருக்கின்றன" என்றற் றொடக்கத்துச் சுருதிகளிதற்குப் பிரமாணமாம். ஆகையினாற்றான், "ஆத்மாக்கள் வேறுபாட்டுடன் கூடியிருக்கின்றபடியால் அனேகமாகவிருக்கின்றனர்" என்று (iii-2-20) கணாத சூத்திரத்திற் கூறப்பட்டிருக்கின்றது.

**70.** "ஆத்மா பிறப்பற்றது, நாசமற்றது, ஒருவகைத்தாயிருப்பது, பழைமையானது; ஆதலால் தேகம் கொல்லப்பட்டாலும் அஃதொருபோதும் கொல்லப்படுவதன்று; பிறப்பதுமன்று, இறப்பது

* ரிக்வேதம்-i-164-20.

மன்று. உற்பத்தியுடையதாய் மீண்டுமிருப்பதுமன்று" என்னும் (ii-20)கீதாவாக்கியத்தினால் ஜீவனுக்கு நித்தியத்துவம் பிரசித்தமா யிருக்கின்றது. இல்லாவிடின் (ஜீவன் நித்தியனாகாவிடின்),செய்தகர் மங்களின் நாசம், செய்யாத கர்மங்களின் வரவு என்னுந் தோஷம் சம்பவிக்கும். "வைராக்கியத்தை யடைந்தவர்கட்கு ஜன்மம் காணப் படவில்லை" என்று (கௌதம சூத்திரம் iii-25ல்) கூறப்பட்டிருக் கின்றது.

**71.** ஜீவனுக்கு அணு பரிமாணமும் "(கோவினது) வாலின் நுனிமயிரின் நூற்றிலொருபாகத்தின் நூற்றிலொருபாகம் ஜீவபரி மாணமாம்; ஆயினும் அவன் வியாபகனாவதற்குஞ் சமர்த்தன்" என் னும் சுருதியாற் பிரசித்தமாம்.

"ஆத்மா தாற்றுக்கோலின் முனைக்கொத்தது; அஃதணு வென்று புத்தியா லறியத்தக்கது" என்னும் சுருதியும் பிரமாண மாம்.

**72.** அசித் சப்தத்தாற் கூறப்பட்ட திரிகியமான ஜடவடிவ ஜகத்தானது போக்கியம் (விஷயம்), போகோபகரணம் (இந்திரி யம்), போகாயதனம் (சரீரம்) என மூவகைத்து. இவ்வுலகத்திற்குக் கர்த்தாவாயும் உபாதானகாரணமாயுமுள்ள ஈசுவரபதார்த்தம் புருஷோத்தம வாசுதேவாதி பதங்களா லறியத்தக்கது.

"வாசுதேவன் பரப்பிரஹ்மம்; கலியாணகுண சகிதன்; புவ னங்கட் குபாதானகாரணன்; கர்த்தா; ஜீவநியாமகன்" என்று கூறப்பட்டிருக்கின்றது.

**73.** பரமகாருணியனாயும், பக்தவச்சலனாயும், பரமபுருஷ னுமாயுமுள்ள இவ்வாசுதேவனே உபாசகர்களுக் கேற்றவாறு பலத் தைக்கொடுக்கும் பொருட்டு லீலையினால் அர்ச்சை, விபவம், வியூ கம், சூட்சுமம், அந்தர்யாமி யென்னும் பேதத்தால் ஐவகைவடி வினனாக விருக்கின்றனன்.

அவற்றுள், (1) அர்ச்சை பிரதிமாதி (விக்கிரகங்)கள்; (2) விப வம் இராமாதி அவதாரம்; (3) வியூகமோ வாசுதேவன், சங்கர் ஷணன், பிரத்யுமனன், அநிருத்தன் என நால்வகைத்தாம்; (4) சூட்சுமம் சம்பூர்ணமான சட்குணத்தோடு கூடிய வாசுதேவ

னென்னுந் திருநாமமுள்ள பரப்பிரஹ்மம். குணங்களோ அப கதபாபமத்வாதிகள் *(பாவ அத்தியந்தாபாவ குணங்கள்).

அவர் பாவமற்றவர் என்பதற்கு "ஜரையற்றவர், மரணமற் றவர், சோகமற்றவர், பசியற்றவர், சத்தியகாமர், சத்தியசங்கற் பர்" என்னுஞ் சுருதி பிரமாணமாம்.

(5.) அந்தர்யாமியோ சகல ஜீவர்களையும் நியமனஞ்செய்கின் றவன். இதற்கு "எவன் ஆத்மாவிலிருந்து ஆத்மாவை ஏவுதல் செய் கின்றனோ" என்னுஞ் சுருதி பிரமாணமாம்.

**74.** அவற்றுள், பூர்வபூர்வ மூர்த்தி யுபாசனையினால் புரு ஷார்த்தத்திற்குத் தடையான பாவநிவிர்த்தி யுண்டாகின்றது; அங் ஙன முண்டாகும்போது உத்தரோத்தரமான மூர்த்தி யுபாசனையில் (புருஷன்) அதிகாரியாகின்றான்.

"வாசுதேவபரமாத்மா தனது பக்தர்களிடத்துப் பிரீதியினால் அவ்வவ்வதிகாரிக் கேற்றவாறு அவரவர் விரும்பிய பலனைக் கொடுக்கின்றனன். அதற்காக லீலையினால் தான் ஐந்துமூர்த்திக ளாகின்றனன். பிரதிமாதிகளோ அர்ச்சை; அவதாரங்கள் விப வம்; சங்கர்ஷணன், வாசுதேவன், பிரத்தியுமனன், அநிருத்த னென்னு மிவர்கள் நால்வகைத்தாய வியூகமென் றறிதல்வேண் டும்; சூட்சுமம் சம்பூர்ணமான சட் (ஆறு) குணத்தோடு கூடி யது; வாசுதேவனென்னுந் திருநாமமுள்ள அந்தச் சூட்சுமமே பரப்பிரஹ்மமென்று கூறப்படுகின்றது; அந்தர்யாமி ஜீவனிடத் திருந்து ஜீவபிரேரகனென்று சொல்லப்படுகின்றான். 'யஃ ஆத்மநி' என்றற் றொடக்கத்து வேதாந்த வாக்கியங்களால் நிரூபிக்கப்பட் டிருக்கின்றான். அர்ச்சோபாசனையினால் பாவநிவிர்த்தியுண்டாகின் றது. அப்போது விபவ வுபாசனையில் அதிகாரியாகின்றான். பின் னர் வியூக வுபாசனையில் அதிகாரியாகின்றான், அதன் பின்னர்ச் சூட்சும வுபாசனையிற் சமர்த்தனாகின்றான், அப்பால் அந்தர்யாமி யைத் தரிசிக்கச் சமர்த்தனாகின்றான்" என்று கூறப்பட்டிருக் கின்றது.

அவருடைய வுபாசனை அபிகமனம், உபாதானம், இஜ்ஜியை, சுவாத்தியாயம், யோகம் என ஐவகைத்து என்று ஸ்ரீபாஞ்சராத்

* தீமையற்ற குணங்கள்; அஃதாவது கலியாண குணங்கள்.

திரத்திற் கூறப்பட்டிருக்கின்றது. அவற்றுள், அபிகமனமாவது தேவஸ்தான மார்க்கத்தைத் திருவலகிடல், மெழுகல் முதலியவை; உபாதானமாவது கந்தபுஷ்ப முதலிய பூஜாசாதனங்களைச் சம்பாதித்தல்; இஜ்ஜியாயாவது தேவதா பூஜை; சுவாத்தியாயமாவது அர்த்தஞான பூர்வகமான மந்திரஜபம், வைஷ்ணவ சூக்தஸ்தோத்திர பாடம், நாமசங்கீர்த்தனம், தத்துவப்பிரதிபாதக சாஸ்திராப்பியாசமென்னு மிவற்றைச் செய்தல்; யோகமாவது தேவதாத்தியானம்.

இங்ஙனம் உபாசனை கர்மமென்னு மிவற்றுடன் கூடிய ஞானத்தினால் திருஷ்டா (ஞாதா)வின் தரிசன (ஞான)ம் நஷ்டமாகும்போது பகவத்பக்தனை பகவதாநிஷ்டனுக்குப் பக்தவச்சலனை புருஷோத்தமன் தனது தத்துவத்தையறிந்த அறிவுக்கேற்றவாறு நிரவதிகமா (எல்லையற்றதா)யும் அநந்தமா (நாசமற்றதா)யும், புநராவர்த்தி (மீண்டுந் திரும்பிவருதல்) அற்றதாயுமுள்ள தனது பதத்தை யருளுகின்றனன்.

"மகாத்மாக்கள் என்னையடைந்து துக்கத்திற்கிடமாயும் அநித்தியமாயுமுள்ள புநர்ஜன்மத்தை யடைகின்றதில்லை; மேலான சித்தியை யடைந்தமையின்" என்று ஸ்மிருதியிற் கூறப்பட்டிருக்கின்றது.

"வாசுதேவரும் தமது பக்தனுக்கு ஆனந்தமாய், நித்தியமாய், புநராவர்த்தியற்றதாயுள்ள தனது பதத்தைத் தருகின்றனர்" என்றுங் கூறப்பட்டிருக்கின்றது.

**75.** இவ்வெல்லாவற்றையும் மனதில் வைத்துக்கொண்டும், சடகோபநிஷ்டத்தின் மதத்தை மேற்கொண்டும்,பகவத் போதாயனாசாரியராற் செய்யப்பட்ட விஸ்தாரமான பிரஹ்மசூத்திர விருத்தியைப் பார்த்து இராமாநுஜாசாரி சாரீரக மீமாம்சைக்குப் பாஷியஞ் செய்தனர். அந்தச் சாஸ்திரத்தில் "அதாதோ பிரஹ்மஜிஞ்ஞாசா" என்பது முதற்சூத்திரம்.

அந்தச் சூத்திரத்திலுள்ள 'அத' சப்தத்திற்கு முன்னருண்டான கர்மஞானத்திற்குப் பின்னர் என்பது பொருள்.

"கர்மஞானத்திற்குப் பின்னர்ப் பிரஹ்மத்தையறிய விரும்புகின்றான்" என்று விருத்திகாரராற் கூறப்பட்டிருக்கின்றது. ...

'அத:' என்னுஞ் சப்தத்திற்கு ஏதுவென்பது பொருள். அங்கங்களோடு கூடிய வேதங்களை அத்தியயனஞ்செய்தும் அவற்றின் பொருளை விசாரித்துமுள்ள புருஷனுக்கு அநித்திய பலமுள்ள கர்மத்தில் வைராக்கிய முண்டாகின்றது. அதனல் நித்தியமோட்சத்தில் விருப்பமுண்டாகின்றது. அவ்விருப்பமுள்ள புருஷனுக்கு அதற்குபாயமான பிரஹ்ம ஜிஞ்ஞாசை (பிரஹ்மத்தையறியும் விருப்பம்) உண்டாகின்றது.

'பிரஹ்ம' சப்தத்தினல் இயல்பாகவே சமஸ்ததோஷமுமற்றும் அநேக கலியாணகுண சகிதமாயும் உள்ள புருஷோத்தமன் கூறப்படுகின்றான். கர்மஞானமும் கர்மாநுஷ்டானமும் வைராக்கியத்தை யுண்டுபண்ணும் வாயிலாகவும், சித்தத்திலுள்ள காமக்குரோதாதிகளை நிவிர்த்திபண்ணும் வாயிலாகவும் பிரஹ்மஞானத்தைக் குறித்துச் சாதனமாகவிருக்கின்றன. ஆகையினல், கர்மஞானத்திற்கும் பிரஹ்மஞானத்திற்கும் காரணகாரியபாவம் ஏற்படுகின்றது. ஆகையால், பூர்வோத்தர மீமாம்சைகட்கு ஏகசாஸ்திரத்துவம் ஏற்படுகின்றது. ஆகையினுற்றான் விருத்திகாரர் பதினறு பாகுபாடுடைய ஜைமினிசாஸ்திரத்துடன் இச்சாஸ்திரத்தையும் ஒரே சாஸ்திரமென்று கூறுகின்றனர்.

கர்மபலம் அநித்தியமென்பதும் பிரஹ்மஞானபலம் நித்தியமென்பதும் "கர்மத்தினல் சம்பாதிக்கப்பட்ட லோகம் அநித்தியமென்று நிச்சயம்பண்ணிப் பிராமணன் வைராக்கியத்தை யடைகின்றான். அகிர்த (நித்திய)மான மோட்சம் கர்மத்தினலுண்டாக மாட்டாது" என்றற் றொடக்கத்துஅநுமானம், அருத்தாபத்தியென்னு மிவற்றுடன் கூடிய இந்தச் சுருதிகளால் கூறப்பட்டிருக்கின்றன. "அவித்தையை யிச்சிக்கின்றவர்கள் இருட்டையடைகின்றார்கள்; வித்தையைமாத்திர மிச்சிக்கின்றவர்களோ அந்த தமசை (இருள்வடிவநரகை) யடைகின்றார்கள்; கர்மஞானமென்னு மிரண்டையு மறிகின்றவன் மரணத்தையும் அவித்தையையுங் கடந்து ஞானத்தினல் மோக்ஷத்தை யடைகின்றான்" என்று சுருதி, கர்மஞானங்களைத் தனித்தனியே நிந்தித்து, கர்மசகித ஞானத்தை மோக்ஷசாதனமென்று காட்டுகின்றது.

"கருணைக்கடலாயும், பக்தவச்சலனுயுமுள்ள அந்தப் பகவானே உபாசகர்களைக் குறித்து அர்ச்சை, விபவம், வியூகம், சூட்

சுமம், அந்தர்யாமி என்னும் அபிதானமுள்ள ஐந்துருவங்களை யடைகின்றான்; ஜீவர்கள் அவற்றை யாசிரயித்துப் படிப்படியாக ஞானத்தை யடைகின்றனர். முன்முன் கூறிய உபாசனையின் விசேஷத்தால் பாவத்தினின்றும் நீங்கிப் பின்பின் கூறிய மூர்த்தி உபாசனையில் அதிகாரத்தையடைகின்றனர். இங்ஙனம் நாடோறும் சுருதிஸ்மிருதிகளிற் கூறிய தர்மங்களை யநுஷ்டித்து மேற்கூறிய வுபாசனையைச் செய்கின்ற புருஷர்கட்கு வாசுதேவர் அருள்செய்கின்றார். நிதித்தியாசனவடிவபக்தியின்பொருட்டுஅருள் புரிகின்ற பகவான் கர்மக்கூட்டங்களாகிய அவித்தையை உடனே ஒழிக்கின்றார். பிறகு சம்ஸாரநிவிர்த்தியடைந்த புருஷர்களுக்கு இயல்பாயும் மங்களவடிவாயுமுள்ள சர்வஞ்ஞத்துவாதி குணங்கள் ஆவிர்ப்பாவத்தை (வெளிப்படுதலை) யடைகின்றன. இக்குணங்கள் முக்தர்களுக்கும் ஈசுவரனுக்கும் ஒத்தன (சமமாகவிருக்கின்றன) வாம். முத்தர்களைப் பார்க்கிலும் ஈசுவரனிடத்துச் சர்வகர்த்திருத்துவம் ஒன்றே விசேடமாயிருக்கின்றது. முத்தர்களோ சேஷி (அங்கி)யான பிரஹ்மத்தினிடத்துச் சேஷ (அங்க)மா யிருக்கின்றனர்; அந்தப் பிரஹ்மத்தோடு கூடவே சகலகாமங்களையுமநுபவிக்கின்றனர்'' எனப் பாஞ்சராத்திரரகசியத்திற் கூறப்பட்டிருக்கின்றது.

**76.** ஆதலால், தாபத்திரயத்தினாற் கிலேசத்தையடைந்தவர்கள் மோக்ஷமடையும்பொருட்டுப் புருஷோத்தமாதிபதங்களாலறியத்தகுந்த பிரஹ்மம் விசாரிக்கத்தக்கதெனக் கூறியதாகவாயிற்று.

பிரகிருதி (பகுதி),பிரத்தியயம் (விகுதி) என்னுமிவை சேர்ந்தே அர்த்தத்தைத் தெரிவிக்கின்றன. ஆயினும், பிரத்தியய அர்த்தம் பிரதானமாகச் சொல்லப்படுகின்றதென்னும் வசனபலத்தினால் இச்சையானது சொல்லப்போவதைப் பிரதானமாகவுடைத்தாயிருக்கின்றமையின் சொல்லப்போகின்ற ஞானம் ஈண்டு விதேயம் (விதிக்கத்தகுந்தது). அதுவும் தியான உபாசனாதி பதங்களாற் சொல்லத்தக்கதாம். வாக்கியத்தா லுண்டான சாமாநிய ஞானம் விதேயமன்று; பதசந்தர்ப்பத்தைக்கேட்ட வியுற்பன்ன (சொற்பொருளுணர்ச்சி யுடையவ)னுக்கு விதியன்றியும் அறியப்பட்டிருத்தலின், "ஆத்மா பார்க்கத்தக்கது, கேட்கத்தக்கது, மனனம்பண்ணத்தக்கது, நிதித்தியாசனம் செய்யத்தக்கது; ஆத்மாவென்றே

யுபாசிக்கத்தக்கதென்றறிந்து மேலான ஞானத்தை யடையவேண்டும். ஞானத்திலும் மேம்பட்டது யாதோ அதனை யறியவேண்டும்'' என்றற் றொடக்கத்துச் சுருதிக ளிருக்கின்றமையின்.

ஈண்டுக் 'கேட்கத்தக்கது' என்பது அநுவாதம். அத்தியயனவிதியினால் அங்கத்தோடு கூடிய சுவாத்தியாயத்தைக் கிரஹிக்கும்போது வேதத்தை அத்தியயனஞ்செய்த புருஷனுக்குப் பிரயோசனத்தோடு கூடிய அர்த்தஞான முண்டாயிருப்பதால் அதனை நிர்ணயஞ் செய்தற்பொருட்டு அவன் றானாகவே சிரவணத்திற் பிரவேசிக்கின்றான். ஆகையால் சிரவணம் பிராப்தமாயிருக்கின்றது. 'மனனம் பண்ணத்தக்கது' என்பதும் அநுவாதமாம். சிரவணத்தைச் சாதித்தற்பொருட்டு மனனமும் பிராப்தமாய்விட்டது (அடையப்பட்டதாயிற்று); அப்பிராப்பியத் (அறியப்படாத அர்த்தத்)தில் சாஸ்திரம் பயனோடு கூடியதென்னும் நியாயமிருக்கின்றமையின். தியானமும் தைலதாரை போன்று அவிச்சின்னமான (இடைவிடாததான) ஸ்மிருதிசந்தான (தொடர்ந்த) வடிவம்; அல்லது ஸ்மரணம். இந்த ஸ்மரணம் எஞ்ஞான்றுமிருக்குமிடத்துச் சர்வக்கிரந்தி (காமாதி)கட்கும் மோட்ச (நாச) முண்டாகின்றன. ஆகையால், ஸ்திரமான ஸ்மரணமே மோட்சசாதனமெனக் கூறியிருக்கின்றமையின் அந்த ஸ்மரணமும் சாட்சாத்காரத்திற்குச் சமானாகாரமா (ஒத்தவடிவா)யிருக்கின்றது.

"அந்தப் பிரஹ்மம் பார்க்கப்பட்டிருக்கும்போது அந்த ஞானியின் கர்மம் நாசமடைகின்றது; இருதயக்கிரந்தி பேதத்தையடைகின்றது; சர்வசம்சயமும் ஒழிகின்றன" என்று சுருதியிருப்பதால் ஏகத்துவம் அறியப்படுகின்றது. 'ஆத்மா பார்க்கத்தக்கது' என்பதனால் இவ்வுபாசனைக்குத் தரிசன ரூபத்துவம் விதிக்கப்பட்டிருக்கின்றது. ஸ்மிருதியானது பாவனை அதிகப்படுவதால் பிரத்தியக்ஷ வடிவமாகின்றது. இவ்வெல்லாவற்றையும் "வேதனம் உபாசனம்" என்றற்றொடக்கத்து வாக்கியங்களால் வாக்கியகாரர் நிரூபித்திருக்கின்றனர். இந்தத் தியானத்தையே அடியில்வரும் சுருதியானது விசேஷமாய்க் கூறுகின்றது:—"இந்த ஆத்மா அத்தியயனத்தினாலும், மேதை (புத்தி)யினாலும், விசேஷமான சாஸ்திராப்பியாசத்தினாலும் அடையத்தக்கதன்று. எந்தச் சாதகன் எந்த ஆத்மாவைப் பிரார்த்திக்கின்றானோ அவனால் பிரார்த்திக்கப்பட்ட ஆத்மா அடையப்படுகின்றது; அந்தச் சாதகனுக்குத் தனது சொரூபத்தை

அறியச்செய்கின்றது. மிகுந்த பிரியமுள்ளவனே பிரார்த்திக்கத் தக்கவனுவன். எங்ஙனம் ஆத்மா தனக்குத்தானே பிரியமுள்ளதா யிருக்கின்றதோ அங்ஙனமே ஈசுவரனும் தனக்குத்தானே பிரிய முள்ளவனு யிருக்கின்றான்."

"பிரீதியுடன் பஜித்தெப்போதும் யோகாப்பியாசஞ் செய்கின்றவர்கட்கு ஞானயோகத்தைக் கொடுக்கின்றேன். எந்த ஞானயோகத்தினுல் என்னை அவர்கள் அடைவார்களோ" என்றும், "ஓ அர்ச்சுனு! அநந்யமான பக்தியால் அந்தப் பரமபுருஷன் அடையத்தக்கவன்" என்றும் பகவானுல் கூறப்பட்டிருக்கின்றன.

**77.** பக்திபோ நிரதிசய ஆனந்தத்தைவிட வேறு பயனைக் கருதாத ஞானவிசேஷம்; அஃது இச்சாரகிதமானது; அதன் சித்தியும் விவேகமுதலியவற்று லுண்டாகின்றது" என்று வாக்கிய காரராற் கூறப்பட்டிருக்கின்றது.

அதன் பிராப்தியும் விவேகம், விமோகம், அப்பியாசம், கிரியை, கலியாணம், அநவசாதம், அநுத்தர்ஷம் என்னுமிவற்று லுண்டாகின்றது; அங்ஙனமே நிர்வசனம் செய்யப்பட்டிருக்கின்றது.

அவற்றுள், சுத்த அன்னத்தினுல் சத்துவ (சித்த) சுத்தியுண்டாகின்றது. அதனுல் திடமான ஸ்மிருதியுண்டாகின்றது. இது விவேகமெனப்படும்.

காமாதிகளில் விருப்பமின்றிச் சாந்தனுயிருந்து உபாசித்தல் விமோகமெனப்படும்.

அடிக்கடி யதனைப் பரிசிலனஞ்செய்வது அப்பியாசமெனப்படும்.

"எப்போதும் அந்தப் பாவனையைப் பாவித்துக்கொண்டிருக்கின்றேன்" என்று பாஷியகாரர் (இராமாநுஜர்) ஸ்மிருதியினின்றெடுத் துதாகரித்திருக்கின்றுர். தனதாற்றலுக் கேற்றவாறு ஸ்ரௌத ஸ்மார்த்த (சுருதிஸ்மிருதிகளிற் கூறிய) கர்மங்களின் அநுஷ்டானம் கிரியையெனப்படும்.

"இந்தக் கிரியையோடு கூடினவன் பிரஹ்மவித்துக்களில் வரிஷ்டனுவன்" என்று கூறப்பட்டிருக்கின்றது.

சத்தியம், ஒழுக்கம், தயை, தான முதலியவை கலியாண மெனப்படும்.

"சத்தியத்ாலடையக் கூடியது" என்று கூறப்பட்டிருக்கின்றது.

தீனத்தன்மையினின்றும் நீங்குதல் அநவசாதமெனப்படும்.

"இந்த ஆத்மா பலஹீனனாலடையத்தக்கதன்று" என்று கூறப்பட்டிருக்கின்றது.

அந்த அநவசாதத்தின் விபர்யயத்தால் (மாறுதலால்) உண்டாகும் சந்தோஷம் அநுத்தர்ஷம்.

"சாந்தனும் தாந்தனும் இரு" என்று கூறப்பட்டிருக்கின்றது.

**78.** இப்படிப்பட்ட நியம விசேஷத்தினால் அடையப்பட்ட புருஷோத்தமனது பிரசாதத்தினால் அந்தக்கரணத்திலுள்ள அஞ்ஞானம் நிவிர்த்தியாக வேறு பிரயோஜனத்தைக் கருதாது எப்பொழுதும்நிரதிசயப்பிரியமாயுள்ள ஆத்மாவின்ஞானவடிவமாகிய தியானமென்னும் பக்தியினால் (புருஷன்) புருஷோத்தமபதத்தை யடைகின்றானென்பது சித்தாந்தம்.

"உபயபரிகர்மித அந்தக்கரணமுடையவனால் ஐக்கியாந்திக (ஏகாந்த) பக்தியோகத்தினாலடையத்தக்கவர்" என்று யமுனாசிரியராற் கூறப்பட்டிருக்கின்றது. உபயபரிகர்மித அந்தக்கரணமுடையவனென்பதற்கு ஞானகர்மயோகங்களால் சுத்தமான அந்தக்கரணமுடையவனென்பது பொருள்.

**79.** விசாரிக்கவேண்டிய பிரஹ்மம் யாதெனின் (அதற்கு) "ஜன்மாதியஸ்யயத:" என்னும் பிரஹ்மசூத்திரத்தினால் லக்ஷணம் கூறப்பட்டிருக்கின்றது. 'ஜன்மாதி' என்பதற்குச் சிருஷ்டி, ஸ்திதி, பிரளயம் என்பது பொருள். *தத்குணசம்விஞ்ஞான வெகுவிரீகியால் இப்பொருள் பெறப்பட்டது. (எச்சமுதாயத்திற்கு ஜன்மமானது ஆதியோ அது ஜன்மாதி என்பது தத்குண சம்விஞ்ஞான வெகு

* தத்குண சம்விஞ்ஞான வெகுவிரீகியைத் தொல்காப்பியனார் "தத் தம் பொருள்வயின் தம்மொடு சிவணல்" என்பர். அதன் பொருள் தத்தம் பொருளி னீங்காது தம்பொருளின் வேறல்லாத பொருளோடு புணர்தல் என்பது.

விரிகியாற் பெறப்பட்ட அர்த்தமாம். வெகுவிரீகி-அன்மொழித் தொகை). 'அஸ்ய' என்பதற்குச் சிந்திக்கக்கூடாததாயும் அனேக விதமாயுள்ள செய்கையாற் செய்யப்பட்டும், நியதமான தேசகால போகமென்னு மிவற்றுடன் கூடிய பிரஹ்மாதி ஸ்தம்பரியந்தமான ஜீவராசியோடு கூடியுமுள்ள ஜகத்தின் என்பது பொருள். 'யதஃ' என்பதற்குச் சர்வேசுவரனையும் நிகிலஹேய பிரத்நீகசொரூபனையு (தள்ளத்தகுந்தகுணங்கட்குமாறுப குணமுடையவனையு)ம் சத்தியசங்கற்பமாதிக் கணக்கற்ற கலியாணகுணமுடையவனையும் சர்வஞ்ஞனையும் சர்வசக்தியுள்ளவனையு முள்ள புருஷனென்பது பொருள். மேற்கூறிய புருஷனிலிருந்து சிருஷ்டி, திதி, பிரளயங்களுண்டாகின்றனவென்பது சூத்திரார்த்தம்.

இப்படிப்பட்ட பிரஹ்மவிஷயத்திற் பிரமாணம் யாதென்று விசாரிக்குமிடத்து அதற்குச்சாஸ்திரமே பிரமாணமென்பது "சாஸ்திரயோநித்துவாத்" என்னும் பிரஹ்ம சூத்திரத்தினாற் பெறப்பட்டது. எந்தப் பிரஹ்மத்திற்கு யோநி (பிரமாணம்) சாஸ்திரமோ அது சாஸ்திரயோநியாம். பிரஹ்மஞானத்திற்குக் காரணமான ஆத்மஞானத்திற்குச் சாஸ்திரம் காரணமாயிருப்பதால் பிரஹ்மத்திற்குச் சாஸ்திரயோநித்துவம் என்பது பொருள். பிரஹ்மம் வேறு பிரமாணத்தாலறியத்தகுந்ததென ஆசங்கித்தல் கூடாது; பிரஹ்மம் அதீந்திரியமாகையா லதிற் பிரத்தியக்ஷம் பிரவிர்த்திக்காமையின். சமுத்திர முதலியன கர்த்தாவையுடையன, காரியத்தன்மையால், கடம்போலும் என்னும் அநுமானமும் பிரமாணமன்று; அழுகற்பூசணிப்பழத்திற் கொத்திருத்தலின். "எதினின்றும் இப்பூதங்களுண்டாகின்றவோ" என்றற்றொடக்கத்து வாக்கியங்களால் முற்கூறிய லக்ஷணமுடைய பிரஹ்மம் உண்டென்பது பெறப்படும்.

**80.** பிரஹ்மம் (சுருதியொழிந்த) பிரமாணாந்தரத்திற்கு விஷயமாகமாட்டாது. ஆயினும், பிரவிர்த்தி நிவிர்த்திபற்று இயல்பாகவே பெறப்பட்டுள்ள பிரஹ்மத்தைச் சாஸ்திரம் பிரதிபாதிக்கமாட்டாதென்னும் ஆசங்கைக்கு விடை "தத்சமன்வயாத்" என்னும் சூத்திரத்தாற் கூறப்பட்டிருக்கின்றது. 'து' என்னும் சப்தம் ஆசங்கையையொழிப்பதென்னும் பொருளது; 'தத' என்பதற்குச் சாஸ்திரப்பிரமாணகத்துவம (உரையளவையாலறியப்படுந்தன்மை)

என்பதுபொருள். அந்தச் சாஸ்திரப்பிரமாணகத்துவமானது பிரஹ்மத்திற்குச் சம்பவிப்பதேயாம். 'சமன்வயாத்' என்பதற்குப் பரம புருஷார்த்தவடிவபரப்பிரஹ்மம் அபிதேயத்தால் (பெயரிட்டு வழங்கப்படுவதால்) சம்பந்தித்துக்கொண்டிருப்பதென்பது பொருள். பிரவிர்த்தி நிவிர்த்தியைப் போதிக்காதுள்ள வாக்கியங்கட்குப் பிரயோஜனமின்றென் றுசங்கித்தல் கூடாது; உனக்கு மகன்பிறந்தான் இது சர்ப்பமன்று என்றற்றொடக்கத்துச் சொரூபத்தைக் கூறும் வாக்கியங்களிலும் சுக பயநிவிர்த்தியாகிய பிரயோசனம் காணப்படுகின்றமையின். ஆகையால் யாதோ ரனுபபத்தி (பொருந்தாமை)யுமின்று.

ஈண்டு (இராமாநுஜமத சித்தாந்தம் பொதுவாக) ஒரு சிறிது மாத்திரங் காட்டப்பட்டது. விஸ்தாரமாய் ஆகரத்தி (பிரஹ்ம சூத்திரத்தின் இராமாநுஜபாஷியத்தி)ற் கண்டுகொள்க. ஆகையால், அது நூல் விரியுமென்னும் பயத்தால் விரிவாகக் கூறப்படவில்லை. இங்ஙனம் எல்லாம் சுத்தம்.

## இராமாநுஜ தரிசனம்

முற்றிற்று.



# ஐந்தாவது
# பூரணப்பிரஞ்ஞ தரிசனம்.

(மத்துவமதம்).

81. ஆநந்ததீர்த்தர் (மத்துவாசாரி) இவ்விராமாநுஜமதத்தில் ஜீவஅணுத்துவம், தாசத்துவம்,வேத அபௌருஷேயத்துவம் (புருஷனாற் செய்யப்படாததன்மை), சித்தார்த்தபோதகத்துவம் (சித்தித்த அர்த்தத்தைப் போதிக்குந்தன்மை), சுவதஃ பிரமாணத்துவம் (தானே பிரமாணமாகுந்தன்மை), பிரமாணத்திரயம், பாஞ்சராத்திர உபஜீவியத்துவம் (பாஞ்சராத்திரத்தை யடுத்துப் பிழைத்தல்) பிரபஞ்சபேத சத்தியத்துவம் என்றற் றொடக்கத்து ஒப்புமை, (மத்துவமதத்தோடு) இருப்பினும் அது பரஸ்பரம் விருத்தமான பேதாதி பக்ஷத்திரயங்களை மேற்கொண்டிருத்தலால் சமணமதத்தோடுகூடியதென்றுபேக்ஷித்துத்தத்துவமசிமுதலியவேதாந்தவாக்கியங்கட்கு வேறுவிதமாய் அர்த்தாந்தரத்தை யுபபாதனம்பண்ணி (கூறி) பிரஹ்மமீமாம்சைக்கு விவரணமென்னும் வியாஜ்ஜியத்தினால் பிரஸ்தாநாந்தரத்தை (வேறு மார்க்கத்தை) மேற்கொண்டவர்.

அவர் மதத்தில், தத்துவம் சுவதந்திரம் அசுவதந்திரமென்றிருவகைத்தாம். "சுவதந்திரம் அசுவதந்திர மென்றிருவகைத் தத்துவம் சொல்லப்படுகின்றது. தோஷரகிதமாய் அனேக சத்துவ குணமுடைய பகவானான விஷ்ணு சுதந்தரமான தத்துவம்" என்று தத்துவவிவேகத்திற் கூறப்பட்டிருக்கின்றது.

82. (ஆ.) வேதாந்திகள் சஜாதீய(தன்னின) விஜாதீய (வேற்றின),சுவகத (அவயவ) பேதசூனியமான பிரஹ்மம் தத்துவமெனக் கூறுகின்றமையின் எங்ஙனம் அஃதனேக சத்துவகுணமுள்ளதென் றுரைத்தல் கூடும்?

(ச.) பேதப்பிரமையை (பேதத்தின் யதார்த்த ஞானத்தை) யுண்டுபண்ணும் வெகு பிரமாணங்களுடன் விரோதம் வருகின்றமையின் அந்த வேதாந்தங்கட்கு அப்படிப்பட்ட பிரஹ்மத்தின்கண் பிராமாணியம் பொருந்தாது. அங்ஙனமன்றே,பிரத்தியக்ஷம் இஃதிதனினும் வேறு என நீல பீதாதிகளின் பேதத்தைக் காட்டுகின்றது.

83. (ஆ.) பிரத்தியக்ஷம் பேதத்தையே கிரகிக்கின்றதா? அல்லது தர்மி (அநுயோகி) பிரதியோகியோடு கூடிய பேதத்தைக் கிரகிக்கின்றதா? முதலாவது பக்ஷம் பொருந்தாது. தர்மி ஞானமும் பிரதியோகிஞானமுமின்றி அவற்றை யபேக்ஷித்துள்ள பேதத்தைக் கிரகித்தல் முடியாது. இரண்டாவது பக்ஷத்தில் தர்மி பிரதியோகி ஞானங்களை முன்னிட்டே பேதத்தைக் கிரகிக்கின்றதா? அல்லது ஏககாலத்தில் யாவற்றையுங் கிரகிக்கின்றதா? முதலாவதுபக்ஷம்பொருந்தாது; புத்திக்கடங்கியவியாபாரமின்மையின், அந்நியோந்நியாசிரயதோஷம் வருகின்றமையின். இரண்டாவது பக்ஷமும் பொருந்தாது; காரியகாரணஞானம் ஏககாலத்திற்சம்பவிக்கமாட்டாமையின், தர்மிஞானம் பேதஞானத்திற்குக் காரணமாகின்றமையின். தர்மி சமீபத்திருப்பினும் வியவகித பிரதியோகி ஞானமின்றிப் பேதம் அறியப்படாமையின அந்வய வியதிரேகங்களால் காரியகாரணபாவம் அறியப்படுகின்றது. ஆதலால் பேதப் பிரத்தியக்ஷம் எளிதா யுண்டாகக்கூடியதன்று.

(ச.) வஸ்து சொரூபபேதவாதியைக் குறித்து இத்தூஷணங்கள் சொல்லப்படுகின்றனவா? அல்லது தர்மிபேத வாதியைக் குறித்தா? முதலாவது பக்ஷத்தில் சோரனியற்றிய குற்றத்தினால் மாண்டவியருக்குச் சிக்ஷையேற்பட்ட நியாயம் சம்பவிக்கும்; ஏனெனின், நீ கூறிய தூஷணங்கட்கெல்லாம் அது (வஸ்து சொரூபபேதம்) விஷயமாகாமையின்.

(ஆ.) வஸ்துவின் சொரூபமே பேதமென்று கூறின் பிரதியோகியின் அபேக்ஷை பொருந்தாது: கடம்போல் பிரதியோகியை யபேக்ஷித்துக்கொண்டே பேதம் எங்கும் பிரசித்தியடைகின்றமையின்.

(ச.) நீ கூறியதடாது; முதலில் எல்லாவஸ்துக்களினும் விலக்ஷணமாக வஸ்து சொரூபம் அறியப்படும்போது பிரதியோகியின் அபேக்ஷயினால் விசிஷ்டவியவகாரம் பொருந்துகின்றமையின். அங்ஙனமன்றே, பிரமாணத்துடன் கூடிய வஸ்துவின் சொரூபம் முதலிலறியப்படுகின்றது. பிறகு பிரதியோகி விசேஷத்தின் அபேக்ஷயினால் இரஸ்வம் (குறுமை) என்றும், தீர்க்கம் (நெடுமை) என்றும் அதுவே விசேஷ வியவகாரத்திற்குக் காரணமாகின்றது.

"விசேஷண விசேஷியத்தன்மையினால் பேதம் சித்திப்ப தில்லை. விசேஷண விசேஷியபாவமும் பேதத்தைஅபேக்ஷித்துக் கொண்டிருக்கின்றன: தர்மிப் பிரதியோகிபி னபேக்ஷயினால் பேதம் சித்திக்கின்றது. தர்மிப் பிரதியோகித்துவங்கள் பேதத்தை அபேக்ஷித்துக்கொண்டிருக்கின்றன. இங்ஙனம் அந்நியோந்நியாசிரயதோஷம் வருகின்றமையின் பேதம் யுக்தமன்று; பேதமானது பதார்த்த சொரூபமாகையால்" என்று விஷ்ணுதத்துவ நிர்ணயத்தில் கூறப்பட்டிருக்கின்றது.

ஆகையினாற்றான் கோ (ஆ)வை விரும்புகின்றவன் கவயத்தை ஆமாவை)ப் பார்க்கிறதினால் பிரவிர்த்திக்கின்றதில்லை; கோ சப்தத்தையும் ஸ்மரிக்கின்றதில்லை. நீரக்ஷீரத்தின் (நீரோடு கூடிய பாலின்) சொரூபங் கிரகிக்கும்போது பேதத்தோற்ற முண்டாகட்டுமே யென்று கூறுதலுங் கூடாது; சமானவியவகார முதலிய பிரதிபந்தக பலத்தினால் பேதத்தோற்றம், (பேத) வியவகாரம் என்னு மிவற்றின் அபாவம் பொருந்துகின்றமையின்.

"மிகு தூரத்தாலும், மிகு சமீபத்தாலும், இந்திரிய தோஷத்தாலும், மனக் கலக்கத்தாலும், சூக்குமமா யிருப்பதாலும், வியவதானத் (விலகியிருப்ப)தாலும், அபிபவத் (அடங்கியிருப்ப)தாலும், சமான வியவகாரத்தாலும் (பிரத்தியட்ச முண்டாவதில்லை)" என்று (சாங்கியகாரிகை v-viiல்) கூறப்பட்டிருக்கின்றது.

(1) மிகுதூரமா யிருப்பதால் பர்வதத்தி னுச்சியிலுள்ள விருக்ஷாதிகளின் ஞானமுண்டாகின்றதில்லை. (2) மிகு சமீபத்திலிருப்பதால் கண்ணிலுள்ள மை முதலியவற்றின் ஞானமுண்டாகின்றதில்லை. (3) இந்திரியதோஷத்தால் மின்னல் முதலியவற்றின் ஞானமுண்டாகின்றதில்லை. (4) மனக்கலக்கத்தால் மோகாதிகளுடன் கூடிய மனமுள்ளவனுக்கு பிரகாசமுள்ளவிடத்திலுள்ள கடாதிகளின் ஞானமுண்டாகின்றதில்லை. (5) சூக்குமமா யிருப்பதால் பரமாணு முதலியவற்றின் ஞானமுண்டாகின்றதில்லை. (6) வியவதானத்தால் சுவர் முதலியவற்றால் மறைபட்ட வஸ்துவின் ஞானமுண்டாகின்றதில்லை. (7) அபிபவத்தால் பகற்போதுள்ள தீபப் பிரகாசாதிகளின் ஞானமுண்டாகின்றதில்லை. (8) சமானவியவகாரத்தால் நீரக்ஷீராதிகளின் (பாலோடு கூடிய நீர் முதலியவற்றின்) ஞானமுண்டாகின்றதில்லை.

தர்மபேதவாத மிருக்குமாயினும் அதிலொரு தோஷமுமில்லை; தர்மிஞானம் பிரதியோகிஞான மிருக்கும்போது தர்மபேதஞானம் சம்பவிக்கின்றமையின்.

(ஆ.) தர்மபேதவாதத்தில் அந்தந்தப் பேதமும் வேறு பேதத்தினால் பேதத்தை யடைவதால் அநவஸ்தாதோஷத்தைப் பரிகரித்தல் முடியாது.

(ச.) இங்ஙனங் கூறுவது அங்கீகரிக்கத்தக்கதன்று; பேதாந்தரம் தோன்றுவதில் மூல (பிரமாண) மின்மையின், பேத பேதிகளால் (பேதத்தை வேறுபடுத்துவதால்) பின்னமாயிருக்கின் றன வென்னும் வியவகாரங் காணப்படாமையின்.

(ஆ.) ஒரு பேதபலத்தினால் அந்தியபேதத்தை யநு மானஞ் செய்கின்றோம்.

(ச.) திருஷ்டாந்த பேதத்திற்கு நாசமின்மையின் தோஷம் சம்பவியாது. அது பிண்ணாக்கு யாசிக்கச்சென்றவ னுக்குக் *காரிகாதைல தாரத்துவம் அங்கீகரிப்பதுபோலாம்.

திருஷ்டாந்தபேதத்திற்கு நாசம் வரும்போது அநுமானமுண் டாவதில்லை. வரனை (மாப்பிள்ளையை) நாசஞ்செய்வதற்காகக் கன் னிகையின் விவாகம் ஏற்படுவதில்லை. ஆகையால், (பேத) மூலத் திற்கு க்ஷயமின்மையின் அநவஸ்தை தோஷமாகமாட்டாது.

அநுமானத்தாலும் பேதம் அறியப்படுகின்றது. பரமேசு வரன் ஜீவபின்னன்; ஜீவனால் சேவிக்கப்படுந்தன்மை யிருத்தலின்; எவன் எவனால் சேவிக்கப்படுந்தன்மை யுடையவனா யிருக்கின் றானோ அவன் அவனிலும் பின்னன்; சேவகனிலும் அரசன் பின் னமா யிருத்தல்போல. எனக்குச் சுகமுண்டாதல் வேண்டும், துக்கம் சிறிதுகூட வுண்டாதல்கூடாது என்று புருஷார்த்தத்தை விரும்பும் புருஷர்கள் ஈசுவர ஸ்தானத்தை விரும்புவதால் சன் மானத்திற்குப் பாத்திரராவரா? ஆகார்; ஆனால் அதற்கு மாறான சர்வானர்த்தங்களையு மடைகின்றவராவர். எவன் தனது ஹீனத்து வத்தை (கீழ்மையை)யும் தலைவனது குணோத்கர்ஷத்தை (மேன் மையை)யும் கூறுகின்றானோ அவனுக்கு ஸ்துதிக்கத்தகுந்தவன்

---

* காரிகா - முகத்தலளவைகளுள் ஒன்று; தைலம் - எண்ணெய்; உதா ரத்துவம் - ஈகை.

அன்புடையவனு யிருந்து அவனது இஷ்டத்தை நிறைவேற்று கிறுன்.

"அரசர்கள் யாம் அரசரென்று கூறுகின்றவரை இம்சிக்கின் றனர்; தமது குணமேன்மையைக் கூறுகின்றவர்கட்குச் சகல இஷ் டத்தையும் பூர்த்திசெய்கின்றனர்" என்று கூறப்பட்டிருக்கின்றது.

இங்ஙனமாயின், பரமேசுவரனது அபேத (ஜீவப்பிரஹ்மங்க ளின் ஐக்கிய) விருப்பத்தினுல் விஷ்ணுவின் குணுேத்கர்ஷம் கானல் நீருக்கொப்பா யிருக்கின்றதென்றுரைப்பது இனிய வாழைப் பழத்தை யடையவேண்டுமென்னும் விருப்பத்தால் நாக்கை யறுத் துக்கொள்வது போலாம். இத்தன்மைய விஷ்ணுவின் துவேஷத்தி னுல் அவர்கட்கு அந்த தமசென்னும் நரகப்பிரவேசம் சம்பவிக் கின்றது.

"தைத்தியர்கள் அநாதி துவேஷிகள். அவர்கள் விஷ்ணுவி னிடத்துத் துவேஷத்தை விர்த்திசெய்கின்றனர். விஷ்ணு அத் தைத்தியர்களை அந்த தமசென்னும் நரகத்திற் றள்ளிவிடுகின்ற னர்" என்று மகாபாரத தாற்பரிய நிர்ணய கிரந்தத்தின் மத்திம மந்திரத்திற் கூறப்பட்டிருக்கின்றது.

**84.** அந்தச் சேவை i. அங்கனம், ii. நாமகரணம், iii. பஜனமென்னும் பேதத்தால் மூவகைத்து. அவற்றுள்,

i. அங்கனமாவது நாராயணரது ஆயுத முதலியவற்றின் குறி. அந்தக் குறியைத் தியானித்தற் பொருட்டும் இஷ்டசித்தி யின் பொருட்டும் தரித்துக்கொள்ளல் வேண்டும்.

"எந்தப் புருஷன் தப்தமான (காய்ச்சிய) சக்கராங்கனத்தைத் தரிக்கின்றுனே அவன் பாவங்களெல்லாம் நிவிர்த்தியாக வைராக்கி யத்தையடைந்துசந்நியாசிகள் எந்தப்பதத்தை யடைகின்றுர்களோ அந்த நித்தியனுன விஷ்ணுவினுடைய பதத்தையடைகின்றுன். தேவர்களும் புயங்களில் தப்தசக்கராங்கனம் செய்துகொண் டதனுற்றுன் உத்தமமானகதியை யடைந்தார்கள்; சக்கராங் கனம் செய்துகொண்டதனுற்றுன் மனுக்களும் உலகசிருஷ்டி செய் கின்றனர்; பிராமணர்களும் அதனைத் தரிக்கின்றனர். சக்கரமாதி அங்கனத்தோடு கூடியவர் விஷ்ணுவின் பரமபதத்தை யடைகின் றனர். பகவானது சின்னங்களால் அங்கனம் (குறி) செய்யப் பட்டு நாம் உலகத்தில் ஐஸ்வரியமுடையவராவோம்" என்று சாகல்லிய சம்மிதாபரிசிஷ்டத்திற் கூறப்பட்டிருக்கின்றது.

"அதப்ததநுவானவன் (சக்கர முதலிய குறிகளாற்றகிக்கப் படாத உடம்புடையவன்) அந்தப் பதத்தையடையான்" என்று தைத்திரியோபநிஷத்து கூறுகின்றது.

"பிராமணன் வலப்புயத்தில் சக்கராங்கனத்தைத் தரித்துக் கொள்ளல் வேண்டும்; இடப்புயத்தில் சங்காங்கனத்தை (சங்குக் குறியை)த் தரித்துக்கொள்ளல் வேண்டுமென்றிங்ஙனம் பிரஹ்ம வித்துக்களறிகின்றனர்" என்றிவ்வாறு ஸ்தான (இட) விசேஷமும் ஆக்கிநேய புராணத்திற் கூறப்பட்டிருக்கின்றது.

(சங்கு) சக்கரக்குறியைத் தரிக்குங்காலத்தில் மந்திரவிசேஷமும் வேறோரிடத்திற் சொல்லப்பட்டிருக்கின்றது.

அது வருமாறு:—

"மிகப் பிரகாசமுள்ள கோடிசூரியனுக்கொத்த பிரபையுடைய வ சுதரிசனமே (சக்கரமே)! அஞ்ஞானத்தினாற் குருடாய வெனக்கு விஷ்ணுவினது நித்தியமான மார்க்கத்தை (நீ) காண்பிப்பாயாக.

"ஏ பாஞ்ச ஜன்னியமே (சங்கே)! நீ பூர்வகாலத்திற் கடலிலிருந்துண்டானாய்; விஷ்ணுவினால் கரத்திற்றரிக்கப்பட்டாய்; எல்லாத் தேவர்களாலும் நமஸ்காரம் பண்ணப்படும் உனக்கு நமஸ்காரஞ் செய்கின்றேன்".

ii **நாமகரணமாவது** எஞ்ஞான்றும் பகவானது நாமஸ்மரணஞ் செய்தற்பொருட்டுக் கேசவாதி நாமங்களைப் புத்திரர் முதலியோருக்கிட்டு வழங்குவது.

iii. பஜனம் பத்துவகையாம். அவை வாககினால் (1) சத்தியமாயும், (2) இதமாயும், (3) பிரியமாயுமுள்ள வார்த்தையைக் கூறலும், (4) சுவாத்தியாயம் (தனக்குரிய வேதாத்தியயனஞ்) செய்தலும்; காயத்தால் (5) தானஞ்செய்தலும், (6) தன்னைக் காத்துக்கொள்ளலும், (7) பிறரை ரக்ஷித்தலும; மனதினால் (8) தயை, (9) அபேக்ஷை, (10) சிரத்தை என்னு மிவற்றையடைதலுமாம். இவற்றுள் ஒவ்வொன்றையுஞ் சம்பாதித்து நாராயணனிடத்துச் சமர்ப்பணஞ்செய்தல் பஜனமாம்.

"அங்கனம், நாமகரணம், பத்துவகையான பஜனம்" என்று கூறப்பட்டிருக்கின்றது.

இங்ஙனம் ஜ்ஞேயத்துவ (ஞானவிஷயத்தன்மை) முதலிய தர்மங்களாலும் (ஈசுவரனுக்கும் பிரபஞ்சத்திற்குமுள்ள) பேதம் அநுமிக்கத்தக்கதாம். அங்ஙனமே, மோக்ஷானந்தத்திற் பேதத்தைக் கூறும் அடியில்வரும் சுருதியினாலும் அஃது அநுமிக்கத்தக்கதாம்.

* * * * *

"இந்த ஞானத்தையடைந்து எனது சாதர்மத்தை (சமான வடிவை) யடைந்தவர்கள் சிருஷ்டிகாலத்திற் பிறப்பதுமில்லை, பிரளயகாலத்தில் நாசமடைவதுமில்லை" என்னும் (கீதை xiv-2) வசனத்தாலும், "*உலகசிருஷ்டிதவிர வேறு ஈசுவரனது சாதிருசியம் (ஒப்புமை) முக்தனுக்குண்டு" என்னும் சாஸ்திரத்தாலும் பேதம் அறியத்தக்கதாம்.

(ஆ.) இது பொருந்தாது; "பிரஹ்மத்தையறிந்தவன் பிரஹ்மமேயாகின்றான்" என்னும் சுருதிபலத்தால் ஜீவனுக்குப் பிரஹ்மபாவம் சம்பவிக்கின்றமையின்.

(ச.) நீ இங்ஙனம் ஆசங்கிப்பது அங்கீகரிக்கத்தக்கதன்று. "சூத்திரனும் பக்தியினாற் பிராமணனைப் பூசித்துப் பிராமணனாகின்றான்" என்று கூறியதுபோல் அச்சுருதிக்கு ஜீவன் விர்த்தியடைகின்றானென்பது பொருள்.

(ஆ.) "பிரபஞ்சம் இருந்ததேயாயின் அதற்குச் சந்தேகமின்றி நிவிர்த்தியுண்டாம். இந்தத் துவைதப் பிரபஞ்சம் மாயாமாத்திரம், அத்வைதம் பரமார்த்தம்" என்னும் வசனத்தால் துவைதம் கற்பிதமென்று விளங்குகின்றது.

(ச.) நீ கூறுவதொக்கும். ஆனால், நீ பாவம் (கருத்து) அறியாது கூறுகின்றனை. அங்ஙனமன்றோ, இவ்வுலகம் உண்டாயிருந்ததேயாயின் அது சம்சயமின்றி நிவிர்த்தியடையும். ஆதலால், இவ்வைவகைத்தாய பேதப்பிரபஞ்சம் அநாதியே. பிரபஞ்சம் இல்லையென்பதில்லை; மாயாமாத்திரமாகையால். (மாயையென்பது பகவானது இச்சை).

---

* முத்தனுக்கு உலகசிருஷ்டியின்றென்று கூறப்பட்டதாயினும் உபலக்ஷணத்தால் இலக்குமிக்கு நாயகனாதலும் ஸ்ரீவத்சத்தை படைத்தாதலு மில்லையென்றுங் கொள்க.

"ஏ ஈசுவரா! உனதிச்சையானது மகாமாயை, அவித்தை, நியதி, மோகினி, பிரகிருதி, வாசனை எனக் கூறப்படுகின்றது. செவ்வையாகச் செய்கின்றமையின் பிரகிருதி யென்றும், எந்தக் காரணத்தினால் வாசனையை யுண்டுபண்ணுகின்றதோ அதனால் வாசனை யென்றும், அ என்பதன் பொருளான ஹரியின் மாயை அவித்தை யென்னும் பெயருடையதென்றும், மேன்மையா யிருக்கின்றமையின் மாயை என்றும் கூறப்படுகின்றன. விஷ்ணுவின் பிரஞ்ஞெப்தி ஒன்றாயிருப்பினும் அது பிரகிருதி என்றற் றொடக்கத்து வசனங்களாற் கூறப்படுகின்றது; ஹரியின் வடிவம் பிரஞ்ஞெப்தி; அந்தப் பிரஞ்ஞெப்தியும் சுவானந்த (தனது ஆனந்த) வடிவம்" என்றற் றொடக்கத்து வசனப்பிரமாண பலத்தினால் மாயையானது பகவானது இச்சையென்று பெறப்படுகின்றது.

**85.** எவரது அந்தப் பிரஞ்ஞையே பிரமாணத்தைக் காப்பாற்றுகின்றதோ அது மாயாமாத்திரம். ஆகையால், பரமேசுவரனால் அறியப்பட்டமையானும் இரக்ஷிக்கப்பட்டமையானும் துவைதமானது பிராந்திகற்பிதமன்று. ஈசுவரனிடத்துப் பிரபஞ்சம் பிராந்திகற்பிதமெனல் சம்பவியாது; பிராந்தி விசேஷ (பேத) தரிசனத்தா லுண்டாகின்றமையின்.

(ஆ.) ஆயின், அந்த வியபதேசம் (துவைதம்) எங்ஙனம் பொருந்தும்?

(சு.) இதற்குத்தரம் "அத்வைதம் பரமார்த்தம்" என்பது. இதனால், எல்லாவற்றினும் உத்தமமான விஷ்ணுதத்துவத்திற்கு ஒப்புயர்வில்லை என்று கூறப்பட்டது.

"ஜீவேசுவர பேதமும், ஜடேசுவர பேதமும், ஜீவர்களின் பரஸ்பரபேதமும், ஜீவஜடபேதமும், ஜடங்களின் பரஸ்பரபேதமும் எனப்பேதபஞ்சகத்தோடு கூடிய பிரபஞ்சம் சத்தியமாயும் அநாதியாயு மிருக்கின்றது; சாதியாயிருப்பின் நாசத்தையடையும்; இது நாசத்தையடைவதில்லை; பிராந்தி கற்பிதமுமன்று; கற்பிதமாயிருப்பின் அதற்கு நிவிர்த்தியுண்டாம்; நிவிர்த்தியோ வுண்டாவதில்லை. ஆகையினால், துவைதமின்றென்பது அஞ்ஞானிகளது மதமாம். ஞானிகளாலங்கீகரிக்கப்படும் இம்மதம் விஷ்ணுவினால் அறியப்பட்டும் இரக்ஷிக்கப்பட்டுமிருக்கின்றது. விஷ்ணுவே உத்தமர்" என்றற் றொடக்கத்துச் சுருதிகள் (இதற்குப்) பிரமாணமாம்.

86. ஆகையால், விஷ்ணுவினது சர்வோத்கர்ஷத்திலேயே சகல வேதங்கட்கும் தாத்பரியமாம். இது கருதியே பகவானல் "உலகத்தில் க்ஷரம், அக்ஷரம் எனப் புருஷர்கள் இருவருண்டு; சர்வபூதங்களும் க்ஷரங்கள், கூடஸ்தன் அக்ஷரம். க்ஷராக்ஷரங்களினும் வேறான எந்த உத்தமபுருஷன் நாசமற்றவனும் சகல நியாமகனுமாய் மூவுலகங்களிலும் பிரவேசித்து இரக்ஷிக்கின்றானே அவனே பரமாத்மாவென்று சொல்லப்படுகின்றான். யான் எதனல் அசேதனத்தைக் கடந்தவனும் சேதனத்தினும் சிரேஷ்டனுயு மிருக்கின்றேனே அதனு லிவ்வுலகத்திலும் வேதத்திலும் புருஷோத்தமனென்று பிரசித்தியடைந்திருக்கின்றேன். எந்த வித்வான் புருஷோத்தமனான என்னை இங்ஙனமறிகின்றானே சர்வத்தையு மறிந்தவனான அவன் ஓ அர்சுன! சர்வ பாவத்தாலும் என்னைப் பஜிக்கின்றான். இவ்வாறு அதிரகசியமான இந்தச் சாஸ்திரம் உனக்குரைக்கப்பட்டது. இதனை யறிந்தவன் புத்திமானும் கிர்தகிர்த்தியனுமாகின்றான்" என்று (பகவத்கீதை xv-16-20ல்) கூறப்பட்டிருக்கின்றது.

மகாவராகத்திலும், "சர்வவேதங்கட்கும் ஸ்ரீயப்பதியான பகவானிடத்தில் முக்கிய தாத்பரியமாம்; ஏனையோரிடத்து உக்கர்ஷம் (மேன்மை) கூறுவது அவாந்தர தாத்பரியமாம்" என்று கூறப்பட்டிருக்கின்றது.

87. விஷ்ணு சர்வோத்கர்ஷர் என்பதுவேதங்களின் முக்கிய தாற்பரியமாம். மோக்ஷமோ சர்வபுருஷார்த்தங்களினும் உத்தமமாம். "தர்மார்த்தகாமமென்னும் மூன்றும் அநித்தியமும்,மோக்ஷம் நித்தியமுமாம்; ஆகையால், எப்போதும் மோக்ஷத்தையடைய உத்தேசித்துப் புத்திமான் பிரயத்தனப்படல்வேண்டும்" என்று பால்லவேய சுருதியிற் கூறப்பட்டிருக்கின்றது. மோக்ஷமும் விஷ்ணுவின் பிரசாதமின்றி யுண்டாகாது. "எவரது பிரசாதத்தினல் பரமமான முத்தியுண்டாகின்றதோ, எவரது சொரூபத்தை யறிவதால் சம்சார நிவிர்த்தி யுண்டாகின்றதோ, எவரை யாராதிக்காதவர்கள் உத்தமமான பதத்தை யடையமாட்டார்களோ, அப்படிப்பட்ட விஷ்ணுவானவர் கர்மபாசத்தினின்றும் நீங்கி மோக்ஷமடைய விரும்புவோரால் தியானிக்கத்தக்கவர்" என்று நாராயண சுருதியிற் கூறப்பட்டிருக்கின்றது.

"அவரது பிரசாதமிருப்பின் இவ்வுலகிற் சித்திக்காதது யாது? சர்வார்த்தகாமங்களும் பூரணமாயுண்டாம். இவை அற்பமேயாம். மேலான பிரஹ்மமாகிய விருக்ஷத்திலேறியவர்கள் சம்சயமின்றி முத்தியாகிய பலத்தையடைகின்றார்கள்" என்று விஷ்ணு புராணத்திற் கூறப்பட்டிருக்கின்றது.

"விஷ்ணுவின் பிரசாதமும், அவரது குணோத்கர்ஷஞானத்தினாலேயேயுண்டாகுமன்றி அபேதஞானத்தினா லுண்டாகாது" என்றுங் கூறப்பட்டிருக்கின்றது.

**88.** தத்துவமசியாதி வாக்கியங்கட்கு விரோதம் வருமேயெனின், அது சுருதி தாற்பரிய மறியாமையினாற் கூறப்பட்டமையின் வரமாட்டாது.

"தத்" என்னும் சப்தமானது விசேஷணமின்றியபோது நித்திய பரோக்ஷார்த்தத்தைக் கூறுகின்றது; "துவம்" என்னும் சப்தமானது அபரோக்ஷார்த்தத்தை (பிரத்தியக்ஷப்பொருளை)க் கூறுகின்றது. அங்ஙனமாக, இவற்றிற்கெங்ஙனம் ஐக்கியம் சம்பவிக்கும்?

"தத்துவமசி" என்னுமிச் சுருதி "யூபஸ்தம்பம் ஆதித்தியன்" என்பதுபோல் (ஐக்கியத்தைக் கூறாது) சாதிருசியத்தைக் கூறுகின்றது.

"ஜீவனுக்குப் பிரஹ்மத்தோ டைக்கியமும் ஞானசாதிருசியமே; அல்லது இருவரும் ஒருஸ்தானத்திலிருப்பதே; அல்லது பிரகாசஸ்தானத்தை யபேக்ஷித்து ஜீவப்பிரஹ்ம ஐக்கியம் கூறப்படுகின்றதேயன்றிச் சொரூப ஐக்கியங் கூறப்படவில்லை; மோக்ஷத்திலும் ஜீவன் பிரஹ்மபின்னனா யிருப்பதால். பிரஹ்மத்தினிடத்துச் சுவாதந்திரியமும் பூரணத்துவமும், ஜீவனிடத்து அற்பத்துவமும் சுவாதந்திரியமின்மையும் இருத்தலின் இவையே வேற்றுமையாம்" என்று பரமமான சுருதி கூறுகின்றது.

அல்லது 'தத்துவமசி' என்னுமிடத்தில் சுவாதந்திரிய முதலிய குணங்களுடன் கூடியிருத்தலின் அதுவே ஆத்மா; 'ஆத்மா தத்துவமசி' என்னும் சுருதிக்கு 'ஆத்மா அதத்துவமசி' என்று·பதம் பிரித்தல்வேண்டும். நீ அதுவாகமாட்டாய்; அதன் குணங்கள் உன்னிடத்தின்மையின். இங்ஙனம் (ஜீவப்பிரஹ்ம) ஐக்கியம் நிராகரிக்கப்பட்டது.

"அதத்துவம் எனப் பதத்தைப் பிரிக்கின் ஐக்கியம் நிராகரிக் கப்படும்" என்று கூறப்பட்டிருக்கின்றது.

ஆகையால், (சாந்தோக்கியத்தில்) "எங்ஙனம் அந்தப் பக்ஷி கயிற்றினாற்கட்டப்பட்டது" என்றற் றொடக்கத்து ஒன்பது திருஷ் டாந்தம் கூறும் வாக்கியங்களால் அபேததிருஷ்டாந்தவாயிலாக ஐக்கியம் உபதேசிக்கப்பட்டது என்பது தத்துவவாத ரகசியம்.

"எங்ஙனம் பக்ஷியும் கயிறும், அநேக விருக்ஷங்களும் அவற் றின் ரசமும், நதிகளும் சமுத்திரமும், சுத்தஜலமும் உப்புஜலமும், திருடனும் திருடப்பட்ட பொருளும், புருஷனும் அவனுடைய சக் தியும் வேற்றுமை யுடையனவா யிருக்கின்றனவோ அங்ஙனமே ஜீவேசுவரர்களும் எஞ்ஞான்றும் பின்னர்களே. ஆயினும், சிரேஷ்ட ரான ஹரியானவர் சூக்குமவடிவமா யிருப்பதால் அவர் ஜீவர்களைப் பிரேரகம் செய்கின்றவரா யிருப்பினும் மந்தமதி யுடையவர்களால் ஜீவபின்னரென்று அறியப்படுகிறதில்லை. இவ்விருவருக்குமுள்ள வேற்றுமையை யறிவதால் புருஷன் மோக்ஷத்தை யடைகின்றான்; அறியாதவன் பந்தத்தை யடைகின்றான்" என்றும்,

"பிரமன், சிவன், தேவர்களிற் சிரேஷ்டர்களென்னும் யாவருக் கும் சரீரம் நீங்கிவிடுகின்றமையின் அவர்கள் க்ஷரர். இவர்களினும் சிரேஷ்டரான ஹரியானவர் இலட்சுமியின் பொருட்டு அக்ஷர தேகத்தை யுடைத்தாயிருக்கின்றமையின் அக்ஷரர். சுவாதந்திரி யம், சக்தி, விஞ்ஞானம், சுகம் என்றற் றொடக்கத்து அனேக குணங் கள் அவரிடத் தெல்லையற்றிருக்கின்றமையின் சகல தேவதைகளும் அவர் வசமாயிருக்கின்றனர்" என்றும்,

"சகல குணங்களாலும் பூரணரான விஷ்ணுவை யறிவதால் ஜீவர்கள் சம்சாரத்தினின்றும் நீங்கி அவரது சமீபத்திருந்து துக்கமற்ற ஆனந்தத்தை யநுபவித்துச் சந்தோஷத்தை யடை கின்றனர். முக்தர்களுக்கு விஷ்ணு ஆசிரயராயும் மேலான அதி பதியாயு மிருக்கின்றனர். யாவரும் அவர் வசத்திருக்கின்றனர்; அவரே ஈசுவரன்" என்றும் மகோபநிடதத்திற் கூறப்பட்டிருக் கின்றன.

**89.** ஏகவிஞ்ஞானேந சர்விஞ்ஞாநமும் (ஒன்றன் ஞானத்தினால் பலவற்றின் ஞானமும்), பிரதானத்தன்மை காரணத்தன்மை முதலியவற்றாற் பொருந்துகின்றதேயன்றிச் சர்வமும் மித்தையாக விருப்பதாற் பொருந்துவதில்லை. சத்தையின் ஞானத்தினால் மித்தையின் ஞானம் சம்பவியாது. எங்ஙனம் பிரதான புருஷர்களை யறிவதாலும் அறியாமையாலும் கிராமமானது அறியப்பட்டது அறியப்படாதது என்னும் வியவகாரம் காணப்பட்டிருக்கின்றதோ, எங்ஙனம் காரணமான பிதா அறியப்பட்டவிடத்து ஜனங்களால் இவன் அவன்மகனென் றறியப்படுகின்றானோ (அங்ஙனமே பிரதானமும் காரணமு மறியப்பட்டவிடத்து அற்பமும் காரியமு மறியப்படுகின்றன).

**90.** அன்றாயின், "ஓ பிரியதரிசனே! ஒரு மிருத்பிண்ட தரிசனத்தினால் எல்லாம் மிருத்மயம் (மண்ணின் காரியம்) என் றறியப்படுகின்றது" என்னும் சுருதியில் ஏகபிண்ட சப்தங்கள் பயனற்றுப் போம்; அறியப்பட்ட மிருத்துவினாலேயே என்று வாக்கியம் பூரணமாகின்றமையின். "வாசாரம்பணம் விகாரோ நாமதேயம் மிருத்திகேத்தியேவசத்தியம் - விகாரங்களும் பெயர்களும் பேச்சுமாத்திரமே மண்மாத்திரமே சத்தியம்" என்னும் வாக்கியம் காரியம் மித்தையெனக் கூறுவதாக அங்கீகரித்தல் கூடாது. இவை சத்தியமெனக் கொள்ளின், அதன்பொருள்:—எதனது விகாரமானது பேச்சுமாத்திரமோ அது அபகிர்தம் (அவிகாரியம்) நித்தியம் மிருத்திகையென்னும் நாமதேயம் உண்மையாம் என்பது. அன்றாயின், நாமதேயம் என்னும் சப்தமும் ஏவ (மாத்திரம்) என்னுஞ் சப்தமும் வியர்த்தமாம். ஆதலால்,ஓரிடத்தும் ஜகத்திற்குமித்தியாத்துவம் சித்திக்கவில்லை. மேலும், பிரபஞ்சம் மித்தையென்னுமிடத்து, மித்தியாத்துவம் சத்தியமா? மித்தையா? முதற்பக்ஷத்தில், சத்தியமான அத்வைதத்திற்குப் பங்கமுண்டாம்; இரண்டாவது பக்ஷத்தில் பிரபஞ்சத்திற்குச் சத்தியத்துவம் சம்பவிக்கும்.

(ஆ.) அநித்தியத்துவம் நித்தியமா? அநித்தியமா என்னுமிடத்து இரண்டிடத்தும் பொருந்தாமை சம்பவிக்கின்றதென்னும் ஆசங்கைபோல் இதனிடத்தும் நித்தியசமையென்னு தோஷம் சம்பவிக்கும்.

"நித்திய அநித்திய பாவத்தினின்றும் அநித்திய நித்தியத்துவம் சம்பவிப்பதால் நித்தியசமையாம்" என்று நியாய நிர்வாணத்திற் கூறப்பட்டிருக்கின்றது.

"தர்மத்திற்கு அந்த ரூபமா இந்த ரூபமா என்னும் விகற்பம் சம்பவியாமையின், தர்மிக்கு அதனோடு கூடிய தன்மையின் பங்கமாகிய நித்தியசமை யுண்டாகின்றது" என்று தார்க்கிகரக்ஷையிலும் கூறப்பட்டிருக்கின்றது.

பிரபோதசித்தி என்னும் கிரந்தத்தில் (நித்தியசமா என்னும்) இந்தச் சமிஞ்ஞைக்கு உபலக்ஷணம் கருத்துவகையால் அந்வர்த்தித்வாதி உபரஞ்சக தர்மசமா என்று கூறப்பட்டிருக்கின்றது. ஆகையால் இது சதுத்தரம் (நல்விடை) என்று கூறின்,

(அ.) சாஸ்திராப்பியாச மின்மையால் இந்தப்பயமுனக்குண்டாகின்றது; தோஷமுள்ளதென்பதன் காரணத்தை நிரூபிக்காமையின்.

அது சாதாரணம் அசாதாரணமென இருவகைத்து. அவற்றுள், முதலாவது தனக்கே வியாகாததோஷத்தைச் செய்வது; இரண்டாவது யுக்தாங்க ஹீனத்துவம், அயுக்தாங்க அதிகத்துவம், அவிஷய விருத்தித்துவம் என மூவகைத்து. அவற்றுள், சாதாரணம் அசம்பாவிதமே; கூறிய ஆக்ஷேபம் தன்னை வியாபித்திருத்தலை அறியாமையின். இங்ஙனம் அசாதாரணமும். கடம் இல்லையென்று கூறுமிடத்து இருக்கின்றதென்பதுபோன்று இல்லையென்பதும் ஈண்டுப் பொருந்துகின்றது.

(ஆ.) பிரபஞ்சத்திற்கு மித்தியாத்துவம் அங்கீகரிக்கப்படுகின்றதேயன்றி அசத்துவம் அங்கீகரிக்கப்படுவதில்லை.

(அ.) இங்ஙனங் கூறுவது சிரச்சேதஞ் செய்தாலும் நூறு கொடான், ஆனால் ஐந்து இருபதே கொடுப்பான் என்னும் சாகடிகன் (வண்டிக்காரன்) கதையை யொத்திருக்கின்றது; மித்தியாத்துவமும் அசத்துவமும் பரியாயமாகையின். அதிகமாகக் கூறியதமையும்.

91. பிரஹ்ம சூத்திரத்தின் "அதாதோ பிரஹ்மஜிஞ்ஞாசா" என்னும் முதலாவது சூத்திரத்தின் பொருள் வருமாறு:—'அத' சப்தமானது மங்களரூபம் அதிகாரம் அநந்தரம் (பிறகு) என்னும்

அர்த்தத்தைக் கூறுவதாக அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றது. 'அதः' என்னும் சப்தத்திற்கு ஏது என்பது பொருள்.

"அத அதः என்னும் சப்தபூர்வகமாக எல்லாச் சூத்திரங்களும் நியமமாகவே ஆரம்பிக்கப்படுகின்றன; அங்ஙனம் ஆரம்பித்தற்குக் காரணம் யாது? அப்பதங்களின் பொருள் யாது? அவற்றிற்குச் சிரேஷ்டத்துவம் எங்ஙனம்? அவற்றை யான் உண்மையாக அறியுமாறு எனக்குக் கூறல்வேண்டும் என்று நாரதர் பிரம்மாவைப் பார்த்துக் கேட்க, அதற்குப் பிரம்மா அத சப்தத்திற்கு அநந்தரம் அதிகாரம் மங்களம் என்பது பொருள், அதः சப்தத்திற்கு ஏதுவென்பது பொருள் என்று கூறினார்" என்று கருட புராணத்திற் கூறப்பட்டிருக்கின்றது.

எக்காரணத்தால் நாராயணரது பிரசாதமின்றி மோக்ஷம் சித்திக்காதோ பிரசாதமும் ஞானமின்றிச் சித்திக்காதோ அக்காரணத்தினால் பிரஹ்மவிசாரம் செய்யவேண்டுமெனப் பெறப்பட்டது. விசாரியமான பிரஹ்மத்திற்கு "ஜந்மாத்யஸ்யயதः" என்னுஞ் சூத்திரத்தினால் இலக்கணம் கூறப்பட்டிருக்கின்றது. சிருஷ்டி ஸ்திதி முதலியவை எதனிடத்தினின்றுண்டாகின்றனவோ அது பிரஹ்மம் என்பது சூத்திரார்த்தம்.

"உற்பத்தி, ஸ்திதி, சம்மாரம், நியதி, ஞானம், ஆவிர்[illegible] (மறைவு), பந்தம், மோக்ஷம் என்னும் இவை எந்தப் புருடனிடத்[illegible]னின்றும் உண்டாகின்றனவோ அந்த விஷ்ணு ஒருவனே எல்லவற்றிற்கும் நியந்தா" என்று ஸ்காந்தத்திற் கூறப்பட்டிருக்கின்றது.

"எவனிடத்தினின்றும் இந்தப் பூதங்களுண்டாயினவோ" என்[illegible] றற்றொடக்கத்துச் சுருதிகளாலும் (இலக்கணங் கூறப்பட்டது) "சாஸ்திரயோநித்துவாத்" என்பதனால் பிரஹ்மவிஷயத்திற் பிரமாணமும் கூறப்பட்டது. "வேதத்தை யுணராதவன் அந்த வியாபமான பிரஹ்மத்தை யுணரமாட்டான்" என்றற்றொடக்கத்துச் சுருதிகளால் அந்தப் பிரஹ்மம் அநுமானத்தா லறியத்தக்கதென்பது நிராகரிக்கப்படுகின்றது. மேலும், அநுமானமும் சுதந்திரமாகப் பிராமாணியமன்று.

"சுருதி சகாயமற்ற அநுமானமாவது வேறு பிரமாணமாவது ஓரிடத்தும் ஓரர்த்தத்தையும் நிச்சயமாகச் சாதிக்குந் தன்மை

புடையதன்று. சுருதி ஸ்மிருதி சகாயமாக வேறெந்தப் பிரமாண மிருக்கின்றதோ அது பிராமாணியமாம்; இதிற் சந்தேகமில்லை" யன்று கூர்மபுராணத்திற் கூறப்பட்டிருக்கின்றது.

92. "இருக்கு, யசுர், சாமம், அதர்வணம், பாரதம், பாஞ்சராத்திரம், மூலராமாயணம் என்னுமிவை சாஸ்திரமாம். இவற்றிற் நுகூலமாக யாதிருக்கின்றதோ அதுவும் சாஸ்திரமாம். இவற்றிற்கு வேறாய் விஸ்தாரமாயுள்ள சாஸ்திரங்களியாவும் குமார்க்கங்கள்" ான்று ஸ்காந்தத்திற் சாஸ்திரசொரூபங் கூறப்பட்டிருக்கின்றது.

ஆகையால், இதனல் மற்றொரு பிரமாணத்தினுற் பெறப் படாத அர்த்தம் சாஸ்திரார்த்தம் என்னும் நியாயத்தினல், வேத வாக்கியங்கட்குத் துவைதத்திற் ருற்பரியமின்று; ஆனுல், அத்வைதத்திற் ருற்பரியமிருக்கின்றது என்னும் வேதாந்தியின் கொள்கையும் நிராகரிக்கப்பட்டது. அநுமானத்தால் ஈசுவரன் சித்திக்காமையின், அந்த ஈசுவரபேதமும் அநுமானத்தாற் சித்திக்கமாட்டாது. ஆகையால், பேதத்தைக்கூறும் வேதவாக்கியங்கட்கு அநுவாதத்துவமில்லை; இல்லாமையின், பேதத்திற் ருற்பரிய மறியப்படுகின்றது.

ஆகையினுற்ருன், "வேதத்தினல்மாத்திரம் அறியக்கூடியவராயும், சராசரங்கட்கு அப்பாற்பட்டவராயும், தோஷ ரகிதராயும், அனேக சற்குணமுடையவராயுமுள்ள நாராயணரை எப்பொதும் நமஸ்கரிக்கின்றேன்" என்று கூறப்பட்டிருக்கின்றது.

'தத்சமந்வயாத்' என்னும் சூத்திரத்தால் சாஸ்திரத்திற்கு நாராயணரிடத்துப் பிராமாணியம் நிரூபிக்கப்பட்டிருக்கின்றது. சமந்வயமாவது உபக்கிரமாதிலிங்கம் (குறி).

"உபக்கிரமம், உபசம்மாரம், அப்பியாசம், அபூர்வதை, பலம், அர்த்தவாதம், உபபத்தி என்னுமிவை தாற்பரிய நிர்ணயத்தில் லிங்கங்கள்" என்று பிருகத்சம்மிதையிற் கூறப்பட்டிருக்கின்றது.

93. இங்ஙனம், வேதாந்த தாற்பரியவசத்தால் அந்தப்பிரஹ்மமே சாஸ்திரத்தா லறியத்தக்கதெனக் கூறியதாயிற்று. இவ்விஷயத்திற் சிலபாகங் காட்டப்பட்டன; ஏனையவற்றை ஆனந்ததீர்த்தர் இயற்றிய பாஷியவியாக்கியானத்திற் கண்டுகொள்க. நூல் பெரிதாகுமென்னும் பயத்தால் இஃதிவ்வளவில் நிறுத்தப்பட்டது.

இவ்விரகசியமும் பூரணப்பிரஞ்ஞரால் நிரூபிக்கப்பட்டது. அவர் தாம் வாயுவின் மூன்றாவது அவதாரமென "முதலாவது அநுமான், இரண்டாவது பீமசேனன், மூன்றாவது பகவத்காரியசாதகனான பூரணப்பிரஞ்ஞன்" என்று மத்திமமந்திரத்தால் நிரூபித்தார்.

**94.** இவ்வபிப்பிராயத்தையே தாமியற்றிய கிரந்தத்தில் ஆங்காங்குக் குறிப்பிட்டு முடிவில் இஃது அவரால் எழுதப்பட்டிருக்கின்றது:—

"எவருக்கு வேதவாக்கியத்தில் திவ்வியமான மூன்றுவடிவங்கள் கூறப்பட்டிருக்கின்றனவோ அவை அதில் விஸ்தாரமாக நிரூபிக்கப்பட்டிருக்கின்றன; இவைதாம் வேதத்தின் அகிலமானதேசகு வாயுவின் முதலாவது அவதாரம் இராமனுடைய வார்த்தைக்கு வணங்கிய அநுமான்; இரண்டாவது பீமசேனன்; அதனால் மூன்றாவதாகிய மத்துவனால் பகவானை உத்தேசித்து இக்கிரந்தமியற்றப்பட்டது".

**95.** ஆகையால், சர்வசாஸ்திரத்திற்கும் விஷ்ணுதத்துவம் சர்வோத்தமம் என்பதிற் றாற்பரியமென்று கூறப்பட்டிருக்கின்றது. இங்ஙனம் எல்லாம் சுத்தம்.

## பூரணப்பிரஞ்ஞ தரிசனம்

முற்றிற்று.



## ஆறாவது

# நகுலீச பாசுபத தரிசனம்.

## (வீரசைவம்).

96. இந்த வைஷ்ணவமதமானது தாசத்துவாதி பதங்களாலறியத்தக்கதாயும் பாரதீனத்தன்மையால் துக்கத்தோடு கூடியதாயுமிருத்தலின், துக்கத்தினின்றும் விடுபட்டு இஷ்டப்பிராப்திக்குச் சாதனமாகமாட்டாதெனச் சில மாகேசுவரர்கள் அதிற் பிரியமற்றிருக்கின்றனர். அவர்கள் (1) "பாரமேசுவரியத்தை விரும்பிப் பாரதீனர்களா யிருப்பவர்கள் முக்தராகார்; பாரதீனத்தன்மையால் பாரமேசுவரியமிராமையின்; நம்மனோர்போல". (2) "முக்தர்களும் பரமேசுவரகுண சம்பந்திகள்; புருஷத்தன்மையுடன் கூடியிருந்தும் சமஸ்ததுக்கபீஜமு மற்றிருக்கின்றமையின்; பரமேசுவரன் போல" என்றற்றொடக்கத்து அநுமானங்களைப் பிரமாணமாகக் கொண்டு பரமபுருஷார்த்த சாதனமான ஐந்து பதார்த்தத்தை விஸ்தாரமாக நிரூபிக்கிற பாசுபத தந்திரத்தை மேற்கொண்டிருக்கின்றனர். அதனது முதற்சூத்திரம் "அதாத: பசுபதே: பாசுபதயோகவிதிம் வியாக்கியாஸ்யாம:" என்பது. இந்தச் சூத்திரத்திலுள்ள 'அத' சப்தத்திற்குப் பூர்வப்பிரகிருதமாவது குருவைக் குறித்துச் சிஷ்யன் செய்யும் பிரஸ்நமாம். குருவின் சொரூபம் கணகாரிகையென்னும் நூலில் "அறியத்தக்கவை எட்டுக்கணங்களும், மூன்றுபிரிவோடு கூடிய ஒரு கணமுமாம்; இந்த ஒன்பது கணங்களையுமறிந்தவன் சம்ஸ்காரமடைந்தவனாவன்; அவனே குரு. லாபங்கள், மலங்கள், உபாயங்கள், தேசங்கள், அவஸ்தைகள், விசுத்திகள், தீக்ஷாகாரியங்கள், சக்திகள் என்னுமிவை எட்டுக்கணங்களாம்; மற்றொரு கணத்தில்) மூன்றுவிருத்திக ளிருக்கின்றன" என்று கூறப்பட்டிருக்கின்றது. அவற்றுள்,

(1) விதிக்கப்படும் உபாயபலம லாபமாம். அது ஞானம், தபசு, தேகநித்தியத்துவம், ஸ்திதி, சுத்தி என்னும் பேதத்தால் ஐவகைத்தாம். "ஞானம், தபசு, நித்தியத்துவம், ஸ்திதி, சுத்தி என்னு மிவ்வைந்தும் (லாபமாம்)" என்று அரதத்தாசாரியர் கூறியிருக்கின்றனர்.

(2) ஆத்மாவை ஆசிரயித்துள்ள துஷ்டபாவம் (தீயத் தன்மை) மலமாம். அது மித்தியாஞான முதலிய வேறுபாட்டால் ஐவகைத்தாம்.

"மித்தியாஞானம், அதர்மம், சங்ககரம், பசுத்துவம், சியூதி (நழுவுதல்) என்னு மிவ்வைந்தும் பசுத்துவத்திற் கேதுவாகலின் இத்தந்திரத்திற் றள்ளத்தக்கனவாம்" என்றும் அரதத்தர் கூறியிருக்கின்றனர்.

(3) சாதகனது சுத்திக் கேது உபாயமாம். அதுவும் வாசசரிய முதலிய வேறுபாட்டால் ஐவகைத்தாம்.

"வாசசரியம் (வசிக்குமிடத்தை யுபயோகிக்கும்விதம்), ஜபம், தியானம், இடைவிடாத சிவஸ்மரணம், இலாப(ஞான) மடைவது என்னு மிவ்வைந்தும் உபாயங்கள்" என்றும் கூறுகின்றார்.

(4) எதனுல் சாதகன் அர்த்தஸ்மரண பூர்வகமாக ஞானதபோவிர்த்திகளை யடைகின்றானே அது தேசமாம். ஞானதபோவிர்த்தி என்றது குருஜனுதிகளை.

"குருஜனம், குகாதேசம், ஏகாந்தஸ்தானம், மயானம், ருத்ரன்" என்று சொல்லப்பட்டிருக்கின்றது.

(5) லாபம் அடையும்வரை இவற்றுள் ஏதாவதொன்றலணிருப்பது அவஸ்தை. அது வியக்த முதலிய விசேடத்துடன் கூடியது.

"வியக்தம், அவ்வியக்தம், ஜபம், ஆதானம், ஐந்தாவதாகிய நிஷ்டை" என்று கூறப்பட்டிருக்கின்றது.

(6) மித்தியாஞான முதலியவற்றின் அத்தியந்த நிவிர்த்தி விசுத்தி. அது பிரதியோகியின் வேறுபாட்டால் ஐவகைத்து.

"அஞ்ஞானம், அசங்கம் (அதர்மம்), சங்ககரம் (பந்தத்தைச் செய்வது), பசுத்துவம், சியூதி யென்னு மிவ்வைந்தன் நாசமும் விசுத்தி" என்று சொல்லப்படுகின்றது.

(7) "திரவியம், காலம், கிரியை, மூர்த்தி, குரு என்னு மிவ்வைந்தும் தீக்ஷாகாரியங்கள்" என்று கூறப்பட்டிருக்கின்றது.

(8) "குருபக்தி, பிரசாதம் (புத்திவிளக்கம்), (சுகதுக்க முதலிய) துவந்துவங் (இருமை)களின் ஜயம், தர்மம், அப்பிரமாதம்

(தவறுமை) என்னு மிவ்வைந்தும் சக்திகள்" என்று சொல்லப் பட்டிருக்கின்றது.

ஐவகைமதத்தையும் குறைத்தற்பொருட்டு மானுவமான விரோதிகளாய அன்னத்தைச் சம்பாதித்தற்குபாயமான பைக்ஷம் (பிச்சையெடுத்தல்), உச்சிஷ்டம் (எச்சில்), யதாலப்தம் (கிடைத்த தைப்புசித்தல்) என்னும் அபிதானமுள்ள விர்த்திகள் மூன்றுண்டு. ஏனையவெல்லாம் ஆகாரத்தி லறிந்துகொள்ளல்வேண்டும்.

ஈண்டு 'அத' சப்தமானது துக்காந்தத்தைக்கூறுகின்றது; அந்த 'அத' சப்தம் ஆதியாத்மிக முதலிய துக்கநிவிர்த்திவடிவ பிரயோசனத்தை அர்த்தமாகவுடைத்தா யிருக்கின்றமையின். 'பசு' சப்தம் காரியத்தைப் பிரதிபாதிக்கின்றது; காரியம் பரதந்திரமென்னும் சப்தத்தாற் கூறப்படுதலின். 'பதி' சப்தமானது காரணத்தைப் பிரதிபாதிக்கின்றது; ஈசுவரன் பதி என்னும் பதங்கள் ஜகத்காரணமான ஈசுவரனைக் கூறுகின்றமையின். யாகமும் விதி(கிரியை)யுமோ பிரசித்தம்.

**97.** இந்தமதத்தில் துக்காந்தமானது அநாத்மகம் சாத்மகம் என இருவகைத்து. அவற்றுள், அநாத்மகம் சர்வதுக்க அத்தியந்த நிவிர்த்தி வடிவம். சாத்மகமோ திருக்கிரியாசக்தி வடிவ ஐசுவரியம்.

**98.** திருக்(ஞான) சக்தி ஒன்றாயிருப்பினும் அது விஷயவேறுபாட்டால் தரிசனம், சிரவணம், மனனம், விஞ்ஞானம், சர்வஞ்ஞத்துவம் என ஐவகைத்தாமென் றுபசாரமாகக் கூறப்படுகின்றது. அவற்றுள், (1) சூக்குமமாயும், வியவகிதமா (மறைபட்டிருப்பதா) யும், விப்ரகிருஷ்டமாயு (விலகியிருப்பதாயு)முள்ள சாக்ஷுஷ (ரூப), பரிசாதி சர்வவிஷயங்களின் ஞானம் தரிசனம். (2) சமஸ்தசப்தவிஷய சித்திஞானம் சிரவணம். (3) சமஸ்த சிந்தனவிஷய சித்திஞானம் மநநம். (4) கிரந்தத்தாலும் அர்த்தத்தாலு முண்டான சர்வசாஸ்திர விஷயசித்திஞானம் விஞ்ஞானம். சமாசம் (தொகை), விஸ்தாரம் (விரி), விபாகம் (பிரிவு) என்னு மிவ்விசேடங்களால் கூறியதும் கூறாததுமாய சமஸ்த அர்த்தங்களையும் விஷயமாகவும் தத்துவ வியாப்தமா (கூடியதா)யு முள்ள எஞ்ஞான்று முண்டாகின்ற சித்தி ஞானம் சர்வஞ்ஞத்துவம். இது தீ (திருக்) சக்தி.

**99.** கிரியாசக்தி ஒன்றாயிருப்பினும் அது மனோஜவித்துவம், காமரூபித்துவம், விக்கிரமண தர்மித்துவம் என மூவகைத்தாமெனக்

கூறப்படுகின்றது. அவற்றுள், (1) மிகவும் விரைவாகச் செய்யுந் தன்மை மனோஜவித்துவம். (2) கர்மாதிகளை யபேக்ஷிக்காதுள்ள ஈசுவரனுக்குத் தனதிச்சையினால் அனந்தமாயும் சலக்ஷணமாயும் விலக்ஷணமாயும் சரூபமாயுமுள்ள காரணதிருஷ்டாதிருத்துவம் (இந்திரிய முதலிய கரணங்கட்கு எவ்விடத்தும் வியாபகத்திருக்குந்தன்மை) காமரூபித்துவம். (3) கரணங்களை யடக்கிக்கொண்டிருக்கும்போதுண்டாகும் நிரதிசய (விசேஷமற்ற) ஐசுவரிய சம்பந்தம் விக்கிரமண தர்மித்துவம் இது கிரியாசக்தி.

**100.** அசுவதந்திரமான சகல காரியமும் வித்தியை, கலை, பசு என மூவகையாம். அவற்றுள்,

**101.** பசுக்கணம் வித்தை. அதுவும் போதசுபாவம் அபோத சுபாவம் என்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம். போத சுபாவம்: விவேகப்பிரவிர்த்தி அவிவேகப்பிரவிர்த்தி என்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம். அவற்றுள், பிரமாணமாத்திரத்தினாலேயே பிரகாசிய சித்தம் (பிரகாசிக்கப் படுவதாய்ப் பெறப்படுவது) விவேகப்பிரவிர்த்தி என்று சொல்லப்படுகின்றது. எக்காரணத்தினால் எதனால் எல்லாப்பிராணிகளும் பாகியார்த்தப் பிரகாசத்தோடுகூடிச் சாமானியமா யறியப்பட்டு விசேஷமா யறியப்படாததான அர்த்தத்தை யறிகின்றனவோ அக்காரணத்தினால் அது சித்தமென்று சொல்லப்படுகின்றது. பசுவர்த்தமான தர்மாதர்மத்தோடுகூடிய வித்தை அபோத சொரூபம். அதுவே சுவ (தனது) சாஸ்திரம்.

**102.** எதனால் சேதனபாரதந்திரிய மிருக்கும்போது அசேதனமான கலை சொல்லப்படுகின்றதோ (அதனால் அது கலையென்று கூறப்படுகின்றது). அதுவும் காரியம் காரணமென்றிருவகைத்து. அவற்றுள், காரியமென்னும் பெயருள்ள கலை பிருதிவியாதி பூதமைந்து, ரூபாதிகுணமைந்து எனப் பத்துவகைத்தாம். காரணமென்னும் பெயருள்ள கலை ஞானேந்திரிய பஞ்சகம், கர்மேந்திரிய பஞ்சகம், அத்தியவசாயமென்னும் பெயருள்ள (நிச்சயவடிவ) புத்தி அபிமானமென்னும் பெயருள்ள அகங்காரம் சங்கற்பமென்னும் பெயருள்ள மனம் என்றிங்ஙனம் திரிவித அந்தக்கரணம் எனப் பதின்மூன்று வகைத்தாம்.

**103.** பசுத்துவ சம்பந்தமுடையது பசு. அதுவும் சாஞ்ஞனம் நிரஞ்ஞனமென்றிருவகைத்து. அவற்றுள், சாஞ்ஞானம் சரீர-

இந்திரிய சம்பந்த முடையது; நிரஞ்ஞனம் சரீராதி சம்பந்தமற்றது. இவற்றின் விரிவைப் பஞ்சார்த்த பாஷிய தீபிகாதிகளிலறிந்துகொள்க.

**104.** சர்வசிருஷ்டி லயங்களையு முண்டுபண்ணுவது **காரணம்.** அது ஒன்றாயிருப்பினும் குணகர்மங்களின் வேறுபாட்டை யபேக்ஷித்து "பதி: சாத்தியஃ" என்றற்றொடக்கத்து வாக்கியங்களால் அதற்கு விபாகங் கூறப்பட்டிருக்கின்றது. அவற்றுள், பதித்துவம் அளவிடப்படாத திருக்கிரியாசத்தியோடு கூடியிருக்குந்தன்மை. அவ்வைசுவரியத்தோடு எஞ்ஞான்றும் கூடியிருக்குந்தன்மையும் ஆத்தியத் (வெகுகாலமாயிருக்குந்) தன்மையும், நித்திய சித்தமான ஐசுவரிய சம்பந்தமும் ஆதரிசகாரர் முதலிய சாஸ்திரஞ்ஞர்களால் நிரூபிக்கப்பட்டிருக்கின்றன.

**105.** சித்தத்தின் வாயிலாகவுண்டாகும் ஈசுர சம்பந்தம் **யோகம்;** அது கிரியாலக்ஷணம், கிரியோபரமலக்ஷணம் என இருவகைத்து. அவற்றுள், கிரியாலக்ஷணம் ஜபம் தியானம் முதலியனவாம்; கிரியோபரமலக்ஷணம் சம்வித்(ஞானம்) கதி முதலியனவாம்.

**106.** தர்மார்த்த சாதக வியாபாரம் **விதி.** அதுவும் பிரதான பூதம் குணபூதம் என இருவகைத்து. அவற்றுள், பிரதான பூதம் சாக்ஷாத் தர்மத்திற் கேதுவான சரிகை. அதுவும் விரதம் துவாரம் என இருவகைத்து. அவற்றுள்,

**107.** பஸ்மஸ்நானம், பஸ்மசயனம், உபசாரம், ஜபம், பிரதக்ஷணம் என்னுமிவை **விரதமாம்.**

"பஸ்மத்தினால் முக்காலமும் ஸ்நானஞ் செய்தல்வேண்டும், பஸ்மத்திற் சயனஞ் செய்தல்வேண்டும். உபசாரமாவது நியமம்; அஃதறுவகைத்து" என்று பகவானான நகுலீசனாற் கூறப்பட்டிருக்கின்றது.

"ஹஸிதம், கீதம், நிருத்தம், ஹுடுக்காரம், நமஸ்காரம், ஜப்பியம் என்னு மிவ்வாறங்கங்களோடு கூடிய உபசார (நியம)த்தினால் ஸ்தோத்திரஞ் செய்தல்வேண்டும்" என்று சூத்திரகாரராற் கூறப்பட்டிருக்கின்றது. அவற்றுள்,

(1.) ஹஸிதமாவது கண்டம் ஓஷ்டம் (உதடு) என்னு மிவற்றைத்திறந்து ஹ ஹ ஹா என அட்டகாசஞ் செய்வது.

(2.) கீதமாவது காந்தர்வசாஸ்திரத்தை யநுசரித்து மகேசுவர சம்பந்த குணநிநிமித்தங்களின் சிந்தனம் (பாடல்).

(3.) நிருத்தமும் நாட்டிய சாஸ்திரத்தையநுசரித்துக் கைகால் முதலியவற்றை உட்சேபணுதி (தூக்குதல் முதலியவை)யாம். அதுவும் அங்க (கைகால் முதலியவை), பிரத்தியங்க (விரல் முதலியவை), உபாங்கங் (மெய்ப்பாடு)களோடு கூடியதாயும், பாவாபாவத்தோடு கூடியதாயு மிருத்தல்வேண்டும்.

(4.) ஹுடுக்காரமாவது ஜிக்வா (நாக்கு), தாலு (கடைவாய்) என்னுமிவற்றின் சையோகத்தினல் உண்டாகும் விருஷப நாதத்திற்கொத்த புண்ணியநாதம். ஹுடு என்னும் சப்தம் (வேதத்தின் கர்மகாண்டத்தில் வரும்) 'வஷட்' என்னும் சப்தம் போல்வதாம். யாண்டு லௌகிகர்களிருக்கின்றனரோ ஆண்டு இவற்றை இரகசியமாய்ப் பிரயோகித்தல் வேண்டும்.

ஏனையவை (நமஸ்காரம், ஜப்பியம்) வெளிப்படை.

**108.** துவாரமோ கிராதனம், ஸ்பந்தனம், மந்தனம், ஸ்ருங்காரணம், அவிதத்கரணம், அவிதத்பாஷணம் என்றறுவகைத்தாம். அவற்றுள்,

i. **கிராதனமாவது** விழித்திருக்கும்போதே உறக்கத்தின் குறிகளைக்காட்டல்.

ii. **ஸ்பந்தனமாவது** கீல்வாயுவினல் பற்றப்பட்டவனது சரீராவயவங்களின் கம்பனம் (சலனம்) போல் நடித்தல்.

iii. **மந்தனமாவது** நொண்டிபோல் நடத்தல்.

iv. ஸ்ருங்காரணமாவது யௌவனவடிவகாமினியைப் பார்த்துச் சைகைசெய்யுங் காமுகனைப்போலத் தன்னைக் காண்பித்தல்.

v. அவிதத்கரணமாவது காரியாகாரிய (செய்யத்தக்கது செய்யத்தகாதது என்னும்) விவேகமற்றவன் போன்று லோகநிந்திதமான காரியத்தைச் செய்தல்.

vi. அவிதத்பாஷணமாவது பாதிதமா (மறுப்புடையதா) யுப் பயனற்றதாயுமுள்ள அர்த்தங்களைத் தெரிவிக்குஞ் சப்தங்களின் உச்சாரணம்.

**109.** குண (சாதன)மான சரியை அநுக்கிராககமான அநுஷ்டான (பரிசுத்தத்தைத்தரும் சந்தியாவந்தன) முதலியனவாம்

அவை பைக்ஷம் (பிச்சையெடுத்தல்) உச்சிஷ்டம் (எச்சில்) என்று மிவற்றாலேற்பட்ட அயோக்கியதா ஞானத்தை நிவிர்த்திப்பனவாம்.

அதுவும் (சரியையும்) "அநுஸ்நானம், நிர்மாலியம், இலிங்கதாரணம் என்னுமிவற்றோடு கூடியது" என்று சூத்திரகாரராற் கூறப்பட்டிருக்கின்றது.

**110.** தர்மிமாத்திரத்தைக் கூறல் சமாசமாம். அதுவும் முதற் சூத்திரத்திலேயே கூறப்பட்டிருக்கின்றது.

**111:** ஐந்துபதார்த்தங்களையும்பிரமாணங்களால்ஐவகையாகக் கூறல் விஸ்தாரமாம். அதனை ராசிகாபாஷியத்திலறிந்து கொள்க. இவற்றிற்குச் சம்பவித்தவரையில் ஒன்றுடனொன்று விரவாமல் இலக்கணங்கூறல் விபாகமாம். அதுவும் விதிக்கப்பட்ட அன்னிய சாஸ்திரங்களாலே குணவிசேஷத்தைக்கூறல். அங்ஙனமன்றோ, ஏனைய (சாங்கியமத முதலிய) விடத்துத் துக்கநிவிர்த்தியே துக்காந்தம் (மோக்ஷம்); ஈண்டோ பாரமேசுவரியப் பிராப்தியாம்.

வேறுமதங்களில் முன்பின்றிப் பின்புண்டாதல் காரியம்; ஈண்டோ நித்தியமான பசுவாதி.

வேறிடத்தில் சாபேக்ஷமாயிருப்பது காரணம்; ஈண்டோ நிராபேக்ஷகமான பகவானே.

வேறிடத்தில் கைவல்லிய முதலிய பலத்தைக் கொடுப்பது யோகம்; ஈண்டோ பாரமேசுவரியமான துக்கநிவிர்த்தியைப் பிரயோசனமாகவுடையது.

மற்றோரிடத்துச் சுவர்க்காதிகளோ புனராவர்த்தியுள்ளவை; ஈண்டோ புனராவர்த்தியற்ற சாமீப்பிய முதலியவற்றைப் பலமாகவுடையது.

(ஆ.) கர்மங்களை யபேக்ஷியாது பரமேசுவரன் காரணமென்று கூறுவதோ பெரிய இந்திரஜாலமாம். அங்ஙனமாயின், கர்மங்கள் வியர்த்தமாம்; சர்வகாரியங்கட்கும் ஏககாலத்திலுற்பத்தியுண்டாம். இங்ஙனம் இரண்டுதோஷ முண்டாகின்றன.

(ச.) இங்ஙனங் கருதுதல் கூடாது; வியதிகரணமாய் (வேற்று நிலைக்களத்து) இருப்பதால். நிரபேக்ஷிகரான பகவான் காரணமென்னுமிடத்துக்கர்மத்திற்குப்பலனில்லாமற்போ...

அங்ஙனம்போவதால், உனக்குச் சம்பவிக்குங் கெடுதி யாது? பயனின்றென்று கூறுவையாயின், யாருக்குப் பயனில்லை? கர்மட் வியர்த்தமாமென்பதற்குக் காரணம் கர்மியா? பகவானா?

முதலாவது பக்ஷம்பொருந்தாது; ஈசுவரனது இச்சையினால் அநுக்கிரகத்தை யடைந்தவனது கர்மத்திற்குப்பலன் பொருந்து கின்றமையின்; ஈசுவராநுக்கிரகத்தை அடைந்தவனதுகர்மம் யயாதி முதலியோரது கர்மம்போன்று ஓர்சமயம் நிஷ்பலமாய்ப்போம். இதனாற் கர்மத்திற் பிரவிர்த்தியின்மை யுண்டாமென்பது பெறப் படாது; விளைவின் நிச்சயமின்றியும் உழவர் முதலியோர் போன்று கிரியையிற் பிரவிர்த்தியுண்டாகின்றமையின். மேலும், பசுக்களின் பிரவிர்த்தி ஈசுவரேச்சையி னதீனமா யிருக்கின்றது.

இரண்டாவது பக்ஷமும் பொருந்தாது; பரமேசுவரன் பூரண காம (நித்தியதிருப்த) னாதலின் அவனுக்குக் கர்மசாத்தியமான பிரயோசனத்தி னபேக்ஷையின்மையின்.

ஏககாலத்தில் சர்வகாரியங்கட்கும் உற்பத்தியுண்டாமென்று பூர்வபக்ஷியால் யாது கூறப்பட்டதோ அதுவும் உசிதமன்று; அசிந் தியமான (கருதமுடியாததான) சக்தியையுடைய பரமேசுவரனது இச்சையை யநுசரித்த கிரியாசக்தி காரியத்தை யுண்டுபண்ணுவ தாக அங்கீகரிக்கப்பட் டிருக்கின்றமையின்.

"எக்காரணத்தால் இந்த ஈசுவரன் கர்மங்களை யபேக்ஷியாது தனது விருப்பத்தின் வண்ணம் செய்கின்றானோ அக்காரணத்தால் இவன் சாஸ்திரத்தில் (இம்மதத்தில்) சர்வகாரணன்" என்று சம்பிரதாய முணர்ந்தவர்களாற் கூறப்பட்டிருக்கின்றது.

(ஆ.) சாஸ்திராந்தத்திலும் ஈசுவரஞானத்தினாற்றான் மோட்சம் சித்திக்கின்றமையின் இச்சாஸ்திரத்திற்கு விசேஷம் யாது?

(ச.) இங்ஙனங் கூறாதே; விகற்பம் பொருந்தாமையின் ஈசுவரவிஷய (பரோக்ஷ) ஞானமாத்திரம் மோக்ஷகாரணமா? அல் லது ஈசுவரசாட்சாத்காரமா? அல்லது உள்ளவாறு தத்துவ நிச்சயமா?

முதலாவதுபக்ஷம் பொருந்தாது; சாஸ்திராப்பியாசமின்றியும் பிராகிருதஜனம் (அவிவேகிகள்) போன்று தேவர்கட்கு அதிபா

மகாதேவரென்னும் ஞானேற்பத்திமாத்திரத்தால் மோக்ஷம் சித்திக்கும்போது சாஸ்திராப்பியாசத்திற்கு வையர்த்தியம் (பயனின்மை) வருகின்றமையின்.

இரண்டாவது பக்ஷமும் பொருந்தாது; அனேக மலங்களின் சமூகங்களால் விருத்தியடைந்தவர்களும் மாம்சமயமான கண்களையுடையவர்களுமான பசுக்களுக்குப் பரமேசுவர சாக்ஷாத்காரம் பொருந்தாமையின்.

மூன்ருவது பக்ஷமும் பொருந்தாது; இம்மூன்ருவது பக்ஷத்தில் நமதுமதப் பிரவேசம் வருகின்றது; (ஏனெனின்) பாசுபதசாஸ்திரமன்றி உள்ளவாறு தத்துவநிச்சயம் பொருந்தாமையின்.

"ஞானமாத்திரத்தாலெனின், அது சாஸ்திரவிருத்தமாம். சாக்ஷாத்காரமோ துர்லபம். பஞ்சார்த்தத்தைப் பார்க்கிலும் மற்றென்ருல் உள்ளவாறு தத்துவநிச்சய முண்டாவதின்று" என்று ஆசாரியரால் கூறப்பட்டிருக்கின்றது.

ஆகையால், புருஷார்த்தத்தை விரும்பிய உத்தமபுருஷர்களால் பஞ்சார்த்தத்தைப் பிரதிபாதிக்கின்ற பாசுபதசாஸ்திரம் ஆசிரயிக்கத்தக்கதாம்.

நகுலீச பாசுபத தரிசனம்

முற்றிற்று.



## ஏழாவது

# சைவ தரிசனம்.

112. பரமேசுவரன் கர்மாதிகளையபேக்ஷியாது ஜகத்காரணன் என்னும் பக்ஷம் *வைஷம்ய நைர்க்ருணிய தோஷங்களாற் றாஷிக்கப்பட்டிருக்கின்றமையின் அதனை நிராகரித்துச் சில மாகேசுவரர் சைவாகம சித்தாந்தத்தை யுள்ளவாறறிந்து கர்மாதிகளையபேக்ஷித்துள்ள பரமேசுவரன் காரணனென்னும் பக்ஷத்தை யங்கீகாரஞ் செய்து பதிபசுபாசமென்னும் திரிபதார்த்தங்களை யங்கீகரித்திருக்கின்றனர்.

"ஜகத்குருவானவர் திரிபதார்த்தம் † சதுஷ்பாதமென்னுமிவையடங்கிய மகாதந்திரத்தை ஒரு சூத்திரத்திலடக்கிப் பிறகு அவற்றை விஸ்தாரமாக நிரூபணஞ் செய்திருக்கின்றனர்"

113. திரிபதார்த்தங்களுள் பசுக்கள் சுதந்தரமற்றவராகையானும் பாசங்கள் ஜடமாகையானும் இவற்றினும் விலக்ஷணனான பதியானவன் முதலில் நிரூபிக்கத்தக்கவனுவன்; அவனோடு சேதனத்தன்மையாகிய வொப்புமை யிருக்கின்றமையின் பிறகு பசுக்களின் நிரூபணமும், ஈற்றில் பாசங்களின் நிரூபணமுமென்பது கிரமநியமம்.

114. தீக்ஷை பரமபுருஷார்த்தத்திற் கேதுவா யிருத்தலின் அதுவும் பசு பாச ஈசுவர சொரூப நிர்ணயத்திற் குபாய (சாதன) மான மந்திர மந்திரேசுவராதி மகாத்மியநிச்சயம் செய்யக்கூடிய ஞானமின்றிச் செய்யமுடியாமையின் அதனைப் போதிக்கின்ற **வித்தியா (ஞான) பாதம்** முதலிற் கூறப்பட்டது.

115. பலவகைத்தாயும்அங்கத்தோடுகூடியதாயுமுள்ள தீக்ஷா விதியைப் பிரதிபாதிக்கின்ற கிரியாபாதம் அதற்குப் பிறகு கூறப்பட்டது.

---

* வைஷம்யம் - விஷமத்தன்மை, நைர்கிருணியம் - தயையின்மை, தோஷம்-குற்றம்.

† சதுஷ்பாதம் - சரியை, கிரியை, யோகம், ஞானம்.

116. யோகமன்றி யிஷ்டப்பிராப்தி சித்திக்காமையின் அங்கத்தோடுகூடிய யோகஞானத்தையுண்டுபண்ணக்கூடிய யோகபாதம் அதற்குப் பிறகு கூறப்பட்டது.

117. விகிதானுஷ்டானம் விலக்கியதை யொழிப்பது என்னும் சரியையின்றி யோகம் சித்திக்காமையின் அதனைப் பிரதிபாதிக்கின்ற சரியாபாதம் ஈற்றிற் கூறப்பட்டது.

118. அவற்றுள், பதிபதார்த்தம் சிவனென அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றது. முக்தாத்மாக்கட்கும் வித்தியேசுவராதிகட்கும் சிவத்துவமிருப்பினும் அவர்கள் பரமேசுவராதினர்களாகையால் அவர்கட்குச் சுவாதந்திரியமின்று. ஆகையால், உலகமுதலிய பதார்த்தங்கள் சந்நிவேசத்தோடு (கிரமமான சேர்க்கையோடு) கூடியிருத்தலின் ஜன்னியமென்றறியப்படுகின்றன; ஜன்னியமாயிருத்தலின், அறிவுடையவன் இவற்றிற்குக் கர்த்தாவாவனென் றநுமானிக்கப்படுகின்றது. இவ்வநுமானத்தாற் பரமேசுவரப்பிரசித்தி பொருந்துகின்றது.

(ஆ.) தேகத்திற்கே ஜன்னியத்துவம் (காரியத்தன்மை) சித்திக்கின்றதில்லை; எக்காலத்திலேனும், எவ்விடத்திலேனும் தேகம் சிருஷ்டிக்கப்பட்டதாக ஒருவனாலும் காணப்படாமையின்.

(ச.) நீ கூறியதுண்மை. ஆயினும், தேகம் சிருஷ்டிக்கப்பட்டது ஒருவனாலும் காணப்படவில்லையென்பதனால் (அதற்குக்) கர்த்தா இல்லையென்பதுபொருந்தாது; கர்த்தாவுண்டென்பது அநுமானத்தாற் பெறப்படுகின்றமையின். தேகாதிகள்காரியம்; அவயவமுடைமையின், அல்லது நாசமுடைமையின்; கடாதிபோலும். காரியத்தன்மையாகிய ஏதுவினால் அவை புத்திமானால் சிருஷ்டிக்கப்பட்டனவென் றநுமானித்தல்கூடும். விவாதத்திற்கு விஷயமான உலகம் கர்த்தாவுடையது; காரியத்தன்மையால்; கடம்போல; எது மேற்கூறிய சாதனத்தோடு கூடியதோ அது மேற்கூறிய சாத்தியத்தோடு கூடியது; எது சாத்தியத்தோடு கூடியதன்றோ அது சாதனத்தோடுகூடியதன்று; ஆன்மா முதலியனபோல. அநுமானப் பிராமாணியத்திற்குச் சாதனாநுமானம் வேறோரிடத்து *நிரூபிக்கப் பட்டிருக்கின்றமையின் ஈண்டு நிரூபிக்காதுவிடப்பட்டது.

---

* லக்ஷணம், பிராமாணியம் முதலியவற்றை விஷயமாகவுடைய ஞானத்திற்கு அநுகூலமான சப்தப்பிரயோகம் நிரூபணமெனப்படும்.

"அஞ்ஞனான ஜீவன் தனது சுகதுக்கங்களில் அசமர்த்தன்; அவன் ஈசுவரனலேவப்பட்டவனய் எப்போதும் சுவர்க்கத்தை யாவது நரகத்தையாவது அடைகின்றான்" என்னும் நியாயத்தினல் பிராணிகளாற் செய்யப்பட்ட கர்மங்களையபேக்ஷித்து ஈசுவர னுக்குக் கர்த்திருத்துவம் பொருந்துகின்றது.

அங்ஙனமாயின், அவ்வீசுவரனுக்குச் சுவாதந்திரியமில்லாமற் போமே என்றுசங்கித்தல் கூடாது. கரணத்தையன்றிக் கர்த்தவ் வியமின்றெனின் அக்கர்த்தாவிற்குச் சுவாதந்திரியம் நீங்காது; பொக்கிஷத்தலைவனை யபேக்ஷித்து அரசனுக்குப் பிறரை யநுக்கிர கித்தல் முதலியவற்றால் தானம் ஏற்படுவதுபோலும்.

"சுவதந்திரனுக்குப்பராதீனத்தன்மையின்மையும்கரணாதிகளை யபேக்ஷித்துப் பிரயோக்தாவா (செலுத்துகின்றவனு) யிருக்குந் தன்மையுமென்னுமிவை கர்த்தாவிற்குச் சுவாதந்திரியமாம்; கர் மாதிகளை யபேக்ஷியாதிருப்பதன்று" என்று சித்தகுருக்களாற் கூறப்பட்டிருக்கின்றது.

**119.** ஆகையால், அவரவரது கர்மவசத்தால் போக்கியம் அதன் சாதனம், அவற்றின் உபாதனம் என்றறற்றொடக்கத்து விசே ஷங்களையறிந்தவன் கர்த்தா; அவன் அநுமானதிப் பிரமாணத்தாற் சித்திக்கின்றவ னென்றேற்பட்டது.

"போக்கியம், போகசாதனம், அவற்றின் உபாதானம் என்றற் றொடக்கத்தனவற்றை எவனறிகின்றானே அவனைத்தவிர ஜீவா களது கர்மவிபாக (பல)த்தையறிந்த மற்றொரு பூதமும் உலகத்தி லில்லை" என்று பிருகஸ்பதியால் கூறப்பட்டிருக்கின்றது.

"விவாதத்திற்கு விஷயமான உலகம் புத்திமானற் செய்யப் பட்டது; காரியத்தன்மையால், கடாதிபோல என்பது நம்மிருவருக் குஞ் சம்மதம்" என்றும் கூறப்பட்டிருக்கின்றது.

இவ்வீசுவரனுக்குச் சர்வஞ்ஞத்துவம் (முற்றுணர்வு) அவன் எல்லாமாயிருத்தலாலும், அஞ்ஞ (மூட)னுக்குக் காரியத்தை யுண் பண்ணுந்தன்மை சம்பவியாமையாலும் சித்திக்கின்றது.

"சாதனங்கள், பலங்கள், அங்கங்கள் என்னுமிவற்றுடன்கூட எந்தவஸ்துவை எவனறிகிறானே அவன்றான் அதைச்செய்யக்கூடும்

என்பது சித்தம். ஆகையால், ஈசுவரன் சர்வகர்த்தாவாயிருப்பதால் சர்வஞ்ஞன்" என்று மிருகேந்திரத்திற் கூறப்பட்டிருக்கின்றது.

(ஆ) அங்ஙனமாயின், ஈசுவரன் சுதந்திரனை கர்த்தாவாயிருப்பினும் அவன் சரீரமில்லாதவன்; கடமுதலிய காரியங்கள் சரீரத்தோடுகூடிய குலாலன் முதலியவர்களாற் செய்யப்படுவனவாகக் காணப்படுவதால் ஈசுவரனுக்கும் சரீரத்தை யங்கீகரிக்கின் நம்மனோர்போல் அவனும் (பஞ்சக்) கிலேச முடையவனுய்ச் சர்வஞ்ஞத்துவமும் சர்வசக்தித்துவமு மின்றியவனுவன்.

(சு.) இங்ஙனங் கருதுதல் கூடாது; சரீரமின்றிய ஆத்மாவிற்குத் தனது சரீரத்தின் சேஷ்டாதி(சலன முதலியவை)களில் கர்த்திருத்துவம் காணப்படுதலின். மேலும், ஈசுவரனுக்குச் சரீரமுண்டென் றொப்புக்கொள்ளினும், மேற்கூறிய தோஷம் சம்பவியாது. பரமேசுவரனுக்கு மலகர்மாதிகளாய பாசங்கள் சம்பவியாமையின் பிராகிருத (பிரகிருதி சம்பந்தமான) சரீரமில்லை; ஆனுல், சாக்த (சக்தியினுலுண்டான) சரீரமுண்டு. அது சக்திரூபங்களான ஈசானுதி பஞ்சமந்திரங்களாற் கற்பிக்கப்பட்டதென் றறியப்படுகின்றது. "பரமேசுவரனுக்கு ஈசானம் சிரசு, தற்புருஷம் முகம், அகோரம் இருதயம், வாமதேவம் குஹ்யம் (இரகசிய ஸ்தானம்), சத்தியோஜாதம் பாதம்" என்று கூறப்பட்டிருக்கின்றது.

**120.** அநுக்கிரகம், திரோதானம், சங்காரம், ஸ்திதி, உற்பத்தி என்னுமிப் பஞ்சகிர்த்தியங்கட்கும் காரணமாய்த் தனதிச்சையினுலுண்டாக்கப்பட்ட அவ்வீசுவரனுடைய சரீரம் நம்மனோரது சரீரத்திற் கொத்ததன்று.

"ஈசுவரனுடைய சரீரத்திற்கு மலமுதலியவை சம்பவியாமையின் அது சாக்தமேயன்றி நம்மனோரது சரீரத்திற் கொத்ததன்று" என்று மிருகேந்திரத்திற் கூறப்பட்டிருக்கின்றது.

"அவருடைய சரீரம் பஞ்சகிர்த்தியத்திற் குபயோகமாக ஈசான, தற்புருஷ, அகோர, வாமதேவ, முதலிய பஞ்சமந்திரங்களாற் கற்பிக்கப்பட்ட சிரசு முதலியவற்ரேடு கூடியது" என்று மற்ரேரிடத்துங் கூறப்பட்டிருக்கின்றது.

(ஆ.) ஆகமங்களிற் பரமேசுவரனுக்கு ஐந்து முகம், பதினைந்துகண் உண்டென முக்கியமாகச் சரீரேந்திரிய சம்பந்தம் கூறப்பட்டிருக்கின்றமை எங்ஙனம் பொருந்தும்?

(ச.) நீ கூறியதுண்மை. ஆகார (சரீர) மின்றிய ஈசுவர னிடத்துத் தியானம் பூஜைமுதலியவை சம்பவியாமையின் பக்தர் கட்கு அநுக்கிரகஞ்செய்யும் நிமித்தம் அவ்வவ்வாகாரத்தைக்கற்பிப் பதில் யாதொரு விரோதமுமின்று.

"பக்தனை ரக்ஷித்தற்பொருட்டுப் பரமேசுவரனுக்குச் சரீரங் கூறப்பட்டிருக்கின்றது" என்று பௌஷ்கராகமத்திற் கூறப்பட் டிருக்கின்றது.

"ஆகாரத்தோடு கூடினவனென்று நீ நியமமாக வுபாசிக்கத் தக்கவனா யிருக்கின்றாய். புத்தி ஆகாரமற்ற வஸ்துவையடையாது" என்று மற்றோரிடத்துங் கூறப்பட்டிருக்கின்றது.

"சிருஷ்டி, ஸ்திதி, சம்மாரம், திரோபவம், அநுக்கிரகம் என்னும் பஞ்சகிருத்தியமும் பரமேசுவரனுக்குண்டு" எனப் போஜ ராஜாவினால் விரிவாய் நிரூபிக்கப்பட்டிருக்கின்றது.

**121.** இந்தப் பஞ்சகிருத்தியத்திற்கும் சுத்த மார்க்கத்தில் சாக்ஷாத்தாகவே பரமேசுவரன் கர்த்தா; கிருச்சிரமார்க்கத்திலோ அநந்தாதிவாயிலாகக்கர்த்தா. இங்ஙனம் விவேகித்தறிதல்வேண்டும்.

"சுத்தமார்க்கத்திற் சிவனொருவனே கர்த்தா; அஹித மார்க் கத்தில் அநந்தன் கர்த்தா" என ஸ்ரீமத் காணமென்னும் நூலிற் கூறப்பட்டிருக்கின்றது.

**122.** சிவசப்தத்தால் சிவத்துவ சம்பந்தமுள்ளவராயும், வாசக (மந்திர)ங்களோடு கூடினவராயுமுள்ள மந்திரேசுவர மகேசு வர சிவப்பிராப்தியடைந்த முக்தாத்மராகிய இவர்கள் சிவத்து வத்தையடையச் சாதனமான தீக்ஷாதிகளுடன் பதிபதார்த்த மானது சங்கிரகமாக நிரூபிக்கபபட்டது.

**123.** இப்போது இரண்டாவதாகிய பசுபதார்த்தம் நிரூபிக் கப்படுகின்றது. அணு (அணுவன்று), க்ஷேத்திரஞ்ஞன் என்றற் றொடக்கத்துப் பதங்களாலறியத்தக்க ஜீவாத்மா பசு. (அது) சார் வாக மதத்திற்கூறுவதுபோன்று தேகாதி சொரூபமுமன்று; ஒருவன் பார்த்ததை மற்றொருவன் ஸ்மரிக்கமாட்டானென்னும் நியாயத்தினால் ஸ்மரணம் பொருந்தாமற்போம். நியாயமதத்திற் கூறுவதுபோன்று ஜீவாத்மா பிரகாசிய (மற்றொன்றாற் பிரகாசிக் கபபடுகின்றவ)னுமன்று; அநவஸ்தா தோஷம் வருகின்றமையின்.

"ஆத்மா பிரமேயமா (அறிபடு பொருளா) யிருப்பின் அதற்கு வேறாகப் பிரமாதா வொன்றுவேண்டும்; அதுவும் பிரமேயமா யிருப்பின் அதற்கு வேறாகப் பிரமாதா வொன்று வேண்டும்" என்று கூறப்பட்டிருக்கின்றது.

ஜயினமதத்திற் கூறுவதுபோன்று ஜீவன் அவ்வத் தேக (வரம்பு பட்ட பரிமாணமுடையவ)னுமன்று; பௌத்தமதத்திற் கூறு வதுபோன்று க்ஷணிகனுமன்று; தேசகால பரிச்சின்ன மின்றி யிருத்தலின்.

"தேசகால அபரிச்சின்னமாக எந்த வஸ்து விருக்கின்றதோ அது நித்தியம் விபு (வியாபகம்) என்று ஆத்மாவிற்கு விபுத்துவத் தையும் நித்தியத்துவத்தையும் அங்கீகரித்திருக்கின்றனர்" என்று கூறப்பட்டிருக்கின்றது.

அத்வைதமதத்திற் கூறுவது போன்று ஆத்மா ஏகனுமன்று; சுகதுக்காதி அநுபவநியமத்தால் அநேகனென்று பெறப்படு கின்றமையின்.

சாங்கியமதத்திற் கூறுவதுபோன்று ஆத்மா அகர்த்தாவு மன்று; பாசக்கூட்டங்கள் நிவிர்த்தியாகும்போது நித்திய நிரதிசய திருக்சக்தி கிரியாசக்திவடிவ சைதன்னிய சொரூபமான சிவத் துவம் (ஆத்மாவிற்கு) வருகின்றதெனச் சுருதியிற் கூறப்பட்டிருக் கின்றமையின்.

"பாச நிவிர்த்தியுண்டாகும்போது சிவத்துவம் வருகின்றது" என்று மிருகேந்திரத்திற் கூறப்பட்டிருக்கின்றது.

"சைதன்னியம் திருக்கிரியாசக்தி வடிவமாயிருக்கின்றது. அஃ தாத்மாவினிடத்தில் எப்போதும் இருக்கின்றபடியால் முத்தி யிலுமிருக்கின்றது" என்றும் கூறப்பட்டிருக்கின்றது.

"முக்த ஜீவர்களும் சிவசொரூபர்களே; ஆனால், இவர்கள் ஈசு வரப் பிரசாதத்தால் முத்தியடைகின்றனர். அந்த ஈசுவரனொரு வனே அநாதிமுத்தன். அவன் சத்தியோஜாதமுதலிய ஐந்து மந்

திரங்களையும் சரீரமாகவுடையவன்" என்று தத்துவப்பிரகாசத்திலுங் கூறப்பட்டிருக்கின்றது.

**124.** பசுக்கள் (ஜீவர்கள்): விஞ்ஞாநகலர், பிரளயாகலர், சகலர் என மூன்றுபிரிவினராவர். அவர்களுள்,

i. விஞ்ஞானம், யோகம், சந்நியாசமென்னு மிவற்றாலாவது, போகத்தினாலாவது கர்மத்திற்கு நாசம் வரும்போது கர்மநிவிர்த்தியர்த்தமான (கர்மநிவிர்த்திக்கேதுவான) கலாதிகளின் போகமாகிய பந்தமிராமையின் கேவலம் மலமாத்திரமுடையவர் **விஞ்ஞானகல** ரென் றுரைக்கப்படுகின்றனர்.

ii. பிரளயகாலத்திற் கலாதிகள் அடங்கியிருத்தலின் மலகர்மங்களையுடையவர் **பிரளயாகல**ரென் றுரைக்கப்படுகின்றனர்.

iii. மல மாயை கர்மமென்னும் மூன்றுபந்தங்களோடு கூடினவர் **சகல**ரென் றுரைக்கப்படுகின்றனர்.

(1.) அவர்களுள், முதலிற் கூறப்பட்டவர் (விஞ்ஞானகலர்) சமாப்தகலுஷர் (பாவநிவிர்த்தியடைந்தவர்), அசமாப்தகலுஷரென்றிருதிறத்தராவர். அவர்களுள்,

(i.) பாவநிவிர்த்தியடைந்த புருஷசிரேஷ்டராயும் அதிகாரத்திற்குத் தகுதியுடையவராயுமுள்ள ஆத்தியர்களை (முதலிற் கூறப்பட்டவரை)ச் சிவன் அநுக்கிரகஞ்செய்து அநந்தாதிகளாய அஷ்ட வித்தியேசுரரது பதவிகளையடையுமாறு செய்கின்றனன்.

"அனந்தன், சூட்சுமன், சிவோத்தமன், ஏகநேத்திரன், ஏகருத்திரன், திரிமூர்த்திகன், ஸ்ரீகண்டன், சிகண்டி என்னுமிவர் வித்தியேசுரர் "என்று பகுதெய்வத்திய மென்னும் நூலில் வித்தியேசுவரர் எண்மரெனக் கூறப்பட்டிருக்கின்றது.

(ii.) பிந்தியவ (அசமாப்தகலுஷ)ர்களைச் சிவன் கருணையினால் சப்தகோடிமந்திரங்கட்குச் சமமாகச் செய்கின்றனன்.

"பசுக்கள் விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலரெனமுத்திறத்தராவர்; அவர்களுள், விஞ்ஞானகலர் மலமாத்திரத்தோடு கூடினவர்; பிரளயாகலர் மலகர்மங்களோடு கூடினவர், சகலர் மலமாயை கர்மங்களோடு கூடினவர்".

"இம்மூவருள் முந்தியவர் (விஞ்ஞானகலர்) சமாப்தகலுஷர், அசமாப்தகலுஷரென இருதிறத்தராவர். அவர்களுள், முந்திய வரைச் சிவன் அநுக்கிரகஞ்செய்து வித்தியேசுவரஸ்தானத்தி லிருக்குமாறு நியமிக்கின்றான்; பிந்தியவரைச் சப்தகோடி மந்திரங்களாகச் செய்கின்றான்" என்றிங்ஙனம் தத்துவப்பிரகாசத்திற் கூறப் பட்டிருக்கின்றது.

"விஞ்ஞானகலரென்னும் பேருள்ளவர் முந்தியவர், இரண்டாமவர் பிரளயாகலர், மூன்றாமவர் சகலர்; இம்மூவரும் அநுக்கிரகத் திற்குரியவரென்பது சாஸ்திரசம்மதம். அவர்களுள், முதலாமவர் மலமாத்திரத்தோடு கூடினவர், இரண்டாமவர் மலகர்மங்களோடு கூடினவர், மூன்றாமவர் கலைமுதல் பூமிபரியந்தமான தத்துவங்களோடு கூடினவர்" என்று சோமசம்புவிருளுங் கூறப்பட்டிருக் கின்றது.

(2.) பிரளயாகலரும்: பக்குவபாசத்துவயர் (பரிபாகமான பாசமிரண்டினையுடையவர்), தத்விலக்ஷணர் (அவரினும் வேறானவர்) என இருதிறத்தராவர். அவர்களுள், முந்தியவர் மோக்ஷத்தை யடைகின்றனர்; பிந்தியவரோ புரியஷ்டக தேகத்தோடுகூடிக் கர்ம வசத்தால் பல வேறுபாடுள்ள ஜன்மங்களை யடைகின்றனர்.

"பிரளயாகலருள்ளே எவர்கட்கு மலகர்மங்கள் பரிபாகமடைய வில்லையோ அவர்கள் புரியஷ்டக சரீரத்தோடு கூடிக் கர்மவசத் தால் அநேக ஜன்மங்களையடைகின்றனர்" என்று தத்துவப்பிர காசத்திற் கூறப்பட்டிருக்கின்றது.

"அந்தக்கரணம், தி (புத்தி), கர்மம், சக்ஷுராதி இந்திரிய மைந்து என்னுமிவ்வெட்டிற்கும் புரியஷ்டகமென்று பெயர்" என்று தத்துவப்பிரகாசத்திற் கூறப்பட்டிருக்கின்றது. இதற்கு "புரியஷ்டகமாவது புருஷன்தோறும் தனித்தனி சிருஷ்டிகாலந் தொடங்கிப் பிரளயகாலபரியந்தமாவது மோட்சகாலபரியந்த மாவது இருப்பதும் பிருதிவிமுதற் கலைபரியந்தமுள்ள முப்பது தத்துவசொரூபமாயிருப்பதுமான சூக்ஷுமதேகம்" என்று அகோர சிவாசாரியர் வியாக்கியானஞ் செய்திருக்கின்றனர்.

"பிருதிவிமுதல் கலைபரியந்தமுள்ள தத்துவக்கூட்டமானது புருஷன்தோறும் நியமமாயிருக்கின்றது; அந்தப் புருஷன் புவ

ளத்திலுண்டான சர்வசரீரங்களிலும் கர்மவசத்தினுற் சஞ்சரிக்கின்றான்" என்று தத்துவசங்கிரகத்திற் கூறப்பட்டிருக்கின்றது.

மனம், புத்தி, அகங்காரம், சித்தம் என்னுமிவற்றைப் பிரதிபாதிக்கும் அந்தக்கரண சப்தத்தினுல் புருஷனுக்குப் போகக் கிரியையில் அந்தர்க்கதமான கலை, காலம், நியதி, வித்தை, இராகம், பிரகிருதி, குணம் என்னும் பெயருள்ள மற்றைய ஏழுதத்துவத்தையும் உபலக்ஷணமாகக் கொள்ளல்வேண்டும்.

தீ (புத்தி), கர்மம் என்னும் சப்தங்களால் ஞேய (விஷய)மான பஞ்சபூதங்கள், அவற்றின் காரணமான பஞ்சதன்மாத்திரைகள் என்பனவற்றை யறிதல்வேண்டும்.

கரணசப்தத்தினுல் ஞானேந்திரியபஞ்சகம் கன்மேந்திரியபஞ்சகம் என்பனவற்றைக் கிரகித்துக்கொள்ளல்வேண்டும்.

(ஆ.) "சப்த ஸ்பரிச ரூப ரச கந்தம் என்னும் ஐந்தும், புத்தி மனம் அகங்காரம் என்னும் மூன்றுமாகிய விவ்வெட்டும் புரிஷ்டகம்" என்று தத்வப்பிரகாசத்திற் கூறப்பட்டிருக்கின்றது. அங்ஙனமாக, எங்ஙனம் வேறுவிதமாகப் புரியஷ்டகம் கூறப்படும்?

(ச.) நீ கூறியதுண்மை. ஆகையினுற்றுன், மேற்கூறிய சூத்திரத்திற்குப் பூஜ்ஜியரான இராமகண்டரென்பவர் பதசக்திபரமாக வியாக்கியானஞ் செய்திருக்கின்றனர். இதுபற்றி விரித்துக் கூறியதமையும்.

(ஆ.) அங்ஙனமாயின், இஃதெங்ஙனம் புரியஷ்டகமாதல் பொருந்தும்?

(ச.) பூதபஞ்சகம், தன்மாத்திராபஞ்சகம், ஞானேந்திரியபஞ்சகம், கன்மேந்திரியபஞ்சகம், அந்தக்கரண சதுஷ்டயம், இவற்றின்கரணம், பிரகிருதி, கலாதிபஞ்சகம் என்னும் இவற்றுல் புரியஷ்டகசரீரம் ஆக்கப்பட்டிருக்கின்றமையின் விரோதமின்று.

புரியஷ்டகத்தோடும் அதிக புண்ணியத்தோடும் கூடிய சிலரை அநந்தரான மகேசுவரர் அனுக்கிரகஞ்செய்து அவர்கட்குப் பவனங்கட்குப் பதியாயிருக்கும் அதிகாரத்தைக்கொடுக்கின்றார்.

"மகேசுவரர் சிலரை யநுக்கிரகஞ்செய்து அவர்கட்குப் புவனபதித்துவத்தைக் கொடுக்கின்ருர்" என்று கூறப்பட்டிருக்கின்றது.

(3) சகலரும்: பக்குவகலுஷர் அபக்குவகலுஷரென் றிருதிறத்தராவர். அவர்களுள்,

(i.) முந்தினவருக்குப் பரமேசுவரர் அவரது பரிபாகத்தை யநுசரித்து அவரது சக்திக்கேற்றவாறு மண்டலி முதலிய பதங்களாற் கூறப்படுகின்ற நூற்றுப்பதினெட்டான மந்திரேசுவரபதத்தைக் கொடுக்கின்றனர்.

"மற்றையோர் கற்பகால (சிருஷ்டி பிரரம்ப)த்தில் கலாதிகளோடு கூடியிருத்தலின் சகலர்களாயினர். அவர்களுள், நூற்றுப் பதினெண்மரைப் பரமேசுவரர் தமது இச்சையினல் மந்திரேசுவரராகச் செய்கின்றனர். அவர்களுள், எண்மர் மண்டலிகள்; எண்மர் குரோதன் முதலியவர்கள்; வீரேசர், ஸ்ரீகண்டர், சதருத்திரர், ஆக நூற்றுப்பதினெண்மர்" என்று கூறப்பட்டிருக்கின்றது.

அவர்களது கர்மபரிபாகத்தின் ஆதிக்கியத்தை அடக்குவதாலும், தமது சக்தியைக் குறைப்பதாலும் பரமேசுவரர் குருமூர்த்தியாகவந்து தீக்ஷாமூலமாக அவர்கட்கு மோட்சமருள்கின்றனர்.

"பரிபக்குவமான மலத்தையுடையவர்களைப் பரமேசுவரர் மலத்தை நிவிர்த்திக்கும்படியான சக்தியைத்தந்து குருமூர்த்தியாக வந்து தீக்ஷாமூலமாகப் பரதத்துவத்திற் சேர்ப்பிக்கின்ருர்" என்று கூறப்படுகின்றது.

"ஜீவனுக்கு முன்னர் விரோதஞ்செய்துகொண்டிருந்த பாச ஜாலங்களை நிவிர்த்திக்கின்ருர்" என்று மிருகேந்திரத்திலும் கூறப்பட்டிருக்கின்றது.

நாராயணகண்டரால் இவை யாவும் விரிவாகக் கூறப்பட்டிருக்கின்றன; அவ்விடத்தில் விபரமாய்க் காணலாம். கிரந்தம் விரியுமென்னும் பயத்தால் ஈண்டு அவை விஸ்தாரமாக நிரூபிக்கப்படவில்லை.

(ii.) அபக்குவகலுஷர்களான பத்தர்களைப் பரமேசுவரர் அவரவர்களுடைய கர்மங்களுக்கேற்றவாறு போகிகளாகச் செய்கின்றனர்.

"மற்றைய பத்தர் (கட்டுப்பட்டவர்)களை அவரவர்களது கர்மங்களுக்கேற்றவாறு போகத்தை யநுபவிக்குமாறு செய்கின்றான்" என்று கூறப்பட்டிருக்கின்றது.

இங்ஙனம் பசுபதார்த்தம் நிரூபிக்கப்பட்டது. இப்போது மூன்றாவதாகிய **பாசபதார்த்தம்** நிரூபிக்கப்படுகின்றது.

**125.** பாசம்: மலம், கர்மம், மாயை, ரோதசக்தி என நால் வகைத்தாம்.

(ஆ.) சைவாகமங்களில் கிரமமாகப் பதி, பசு, பாசமென்னுமிம்மூன்றும் முக்கியமென்று கூறப்படவில்லையா? அவற்றுள், பதி சிவனென்றும், பசுக்கள் அணுக்களென்றும், பாசம் ஐவகைத்தென்றும் கூறப்பட்டிருக்கின்றன. அங்ஙனமாக, எங்ஙனம் பாசம் நால்வகைத்தென்று கூறுதலமையும்?

(ச.) விந்துவென்பது சிவதத்துவபதத்தாலறியக்கூடியதாயும் மாயாரூபமாயுமிருப்பது. இது சிவபதப்பிராப்தியென்னும் பரமமுத்திக் கேதுவாகாது வித்தியேசுவராதி பதப்பிராப்திக்கு ஏதுவாயிருப்பதாற் பாசமாகவிருக்கின்றது. ஆகையால், விந்துவைப் பாசத்திற்சேர்த்துக் கூறவில்லை. இதில் தோஷமின்று ஆகையாற்றான்,

"பாசம் நால்வகைத்து" என்று தத்துவப் பிரகாசத்திற் கூறப்பட்டிருக்கின்றது.

"மலம், ரோதம், கிரியை, மாயாகாரியம் என்னு மிந்நான்கும் பாசஜாலங்கள்; அவை சங்கிரகமாகத் தர்மமென்னும் பெயரால் கூறப்பட்டிருக்கின்றன" என்று மிருகேந்திரத்திலும் கூறப்பட்டிருக்கின்றது.

(i.) மலம் ஆத்மாவின் திருக்கிரியா சக்திகளை மிகவும் மறைப்பதால் பிராவிருதியெ (மறைப்பதெ)ன்று பெயர் பெறுகின்றது. சுபாவிகமான அசுசி மலம்; அது தனது சுதந்தரத்தினால் ஜீவனைச் சுவாதீனப்படுத்துவதால் பிரோகமென்று பெயர் பெறுகின்றது.

"மலம் ஒன்றாயிருப்பினும் அஃது அநேக சக்தியுடன் கூடியிருப்பதால் புருஷனது திருக்கிரியா சக்திகளை அரிசியை உமியும் செம்பைக் களிம்பும் மறைப்பதுபோல மறைக்கின்றது" என்று கூறப்பட்டிருக்கின்றது.

(ii.) பசை போத (திரோதான) சக்தி. இச்சிவசக்தி பாசத்திற் ரதிட்டானமாயிருத்தலாற் பசுக்களை மறைக்கின்றது. ஆகையால், அதனைப் பாசமென்று கூறுதல் உபசாரமாம்.

"அவற்றுள், நான் பரமானசக்தி; பாசுபதர்க்கும் அநுக்கிரகஞ் செய்கின்றவள்; கருமத்தை பரிசரித்திருப்பதினாற் பாசமென்று உபசாரமாய்ச் சொல்லப்படுகின்றேன்" என்று கூறப்பட்டிருக்கின்றது.

(iii.) (கிரியை)பலத்தை விரும்புகின்றவர்களால் அநுஷ்டிக்கப்படுகின்றபடியால் கருமமென்று பெயர் பெறுகின்றது. அது தருமாதருமவடிவம்; பீஜாங்குரம்போல் பிரவாகரூப அநாதி.

"எங்ஙனம் மலம் அநாதியாயிருக்கின்றதோ அங்ஙனமே கர்மமும் அநாதியாயிருக்கின்றது. இங்ஙனம் அநாதியாயிருத்தல் சித்திக்காவிடத்து எந்தக்காரணத்தால் எந்தக் காரியத்தை யண்டு பண்ணக்கூடும்?" என்று ஸ்ரீமத் காரணத்திற் கூறப்பட்டிருக்கின்றது.

(iv.) இதனிடத்திற் சகல ஜகத்தும் பிரளயகாலத்திற் சக்திவடிவமாயிருப்பதாலும் சிருஷ்டி காலத்தில் விபக்தமா (வெளியா)வதாலும் (இதற்கு) மாயையென்று பெயர்.

"பிரளயகாலத்திற் காரியங்களெல்லாம் சக்தி வடிவமாய் அதனிடத்திலடங்கியிருக்கின்றன; சிருஷ்டி காலத்தில் கலை முதலிய காரியவடிவமாக வியக்தமாகின்றன" என்று ஸ்ரீமத் சௌரபேயமென்னும் நூலிற்கூறப்பட்டிருக்கின்றது.

சண்டதிகமாகக் கூறவேண்டியதாயினும் நூல் விரியுமென்னும் பயத்தால் கூறாது பதார்த்த மூன்றும் நிரூபிக்கப்பட்டன.

"பதி, வித்தை, அவித்தை, பசு, பாசம், காரணம் என்றிங்ஙனம் ஆறுபதார்த்தங்கள் சங்கிரகமாகக் கூறப்பட்டன" என்றற்றொடக்கத்து வாக்கியங்களால் வேறுபிரகாரம் ஞானரத்னாவலி முதலிய கிரந்தங்களிற் கூறப்பட்டிருக்கின்றது. எல்லாம அக்கிரந்தங்களினின்றும் அறிதல்வேண்டும்.

இங்ஙனம் எல்லாம் சமஞ்சசமேயாம் (பூர்த்தியாகச் சொல்லப்பட்டனவேயாம்).

சைவ தரிசனம்

முற்றிற்று.



## எட்டாவது

# பிரத்தியபிஞ்ஞா தரிசனம்.

126. இச்சைவமதத்தில் அபேட்சையற்ற ஜடங்கள் (பந்த மோட்ச) காரணமாமென்பது விருத்தமாயிருத்தலின், அதிற்றிருப்திபடையாது சிலமாகேசுவரர்கள் மதாந்தரத்தை மேற்கொண்டு பரமேசுவரனது இச்சாவசத்தால் ஜகத்சிருஷ்டி உண்டாகின்றதென்று கூறுகின்றனர். சுவசம்வேதனம் (தனதுஞானம்), உபபத்தி (பொருத்தம்), ஆகமம் என்னுமிவற்றாற் சித்தமான பிரத்தியகாத்ம (ஜீவ) தாதாத்மியத்தை யுடையவனும், பலவேறுபாடுள்ள பிரமாண பிரமேயமுதலிய பேதாபேதத்தோடு கூடினவனும் பிறர்முகத்தைப் பாராமையாகிய சுவாதந்தரியத்தை யுடையவனுமுள்ள பரமேசுவரன் தனதாத்மாவாகிய கண்ணாடியில் சர்வ பதார்த்தங்களையும் பிரதிபிம்பம்போல் தோன்றுமாறு செய்கின்றனனென்றுங் கூறுகின்றனர். பாகியாப்பியாந்தரசரியை, பிராணாயாமமுதலிய கிலேசம் என்னுமிவற்றின் பிரயாசமின்றி யாவர்க்கும் எளிதாகவும் புதிதாகவுமுள்ள பிரத்தியபிஞ்ஞாமாத்திரத்தைப் பராபரசித்திக்குபாயமாக அங்கீகரித்துப் பிரத்தியபிஞ்ஞா சாஸ்திரத்தையப்பியாசஞ் செய்கின்றனர். அந்தச்சாஸ்திரம் இவ்வளவினதென்பது ஈண்டுக்காட்டப்படுகின்றது:—

"சூத்திரம், விருத்தி, லகுவிவரணம் குருவிவரண மென்னுட விமரிசினி, பிரகரணம், விவரணமென்னுமிவைகளோடுங் கூடியது பிரத்தியபிஞ்ஞா சாஸ்திரமாம்".

அந்தச் சாஸ்திரத்தின் முதற்சூத்திரம்

"கதஞ்சிதா சாத்தியமகேஸ்வரஃ ஸ்யாத்தாஸ்வியம் ஜநஸ்யாபி யுபகாரமிச்சந், ஸமஸ்தஸம்பத் ஸமவாபதிஹேதும் த, பிரத்தியபிஞ்ஞா முபபாதயாமி" என்பதாம்.

கதஞ்சித-பரமேசுவராபின்ன குருவின் சரணாரவிந்த சேனையினால்; இதற்குப் பரமேசுவரனாற் சேர்க்கப்பட்டதினாலென்பது பொருள். ஆசாத்திய-நான்குபக்கங்களிலும் பரிபூரணமாயிருத்தலின் தன்னாலநுபவிக்கக் கூடியதை யடையுமாறு செய்து; இதனை

அறியவேண்டியதையறிந்திருப்பதால் பிறர்பொருட்டுச்சாஸ்திரஞ் செய்வதி லதிகாரங் காட்டப்பட்டது; அன்றயின், வஞ்சகம் நேரிடும்.

விஷ்ணு பிரம்மா முதலியோர் மாயையினின்றும் வெளிப்பட்டவர்களாயினும் மகாமாயையினு லதிகாரத்தையடைந்தவராயிருக்கின்றனர். எந்தப் பரமேசுவரனது ஐசுவரியலேசத்தினுல் அவர்கள் ஈசுவரர்களாக விருக்கின்றனர்களோ அந்த பரமேசுவரன் அபரிச்சின்னப் பிரகாசானந்தனும், சுதந்தரனும், பரமார்த்தனுமாயிருக்கின்றனன்.

பரமேசுவரனுக்குத் தாசியமா (தாசருடைய தன்மையாவ)வது பரமேசுவரனையடையும் பொருட்டுத் தன்னிஷ்டப் பயனைத்தையும் அவனுக்கு அர்ப்பணஞ்செய்தலாம்; ஆதலால் தாசனும். இதற்குப் பரமேசுவர சொரூபமாகிய சுவாதந்திரியத்திற் குப்பாத்திரனென்பது பொருள்.

‘ஜந’ சப்தத்தினுல் அதிகாரிவிஷயநியமாபாவம் (நியமமின்மை) காட்டப்பட்டது. எவரெவர்க்கு இந்தப் பரமேசுவரனது சொரூபகதனம் (சொரூபத்தைப்புகழ்தல்) ஏற்படுகின்றதோ அவரவருக்கு மகாபலமுண்டாகின்றது; பிரதானமே (முக்கியமான மகாபலமே) பரமார்த்தபலமாயிருத்தலின்.

“ஒருமுறை வியாபகமாயுள்ள சிவத்துவத்தைப் பிரமாணத்தாலாவது சாஸ்திரத்தாலாவது குருவாக்கியத்தாலாவது (ஒருவன்) திடமாகவறிந்தானேயாயின் அவனுக்கு இந்திரியத்தாற் செய்யக்கூடிய காரியமும் பாவனையினுற் செய்யக்கூடிய காரியமு மொன்றுமில்லை. சுவர்ணம் (சிவம்) அறியப்பட்டதேயாயின் கரணத்தை (கிரியையை)யாவது பாவனையையாவது விட்டுவிடலாம்” என்று சிவதிருஷ்டி என்னும் நூலில் பரமகுருவான சோமானந்தாதரென்பவராற் கூறப்பட்டிருக்கின்றது.

‘அபி’ சபதத்தினுற் றனக்கீசுவராபேதத்தை யுண்டென்னும் பூரணத்தன்மையால் தன்னிடத்துப் பரார்த்தசம்பந்துண்டாவதினும் வேறு பிரயோஜனத்தின் அவகாசம் தள்ளப்பட்டது; பரார்த்தமே பிரயோஜனமாகின்றது; அதன் வேறின்மை யதிலிருப்பதால். தேவசாபயானது பிரயோசனமாகமாட்டாது;

ஸ்வார்த்தமோ பிரயோஜனமன்று; பரார்த்தமே பிரயோஜனம். அக்ஷபாதர் "எவ்வர்த்தத்தை யுத்தேசித்துப் (புருஷன்) பிரவிர்த்திக்கின்றானோ அது பிரயோஜனம்" என்று (i-24)ல் கூறியிருக்கின்றனர்.

'உப' என்னும் சப்தமானது சாமீப்பியம் (சமீபம்) என்னும் அர்த்தமுடையது. இதனால் ஜனங்கட்குப் பரமேசுவரனது சமீபத்தை யடைவதாகிய பிரயோஜனம் சித்திக்கின்றது. ஆகையாற்றான் 'சமஸ்தம்' என்று கூறப்பட்டிருக்கின்றது. பரமேசுவரத்தன்மை சித்திக்குமிடத்து அதனாற் சகல சம்பத்தும் சித்திக்கின்றன; மலையிலேறினவனுக்கு அதன்கணுள்ள இரத்தினங்கள் சித்திப்பதுபோலும். பரமேசுவரத்தன்மை சித்தித்தவிடத்து வேண்டத்தக்கது யாதுளது?

"பக்தியென்னும் லக்ஷ்மியோடு கூடினவருக்கு யாசிக்கத்தக்கதுயாதுளது? பக்தியின்றி யிருப்போருக்கு யாசியாமலிருப்பது யாதுளது?" என்று உத்பலாசாரியரால் கூறப்பட்டிருக்கின்றது.

**127.** இங்ஙனம் (சமஸ்தசம்பத்சமவாப்திஹேதும் என்பதன்) சஷ்டீதத்புருஷசமாச (ஆறும்வேற்றுமைத் தொகை) பக்ஷத்தில் இந்தப் பிரயோஜனங் காட்டப்பட்டது. வெகுவ்ரீகிசமாச (அன்மொழித் தொகை) பக்ஷத்திலோ பாகியாப்பியந்தரமான சமஸ்த நித்தியசுக முதலியவற்றுள் எந்தச் சம்பத்துச் சித்திக்கின்றதோ அதன் பூரணப்பிராப்தி எந்தப் பிரத்தியபிஞ்ஞைக் கேதுவா யிருக்கின்றதோ அந்தப்பிரத்தியபிஞ்ஞை சமஸ்த சம்பத்சமவாப்திக்கு (எல்லாச்சம்பத்தையு மடைதற்கு) ஏதுவாயிருக்கின்றது. அந்த மகேசுவரனது பிரத்தியபிஞ்ஞை பிரதிமைகளி லெதிர்முகமான ஞானமாம். உலகத்தில் அவன்றானிந்தச் சைத்திரன் என்னும் பிரதிசந்தானத்தி (ஸ்மிருதியி)னால் எதிர்முகமாயுள்ள வஸ்துவிலுண்டாகின்ற ஞானம் பிரத்தியபிஞ்ஞை என வியவகரிக்கப்படுகின்றது. ஈண்டும் பிரசித்த புராணசித்தமாயும் ஆகம அநுமானாதிகளா லறியப்பட்டவனாயும் பரிபூரணசக்தியுள்ளவனாயுமிருக்கின்ற பரமேசுவரனிடத்துத் தான் அபிமுகமாயிருக்கும்போது அந்தப் பரமேசுவரனது சக்திப் பிரதிசந்தானத்தினால் அந்த ஈசுவரன் நானே என்னும் ஞானமுண்டாகின்றது. இதுவே பிரத்தியபிஞ்ஞையாம்.

“அவற்றுள், ஞானம் சுதசித்தம் (இயல்பாகவே பெறப்பட்டுள்ளது), கிரியை காசியை (காசிக்ஷேத்திரத்தை) யாசிரயித்துக் கொண்டிருக்கின்றது. இது மற்றையோராலும் அறியப்படுகின்றது. இதற்கு வேருனது ஞானமென்று கூறப்படுகின்றது”

“(ஜீவர்களது) அந்தந்தப் பதார்த்தக்கிரமமாக ஞானம் நிரூபிக்கப்படுகின்றது. ஆனந்தசித்ரூபமான பிரமாதா மகேசுவரன்” என்று உதயகரசூனுவாற் (உதயகாரரது புத்திரராற்) கூறப்பட்டிருக்கின்றது.

“எப்போதுஞ் சிவசொரூபமாக அறிகின்ருன், எப்போதும் தனது சொரூபமாகவும் அறிகின்ருன்” என்று சோமாநந்த நாதராலும் கூறப்பட்டிருக்கின்றது.

“ஈசுவரனது ஐக்கிய (ஞான)மன்றி உலகத்தில் (வேறு) ஞானமார்க்கமில்லை. பிரகாசங்கட்கு ஐக்கியமிருப்பதுபோல் அவர்கட்கு ஐக்கியங்கூடும். அவரொருவரே பிரமாதா. பிரமேயங்கள் விஷயங்கள். தொடர்ந்துவருவதற்குக் காரணபூதராயிருத்தலின் அவரே மகேசுவரன். சுத்தஞானக்கிரியைகள் அவரது லீலை” என்று ஞானுதிகாரபரிசமாப்தியிலும் கூறப்பட்டிருக்கின்றது. அபிநவகுப்தாசாரியரால் வியாக்கியானமும் செய்யப்பட்டிருக்கின்றது. அது வருமாறு

“பிரகாசி॰ அவரையநுசரித்தே எல்லாம் பிரகாசிக்கின்றன; அவருடைய பிரகாசத்தினுலெல்லாம் விளங்குகின்றன” என்னும் சுருதியினுல் பிரகாசசித்ரூபத்தின் மகிமையினுல் சகலபதார்த்தங்கட்கும் பிரகாசமுண்டாகின்றதென் றங்கீகரிக்கப்பட்டிருக்கின்றது. ஆகையால், விஷயப்பிரகாசத்திற்கு நீலப்பிரகாசம் பீதப்பிரகாசமென்று (நீலாதி) விஷயசம்பந்தபேதத்தால் பேதம் ஏற்படுகின்றது. உண்மையில், தேசகால ஆகாரங்களால் (அவருக்கு) சங்கோசம் (குவிவு) ஏற்படாமையின் (அவர்) அபேதசொரூபர். அவரே சைதந்நியரூபர், பிரகாசரூபர், பிரமாதா என்று சொல்லப்படுகின்றனர். “சைதந்நியம் ஆத்மா” என்று சிவசூத்திரத்திற் படிக்கப்பட்டிருக்கின்றது. அதற்குச் சித்ரூபத்துவம், அனவச்சின்ன விமரிசத்துவம் (அவன்ருனிவனென்னும் பிரத்தியபிஞ்ஞாவிஷயத் தன்மை), அநந்நியோந்முகத்துவம் (பிறர்முகத்தைப் பாராம

விருக்குந்தன்மை), ஆநந்தைககநத்துவம் (சுகசொரூபத்தன்மை) மாகேசுவரியம் (மகேசுவரசம்பந்தமுடைமை) என்பன பரியாய நாமங்களாம்.

அவனே இந்தப் பாவாத்மா என்பது விமரிசம்.

சுத்தமான ஞானக்கிரியைகள் பாரமார்த்திகங்கள். அவற்றுள், ஞானம் பிரகாசரூபத்தன்மை; கிரியை தானுகவே ஜகத்தைச் சிருஷ்டிக்குந்தன்மை.

"இவனும் ஆநந்தசக்தியோடு கூடியிருத்தலின் இச்சாவசத்தால் இந்தப் பதார்த்தங்களைப் பிரகாசஞ்செய்கின்றுன். இந்தக் கிரியை சிருஷ்டிக்குந்தன்மையாம்" என்று கிரியாதிகாரத்திற் கூறப்பட்டிருக்கின்றது. அதன்முடிவிலும் "கடபடாதி உலகாகாரமாகவேண்டுமென்னும் அவனது இச்சையே கர்த்துருத்தன்மையென்னும் கிரியை" என்று கூறப்பட்டிருக்கின்றது.

"அஃதிருந்தால் இஃதிருக்கின்றது என்பதனுற் பெறப்படும் காரியகாரணபாவமெதுவோ அதுவும் அபேட்சையற்ற ஜடத்திற்குப் பொருந்தாது" என்னும் நியாயத்தினுல் ஜடத்திற்குக் காரணத்தன்மை பொருந்தாது. அநீசுவரனுன சேதன (ஜீவ)னுக்கும் காரணத்தன்மை பொருந்தாது. ஆகையால் அந்தந்த ஜகத்தின் ஜன்மாதி (சட்) பாவவிகாரம், அவற்றின்பேதம், கிரியை என்னுமிவ்வடிவமாக இருக்கவேண்டுமென்னு மிச்சையுள்ளவனும், சுதந்திரனும், பகவானுமுமுள்ள மகேசுவரனது இச்சையே மேலும் மேலும் விர்த்தியடைந்து கிரியை அல்லது விசுவகர்த்துருத்துவமென்று சொல்லப்படுகின்றது.

இச்சாமாத்திரத்தாலேயே ஜகத்தைச் சிருஷ்டிக்கின்றுரென்பதில் திருஷ்டாந்தமும் ஸ்பஷ்டமாகக் காட்டப்பட்டிருக்கின்றது. அது வருமாறு:—

"எங்ஙனம் யோகிகள் மிருத்பீஜம் (மண்ணும் விதையும்) இன்றியே தமதிச்சையினுல் கடாதிகளை யுண்டுபண்ணுகின்றுர்களோ அங்ஙனமேயாம்".

(ஆ.) கடமுதலியவற்றைக் குறித்து மண்முதலியனவே உண்மையிற் காரணமாயிருந்தால் எங்ஙனம் யோகிகள் இச்சாமாத்

திரத்தால் கடாதிகளை யுண்டாக்குவர்? மண்விதை முதலியவற்றா லுண்டாகின்ற கடம் முளை முதலியன யோகியி னிச்சாமாத் திரத்தா லுண்டாகுங் கடமுதலியவற்றினும் வேறேயாம்.

(ச.) ஆண்டும் சாமக்கிரி (காரண) பேதத்தாற் காரிய பேதமிருக்கின்றதென்றறிக. உபாதானமின்றிக் கடாதிகளுக் குற் பத்தியுண்டாதலில்லை. யோகியோ தனதிச்சையினால் பரமாணுக் களைச்சேர்த்து (கடாதிகளை) உண்டுபண்ணுகின்றானென் றெவர்கள் கூறுகின்றார்களோ அவர்கட்குத் திருஷ்ட (பிரத்தியக்ஷசித்த)மான காரியகாரணபாவத்திற்கு விபர்யயம் (மாறுதல்) காணப்படாம லிருந்ததேயாயின் அப்போது கடமானது மண் தண்டம் சக்கர முதலியவற்றையும், தேகமானது ஸ்திரீபுருஷ சையோக முதலிய வற்றையும் அபேட்சிக்குமென் றிவ்வாறு போதித்தல்வேண்டும். அங்ஙனமாயின், யோகியின் இச்சாமாத்திரத்தா லுண்டான கட தேகாதிகளின் உற்பத்தியை நிரூபிக்கமுடியாமற்போம்.

**128.** சேதனனான பகவான் மகாதேவன்; அஷ்டஐஸ்வரியத் தோடு கூடினவன்; தேவதேவன்; தெய்வத்தை (ஊழை) அதிக்கிர மிப்பதிலும் அநுசரிப்பதிலும் மிகவும் சுவாதந்திரிய முடையவன்; ஆகையால் இப்பக்ஷத்திலியாதோர் பொருந்தாமையுமின்று.

"உபாதான முதலிய சாமக்கிரியின்றி ஜகத்தென்னும் சித்தி ரத்தைச் சுவரின்றிச் சித்திரிக்கின்றவரும், காலத்தாற் சிலாகிக்கக் கூடியவருமான சூலபாணியை நமஸ்கரிக்கின்றேன்" என்று வசு குப்தாசாரியராற் கூறப்பட்டிருக்கின்றது.

(ஆ.) பிரத்தியகாத்மாவான ஜீவன் பரமேசுவரனோடு அபேதமாயிருக்குமிடத்து அவனுக்குச் சம்சாரபந்த மெங்ஙன முண்டாம?

(ச.) "இந்தப் பிரமாதாவான ஜீவன் மாயையால் மறை பட்டுக்கர்மமென்னும்பாசத்தாற்கட்டுப்படுகின்றான்; அவன்வித்தை முதலியவற்றால் சித்தனெனன் றறிவிக்கப்பட்டு முக்தனாகின்றான் என்று ஆகமாதிகாரத்திற் கூறப்பட்டிருக்கின்றது.

(ஆ.) பிரமேயமானது பிரமாதாவோடு அபேதம யிருப்பின் பக்தமுத்தர்களுக்குப் பிரமேயவிஷயத்தில் விசேஷ யாது?

(ச.) முத்தன் எல்லாப பிரமேயங்களையும் மகேசுவரன் போல் தன்னோடபேதமாகக் காண்கின்றான்; பத்தனோ தனக்கும் பிரமேயத்திற்கும் பேதமிருக்கின்றதாகக் காண்கின்றான்" என்று தத்துவார்த்த சங்கிரகத்திற் கூறப்பட்டிருக்கின்றது.

(ஆ.) ஜீவனுக்குப் பரமேசுவரத்துவம் இயல்பாயிருக்கு மாயின் அப்போது இந்தப் பிரத்தியபிஞ்ஞையைப் பிரார்த்தித்தல் அனாவசியகமாம்; பிரத்தியபிஞ்ஞைக்கு விஷயமாகாதுள்ள பீஜம் (விதை) சககாரி (துணைக்காரணங்)கள் பூரணமாயிருக்கும்போது அங்குரத்தை (முளையை) யுண்டுபண்ணுமல்லவா. ஆகையால், எக் காரணத்தால் பிரத்தியபிஞ்ஞை வேண்டப்படுகின்றது ?

(ச.) இவ்விரகசியத்தைக்கேட்பாயாக. அர்த்தக்கிரியை: பாகிய அங்குராதிவடிவம், ஆந்தர பிரமாதாவின் பிரீதிவடிவமென இருவகைத்தாம். அவற்றுள், முதலாவது பிரத்தியபிஞ்ஞையை யபேக்ஷிப்பதில்லை; இரண்டாவதோ அதனை யபேக்ஷிக்கின்றது. ஈண்டும் (பிரத்தியபிஞ்ஞையை யங்கீகரிக்குமிடத்தும்), நான் பரமேசுவரனென்னும் சமத்கார (சந்தோஷ)சாரமான பராபர சித்தி சொரூபமான ஜீவேசுவர ஏகத்துவசக்தி: விபூதிவடிவான அர்த்தக்கிரியையாம். இது சொரூபப் பிரத்தியபிஞ்ஞையை யபேக்ஷிக்கின்றது.

(ஆ.) பிரமாத்ரு விஸ்ராந்தி (ஓய்வு) சாரமான அர்த்தக் கிரியை பிரத்தியபிஞ்ஞையை யபேக்ஷிக்கின்றதென யாண்டுங் காணப்படவில்லை?

**129.** (ச.) ஒரு புருஷனது குணகணத்தை (கலியாண குணங்களை)க் கேட்பதனால் விர்த்தியடைந்த காமத்தோடு கூடிய ஒருபெண் மன்மதனாலே கலங்கியசித்தமுடையவளாய் விரகக் கிலேச (காமதாப)த்தைச் சகியாது தன்னுடைய அவஸ்தையைக் கடிதவாயிலாக அவனுக்கறிவித்தாள்; அவன் உடனே வந்தான்; அவனைப் பார்த்தபோது தான்கேட்ட கலியாணகுணங்கள் அவ னிடத்திருக்கக் காணாமையால் அவனிடத்தில் அவளுக்குத் திருப்தி யுண்டாகவில்லை; ஆனாலுடனே அவளது சினேகிதர் அவனுடைய கலியாணகுணங்களை விளக்கிக் காட்டியபோது அவனிடத்து அக்

குணங்களிருப்பதாகக் கண்டு திருப்தியடைந்தாள். அங்ஙனமே தான் விசுவேசுவர சொரூபமாக விளங்கினும், அவ்விளக்கம் அவரது குணஸ்மரணமற்றபோது பூரணபாவத்தை யடைவதில்லை; எப்போது குருவினுபதேசத்தால் மகேசுவரரது சர்வஞ்ஞத்துவம், சர்வகர்த்துருத்துவம் முதலிய உத்கர்ஷஸ்மரணம் உண்டாகின்றதோ அப்போது அந்தக்ஷணமே பூரணாத்துமத்துவசித்தி யுண்டாகின்றது.

"அந்தப்பிரார்த்தனையினால் புருஷன் அவளது சமீபத்தில்வந்து நின்றாலும் அவன் (அவளுக்கு) ஏனையமனிதருக்கொப்பாகவே அறியப்படாதவன்போற்காணப்படுகின்றான். அதனால் அவன் அவளிடத்தில் ரமிக்கமுடியவில்லை. அங்ஙனமே, தான் விசுவேசுவர சொரூபமாகவிருப்பினும், விசுவேசுவரத்தன்மையை யறியாதவரையிற் றனது வைபவத்தை யடைகின்றதில்லை. ஆகையால், அதன் பொருட்டு இந்தப்பிரத்தியபிஞ்ஞை வேண்டப்படுகின்றது" என்று நான்காவது விமரிசத்திற் கூறப்பட்டிருக்கின்றது.

**130.** இம்மதம் அபிநவகுப்தர் முதலிய ஆசாரியர்களால் விஸ்தாரமாகக் கூறப்பட்டிருக்கின்றது. நூல் விரியுமென்னும் பயத்தால் அது சுருக்கமாகக் கூறப்பட்டது.

## பிரத்தியபிஞ்ஞா தரிசனம்

முற்றிற்று.



ஒன்பதாவது

# இரசேசுவர தரிசனம்.

**131.** சில மாகேசுவரர்கள் பரமேசுவரதாதாத்மிய (அபேத) வாதிகளாயிருப்பினும் சரீரம் ஸ்திரமாயிருந்தாற்றான் எம்மதத்தினருக்குஞ் சம்மதமான ஜீவன்முத்தி சித்திக்குமெனச் சம்மதித்துப் பாரத முதலிய பதங்களா லறியக்கூடிய இரசமே சரீரம் ஸ்திரமாயிருப்பதற் குபாயமெனக் கூறுகின்றனர். சம்சாரத்தின் பாரத்தை (எல்லையை)க் கடக்கச் சாதனமாயிருத்தலின் இரசம் பாரதமென்று கூறப்படுகின்றது.

"சம்சாரத்தின் பரமான பாரத்தை இவ்விரசமானது கொடுக்கின்றமையின் அதற்குப் பாரதமென்று பெயர்" என்று கூறப்பட்டிருக்கின்றது.

"(சாதகர் சித்தர் என்னுமிருவருள்) சாதகோத்தமர்களால் அந்தப்பாரதமானது பரார்த்தமென்று கூறப்படுகின்றது. ஆகையால், ஓதேவி! எனது ஒவ்வொரு அங்கத்தினின்று முண்டான இவ்விரசமானது எனக்குச் சமானமாயிருக்கின்றது. எக்காரணத்தால் இஃது எனது தேக இரசமோ அக்காரணத்தால் இரசமென்று கூறப்படுகின்றது" என்று இரசார்ணவத்திலும் கூறப்பட்டிருக்கின்றது.

(ஆ.) வேறு காரணத்தாலும் ஜீவன்முத்தி யுண்டாகின்றமையின் மேற்கூறியது யுக்தியோடு கூடியதன்று.

(ச.) சட்தரிசனங்களிலும்* தேகம் போனபிறகு முத்தியுண்டாகின்றதென்று கூறப்பட்டிருக்கின்றது. அதில் விசுவாச முண்டாகாமையின் சந்தேகமின்றி அதில் பிரவிர்த்தி யுண்டாகாது.

"சட்தரிசனத்திலும் சரீரம்போனபிறகு முத்தியுண்டாகின்றதென்று கூறப்பட்டிருக்கின்றது. உள்ளங்கை நெல்லிக்கனி போல அந்த முத்தியும் பிரத்தியட்சமாகக் காணப்படாமையின் இந்தச்சரீரத்தை இரசாயன (அவிழ்த விசேட)ங்களால் இரட்சித்

* மீமாம்சை, நியாயம், வைசேடிகம், சாங்கியம், யோகம், வேதாந்தம் என்பன சட்தரிசனமாம்.

தல்வேண்டும்" என்று இரசார்ணவத்திலேயே கூறப்பட்டிருக்கின்றது.

"இங்ஙனம் தனம், சரீரம், போக மென்னு மிவற்றை அநித்தியமாகக்கருதி யெஞ்ஞான்றும் (ஒருவன்) முத்தியடையப் பிரயத்தனஞ் செய்தல் வேண்டும்; முத்தியும் ஞானத்தா லுண்டாகின்றது; ஞானமும் (சாஸ்திர)அப்பியாசத்தா லுண்டாகின்றது; அப்பியாசமும் சரீரம் ஸ்திர(சௌக்கிய)மாயிருந்தாற்றானுண்டாகும்" என்று கோவிந்தபகவத் பாதாசாரியரா லுங் கூறப்பட்டிருக்கின்றது.

(ஆ.) சரீரம் நஸ்வர (அநித்திய) மாகக் காணப்படுதலின் அஃதெங்ஙனம் நித்தியமாகும்?

(ச.) அங்ஙனங் கருதாதே. ஆறுகோசமுடைய இச்சரீரம் அநித்தியமாயிருப்பினும் இரச அப்பிரக (அபிரேக்) என்னும் பதங்களால் கூறத்தக்கதாயும், ஹர (பரமேசுவரன்) கௌரி (பார்வதி) சிருஷ்டியினாலுண்டானதாயுமுள்ள சரீரத்திற்கு நித்தியத்துவம் சம்பவிக்கும்.

"எவர் இச்சரீரத்தை விடாமலே ஹர கௌரி சிருஷ்டியினாலுண்டான வேறு சரீரத்தையடைந்திருக்கின்றனரோ, எவருக்கு மந்திரகணம் (மந்திரக்கூட்டம்) கிங்கரர் (வேலைக்காரர்) களாகவிருக்கின்றதோ அப்படிப்பட்ட இரசசித்தர் நமஸ்காரஞ் செய்யத்தக்கவர்" என்று இரசஹிருதயத்திற் கூறப்பட்டிருக்கின்றது.

ஆகையால், ஜீவன்முத்தியை விரும்பும் யோகி முதலில் திவ்விய சரீரத்தைச் சம்பாதித்தல்வேண்டும். ஹர கௌரி சிருஷ்டி சம்பந்தத்தினால் இரசமானது உண்டாயிருப்பதாலும், அப்பிரகம் கௌரியினிடத்தினின்று முண்டாயிருப்பதாலும் அவற்றிற்கு ஹர கௌரி சொரூபங் கூறப்பட்டிருக்கின்றது.

"அப்பிரகம் உனது பீஜம், இரசம் எனது பீஜம்; இவ்விரண்டினையுங் கூட்டின் மரணமும் வறுமையும் நீங்குகின்றன" என்று கூறப்பட்டிருக்கின்றது.

இதுவும் அற்பமாகக் கூறப்பட்டது.

132. தேவர், அசுரர், ரிஷிகள், மனிதர்கள் என்னு மிவர்களுள் அனேகர்இரசத்தின் வன்மையால் திவ்வியசரீரத்தைப்பெற்று [illegible]ந்தரா யிருக்கின்றனர்.

"மஹேசன் முதலிய சிலதேவரும், சுக்கிரன் முதலிய சில அசுரரும், வாலகில்லியர் முதலிய சில ரிஷிகளும், சோமேசன் முதலிய சில அரசர்களும், கோவிந்தபகவத் பாதாசாரியரும், கோவிந்த நாயகரும், சார்வடி, கபிலர், வியாளி, காபாலி, கந்தளாயனர் என்பவரும், இன்னும் அநேக சித்தர்களும் இரசமயமான சரீரத்தைப்பெற்று ஜீவன்முக்தர்களாகச் சஞ்சரிக்கின்றார்கள்" என்று இரசேசுவர சித்தாந்தத்திற் கூறப்பட்டிருக்கின்றது.

"ஓ தேவி! கர்மயோகத்தினால் சரீரம் தரிக்கப்படுகின்றது; கர்மயோகம் இரசம் பவனம் (வாயு) என இருவகைத்தாம்; இரசம் பவனமென்னு மிரண்டும் மூர்ச்சிதமாயின் வியாதியை நீக்குகின்றன; கொல்லப்படின் இறந்தவனை யெழுப்புகின்றன; கட்டுப்படின் ஆகாயத்திற் சஞ்சரிக்கும்படி செய்கின்றன" என் றிவ்வர்த்தம் பரமேசுவரராற் பார்வதிக்கு விஸ்தாரமாகக் கூறப்பட்டிருக்கின்றது.

"எது கனம் சாபல்யம் (சலனம்) என்னு மிவ்விரண்டினையும் விட்டு நாநாவர்ணமாக வாகின்றதோ, இப்படிப்பட்ட விலக்கணம் எவ்விரசத்திற் காணப்படுகின்றதோ அது மூர்ச்சித மென்றுசொல்லப்படுகின்றது" என்று இரசத்திற்கு மூர்ச்சிதசொரூபங் கூறப்பட்டிருக்கின்றது.

"ஈரமாயிருக்குந்தன்மை, கனமாயிருக்குந்தன்மை, வெண்மை, சலனம் என்னுமிவை யெந்த இரசத்திற் காணப்படுகின்றதோ அதனை மிருதசூதக மென்றறிதல் வேண்டும்" என்று இரசத்திற்கு மிருதசூதக (இறந்தவனைப் பிழைப்பிக்கும்) சொரூபமுங் கூறப்பட்டிருக்கின்றது.

"தொடர்ந்திருப்பதாயும், எளிதாயோடக்கூடியதாயும், தேசசோடுகூடியதாயும், நிர்மலமாயும், கனமாயும், அரைப்பதாலுடைந்து விடுவதாயுமிருப்பது பத்த (கட்டுப்பட்ட) இரசத்தின் இலக்கணம்" என்று மற்றோரிடத்திற் கூறப்பட்டிருக்கின்றது.

(ஆ.) (இரசத்திற்கு) ஹரகௌரி சிருஷ்டி சித்தித்ததேயாயின் சரீரத்திற்கு ஸ்திரமாயிருக்குந்தன்மை சித்திக்கும்; அதனை யெவ்வனம் நிரூபித்தல் கூடும்?

(சு.) நீ கூறியது அங்கிகரிக்கத்தக்கதன்று; அஷ்டாதச (18) சமஸ்காரவசத்தால் அது பொருந்துகின்றமையின்.

"அதனது சாதனவிதியில் முதலில் வித்வான்கள் அலங்காரத்தினுல் நிர்மலமான அஷ்டாதச சம்ஸ்காரங்களைப் பிரயத்தனத்தா லறிதல்வேண்டும்" என்று ஆசாரியராற் கூறப்பட்டிருக்கின்றது. சம்ஸ்காரவகை வருமாறு:—

"சுவேதனம் (வியர்வை), மர்த்தனம் (தேய்த்தல்), மூர்ச்சனம் (மூர்ச்சை), ஸ்தாபனம், பாதனம் (வீழ்தல்), நிரோதம் (அடக்கல்), நியமம், தீபனம் (விர்த்தி), ககனகமனம் (ஆகாயத்திற் செல்லல்), பிரமாணம் (துண்டுதுண்டாய் விழுதல்), ஜாரணம் (பொடியாக்கல்), பிதானம் (மறைவு), கர்ப்பத்திருதி (உள்ளிருத்தல்), பாகியத்திருதி (வெளியிலிருத்தல்), க்ஷாரணம் (எரிதல்), ஸராகம் (வர்ணம் வைத்தல்), ஸாரணம் (ஊற்றுதல்), கிராமண வேதபக்ஷணம் (நசுக்கியும் குத்தியும் புசித்தல்) என இரசகர்மங்கள் அஷ்டாதசமாம்.

இவை கோவிந்த பகவத்பாதாசாரியர், சர்வஞ்ஞ இராமேசுவரபட்டாரகர் முதலிய பிராசின ஆசாரியர்களால் விஸ்தாரமாக நிரூபிக்கப்பட்டிருக்கின்றன. கிரந்தம் விரியுமென்னும் பயத்தினுற் சங்கிரகமாகக் கூறினும்.

133. இந்த இரசசாஸ்திரம் தாதுவாதத்திற்காக ஏற்பட்டதென்று கருதுதல்கூடாது; தேகபந்தவாயிலாக மோட்சமே பரமப் பிரயோசனமா யிருத்தலின்.

"ஓ தேவா! லோகபந்தம் (இரும்பு முதலியவற்றைச் சுத்தி செய்தல்) உன்னுற்கூறப்பட்டது; அதனைத் தேகவேதமெனக் கூறுகின்றனர். எந்தத்தேகவேதத்தினுல் ஆகாசசஞ்சாரம் சம்பவிக்கின்றதோ, எங்ஙனம் லோகத்திற் செய்யவேண்டியதோ அங்ஙனம் தேகத்திற் சூதகம் சாதுபுருஷனுற் செய்யத்தக்கது. சரீரத்தையும் லோகத்தையும் சமமாக நினைத்தல்வேண்டும். முன்னர் லோகத்திற் பரீக்ஷைசெய்தல்வேண்டும், பின்னர்த் தேகத்தில் உபயோகப்படுத்தல் வேண்டும்" என்று இரசார்ணவத்திற் கூறப்பட்டிருக்கின்றது.

(ஆ.) சச்சிதாநந்தாத்மக(சச்சிதாநந்தவடிவ)பரதத்துவ ஞானத்தினுலேயே மோக்ஷம் பெறப்படுவதாக எதன் பொருட்டு இத்திவ்விய தேகத்தைச் சம்பாதிக்கும் பிரயாசம்?

(ச.) இது பொருந்தாது; சொஸ்தமான சரீரம் கிடைக்காவிடத்து மோட்சமென்னும் வார்த்தையே பெறப்படாமையின்.

"பல்வகைத்தாய விகற்பமற்றதும் சர்வமார்க்கத்திலும் கூறப்பட்டதுமான சிதாநந்தமானது பிரகாசத்தை யடைந்திருப்பினும் திவ்விய சரீரத்தையடையாத பிராணிகட்கு என்னபயனைச் செய்யும்? எந்தச் சரீரம் சுவாசகாசமுதலிய துக்கமற்றிருப்பினும், ஜரையினால் நழுவிப்போவதாயும், இந்திரிய சஞ்சாரமற்றதாயுமிருக்கின்றதோ அந்தச் சரீரத்தைப் புருஷன் தியானத்திலுபயோகப்படுத்தல் முடியாது. விஷய விருப்பமுள்ள பதினாறுவயது பாலனும், விவேகமற்ற விருத்தனும் எங்ஙனம் மோட்சமடைவர்" என்று இரசஹிருதயத்திற் கூறப்பட்டிருக்கின்றது.

(ஆ.) ஜீவத்துவம் சம்சாரிகத் தன்மையாம்; முக்தத்துவம் அதனினின்றும் விடுபடுந்தன்மையாம். ஆகவே, பரஸ்பரம் (ஒன்றற்கொன்று)விருத்தமாயுள்ள சம்சாரம் முத்தியென்னுமிவை எங்ஙனம் ஒரே ஆதார (சரீர) த்திலிருக்கும்?

(ச.) உனதாசங்கை யங்கீகரிக்கத்தக்கதன்று; விகற்பம் பொருந்தாமையின். சர்வ சாஸ்திரகாரருக்குஞ் சம்மதமான முக்தி ஞேயமா? அன்றா? இரண்டாவது பக்ஷத்தில் மோக்ஷம்முயற்கொம்பிற்கொப்பாம். முதலாவது பக்ஷத்தில் ஜீவனத்தை விடுதல் கூடாது; ஜீவியாமலிருப்பவனுக்கு ஞாதுருத்துவம் (பிரமாத்திருத்தன்மை) பொருந்தாமையின்.

**134.** "ஓ புத்திசாலியே! இரசாங்கமேய மார்க்கத்தில் ஜீவமோக்ஷம் கூறப்பட்டிருக்கின்றது. யுக்திபேதத்தை மேற்கொண்டும் பிரமாணாந்தர சம்வாதத்தோடு கூடியுமுள்ள சர்வதந்திரங்கட்கும் சம்மதமான இந்த மோட்சம் ஞானத்தா லறியத்தக்கதென்றறி; ஜீவிக்காதவன் இந்த ஞேய (மோட்ச) த்தை யறியமாட்டான்; ஆகையால், (மோட்ச காலத்திலும்) ஜீவனம் இருக்கவே வேண்டும்" என்று இரசேசுவர சித்தாந்தத்திற் கூறப்பட்டிருக்கின்றது.

இப்படிப்பட்ட மோட்சம் ஓரிடத்துங் காணப்படவில்லையென்று கருதவேண்டாம்; விஷ்ணுசுவாமி மதத்தை யநுசரித்தவர்களால் நரசிங்கசரீரம் நித்தியமென நிரூபிக்கப்பட்டிருத்தலின்.

"சத்தாயும், சித்தாயும், நித்தியமாயும், சிந்திக்கக்கூடாத பூர்ணாநந்தமாயும், விஷ்ணு சுவாமிக்குச் சம்மதமாயுமுள்ள சரீரத்தை

யுடைய நரசிங்கரை நமஸ்கரிக்கின்றேன்" என்று சாகாரசித்தி யிற் கூறப்பட்டிருக்கின்றது.

நரசிங்கசரீரம் அவயவத்தோடும் ரூபத்தோடுங் கூடியிருத் தலின் அஃதெங்ஙனம் சத்தாகுமென்றொருவன் ஆட்சேபிப்பானே யாயின் அதற்கு விடைகூறுதும்:—

(1.) ஸனகாதிகளின் பிரத்தியட்சத்தாலும், (2) "ஆயிரந் தலைகளோடு கூடிய புருஷன்" என்றற் றொடக்கத்துச் சுருதிகளா லும், (3) "தாமரைப்பூப்போன்ற நேத்திரங்களையும், நான்கு கரங் களையும், சங்குகதை முதலிய ஆயுதங்களையும் உடைய ஆச்சரியகர மாயுள்ள அக்குழந்தையை" என்றற் றொடக்கத்துப் புராணவசனங் களாலும் பிரசித்தமான நரசிங்கசரீரம் எங்ஙனம் சத்திற்கு வேறாயிருத்தலமையும்? சத்துமுதலிய விசேஷணங்கள் விஷ்ணு சுவாமி பாதசேகரரான ஸ்ரீகாந்தமிசிரரால் நிரூபிக்கப்பட்டிருக் கின்றன. ஆகையினால், நமக்கிஷ்டமானதேகம் நித்தியமாகக்காணப் படவில்லையென மோட்சத்தை விரும்பும் புருஷர்கள் ஆசங்கித்தல் கூடாது.

**135.** ஆகையாற்றான் "வித்தைகட்கு ஸ்தானமாயும், தர் மார்த்த காமமோட்சங்கட்கு மூலமாயும், ஜரா (மூப்பு) மரணமற்ற தாயுமுள்ள இச்சரீரத்தைப் பார்க்கிலும் வேறெது பரம சிரேய சாயிருக்கின்றது?" என்று கூறப்பட்டிருக்கின்றது.

**136.** இரசேந்திர (தலைமையான இரச) மே சரீரத்தை ஜரா மரணமின்றியதாகச் செய்வதில் சமர்த்தமு (வலியு) டையதாயிருக் கின்றது.

"இந்த இரசேந்திரமொன்றே சரீரத்தை ஜராமரணமின்றிய தாகச் செய்கின்றது" என்று கூறப்பட்டிருக்கின்றது.

இரசத்தின் மகாத்மியத்தைப்பற்றிக் கூறத்தக்கது யாதிருக் கின்றது? அதன் தரிசன பரிசன முதலியவற்றாலேயே மிக்கபிர யோசன முண்டாகின்றது.

"தரிசனத்தினாலும், பரிசனத்தினாலும், பட்சணத் (உண்ப)தி னாலும், ஸ்மரணத்தினாலும், பூஜித்தலினாலும், இரசதானத்தி (இரசத்தைப் பிறர்க்குத் தானஞ் செய்வதி)னாலும் அறு வகைப் பலன் காணப்படுகின்றன. பூமியில் கேதாரமுதலிய க்ஷேத்திரங்களிலெவ்வளவு இலிங்கங்க ளிருக்கின்றனவோ அவ

ளவு இலிங்கங்களைத் தரிசித்தலாலுண்டாகும் புண்ணியம் இரச தரிசனத்தினாலுண்டாகின்றது'' என்று இரசார்ணவத்திற் கூறப் பட்டிருக்கின்றது.

"எந்த இரசதரிசனத்தினால் போகம், ஆரோக்கியம், அஜரம் ஜரையின்மை), அமிர்தம் (மரணமின்மை) அடையப்படுகின்ற னவோ அந்த இரசதரிசனம் காசிமுதலிய க்ஷேத்திரங்களிலுள்ள சர்வலிங்கார்ச்சனத்தினும் சிறப்புடையதாம்'' என்று மற்றோரிடத் திற் படிக்கப்படுகின்றது.

"பிரமாதத்தினால் (சோர்வினால்) ஒருவன் இரசநிந்தனையைக் கேட்டானேயாயின் அதற்குப் பிராயச்சித்தமாக இரசத்தியானம் செய்வதுடன் எப்போதும் நிந்தையினாற் பாவியான அந்த நிந்த கனை விரைவில் விலக்கவேண்டும்'' என்று இரச நிந்தைக்குத் தோஷமுங் காட்டப்பட்டிருக்கின்றது.

**137.** ஆகையினால், யாம்கூறியவாறாகத் திவ்வியதேகத்தைச் சம்பாதித்து யோகாப்பியாசஞ் செய்தல் வேண்டும்; யோகாப் பியாசத்தினால் தத்துவ சாக்ஷாத்கார (தரிசன) முண்டாகின்றது; அதனால் புருஷார்த்தப்பிராப்தி யுண்டாகின்றது. அதன்பின்னர்,

"புருவமத்தியிலிருப்பதாயும், அக்கினி மின்னல் சூரியன் போன்று உலகத்தைப் பிரகாசஞ் செய்விப்பதாயுமுள்ள சின்மய ஜோதி சிலபுண்ணிய புருஷர்கட்கு விளங்குகின்றது. ஜோதிசொரூ பம் பரமானந்த ஏகரசமாயும், சுபாவத்தில் விகற்பமற்றதாயும், சர்வக்கிலேசமு மற்றதாயும், தன்னாலறியக்கூடியதாயு மிருக்கின் றது. அதனிடத்து முமுட்சு மனதை நிறுத்திக் காணப்படுகிற சகல ஜகத்தையும் சின்மயமாகப்பார்த்துக் கர்மபந்தங்களின்றி இம்மை யிலேயே பிரஹ்மபாவத்தை யடைகிறான்'' என்பது பெறப்படு கின்றது.

"அந்த ஆத்மாவானது இரசம்; அதனையடைந்து அவன் ஆனந்த முடையவனாகின்றான்'' என்னுஞ் சுருதியும் இதற்குப் பிரமாணமாம்.

**138.** இதனால், துக்கநிவிர்த்திக்குபாயம் இரசமென்றே பெறப்படுகின்றது. ஆகவே, பரப்பிரஹ்மத்திற்குச் சமானம் இரச மென்று பிரதிபாதிக்கப்படுகின்றது. அதுவருமாறு:—

"எந்த இரசமானது ஆவரணம்நீங்கிய புருஷர்கட்குச் சுபாவத்தில் சாத்தியமாக விருக்கின்றதோ, எது மீண்டும் அடைந்த சம்பத்தை நழுவவிடாதிருக்கின்றதோ, ஆத்மாவிழித்துக்கொண்டிருக்கும்போது எது விளங்குகிறதில்லையோ, எது உண்டானபோது மற்றொன்றைத் தெரியப்படுத்துகின்றதில்லையோ, எது தன்னாலேயே தான் விளங்குகின்றதோ, எது பிரஹ்மசொரூபமோ அந்த இரசமானது நீனத்தன்மை(ஏழைமை)யை யுண்டாக்கும் சம்சாரத்தினின்றும் (நம்மை) இரட்சித்தல் வேண்டும்".

## இ ர சே சு வ ர த ரி ச ன ம்

முற்றிற்று.

---

## பத்தாவது

# வைசேஷிக ⁕ (அவலோக்கிய) தரிசனம்

139. இவ்வுலகத்தில் யாவராலும் பிரதிகூல (விரோத) மாக அறியத்தகுந்தது துக்கமாம்; அது யாவருக்கும் அநுபவசித்தமாயிருக்கின்றது. அதனை நிவிர்த்திக்கும் உபாய(சாதன)த்தைத்தேடிய ஜிஞ்ஞாசு (மோட்ச விருப்புள்ளவன்) பரமேசுவர சாட்சாத்காரத்தைச்சாதனமாகவடைகின்றான்; "மனிதர்எப்போது ஆகாசத்தைத் தோல்போற் சுருட்டுகின்றார்களோ அப்போது பரமேசுவர சாட்சாத்காரமின்றி அவர்கட்குத் துக்கநிவிர்த்தி யுண்டாகும்" என்றற்றொடக்கத்துச் * சுருதிகள் பிரமாணங்களா யிருக்கின்றமையின்.

பரமேசுவர சாட்சாத்கார (பிரத்தியட்ச) மும் சிரவண மனன பாவனை (நிதித்தியாசனங்) களா லுண்டாகும்; "(ஒருவன்) ஞானத்திற் கேதுவான வேதத்தாலும் அநுமானத்தாலும் தியானப்பியாச பலத்தாலும் உத்தமமான யோகத்தை யடைகிறான்" என்று கூறப்பட்டிருக்கின்றமையின்.

அச்சிரவண மனன பாவனைகளுள், மனனம் அநுமானத்தின் வசமாயிருக்கின்றது; அநுமானமோ வியாப்தி ஞானத்தின் வசமாயிருக்கின்றது; வியாப்தி ஞானமும் பதார்த்தங்களின் விவேக (பேத ஞான) த்தை யபேட்சிக்கின்றது. ஆதலால் "அதாதோ தர்ம வியாக்யாஸ்யாமः—பிறகு ஆகையால் தர்மத்தை வியாக்கியா

---

* சுவேதாசுவதரம்-vi-20.

⁕ ... லோக்கியர்-கணாதர். இவருக்குக் கணபட்ச ரென்றும் மற்றோர் பெ... இவர் விசேடமென்னுமோர் பதார்த்தத்தை யங்கீகரித்தமை பற்றி அவர்செய்த தர்க்கசாஸ்திரம் விசேஷ சாஸ்திர மென்றும், அவரை வழிபட்டோர் வைசேஷிகரென்றும் கூறுகின்றனர்.

அபிதான சிந்தாமணியென்னும் நூலில் வைசேஷிகர் அவலோக்கிய ரென்று சொல்லப்படுகின்றார். "அக்கபாதர் (கௌதமர்), கணாதர், உலூகர், வத்சரென்னு மிந்நால்வரும் சிவபெருமான் புத்திரர்கள்" என்று வாயு புராணங் கூறுகின்றது.

னஞ் செய்கின்றோம்" என்று ஆரம்பித்துப் பத்து அத்தியாயத்தில் கணுதமகரிஷி சட் (ஆறு) பதார்த்த நிரூபணஞ் செய்திருக்கின்றார். இப் பத்தத்தியாயத்தில் ஒவ்வொன்றும் இரண்டாந்நிகமு(பிரிவு)டையது.

i. முதலாவ தத்தியாயத்தில் சமவேதமான (சமவாய சம்பந்தத்தா லிருப்பதான) எல்லாப் பதார்த்தங்களையுங் கூறியிருக்கின்றனர். அவ்வத்தியாயத்திலும், முதலாவது ஆந்நிகத்தில் ஜாதி விசிஷ்ட (கூடிய) வியக்தி நிரூபணஞ் செய்திருக்கின்றார். இரண்டாவது ஆந்நிகத்தில் ஜாதி விசேஷ மென்பனவற்றின் நிரூபணஞ் செய்திருக்கின்றார்.

ii. இரண்டாவ தத்தியாயத்தில் திரவிய நிரூபணஞ் செய்திருக்கின்றார். அதிலும், முதலாவதாந்நிகத்தில் பூத விசேஷ லட்சணங் கூறியிருக்கின்றார். இரண்டாவ தாந்நிகத்தில் திக்குக் காலங்களின் நிரூபணஞ் செய்திருக்கின்றார்.

iii. மூன்றாவ தத்தியாயத்தில் ஆத்மா அந்தக்கரண மென்னு மிவற்றின் லக்ஷணங் கூறியிருக்கின்றனர். அதிலும், முதலாவ தாந்நிகத்தில் ஆத்மாவின் லக்ஷணமும், இரண்டாவ தாந்நிகத்தில் அந்தக்கரணத்தின் லக்ஷணமும் கூறியிருக்கின்றார்.

iv. நான்காவ தத்தியாயத்தில் 'சரீரம் சரீரத்திற் குபயோகிகளென்னு மிவற்றின் விசாரஞ் செய்திருக்கின்றனர். அதிலும், முதலாவ தாந்நிகத்தில் சரீரத்தி னுபயோகிகளின் விசாரமும், இரண்டாவதாந்நிகத்தில் சரீரவிசாரமுஞ் செய்திருக்கின்றனர்.

v. ஐந்தாவ தத்தியாயத்தில் கருமநிரூபணஞ் செய்திருக்கின்றார். அதிலும, முதலாவ தாந்நிகத்தில் சரீர சம்பந்தமான கர்ம விசாரமும், இரண்டாவ தாந்நிகத்தில் மானசிகமான கர்ம விசாரமுஞ் செய்திருக்கின்றார்.

vi. ஆறாவ தத்தியாயத்தில் சுருதியிற் கூறிய தர்மாதர்ம நிரூபணஞ் செய்திருக்கின்றார். அதிலும், முதலாவ தாந்நிகத்தில் தானப் (ஈதல்) பிரதிக்கிரக (ஏற்றல்) தர்ம பேதங்களின் நிரூபணமும், இரண்டாவ தாந்நிகத்தில நான்காசிரமத்திற்குமுரிய தர்மங்களின் நிரூபணமுஞ் செய்திருக்கின்றார்.

vii. ஏழாவ தத்தியாயத்தில் குணம் சமவாயமென்னு மிவற்றின் நிரூபணஞ் செய்திருக்கின்றார். அதிலும், முதலாவ தாஃநிகத்தில் புத்தியை யபேக்ஷிக்காத குணநிரூபணமும், இரண்டாவதாஃநிகத்தில் புத்தியை யபேட்சித்த குணநிரூபணமும், சமவாய நிரூபணமுஞ் செய்திருக்கின்றார்.

viii. எட்டாவ தத்தியாயத்தில் நிர்விகற்ப சவிகற்பப் பிரத்தியக்ஷ விசாரமும் பிரமாண விசாரமுஞ் செய்திருக்கின்றார்.

ix * ஒன்பதாவ தத்தியாயத்தில் புத்தி விசேஷ நிரூபணஞ் செய்திருக்கின்றார்.

x. † பத்தாவ தத்தியாயத்தில் அநுமானபேதப் பிரதிபாதனஞ் செய்திருக்கின்றார்.

**140.** உத்தேசம், லக்ஷணம், பரீக்ஷை என்று மூன்றுவகையாகச் சாஸ்திரம் பிரவிர்த்திக்கின்றது.

(ஆ.) விபாகத்தை (பிரிவை) யபேக்ஷித்துச் சாஸ்திரத்தின் பிரவிர்த்தி உத்தேசம், லக்ஷணம், பரீக்ஷை, விபாகம் என நால்வகைத்தா யிருக்கின்ற தென்று கூறவேண்டியதாக மூன்று வகையென் றெங்ஙன முரைத்த லமையும்?

(ச.) இங்ஙனங் கருதவேண்டாம்; விபாகம் விசேஷ உத்தேசத்தில் அந்தர்ப்பாவமா (அடங்கி) யிருக்கின்றமையின்.

**141.** உத்தேசமுதலிய மூன்றனுள் திரவியம், குணம், கர்மம், சாமானியம், விசேஷம், சமவாயம் எனப் பதார்த்தங்களாறே யென்பது உத்தேசம்.

(வினு) ஈண்டிங்ஙனங் கூறிய கிரமநியமத்திற் கேதுயாது?

(விடை) (1). திரவியம் சகல பதார்த்தங்கட்கு மாதாரமா யிருக்கின்றமையின் பிரதானமா யிருக்கின்றது; அதுபற்றி அது முதலிற் கூறப்படுகின்றது.

---

* ஒன்பதாவ தத்தியாயத்தில் இந்திரிய அகோசர சம்பந்தத்தினுலுண்டாகும் காட்சியும் அநுமானமும் சொல்லப்பட்டிருக்கின்றன வென்றும் பாடபேதமுண்டு.

† பத்தாவ தத்தியாயத்தில் ஆத்மாவின் குணங்களுள் ஒன்றற்கொன்றுள்ள பேதமும், மூன்று காரணமும் சொல்லப்பட்டிருக்கின்றன வென்றும் பாடபேதமுண்டு.

(2). குணம் குணத்துவமாகிய வுபாதியினுல் சர்வத் திரவியங்களினு மிருக்கின்றமையின் அது திரவியத்தின் பின்னர் நிரூபிக்கப்படுகின்றது.

(3). கருமம் சாமனியத்துடன் கூடி யிருக்கின்றமையின் அது குணத்தின் பின்னர் நிரூபணஞ் செய்யப்படுகின்றது.

(4). சாமானியம் (ஜாதி) திரவியம், குணம், கர்மமென்னு மூன்றனையு மாசிரயித்துக்கொண் டிருக்கின்றமையின் அது அவற்றின் பின்னர் நிரூபிக்கப்படுகின்றது.

(5). இதற்குப்பிறகு விசேஷம் சமவாயத்தை யதிகரண(இட)மாக வுடைத்தா யிருக்கின்றமையின் அது நிரூபிக்கப்படுகின்றது.

(6). ஈற்றில் சமவாயம் நிரூபிக்கப்படுகின்றது.

இங்ஙன மிவற்றின் கிரமநியமமாம்.

(ஆ.) அபாவ மென்னுமோர் பதார்த்தமு மிருக்கின்றமையின் பதார்த்தங்களாறே யென்ப தெங்ஙனம்?

(ச.) இங்ஙனம் பதார்த்தங்கள் பாவரூபமா யிருத்தலால் [நாஸ்தியென்னும் பிரதீதிக்கு (இல்லை யென்னும் நிஷேத முகவுணர்ச்சிக்கு) விஷயமா யிராமையால்] பதார்த்தங்களாறே யென்று சொல்லப்பட்டது.

(ஆ.) அங்ஙனமாயினும், எங்ஙனம் ஆறென்னும் நியமம் பொருந்தும்? விகற்பம் பொருந்தாமையின். அங்ஙனமன்றோ, ஆறென்னும் நியமத்தினுல் வியவச்சேத்தியமான (தள்ளத்தக்கதான) வஸ்து பிரமிதமா [பிரமைக்கு (யதார்த்த ஞானத்திற்கு) விஷயமா]? அன்றோ?

i. பிரமிதமென்று கூறுமிடத்து அதனை எங்ஙனம் நிஷேதித்தல் கூடும்?

ii. பிரமிதமன்றென்று கூறுமிடததும் அதனை எங்ஙனம நிஷேதித்தல் கூடும்?

அறிவுள்ள எவனுவது மூஷிகத்தின் கொம்பை நிவிர்த்திக்கப் பிரயத்தனஞ் செய்வானு? (செய்யமாட்டான்).

விகற்பம் பொருந்தாமையின்,(பதார்த்தமாறேயென்னும்)நியம மின்று.

(ச.) இங்ஙனங் கூறுவதடாது. வாதிகளால் அந்தகார (இருட்டு) முதலியன ஏழாவது பதார்த்தமென்று கூறப்படுகின்றன. அவை பாவபதார்த்தமென்று அங்கீகரிக்கப்படுவதில்லை; ஒருசாரார் சக்தி (ஆற்றல்) சங்கியை (எண்) முதலியனவும் அதிக (ஆறுக்கு மேற்பட்ட) பதார்த்தங்களென்று கூறுகின்றனர். அவை பாவ வுணர்ச்சிக்கு விஷயமாயினும், ஏழாவது பதார்த்தமாக ஒப்புக் கொள்ளப்படமாட்டா. ஆகையால், ஏழென்னும் சங்கியாநிஷேதம் பொருந்தும். இதுபற்றிப் பேசிய தமையும்.

திரவிய, குண, கர்மமென்னு மூன்றற்கும் லக்ஷணம் திரவியத் துவ முதலிய ஜாதியாம்.

i. **திரவியத்துவமாவது** (நித்தியமான) ஆகாசத்தும், (அநித் தியமான) அரவிந்தத்தும் சமவாய சம்பந்தமாயிருப்பதாயும், நித் தியமாயும், கந்தத்தி (வாசனை முதலிய குணங்களி)ல் சமவாய சம்பந்தமாயிராததாயுமுள்ள ஜாதி.

ii. **குணத்துவமாவது** சமவாயிகாரணத்திற்கு வேறாயபதார்த் தங்களில் சமவேதமாயும், சத்தை (வியாபக ஜாதி - உண்மைத் தன்மை) க்குச் சாட்சாத் வியாப்பியமாயுமுள்ள ஜாதி.

iii. **கர்மத்துவமாவது** நித்தியபதார்த்தங்களில் சமவாய சம் பந்தமாயிராததும், சத்தைக்குச் சாக்ஷாத் வியாப்பியமாயு முள்ள ஜாதி.

iv. **சாமானியமாவது** துவம்சத்திற்கு அப்பிரதியோகியாய் (அழிவிற் கெதிர்மறையாகாது) அநேகத்தி (திரவிய குண கர்மங் களி)ற் சமவாய சம்பந்தத்தினுலிருப்பது.

v. **விசேஷமாவது** அந்நியோந்நியாபாவ (பேத)த்திற்கு அவி ரோதியாயும், சாமானியமற்றதாயும், சமவாயசம்பந்தத்தால்(நித்தி யத்திரவியங்களில்) இருப்பது.

vi. **சமவாயமாவது** சமவாய (ஒற்றுமைச்) சம்பந்தமற்றுச் சம்பந்த வடிவமா யிருப்பது.

இங்ஙனம் ஆறுபதார்த்தங்களின் லக்ஷணம் தனித்தனியாக நிருபணஞ்செய்யப்பட்டது.

1. திரவிய நிருபணம்.

**142.** திரவியம்: பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம், காலம், திக்கு, ஆன்மா, மனம் என ஒன்பது வகைத்து. அவற்றுள், முதல் நான்கு திரவியங்கட்குமலக்ஷணம் பிருதிவித்துவ முதலிய ஜாதியாம்.

(1.) பாக (தேயுவின் கூட்ட) த்தினாலுண்டான ரூபத்திற்குச் சமானாதி கரணமாயு (ஒருநிலைக்களத்திருப்பதாயு)ம், திரவியத்துவத்திற்குச் சாக்ஷாத் வியாப்பியமுமான ஜாதி பிருதிவித்துவமாம்.

(2.) (அநித்தியமான) நதி சமுத்திரங்களில் சமவாய சம்பந்தத்தாலிருப்பதும், ஜலத்தில் (ஜலபரமாணுவில்) சமவாய சம்பந்தத்தாலிருப்பதுமான சாமானியம் ஜலத்துவமாம்.

(3.) (அநித்தியமான) சந்திரன் சுவர்ண முதலியவற்றில் சமவாய சம்பந்தத்தாலிருப்பதும், அக்கினியில் (அக்னிப்பரமாணுவில்) சமவாய சம்பந்தத்தாலிருப்பதுமான சாமானியம் தேயுத்துவமாம்.

(4.) துவக்கிந்திரியத்தில் சமவாய சம்பந்தத்தாலிருப்பதும் திரவியத்துவ சாக்ஷாத் வியாப்பியமுமான ஜாதி வாயுத்துவமாம்.

[(5.)-(7.)] ஆகாசம், காலம், திக்கு என்னுமிவற்றுளொவ்வொன்றும் ஒவ்வொரு வியக்தியாயிருக்கின்றமையின் இவற்றிற்கு அபர (வியாப்பிய) ஜாதியின்று; ஆயினும், ஆகாசம் காலம் திக்கெனப் *பாரிபாஷிகமாக மூன்று சம்ஞை (பெயர்) ஏற்பட்டிருக்கின்றன.

(5.) சையோகத்தாலுண்டாகாத ஜன்னிய விசேஷ (சத்த) குணத்திற்கு அதிகரண (இட) மாயும், விசேஷத்திற்கு அதிகரணமாயு மிருப்பது ஆகாசமாம.

(6.) விபுவாய், திக்கினிடத்தில் சமவாய சம்பந்தத்தாலிராத பரத்துவத்திற்கு அசமவாயி காரணமெதுவோ அதற்கு அதிகரணமாயிருப்பது காலமாம்.

(7.) காலத்தினும் வேறாயும், விசேஷகுண மற்றதாயும், வியாபகமாயுமிருப்பது திக்காம்.

---

* பாரிபாஷிகமாவது - சாஸ்திரத்தின் அசாதாரண சங்கேதம் (இச்சை).

[(8.) (9.)] ஆத்மமனங்கட்கு லக்ஷணம் (முறையே) ஆத்மத்துவமும் மனத்துவமுமாம்.

(8) அமூர்த்த (வடிவுடைப் பொருளல்லாத) திரவியத்தில் சமவாய சம்பந்தத்தாலிருப்பதும் திரவியத்துவ வியாபபியமுமான ஜாதி ஆத்மத்துவமாம்.

(9.) திரவியசமவாயி காரணத்துவ மாகாததும், அணுவில் சமவாய சம்பந்தத்தா லிருப்பதுமான திரவியத்துவ வியாபபிய ஜாதி மனத்துவமாம்.

### 2. குண நிரூபணம்.

**143.** உருவம், இரசம், கந்தம், பரிசம், சங்கியை (எண்), பரிமாணம் (அளவு), பிரதக்துவம் (வேற்றுமை), சையோகம், விபாகம், பரத்துவம், அபரத்துவம், புத்தி, சுகம், துக்கம், இச்சை, துவேஷம், பிரயத்னம் என்னுமிப்பதினேழனையும் கணாதர் (i 1,6) சூத்திரத்திற் கூறினர்.

குருத்துவம் (திண்மை), திரவத்துவம் (நெகிழ்ச்சி), சிநேகம் (பற்று), சம்ஸ்காரம், அதிர்ஷ்டம் (தர்மாதர்மம்), சப்தம் என்னுமிவ்வேழனையும் 'ச' சப்தத்தினு (உம்மையா)ற் கூறினர்.

ஆகக் குணங்கள் இருபத்திநான்காம். அவற்றுள், உருவமுதற் சப்தமீறாய குணங்கட்கு உருத்துவமுதலியஜாதி லக்ஷணமாம்.

நீலவர்ணத்திற் சமவாய சம்பந்தமாயும குணத்துவ வியாப்பியமாயுமுள்ள ஜாதி நீபத்துவமாம்.

இங்ஙனமே ஏனையகுணங்கட்கும் லக்ஷணமறிந்துகொள்க.

### 3. கர்மநிரூபணம்.

**144.** கர்மம்: உட்சேபணம் (எழுதல்), அவக்ஷேபணம (விழுதல்), ஆகுஞ்சனம் (வளைதல்), பிரசாரணம் (நிமிர்தல்), கமனம (நடத்தல்) என ஐவகைத்து.

பிரமணம் (சுழறல்) ரேசனம் (வெளிப்படுதல்) என்னுமிவை கமனத்திலந்தர்க்கதமாம்.

உட்சேபணாதிகட்கு உட்சேபணத்துவ முதலியஜாதி லக்ஷணமாம்.

---

* துவம், சாமானியம், ஜாதி, தன்மை எனபன ஒருபொருட்கிளவி.

அவற்றுள், உட்சேபணத்துவமாவது ஊர்த்துவதேச சம்யோகத்தி (மேலிடத்திற் கூடுத) ற்கு அசமவாயி காரணமாய கர்மத்தில் சமவாய சமபந்தத்தினுலுள்ள கர்மத்துவ வியாப்பிய ஜாதி.

இங்ஙனமே அவக்ஷேபணத்துவ முதலியனவற்றிற்கும் லக்ஷண மறிந்து கொள்க.

4. சாமாநியநிருபணம்.

**145.** சாமாநியம்: பரம் அபரமென் றிருவகைத்து.

பரமான சாமாநியம் சத்தையாம். அது திரவியகுணங்களிலாவது குணகர்மங்களிலாவது சமவாய சம்பந்தத்தினுலிருப்பதாம்.

அபரமான சாமானியம் திரவியத்துவ முதலியனவாம். சாமானியத்தின் லக்ஷணம் முன்னரே கூறப்பட்டது.

5. விசேஷ 6. சமவாய நிருபணம்.

**146.** விசேஷங்கள் பலவாயிருப்பதானும், சமவாயம் ஒன்றுயிருப்பதானும் அவற்றிற்கு விபாகம் சம்பவிக்கமாட்டாது. அவற்றின் லக்ஷணம் முன்னரே கூறப்பட்டது.

துவித்துவ சங்கியையி (இரண்டென்னு மெண்ணி) னும், பாகஜன்னிய குணேற்பத்தியினும், விபாகத்தினுலுண்டான விபாகத்தினும் எவனது ஞானம் மாறுவதின்றே அவன் வைசேஷிகனென்று கூறப்படுகின்றன்.

துவித்துவாதிகளின் உற்பத்திப்பிரகாரம் நிருபிக்கப்படுகின்றது.

**147.** அவற்றுள், முதலில் இந்திரியங்கட்கும் அர்த்த (விஷய) ங்கட்கும் சம்பந்த முண்டாகின்றது; அதனுல் ஏகத்துவ சாமானிய ஞான முண்டாகின்றது; பின்னர் அபேட்சா புத்தி யுண்டாகின்றது; பிறகு துவித்துவ முண்டாகின்றது; பின்னர்த் துவித்துவ சாமானியஞான முண்டாகின்றது; பிறகு துவித்துவகுண ஞானமுண்டாகின்றது; பின்னர்ச் சம்ஸ்கார முண்டாகின்றது.

"ஆதியில் இந்திரியங்கட்கும் அர்த்தங்கட்கும் சந்நிகர்ஷம் (உண்டாகின்றது); அதனுல் ஏகத்துவ சாமானிய ஞானமுண்டாகின்றது; பிறகு இரண்டு பதார்த்தத்தில் ஏகத்துவ ஞான முண்டாகின்றது; பிறகு துவித்துவ முண்டாகின்றது; பிறகு துவித்துவ சாமானியஞான முண்டாகின்றது; பிறகு துவித்துவஞான முண்டாகின்றது; பிறகு திரவியங்க ளிரண்டென்னும் ஞான முண்டா

கின்றது". இங்ஙனம் துவித்துவ முண்டாகுமவகை சொல்லப்பட்டிருக்கின்றது.

துவித்துவாதிகள் அபேட்சாபுத்தி ஜன்னிய மென்பதிற் பிரமாணம் யாது ? இவ்விஷயத்தில் ஆசாரியர்கள் கூறும் சமாதானம் வருமாறு:—

"அபேட்சாபுத்தி துவித்துவாதிகளை யுண்டுபண்ணக்கூடியது; துவித்துவாதிகள் அவ்வபேட்சாபுத்தியினின்றும் பிரிபடாதிருத்தலின் (அவற்றிற்குத் தாமே) வியஞ்ஜகத்துவம் (பிரகாசிக்குந் தன்மை) பொருந்தாமையின்; சப்தத்தைக் குறித்துச் சைமோகம போல்"

"துவித்துவ முதலியன இரண்டேகத்துவத்தை விஷயமாச வுடைய அநித்தியபுத்தியினால் வியஞ்சகமாயிருக்கமாட்டா; அனேகத்தை ஆசிரயித்துக்கொண்டிருக்குங் குணத்தன்மையால; பிருதக்துவாதிகளைப்போல்."

அபேக்ஷாபுத்தி நிவிர்த்தி கிரமம்.

**148.** அபேக்ஷா புத்தியினால் துவித்வோற்பத்தியுண்டாகுங் காலத்து ஏகத்துவ சாமானிய ஞானம் நிவிர்த்தியாகின்றது;

அபேக்ஷாபுத்திக்குத் துவித்துவ (இரண்டன்) சாமாநிய ஞானத்தினால் துவித்துவகுணஞான முண்டாகுங்காலத்து நிவிர்த்தியுண்டாகின்றது; துவித்துவத்திற்கு அபேக்ஷாபுத்தி நிவிர்த்தியினால திரவியபுத்தி யுண்டாகுங் காலத்து நிவிர்த்தியுண்டாகின்றது;

குணஞானத்திற்குத் திரவிய ஞானத்தினாற் சம்ஸ்காரமுண்டாகுங் காலத்து நிவிர்த்தியுண்டாகின்றது;

திரவிய ஞானத்திற்குச் சம்ஸ்காரத்தினால் நிவிர்த்தியுண்டாகின்றது.

"முதலில அபேக்ஷாபுத்தியினால் ஏகத்துவ சாமானிய ஞானம் துவித்வோற்பத்தி காலத்தில நாசமடைகின்றது; பின்னர் அபேக்ஷாபுத்தியும் ஏகத்துவ சாமானிய ஞானத்தினால் நாசமடைகின்றது; துவித்துவகுண ஞானகாலத்து அதனால் துவித்துவம் நிவிர்த்தியடைகின்றது; அபேக்ஷாபுத்தி நாசத்தினால் திரவியஞான முண்டாகும்போது குணபுத்தி நாசமடைகின்றது; திரவியபுத்தியினா

சம்ஸ்காரமுண்டாகின்றது; சம்ஸ்காரத்தினால் திரவியபுத்தி நாசமடைகின்றது" என்று கூறப்பட்டிருக்கின்றது.

ஞானத்திற்கு ஞானாந்தரத்தினால் நாசமுண்டாவதிலும், சம்ஸ்காரத்தினால் நாசமுண்டாவதிலும்

"விவாதத்திற்கு விஷயமான ஞானங்கள் உத்தரோத்தர (பின்பின்) காரியங்களால் நாசமடைகின்றன; க்ஷணிகவிபு (க்ஷணிகமான விபுவின்) விசேஷகுணத் தன்மையால்; சப்தம்போலும்" என்னும் அநுமானம் பிரமாணமாம்.

திரவியாரம்பகமான (திரவியத்தை யுண்டுபண்ணத்தக்கதான) சையோகத்திற்கு விரோதியான விபாகஜனக (பிரிவை யுண்டுபண்ணும்) கர்மசமகாலத்தில் ஏகத்துவ சாமானியஞானத்தினால் ஆசிரய நிவிர்த்தி வருகின்றமையின் அதனாலேயே துவித்துவநிவிர்த்தி யுண்டாகின்றது.

கர்ம முண்டாகும்போது அபேக்ஷாபுத்தி நிவிர்த்தி யாகின்றது. அதனால் துவித்துவம் நிவிர்த்தியாகின்றது.

இவ்விஷயம சுருக்கமாகக் கூறப்பட்டது.

அபேக்ஷாபுத்தியாவது:—நாச ஜனகமான நாசப்பிரதியோகியாகிய புத்தியாம்.

பீலு (அணு) பாகக் கிரமம்.

**149.** எங்ஙனம் துவியணுக நாசமுதல் எத்தனை க்ஷணங்களால் ரூபாதிசகித வேறு துவியணுக முண்டாகின்றதென்னும் விசார முண்டாகும்போது உற்பத்திப் பிரகாரங் கூறப்படுகின்றது.

நோதனாதிக் கிரமத்தினால் துவியணுகநாச முண்டாகின்றது; துவியணுகம் நாசமடைந்த பின்னர்ப் பரமாணுவில் அக்கினி சையோகத்தினால் கருமை முதலிய வர்ணங்கட்கு நிவிர்த்தி யுண்டாகின்றது; கருமை முதலிய வர்ணங்கள் நிவிர்த்தியான காலத்து வேறு அக்கினி சையோகத்தினால் சிகப்பு முதலிய வர்ணங்கள் உண்டாகின்றன; சிகப்பு முதலியன வுண்டாயிருக்கும்போது அதிர்ஷ்டத்துடன் கூடிய ஆத்மசம்பந்தம் பரமாணுவில் வருவதால் திரவியாரம்பக்கிரியை யுண்டாகின்றது; அந்தக்கிரியையால்

* நோதனம் - சையோக விசேஷங்களுள் ஒன்று.

பூர்வதேச விபாகம் (முன்னிடத்தினின்றும் பிரிவு) உண்டாகின்றது; விபாகத்தினால் பூர்வதேச சையோக நிவிர்த்தி யுண்டாகின்றது; அது நிவிர்த்தி யடைந்திருக்கும்போது ஏனைய பரமாணுக்களுடன் சையோக முண்டாகின்றது; சையோகத்துடன்கூடிய இரண்டு பரமாணுவினின்றும் துவியணுகமுண்டாகின்றது; துவியணுக முண்டாயிருக்கும்போது காரண குணத்தினாற் காரியமாகிய துவியணுகத்தில் ரூபாதிகுணங்க ளுண்டாகின்றன. இங்ஙனம ஒன்பது க்ஷணங்களின் கிரமம் நிரூபிக்கப்பட்டது.

பத்துக்ஷண முதலிய வேறுபிரகாரம் கிரந்தம் விரியுமென்னும் பயத்தினால் (ஈண்டு) நிரூபணஞ் செய்யவில்லை.

இங்ஙனம் பீலுபாகப்பிரகாரம் நிரூபிக்கப்பட்டது.

பிடர (கட) பாகப் பிரகாரமோ நையாயிகர் சம்மதமாம்.

### விபாகஜ விபாகக்கிரமம்.

**150.** விபாகத்தினாலுண்டாகிற விபாகம்: காரணமாத்திர விபாகத்தினாலுண்டாவது காரண அகாரணத்தினாலுண்டாவது என்றிருவகைத்தாம். அவற்றுள், முதலாவது கூறப்படுகின்றது.

### i. காரணமாத்திர விபாகம்.

காரியத்தை வியாபித்துள்ளகாரணத்தினின் றுண்டானகிரியை எப்போது அவயவாந்தர (வேறு அவயவ)ங்களினின்றும் விபாகத்தை யுண்டுபண்ணுகின்றதோ அப்போது ஆகாசாதி தேசத்தினின்றும் விபாகமுண்டாகின்றதின்று. எப்போது ஆகாசாதி தேச (இட)த்தி னின்றும் விபாக முண்டாகின்றதோ அப்போது அவயவாந்தரத்தினின்றும் விபாக முண்டாவதின்று. விபாக நியம மிதுவாம்.

ககன (ஆகாச) விபாகத்தினாலுண்டாகாத கிரியை திரவியத்தை யுண்டுபண்ணக்கூடிய சையோகத்திற்கு விரோதியான விபாகத்தை யுண்டுபண்ணுகின்றமையின் தூமத்திற்கு அக்கினியினால் வியபிசாரங் காணப்படாமைபோன்று (இதற்கும்) வியபிசாரங்காணப்படவில்லை. ஆகையினால், அவயவத்தின் கர்மம் அவயவாந்தரத்தினின்றும் விபாகத்தை யுண்டுபண்ணுகின்றதேயன்றி ஆகாசாதிதேசத்தினின்றும் (விபாகத்தை) உண்டுபண்ணுவதில்லை. அவ்விபாகத்தினால், திரவியாரம்பகமான சையோகநிவிர்த்தி யுண்டாகின்றது. காரண

பாவத்திறற் காரியாபாவ முண்டாகின்றதென்னும் நியாயத்தினால் அவயவி நிவிர்த்தியாகின்றது. அவயவி நிவிர்த்தியடைந்த பின்னர் அதற்குக் காரணமான அவயவங்களில் விபாகமிருக்கின்றது. அவ் விபாகம் காரியநாசத்தோடுகூடிய காலத்தையாவது சுதந்தரமான அவயவத்தையாவது அபேட்சித்துக் கிரியையோடுகூடிய அவயவம் காரியத்துடன் சேர்ந்திருக்கின்றமையின் ஆகாசாதி தேசத்தினின் றும் விபாகத்தை யுண்டுபண்ணுகின்றதேயன்றி நிஷ்கிரிய (தொழி லின்றிய) வஸ்துவிற்கு விபாகத்தை யுண்டுபண்ணுகின்றதில்லை; காரணமிராமையின். இரண்டாவது கூறப்படுகின்றது.

ii. காரண அகாரண விபாகம்.

அஸ்த(கர)த்தி லுண்டான கர்மம் வேறு அவயவத்தினின்றும் விபாகத்தை யுண்டுபண்ணுவதோடு ஆகாசாதி தேசத்தினின் றும விபாகத்தை யுண்டுபண்ணுகின்றது.

அந்தக்காரண அகாரண விபாகங்கள்,கர்மமானது எத்திக்கைக் குறித்துக் காரியாரம்பத்திற்கு எதிர்முகமாக விருக்கின்றதோ அத் திக்கையபேட்சித்துக் காரிய அகாரிய விபாகங்களை யுண்டுபண்ணு கின்றன.

எங்ஙனம்? அஸ்தாகாச விபாகத்திறற் சரீராகாச விபாகமு டாகின்றது. இவ்விபாகம் சரீரக்கிரியையா லுண்டாவதன்று; அப் போது அந்தச் சரீரம் கிரியையற்றிருக்கின்றமையின். இவ்விபாகம் அஸ்தக்கிரியையினாலு முண்டாவதன்று; வியதிகரண கர்மம் (வே றிடத்துள்ள தொழில்)விபாகத்தை யுண்டுபண்ணமாட்டாமையின். ஆகையினால்,பரிசேஷத்தினால் காரணாகாரணவிபாகம்(காரியாகாரிய விபாகத்தைக் குறித்துக்) காரணமென்றங்கீகரித்தல் வேண்டும்.

அந்தகாரத்தைக் குறித்து வாதிகளின் விவாதம்.

**151.** அந்தகாராதிகளில் பாவத்துவம் நிஷேதிக்கப்படுவது அசங்கதம்; அவ்வந்தகாரத்தில் நால்வகைத்தாய விவாதம் சம்பவிக் கின்றமையின்; அங்ஙனமன்றே,

i. பாட்டர்களும் வேதாந்திகளும் தமசு (இருட்டு) திரவிய மெனக்கூறுகின்றனர்.

ii. ஸ்ரீதராசாரியார் (தமசில்) நீலவர்ணம் ஆரோபிக்கப்பட் டிருக்கின்றதெனக் கூறுகின்றனர்.

iii. பிரபாகர ஏகதேசிகள் (தமசு) ஆலோகத்தி (ஒளியி)ன் ஞானபாவமெனக் கூறுகின்றனர்.

iv. நையாயிகர் முதலியோர் (தமசு) ஆலோகாபாவமெனக் கூறுகின்றனர்.

சமாதானம்.

i. அவற்றுள், (இருள்) திரவியத்துவமென்னும் பக்ஷமானது சம்பவியாது; விகற்பம் பொருந்தாமையின். அந்தகாரம் திரவியமாயின் அஃது ஒன்பது திரவியங்களு ளொன்றா? அல்லது வேறா?

(1) முதலாவது பக்ஷங் கூடாது. எந்தத் திரவியத்திலிதற் கந்தர்ப்பாவம சொல்லுகின்றோமோ அந்தத் திரவியத்திற் கெவ்வளவு குணமுண்டோ அவ்வளவு குணமும் இதற்கு மிருத்தல் வேண்டும். (அங்ஙன மின்று).

(2) தமசு (ஒன்பது) திரவியத்தினும் வேறா யிருக்கின்றதென் பதும் அங்கீகரிக்கத்தக்கதன்று; நிர்க்குணமான அந்தகாரத்திற் குத் திரவியத்துவம் சம்பவியாமையின். ஆகவே, அதற்குத் திரவியாந்தரத்துவம் (வேறு திரவியத்தன்மை) ஒருகாலத்தும் சம்பவியாது.

(ஆ.) தமாலம் (பச்சிலைமரம்) போன்று தமசு கறுப்பாகக் காணப்படுகின்றமையின் எங்ஙனம் அது நிர்க்குணமாம்?

(ச.) எங்ஙனம் ஆகாயம் நீலவர்ண முடையதென்பது பிராந்தியோ அங்ஙனமே தமசு தமாலம்போன்று கறுப்பாயிருக் கின்றதென்பதும் பிராந்தியேயாம்.

பூர்வாசாரியர்மேற் கூறியதோஷம் இதுவரையிற் போதும்.

ii. ஆகையினாற்றான் ஆரோபிதரூபம் தமசென்பதுங் கூடாது; அதிஷ்டான (சாமானிய வடிவ இஃதெனும்) ஞானமின்றி ஆரோபம் சம்பவியாமையாலும், பாகிய (வெளி) ஆலோக (ஒளியின்) சககாரி (துணை)யற்ற சக்ஷுவிற்கு ரூபத்தை ஆரோபிப்பதிற் சாமர்த்தியம் காணப்படாமையாலு மென்க.

இந்த ஞானம் அசாக்ஷுசம் (நேத்திரேந்திரியத்திற்கு விஷயமன்று) என்றுஞ் சொல்லுதல் கூடாது; சக்ஷுரந்வயம் (சக்ஷு

வோடு கூடியது) அநந்யதாஸித்தமா (பிறிதோராற்றாற் பெறப் படாமையா) யிருக்கின்றமையின்.

அபாவம் விதிப்பிரத்தியயத்தினால் வேத்தியம் (இருக்கிற தென்னும் விதிமுக வுணர்ச்சியினால் அறியப்படுவது) அன்றென்று கூறுவதும் உசிதமன்றாம்; பிரளயம், விநாசம், அநவதான (பராமுக) முதலியவற்றில் வியபிசாரம் வருகின்றமையின்.

iii. ஆகையினாற்றான், ஆலோகஞானபாவம் தமசென்பதுங் கூடாது. அபாவம் பிரதியோகியைக் கிரகிக்கும் இந்திரியத்தினால் கிரகிக்கக் கூடியதென்னும் * நியம மிருப்பதனால் மனத்தினாற் கிரஹிக்குந்தன்மை சம்பவிக்கும்.

iv. ஆதலின் ஆலோக (பேரொளியுடைய தேயுப்பொதுமை யின்) அபாவமே தமசா (இருளா)ம்.

அபாவத்தில் பாவதர்ம ஆரோபம் உபபாதனஞ் செய்ய (நிரூ பிக்க) முடியாதென்றுஞ் சொல்லுதல் முடியாது; துக்காபாவத்தில் சுகத்துவ ஆரோபமும், சையோகாபாவத்தில் விபாகத்துவ ஆரோ பமுங் கண்டிருக்கின்றமையின்.

கடாதி அபாவம்போல் ஆலோகாபாவம் ரூபவத்தின் (ரூபத தோடு கூடியதன்) அபாவமாகையால் ஆலோகத்தை யபேக்ஷித் துள்ள சக்ஷுர்ஜன்னிய ஞானத்திற்கு விஷயமென்றுஞ் சொல்லு தல் கூடாது.

எந்த ஞானத்தில் சக்ஷுசானது எதைக் கிரகிப்பதில் எதை யபேக்ஷிக்கின்றதோ அதன் அபாவத்தைக் கிரகிப்பதிலும் அதை யபேக்ஷிக்கின்றதென்னும் இந்நியாயத்தினால் ஆலோகத்தைக் கிர கிப்பதில் ஆலோகாபேக்ஷையின்மையின் அதன் அபாவக்கிரகத் திலும் அதன் (ஆலோகத்தின்) அபேக்ஷையின்று. அதிகரண ஞானத் தின் ஆவசியகமுமில்லை; அபாவ ஞானத்தில் (பிரதியோகியுணர்ச்சி யன்றி) அதிகரண ஞானம் ஆவசியகமென் றங்கீகரியாமையின். அன்றியின், பேரொலியொழிந்ததென்னும் சப்தத்துவம்சப்

* எவ்விந்திரியத்தி (நேத்திரேந்திரியத்தி) னால் எது (கடம்) அறியப் படுகின்றதோ அவ்விந்திரியத்தினால் அதன்கண்ணுள்ள சாமானியமு (ஜாதியு)ம், அதன் சமவாய (ஜாதிக்கும் கடத்திற்கு முள்ள ஒற்றுமைச் சம்பந்த)மும, அதன் (கடத்தின்) அபாவமும் அறியப்படுமெனபது நியமம.

பிரத்தியக்ஷமுண்டாகாமற்போம். ஆகையால், (அபாவ ஞானத்தில் அதிகரண ஞானம் அவசியமாக வேண்டுமென்னும்) உனது வாக்கியம் அப்பிரமாணமாம.

இப்பேத மெல்லாவற்றையும் மனத்துட்கொண்டு பகவானை கணாதர் திரவிய, குண, கர்மங்களினுற்பத்திக்கு வேறாயிருக்கின்றமையின் தமசு அபாவமென்று சூத்திரஞ் செய்தனர். இந்த ஆலோகாபாவம் தமசென்னும் ஞானத்தினு லறியத்தக்கதென்று நிரூபிக்கப்பட்டது.

அபாவப் பிரகரணம்.

**152.** அபாவமோ நிஷேதமுகப் பிரத்தியபத்தி (மறைமுக வுணர்ச்சியி)னாலறியத்தக்க ஏழாவது பதார்த்தம். அது நிரூபிக்கப் படுகின்றது:—

அவ்வபாவம் சமவாய சம்பந்தத்தா லிராமலும் சமவாய சொரூபமற்றதாயு மிருக்கின்றது. அது சம்சர்க்காபாவம், அந்நியோந்நியாபாவமென இருவகைத்து.

சம்சர்க்காபாவமும்:—பிராகபாவம், பிரத்துவம்சாபாவம, அத்தியந்தாபாவமென மூவகைத்து. அவற்றுள்,

i. அநித்தியமாயும் அநாதியாயுமிருப்பது **பிராகபாவமாம்.**

ii. உற்பத்தி யுடையதாயும் நாசமற்றதாயு மிருப்பது **பிரத்துவம்சாபாவமாம்.**

iii. பிரதியோகியை ஆசிரயித்துள்ள அபாவம **அத்தியந்தாபாவமாம்.**

iv. அத்தியந்தாபாவத்தினும் வேறாய் அவதி (எல்லை) யற்ற அபாவம **அந்நியோந்நியாபாவமாம்.**

(ஆ.) அந்நியோந்நியாபாவமே அத்தியந்தாபாவமாம்.

---

* தமசு (ஆலோகாபேக்ஷையின்றிச) சக்ஷுஸ்ஸினால கிரகிக்கப் படுகிறது; ஆனல், வேறெல்லாப் பதார்த்தஙகளின் பிரத்தியட்சத்திற்கும் ஆலோக சையோகத்தோடுகூடிய சக்ஷுஸ்ஸின அபேட்சை யிருக்கின்றது என்றும் பாடமுண்டு.

(ச.) இஃது என்ன பிரமம் (பிராந்தி)! அந்நியோந்நியாபாவமோ தாதாத்மியப்பிரதியோகிகாபாவம் [தாதாத்மிய(அபேத)த்தைப் பிரதியோகியாக வுடைய அபாவம்]. எங்ஙனம்? கடம் படசொரூபமன்று.

சம்சர்க்க(சம்பந்த)ப் பிரதியோகியாயுள்ள அபாவம் அத்தியந்தாபாவமாம். எங்ஙனம்? வாயுவில் ரூப சம்பந்தமின்று.

அபாவம் புருஷார்த்தத்திற்குச் சாதனமாக மாட்டாதென்றுஞ் சங்கித்தல் கூடாது; துக்கத்துவம்சமாகின்ற மோக்ஷமே பரம புருஷார்த்தமா யிருக்கின்றமையின்.

## வைசேஷிக தரிசனம்

முற்றிற்று.

---

| | | |
|---|---|---|
| 1. ஏகத்துவ ஞானம். | அவயவக்கிரியை. | ... ... ... ... ... |
| 2. அபேக்ஷா புத்தி. | அவயவவிபாகம். | அவயவக்கிரியை. |
| 3. { துவித்வோற்பத்தி, ஏகத்வஞானநாசம். | அவயவ சையோகநாசம். | அவயவவிபாகம். |
| 4. துவித்வத்வ ஞானம் | துவித்வாதார நாசம். | அவயவசையோகநாசம். |
| 5. { துவித்வகுணபுத்தி, அபேக்ஷாபுத்தி நாசம். | துவித்வ நாசம். | ஆதாரநாசம். |
| 6. { துவித்வ நாசம், திரவியபுத்தி | ... ... ... ... ... | துவித்வ நாசம். |

பதினொன்றாவது

## நியாய († அக்கபாத) தரிசனம்.

153. துக்க நிவிர்த்திபாகிய மோக்ஷம் தத்துவ ஞானத்தினு லுண்டாகின்றதென் றிதற்கு (நியாய சாஸ்திரத்திற்கு)ச் சமான மான சாஸ்திரத்திலுங் கூறப்பட்டிருக்கின்றது.

"பிரமாண பிரமேய முதலிய பதார்த்தங்களின் தத்துவ ஞானத்தினல் மோட்ச முண்டாகின்றது" எனச் சூத்திரகார (கௌதமர்) கூறுகின்றனர். இதுதான் நியாய சாஸ்திரத்தின் முதற் சூத்திரம்.

154. நியாய சாஸ்திரமோ ஐந்து அத்தியாயங்க ளுடையது. அவற்றுள், ஒவ்வொரு அத்தியாயத்திலும் இரண்டிரண்டு ஆந் நிக மிருக்கின்றன. அவற்றுள்,

(1.) முதலத்தியாயத்தின் முதலாவது ஆந்நிகத்தில் பகவா ஞன கௌதமர் பிரமாண முதலிப ஒன்பது பதார்த்தங்களின் லக்ஷணங்கூறி இரண்டாவது ஆந்நிகத்தில் வாதமுதலிய ஏழு பதார்த்தங்களின் லக்ஷணம் நிரூபித் திருக்கின்றனர்.

(2.) இரண்டாவது அத்தியாயத்தின் முதலாவது ஆந்நிகத் தில் சம்சய விசாரஞ் செய்திருக்கின்றனர்.

‡ பிரமாண சதுஷ்டயங்கட்கு அப்பிராமாண்ய சங்கா (ஆக்ஷேப) நிவிர்த்தியும் செய்திருக்கின்றனர்.

இரண்டாவது ஆந்நிகத்தில் அர்த்தாபத்தி முதலியன அநுமான முதலியவற்றி லந்தர்க்கதமா (அடங்கி யிருப்பதா) மென்று சொல்லப்பட்டிருக்கின்றது.

(3.) மூன்றாவது அத்தியாயத்தின் முதலாவது ஆந்நிகத்தில் ஆத்மா, சரீரம், இந்திரியம், அர்த்தம் (சப்தாதி விஷயம்) என்னு மிவற்றின் நிரூபணஞ் செய்யப்பட்டிருக்கின்றது.

---

† அக்கபாதர் - கௌதமர்; அக்கத்தை (கண்ணை)க் காலிலுடையவ ரென்பது அதன்பொருள்.

‡ பிரமாண சதுஷ்டயம்—பிரத்தியக்ஷ அனுமான உபமான சப்தப் பிரமாணங்கள்

இரண்டாவது ஆந்நிகத்தில் புத்தியும் மனமும் நிரூபிக்கப் பட்டிருக்கின்றன.

(4.) நான்காவது அத்தியாயத்தின் முதலாவது ஆந்நிகத் தில் பிரவிர்த்தி, தோஷம், சாக்காடு, பலம், துக்கம், மோக்ஷம் என்னு மிவற்றின் நிரூபணஞ் செய்யப்பட்டிருக்கின்றது.

இரண்டாவது ஆந்நிகத்தில் தோஷநிவிர்த்தி நிரூபணமும் அவயவியாதி நிரூபணமுஞ் செய்யப்பட்டிருக்கின்றன.

(5.) ஐந்தாவது அத்தியாயத்தின் முதலாவது ஆந்நிகத்தில் ஜாதிபேத நிரூபணஞ் செய்யப்பட்டிருக்கின்றது.

இரண்டாவது ஆந்நிகத்தில் நிக்கிரகஸ்தான (தோல்வித்தான) பேத நிரூபணஞ் செய்யப்பட்டிருக்கின்றது.

பிரமேயசித்திப் பிரமாணாதீன மென்னு நியாயத்தினால் முதலிற் பிரமாணத்தைக்கூறிப் பிறகு அதனை யநுசரித்து லக்ஷ ணங் கூறவேண்டுவ தாகலின், முதலி லுத்தேசிக்கப்பட்ட பிர மாணத்திற்கு முதலில் லக்ஷணஞ் சொல்லப்பட்டிருக்கின்றது.

சாதனத்தினும் வேறாகாததும் பிரமாவியாப்தமாயு மிருப் பது பிரமாணம். இங்ஙனங்கூறின், ஒவ்வொரு சாஸ்திர சித்தாந் தத்திலுஞ் சித்தமான (பெறப்பட்ட) பரமேசுவரப் பிராமாண்யம் கிரகிக்க (அறியப்) பட்டதாய்விடும்.

"மந்திரம் ஆயுள்வேதமென்னு மிவற்றின் பிராமாண்யம் போன்று இந்தச் சாஸ்திரத்திற்கும் பிராமாண்ய மிருக்கின்றது; அப்பிராப்தமான பிராமாண்யத்தை யுடைத்தா யிருக்கின்றமை யின்" என்று சூத்திரகாரர் (2-68-ல்) கூறுகின்றனர். நியாய சாஸ் திர சமுத்திரத்தின் கரையைக்கண்ட மிகுந்த கீர்த்தியையுடைய உதயனாசாரியராலும் குசுமா (புஷ்ப்பா) ஞ்சலி யென்னும் நூலில் நான்காவது ஸ்தபக (பூங்கொ) த்தில்

"மிதி (பிரமிதி) யானது நன்றாக வேறுபிரித் தறிவிக்கின்ற ஞானம்; அதனுடன் கூடிய தன்மை பிரமாத்ருத்துவம்; அந்தப் பிரமாத்ருத்தன்மையின் அசம்பந்தத்தை விலக்குவதே கௌதம மதத்திற் பிராமாண்யமாம்" என்று கூறப்பட்டிருக்கின்றது.

"சாக்ஷாத்கார (பிரத்தியக்ஷ)த் துடன் கூடியும், எப்போ துஞ் சம்பந்தத்துடன்கூடியும், மற்றோர்வாயிலை யபேக்ஷிக்காமலு

முள்ள பூதார்த்தா (கழிந்த காலத்தின் விஷயமா) நுபவத்தில் வைக்க (விஷயமாகச் செய்ய)ப் பட்டும், பிரஸ்தாபத்திலுள்ள சகல வஸ்துக்களின் கிரமத்தை யுடைத்தானவராயும், அஞ்ஞான லேசத்தாலுண்டான தோஷம் நிவிர்த்தியானதினால் நிவிர்த்தியான சங்கையை யுடைத்தானவராயு முள்ள சிவன் எனக்குப் பிரமாணம். ஆகையால், சங்கையின் விர்த்தியாற் கலங்கிய மற்றவர்களது கொள்கையா லென்ன பிரயோசனம்?" என்றும் கூறப் பட்டிருக்கின்றது.

155. அந்தப் பிரமாணம்: பிரத்தியக்ஷம், அநுமானம், உவமானம், சப்தம் என நால்வகைத்து.

156. பிரமேயம்: ஆத்மா, சரீரம், இந்திரியம், அர்த்தம், புத்தி, மனம், பிரவிருத்தி, தோஷம், பிரேத்தியபாவம் (மரணம்), பலம், துக்கம், அபவர்க்கம (மோட்சம்) எனப் பன்னிரண்டு வகைத்து.

157. அனவதாரண (நிச்சயமற்ற) ஞானம் சம்சயம். அது சாதாரண தருமம், அசாதாரண தருமம், விப்பிரதிபத்திலக்ஷணம் என மூவகைத்து.

158. எதனை உத்தேசித்துப் புருஷப் பிரவிர்த்தி யுண்டாகின்றதோ அது பிரயோசனம். அது திருஷ்டம் அதிருஷ்டமென இருவகைத்து. வியாப்தியை யறியக்கூடிய ஸ்தலம் திருஷ்டாந்தம். அது சாதர்மி (சாதிருசி)ய வைதர்மிய பேதத்தா லிருவகைத்து. பிராமாணிகமாக அங்கீகரிக்கப்பட்ட அர்த்தம் (விஷயம்) சித்தாந்தம். அது சர்வதந்திரம், பிரதிதந்திரம், அதிகரணம், அப்பியுபகமம் என நான்குவகைத்து. பரார்த்தாநுமான வாக்கியத்தின் ஏகதேசம் அவயவம். அது பிரதிஞ்ஞை, ஹேது, உதாகரணம், உபநயம், நிகமநம் என்னும் பேதத்தா லைவகைத்து.

159. வியாப்பியாரோபத்தினால் வியாபகாரோபம் தர்க்கம். அது வியாகாதம், ஆத்மாசிரயம், இதரேதராசிரயம், சக்கிரிகாசிரயம், அநவஸ்தை, பிரதிபந்தி கற்பனை, இலாகவ கற்பனை, கௌரவம், உத்சர்க்கம் (சாமானியம்), அபவாதம் (விசேஷம்), வைஜாத்தியம் என்னும் பேதத்தாற் பதினொருவகைத்தாம்.

160. யதார்த்தாநுபவ மென்னும் பெயருடைய பிரமிதி நிர்ணயம். அது சாட்சாத்காரம் (பிரத்தியட்சம்), அநுமிதி, உபமிதி, சாப்தமென்னும் பேதத்தால் நான்குவகைத்து.

161. தத்துவ நிர்ணயத்தைப் பிரயோசனமாக வுடைய கதாவிசேஷம் வாதம்.

162. (சுபட்சஸ்தாபனம் பரபட்ச நிராகரண மென்னும்) உபயசாதனத்துடன் கூடி ஜயிக்கவேண்டு மென்னு மிச்சையுள்ளவன் கதை ஜல்பம்.

163. சுபக்ஷஸ்தாபனமற்ற கதாவிசேஷம் விதண்டை.

164. வாதிப் பிரதிவாதிகள் பக்ஷப் பிரதிபக்ஷத்தைக் கிரகிப்பது கதை.

அசாதகமாயும் ஏதுவென்று அபிமானுக்கப்பட்டு மிருப்பது ஏதுப்போலி. அஃது அசித்தம், சவ்வியபிசாரம், விருத்தம்,பிரகரணசமை, அதீதகாலம் என்னும் பேதத்தால் ஐவகைத்து.

165. சப்தத்தின் விர்த்தி வித்தியாசத்தினுல் பிரதிஷேத (நிராகரி)ப்பதற்கேது சலம். அஃது அபிதான (பெயர்) விர்த்தி வித்தியாசம், தாற்பரியவிர்த்தி வித்தியாசம், உபசாரவிர்த்தி வித்தியாசமென்னும் பேதத்தால் மூவகைத்து.

166. சுவவியாகாத உத்தரம் (தனக்கே பாதகமான விடை) ஜாதி. அது: சாதர்மிய (பொதுவியல்பு) சமை, வைதர்மிய (வேற்றியல்பு) சமை, உத்கர்ஷ (உயர்ச்சி) சமை, அபகர்ஷ (தாட்சி) சமை, வர்ணிய (புகழ்ந்துரை) சமை, அவர்ணிய (பழித்துரை) சமை, விகற்ப சமை, சாத்திய சமை, பிராப்தி (அடைவு) சமை, அப்பிராப்தி (அடையாமை) சமை, பிரசங்க சமை, பிரதி (வேறு) திருஷ்டாந்த சமை, அநுற்பத்தி (உற்பத்தியின்மை) சமை, சம்சய (ஐய) சமை, பிரகரண சமை, அவேது (ஏதுவின்மை) சமை, அர்த்தாபத்தி சமை, அவிசேஷ சமை, உபபத்தி (பொருத்த) சமை, உபலப்தி (விளக்க) சமை, அநுபலப்தி (விளங்காமை) சமை, நித்திய சமை, அநித்திய சமை, காரிய சமை என்னும் பேதத்தா லிருபத்து நான்குவகைத்து.

167. பராபஜய நிமித்தம் (தோல்விக்கேது) நிக்கிரகத்தானம். அது: பிரதிஞ்ஞாஹானி (மேற்கோளழிவு), பிரதிஞ்ஞாந்தரம் (வேறு மேற்கோள்), பிரதிஞ்ஞாவிரோதம் (மேற்கோள் மாறுபாடு), பிரதிஞ்ஞாசந்நியாசம் (மேற்கோள்விடுதல்), ஏத்வந்தரம் (வேற்றேது), அர்த்தாந்தரம் (வேற்றுப்பொருள்), நிரர்த்தகம்

(பொருளின்மை), அவிஞ்ஞாதார்த்தம்(பொருட்போலி), அபார்த்தகம் (பொருளுணரப் படாமை), அப்பிராப்த காலம் (காலம் பெறுமை), நியூனம் (குன்றக்கூறல்), அதிகம் (மிகைபடக்கூறல்), புனருக்தம் (கூறியதுகூறல்), அநநுபாஷணம் (பிற்கூற்றின்மை), அஞ்ஞானம் (அறியாமை), அப்பிரதிபை (விடைதெரிந்தும் விளங்காமையாற் சும்மாவிருத்தல்), விட்சேபம் (தனக்கு வேறுகாரிய மிருக்கின்றதெனக்கூறி வாதத்தை நிறுத்தல்), மதானுஞ்ஞை (தன்குற்றம் பரிகரிக்காது பிறன்குற்றங் கூறல்), பரியநுயோஜ்யோபேக்ஷணம் (எடுத்துக் காட்டற் குரிய தோல்வித் தானத்தை எடுத்துக்காட்டா திருத்தல்), நிரநுயோஜ்யாநுயோகம் (தோல்வியின்றியவனிடத்திற் றோல்வி கூறல்), அபசித்தாந்தம் (சித்தாந்தப் போலி), ஏதுப்போலி என இருபத்திரண்டு வகைத்து.

ஈண்டு ஒவ்வொன்றனுளளுமடங்கிய விசேஷம் அந்த நியாய சாஸ்திரத்தில் வெளிப்படையா யிருப்பினும் நூல் விரியுமென்னும் அச்சத்தால் அது நிரூபிக்கப்படவில்லை.

(ஆ.) பிரமாண முதலிய பதினாறு பதார்த்தத்தைக் கூறுமிந்தச் சாத்திரத்திற்கு நியாய சாத்திரமென்னும் பெயர் எங்ஙனம் பொருந்தும் ?

(ச) நீ வினவிய துண்மையே! ஆயினும், "சிறப்பினால் வியவகார முண்டாகின்றது" என்னும் நியாயத்தினால் நியாயமென்பது பரார்த்தாநுமானமாம். அது சகலவித்தைக்கும் சகல கர்மாநுஷ்டானத்திற்கும் சாதகமா யிருக்கின்றமையின் பிரதானமா யிருக்கின்றது; இருப்பதால், அப்படிப்பட்ட (நியாய சாஸ்திரமென்னும்) வியவகாரம் பொருந்தும்.

"விப்பிரதிபன்ன புருஷனை (வவாததிற்கு விஷயமான ஈசனை)க் கூறுவதாலும் அங்ஙனமே பிரவிர்த்திக்கேதுவாயிருப்பதாலும் அது பரமமானநியாயம்" என்று சர்வஞ்ஞராற் கூறப்பட்டிருக்கின்றது.

168. இவ்வித்தை சர்வ வித்தைக்குந் தீபமாயும், சகல கர்மங்கட்கும் உபாயமாயும், சகல தர்மங்கட்கும் ஆசிரயமாயும் இருக்கின்றதெனத் தீர்மானிக்கப் பட்டிருக்கின்றதென்று பட்சித சுவாமிகளாலும் இந்த ஆன்வீட்சிகி (தர்க்க) வித்தையானது

பிரமாணுதி பதார்த்தங்களுடன் நன்ருகப் பிரிக்கப்பட் டிருக்கின்றது.

(ஆ.) தத்துவ ஞானத்திஞல் மோட்ச முண்டாகுமென்று கூறுமிடத்துத் தத்துவ ஞானமுண்டான வுடனே மோட்ச முண்டாகின்றதா?

(ச.) இல்லையென்று கூறுகின்ருேம். ஆஞல், தத்துவ ஞானத்திஞல் துக்கம், ஜன்மம், பிரவிர்த்தி, தோஷம், மித்தியா ஞானம் என்னு மிவற்றுள் (†) உத்தரோத்தரங்கட்கு நிவிர்த்தி யுண்டாகும்போது பூர்வ பூர்வங்கட்கு நிவிர்த்தி யுண்டாகின்றது. அவற்றுள்,

தேகாதிகளில் ஆத்மபுத்தி மித்தியா ஞானமாம்;

அவற்றிற் கநுகூலமான விஷயத்தில் ராகமு (விருப்பு)ம் பிரதிகூலமான விஷயத்தில் துவேஷமும் தோஷமாம்.

உண்மையில் ஆத்மாவிற்குப் பிரதிகூல அநுகூலமென்னு மிரண்டனுள் யாதொன்று மில்லை.

இராகாதிகள் பரஸ்பரம் (ஒன்றற்கொன்று) சம்பந்தமுடையனவாயிருக்கின்றமையின், மூடன் இராகத்தையடைகிருன்; இராகத்தை யடைந்தவன் மோகத்தை யடைகின்ருன்; மோகத்தை யடைந்தவன் கோபத்தை யடைகின்ருன்; கோபத்தை யடைந்தவன் மோகத்தை யடைகின்ருன்.

இவ்விராக முதலிய தோஷங்களா லேவப்பட்ட பிராணி (ஜீவன்) நிஷேதிக்கப்பட்ட இம்சை, ஸ்தேயம் (களவு) என்றற் ருெடக்கத்தனவற்றைக் காயத்தாற் செய்கின்ருன்; வாக்கால் அநுர்த (பொய்) முதலியவற்றைக் கூறுகின்ருன்; மனத்தாற் பரத்துரோக முதலியவற்றை நினைக்கின்ருன். இத்தன்மைத்தாய பாவப் பிரவிர்த்தியானது அதர்மத்தை யுண்டாக்கு கின்றது.

சிரேஷ்டமானதானம் பிறரைக்காப்பாற்றலென்றற் ருெடக்கத்தன வற்றைக் காயத்தாற் செய்கின்ருன்; வாக்கால் இதமாயும் சத்தியமாயுமுள்ள வார்த்தைகளைக் கூறுகின்ருன்; மனத்

(†) உத்தரோத்தரங்கட்கு - பின்பின்னிருப்பனவற்றிற்கு; பூர்வ பூர்வங்கட்கு - முன்முன்னிருப்பனவற்றிற்கு.

தால் அஹிம்சை (கொல்லாமை) முதலியவற்றை நினைக்கின்றான். இவை புண்ணிய வடிவப்பிரவிர்த்தி; இது தர்மம்.

இவ்விருவகைப் பிரவிர்த்திகள் தத்தமக்குத் தக்கவாறு உத்தமமாயும் அதமமாயுமுள்ள ஜன்மங்களைத் தருகின்றன.

169. ஜன்மமாவது சரீரத்தினுற்பத்தி. சரீரமுண்டானால் பிரதிகூலமா யறியத்தக்க சம்ஸ்கார (வாசனை) வடிவ துக்கமுண்டாகின்றது. மித்தியா ஞானமுதல் துக்க மீறாயுள்ள இவை விச்சேதம் (இடைவெளி) இன்றிப் பிரவிர்த்தித்துக் கொண்டிருக்கின்றன. சம்சார சப்தத்தாற் கூறத்தக்க இவை ஏற்றம்போல் அவதி (எல்லை) யின்றி யநுசரித்துக் கொண்டிருக்கின்றன. எப்போது புருஷ சிரேஷ்டனொருவன் ஜன்மாந்தரத்திற் செய்த புண்ணிய பரிபாக வசத்தால் ஆசாரியோப தேசத்தினால் இச்சர்வப் பிரபஞ்சமும் துக்காயதன (துக்கத்திற் கிருப்பிட) மென்றும் துக்கத்துடன் சம்பந்தப்பட்டதென்று மறிகின்றானோ அப்போது அவை யாவும் தள்ளத்தக்கனவென் றறிகின்றான்.

அறிந்தபிறகு அவற்றின் நிவிர்த்திக்குக் காரணமான அவித்தைமுதலியவற்றை நிவிர்த்திக்க இச்சிக்கிறான். அவற்றின் நிவிர்த்தியுபாயமும் தத்துவ ஞானமுதலியநான்கு ஞானத்தினாற் பிரிக்கப்பட்ட பிரமேயத்தைப் பாவனை பண்ணிக்கொண்டிருக்கிற புருஷனுக்குச் சம்யக் தரிசனமென்னும் பதத்தா லறியக்கூடிய தத்துவஞான முண்டாகின்றது; தத்துவஞானத்தினால் மித்தியா ஞானம் நிவிர்த்தியாகின்றது; மித்தியாஞான நிவிர்த்தியினால் தோஷங்களி னிவிர்த்தி யுண்டாகின்றது; தோஷங்கள் நிவிர்த்தியாகவே பிரவிர்த்தி நிவிர்த்தியாகின்றது; பிரவிர்த்தி நிவிர்த்தியாகவே ஜன்மம் நிவிர்த்தியாகின்றது; ஜன்மம் நிவிர்த்தியாகவே துக்கம் அத்தியந்தம் நிவிர்த்தியாகின்றது; அந்த ஆத்யந்திக துக்க நிவிர்த்தி மோக்ஷமாம்.

நிவிர்த்திக்கு ஆத்யந்திகத்துவமாவது நிவர்த்திய (துக்க)மான ஜாதியத்திற்கு புனரநுற்பத்தி (மீண்டுமுற்பத்தி யின்மை) யாம். "துக்கம், ஜன்மம், பிரவிர்த்தி, தோஷம், மித்தியாஞானமென்னுமிவற்றின்உத்தரோத்தரத்திற்குநாசமுண்டாகும்போது பூர்வபூர்வங்களினாசமுண்டாகின்றது. அத (ஈற்றினாசத்தி) னால் மோக்ஷ முண்டாகின்றது" என்பது கௌதமசூத்திரம்.

(ஆ.) துக்கங்களின் ஆத்யந்திக (மிச்ச மின்றிய) நிவிர்த்தி யாகிய மோக்ஷம் இதுகாறுஞ் சித்திக்காமையின் அது கபோணி குடம் (முழங்கையில் வெல்லத்தை நக்குவது)போ லிருக்கின்றது. ஆகையால், எங்ஙனம் (மோக்ஷம்) சித்தித்ததாக வியவகரிக்கக் கூடும்?.

(ச.) மோக்ஷத்தை யொப்புக்கொண்டுள்ள வாதிக ளியா வரும் மோக்ஷதசையில் ஆத்யந்திகமான துக்கநிவிர்த்தி யுண் டாகின்றதென்னுமர்த்தம் சர்வதந்திர சித்தாந்த சித்தமா யிருப்பதால் இராஜமார்க்கமா யிருக்கிறது. பிரவிர்த்தி யின்றிய வனுக்குத் துக்கமுண்டென்று எவனுவது கூறுவானு? அங்ஙன மன்றே, ஆத்மநாசம் மோக்ஷமென்று கூறுகின்ற மாத்யமிகரது மதத்திலும் துக்கநிவிர்த்தி யுண்டென்பதில் விவாதமின்று.

(ஆ.) சரீராதிகளைப்போல் ஆத்மாவும் துக்கத்திற் கேதுவா யிருப்பதால் அதுவும் நாசஞ்செய்யத்தக்கதாம்.

(ச.) இது சரியன்று; விகற்பம் பொருந்தாமையின்.

(1) ஆத்மா ஞானசந்தானமா? (2) அதனினும்வேறு?

முதலாவதுபக்ஷத்தில், விப்பிரதிபத்தியி (விவாதமி) ல்லை; எவனுவது தன்பக்ஷத்திற் கநுகூலமான அபிப்பிராயத்தைத் தடுப்பானு?

இரண்டாவது பக்ஷத்தில், அவ்வாத்மாநித்தியமாம்; ஆயின், அதற்கு நிவிர்த்தி உண்டாதல் கூடாது; நிவிர்த்தி யுண்டாகாத போது (மோக்ஷத்தையடைய) பிரவிர்த்தியுமுண்டாகாதென்னும் அதிக தூஷணங்களேற்படும். அறிந்தவொருவன் "தன்னுடைய காமத்தின்பொருட்டு யாவும் பிரியமாய்விடுகின்றன" என்னுஞ் சுருதியினுல் மிகவும் பிரியமான ஆத்மாவின் நாசத்தின்பொருட்டு முயற்சிசெய்வானு? செய்யமாட்டான்.

சகல ஜனங்களும் முத்தனென்று வியவகரிக்கின்றுர்கள்.

---

மோக்ஷமடை புருஷனை யாவரும் முத்தனென்று கூறுகின்றுர்களேயன்றி நாசத்தை யடைந்தானென்று கூறுகின்றுரில்லை யென்பது கருத்து.

(ஆ.) தேகமே ஆவரணம்; அதன் நிவிர்த்தி யுண்டாகும் போது சேக்கையி (கூண்டி) னின்றும் நீங்கும் பறவைபோல ஆத்மாவிற்கு எப்போதும் ஊர்த்துவ கமனமே (மேல்நோக்கிச் செல்லுவதே) மோக்ஷம்.

(ச.) அங்ஙனமாயின், ஆத்மா மூர்த்தமா (வடிவுடைப் பொருளா)? அமூர்த்தமா? முதலாவது பக்ஷத்தில் நிரவயவமா? சாவயவமா?

நிரவயவமென்று சொல்லுமிடத்து, நிரவயவமான மூர்த்தம் பரமாணுவென்று பரமாணுவி னிலக்கணம் ஆத்மாவிற்கு வருவதால் பரமாணுவின் தர்மம்போல் ஆத்மதர்மமும் அதீந்திரியமாம்.

சாவயவமென்று கூறுமிடத்து, யாது சாவயவம் அஃதநித்திய மென்னும் பிரதிபந்த பலத்தினால் ஆத்மாவிற்கு அநித்தியத் தன்மை சம்பவிக்கும். அநித்தியத்தன்மை சம்பவிக்கும்போது, ஆத்மாவிற்கு † கிருதப்பிர நா ச மு ம் ‡ அகிர்தாப்பியாகமமும் தடையின்றிச் சம்பவிக்கும்.

(ஜயினர்கள் ஆத்மா) அமூர்த்த மென்று கூறும்பக்ஷத்தில், ஆத்மாவிற்குக் கமனம்பொருந்தாது; அசைவுவடிவினதாய கிரியை மூர்த்தத்திரவியத்தை யாசிரயித்துக்கொண் டிருக்கின்றமையின்.

பராதீனத்தன்மை பந்தம், சுவாதீனத்தன்மை மோட்ச மென்றுகூறும் சார்வாகமதத்திலும் சுவாதீனத்தன்மை துக்க நிவிர்த்தியாமெனின் அங்ஙனங் கூறுவதில் விவாதமின்று.

சுவாதீனத்தன்மை (மோட்சம்) ஐசுவரிய மென்று கூறின் அது விசேஷத்துடன் கூடியும் சமானமாயு மிருக்கின்றமையின் அதை வித்வான்கள் அங்கீகரிப்பதின்று.

பிரகிருதி புருஷனென்னு மிரண்டனது பேதஞானமுண்டா யிருக்கும்போது பிரகிருதி அடங்கிவிடுகின்றது. மேலும், முன்னர்ப் பிரகிருதி புருஷபேதத்தை யங்கீகரித்துப் பின்னர்ப் "புருஷன் சொரூபமாயிருக்கின்றான்; அதுவே முத்தி" எனக்கூறும் சாங்கியமதத்திலும் துக்கநிவிர்த்தி யங்கீகரிக்கப்பட்டிருக்கின்றது.

---

† கிருதப்பிரநாசம்-செய்யப்பட்ட கர்மத்தின் பலன் அநுபவமின்றிக் கெடுதல்.

‡ அகிர்தாப்பியாகமம்-செய்யப்படாத கர்மத்தின் பலன் அநுபவத்திற்கு வருதல்.

170. பிரகிருதி புருஷபேத (விவேக) ஞானம் புருஷனை யாசிரயித்துக் கொண்டிருக்கின்றதா? பிரகிருதியை யாசிரயித்துக்கொண்டிருக்கிறதா? அவற்றுள்,

(1.) அது புருஷனை யாசிரயித்துக்கொண் டிருக்கின்றதென்பது தகுதியன்று; 0 புருஷன் கூடஸ்தனு (நிர்விகாரியா) யிருக்கின்றமையின், ஸ்தான நிரோதம் (இடத்தைத் தடுத்தல்) வருமாகையின்.

(2.) பிரகிருதியை யாசிரயித்துக்கொண் டிருக்கிறதென்பதும் பொருந்தாது; அஃதசேதனமா யிருக்கின்றமையின். மேலும், பிரகிருதியானது பிரவிர்த்தி சுபாவமா? நிவிர்த்தி சுபாவமா?

(க.) முதலாவது பக்ஷத்தில், மோக்ஷம் சம்பவியாது; சுபாவத்திற்கு நாசமின்மையின்.

(உ.) இரண்டாவது பக்ஷத்தில், உடனே சம்சாரம் நிவிர்த்தியாதல் வேண்டும்.

171. நித்திய நிரதிசய சுகப்பிரகாசம் மோட்சமென்பது சர்வஞ்ஞரான பட்டர் முதலியவர்கட்குச் சம்மதமாயினும், அவர்கட்கும் துக்கநிவிர்த்தி யிஷ்டமே; ஆனால், நித்தியசுகம் பிரமாணமார்க்கத்தை யடையமாட்டாது (பிரமாணத்திற்குவிஷயமாகாது). அவ்விஷயத்திற் பிரமாணம் சுருதியெனின், [illegible] கூடாது. † யோக்கியாநுபலப்தி (த கு தி ய [illegible] பாதிதமாகு (மறுக்கப்படு) ம் விஷயத்தில் சுருதிக்கிடனின் [illegible] மிருக்கும்பக்ஷத்தில், "கற்கள்மிதக்கின்றன" என்பதிலு[illegible]ருதி பிரமாணமாகும்.

(ஆ.) சுகாபிவியக்தி (சுகப்பிரகாசம்) மோட்ச மென்னும் பட்சத்தை விட்டுத் துக்கநிவிர்த்தியே மோட்சமென்று கொள்ளுதல் க்ஷீரத்தை (பாலை) விட்டு அரோசகமுள்ளவன் வேம்பின் இரசத்தை விரும்பியதுபோலாம்.

(ச.) உன்வார்த்தை கூத்தாடி வார்த்தை போல்வதா யிருத்தலின் இதற்கு விடைகூறல் அனுவசியகமென்று விட்டாம்.

---

0 அங்ஙனங்கூறின் ஆத்மாமுன்னர், அஞ்ஞானத்தால் மறைபட்டதாம் என்றும் பாடமுண்டு.

† தார்க்கிகமதத்தில் மோக்ஷத்தில் சுகத்தின் உபலத்தி (விளக்கம்) இன்மையின் அதனால் ஆண்டுச் சுகமின்றென்று கூறப்படுகின்றது.

172. சுகம் விசேஷத்தோ (ஏற்றக்குறைவோ)டு கூடியிருப்ப தாலும், பிரத்தியக்ஷமா யிருப்பதாலும், அதற்கு விரோதிக ளிருப்பதாலும், அதற்குச் சாதனத்தை யடைவதில் வெகு கிலே சங்களிருப்பதாலும், அச்சுகம் விஷத்தோடுகூடிய மதுப்போலத் துக்கத்தினின்றும் நீங்காமலிருப்பதால் துக்கத் தொகுதியிலேயே சேரும்.

(ஆ.) இங்ஙனம் ஒன்றைச் சேர்க்கவேண்டுமென்னுங்கருத் துள்ளவனுக்கு மற்றொன்று நழுவிப்போகின்றது (சாணேறமுழஞ் சறுக்குகின்றது) என்னும் நியாயத்தினால் துக்கம்போன்று சுகமும் நாசத்தையடைகின்றது; ஆகையால், இப்பக்ஷம் விரும் பத் தக்கதன்று.

(ச.) அது கூடாது. துக்கசாதனத்தோடுகூடிய சுகசம்பாத கம் (சுகத்தைச்சம்பாதிப்பது) மோட்சமெனக்கூறுவது தப்தாய பிண்டத்தில் (காய்ச்சியஇரும்பில்) சுவர்ணமென்னும் புத்தியினால் பிரவிர்த்தித்த புருஷனுக்குச் சாமியம் (சாதிருசியம்) சம்பவிப் பதுபோலாம்.

அங்ஙனமன்றோ, நியாயப் பிராப்தமான விஷயங்களில் மின்மினிப்பூச்சிபோல் சுகம் காணப்படுகின்றது; அதிலும், துர்த் தினம் (மேகாவரணமுள்ளநாள்)போலிருக்கிற துக்கம் எவ்வளவு! (சுகம் அற்பமாகவும் துக்கமதிகமாகவு மிருக்கின்றன வென்பது கருத்து). அநியாயப் பிராப்தவிஷயத்திலோ யாது உண்டாகும் என்பது மனதினாலும் நினைக்கமுடியாது. புத்திமான்களிவற்றை யுணர்ந்து தம்முடைய அநுபவத்தை மறைக்காமலிருப்பார்களாக. ஆகையினால், பரமேசுவர அநுக்கிரகத்தினால் சிரவணாதிக் கிரம வாயிலாக ஆத்ம சாக்ஷாத்காரத்தையடைந்த புருஷனுக்குப் † பரிசேஷத்தினால் ஆத்யந்த (முற்றும்)துக்க நிவிர்த்தியென்னும் மோக்ஷம் சித்திக்கின்றது. இதில் யாதொரு தோஷமுமின்று.

(ஆ.) ஈசுவரன் உண்டென்பதில் பிரமாணம் யாது? பிரத்தி யக்ஷமா? அநுமானமா? ஆகமமா?

ஈண்டு (ஈசுவரனுண்டென்பதில்) பிரத்தியக்ஷம் பிரவிர்த் திக்கமாட்டாது, ரூபாதிகளிராமையின் அதீந்திரியமாயிருப்பதால்

† பலபொருள்கள் நிகழ்ந்தகாலத்து மற்றவை நிஷேதிக்கப்பட நிற்குமொரு பொருளினுண்டாகும் நிச்சயம் பரிசேஷமெனப்படும்.

அநுமானமும் பிரவிர்த்திக்கமாட்டாது, வியாப்திலிங்கங்க ளிரா மையின்; ஆகமமும் பிரவிர்த்திக்கமாட்டாது, விகற்பம் பொருந் தாமையின். அவ்வாகமம் நித்தியமாயிருந்து ஈசுவரனைப் போதிக் கின்றதா? அநித்தியமாயிருந்து போதிக்கின்றதா?.

முதலாவதுபக்ஷத்தில், அபசித்தாந்தம் வருகின்றது. இரண் டாவதுபக்ஷத்தில், ‡ அந்நியோந்நியாச்சிரயம் வருகின்றது.

உவமாநாதிகளோ பிரமாணமென்று ஆசங்கித்தல் கூடாது. (அவை) நியதவிஷயமா யிருக்கின்றமையின்.

ஆகையால், ஈசுவரன் முயற்கொம்புபோல (அபாவமாக) விருக்கின்றான்.

(ச.) நீ கூறியது பண்டிதாகள மனதில் சமத்காரத்தை (ஆச்சரியத்தை) யுண்டுபண்ணாது.

விவாதத்திற்கு ஆஸ்பத (விஷயமா) ன பர்வதம் சாகரமுத லியனகர்த்தாவோடுகூடியவை; காரியமாயிருப்பதால்; கடம்போல்.

இந்த ஹேது அசித்தமென்று கூறுதல் கூடாது; அவை அவயவத்தோடு கூடியிருத்தலின் காரியமா யிருக்கின்றனவென்று சாதித்தல்கூடும்.

(ஆ.) சாவயவத்துவமாவது யாது? அவயவ சம்யோகித்து வமா? அவயவ சமவாயித்துவமா?

முதலாவதுபக்ஷங் கூடாது; ககநாதிகளில் (ஆகாயமுதலிய வற்றில்) வியபிசாரம்வருவதால். இரண்டாவதுபக்ஷமுங் கூடாது; தந்துத்துவாதிகளில் வியபிசாரம்வருவதால். ஆகையால், சாவ யவத்துவமென்பது பொருந்தாது.

(ச.) இங்ஙனங் கூறுதல்கூடாது; சமவேத திரவியத்துவம் சாவயவத்துவமென்று நிரூபித்திருப்பதால் சொல்லமுடியும்.

அல்லது, சாகராதி (கடல்முதலியன) காரியம்; அவாந்தர மகத்துவ முடையனவாயிருப்பதால் என்னும் அநுமானம் இலகு வாக நிரூபிக்கமுடியும்.

---

‡ இரண்டுபதார்த்தங்களின் பரஸ்பராபேக்ஷை (ஒன்றையொன்று விரும்புதல்) ஒன்றையொன்று பற்றுதலென்னும் அந்நியோந்நியாசிரய தோஷமாம்.

இந்த ஹேது விருத்தமென்று கூறுதல் கூடாது; சாத்தியா பாவ வியாப்திபிராமையின். வியபிசாரியுமன்று; பக்ஷத்தினின்று நீங்கி விபக்ஷத்திற் காணப்படாமையின். பாதகமுமின்று; பாதகங் காணப்படாமையின். சத்பிரதிபக்ஷமு மன்று; பிரதிபக்ஷங்காணப் படாமையின்.

(ஆ.) பர்வதமுதலியன அகர்த்தாவோடு கூடினவை; சரீ ரத்தினின்று முண்டாகாமையின்; ககனம்போல்.

(ச.) நீ கூறியது ஆராய்ச்சிக் குட்படுவதன்று; உக்கிரமான சிங்கத்திற்குமுன் மான்குட்டி எதிர்த்து நிற்காததுபோலும். அஜன்னியத்துவமே (உண்டாகாமையி னென்னுமேதுவே) சாதிக்கச் சமாத்தமாகையால் சரீரமென்னும் விசேஷணம் வியர்த் தமாம்.

(ஆ.) ஆனல், அஜன்னியத்துவமே சாதனமென்று கூறு கின்றோம்.

(ச.) அது சித்திக்காது. சோபாதிகமென்னும் ஆசங்கையும் சம்பவிப்பதில்லை; அநுகூலதர்க்கம் சம்பவிப்பதால். அதுவருமாறு:

இவை (பர்வதமுதலியன) அகர்த்திருகமாயின் (கர்த்தாவி ளுற் செய்யப்படாதனவாயின்) காரியமாக மாட்டா; எது காரக சமூகங்களை (காரணக் கூட்டங்களை) யபேக்ஷியாது தன்சொரூ பத்தை யடைகின்றதோ அப்படிப்பட்ட காரியம் இவ்வுலகத்தில் இல்லை.

கர்த்திரு விசேஷத்தோடு கூடிய கர்த்திருத் தன்மையாவது அந்நிய காரகங்களால் உண்டாகாமலும் மற்றக் கரணங்களைப் பிரயோகிப்பதாயும் ஞானம் இச்சை முயற்சியென்னு மிவற்றிற் காதாரமாயு மிருக்குந்தன்மை. கர்த்தாநிவிர்த்தியாவதால் கர்த்தா வோடுகூடிய சமஸ்தகாரகங்களும் நிவிர்த்தியாம்; ஆகவே, காரண மின்றிக் காரியமுண்டாமென்னும் தோஷம் சம்பவிக்கும்.

“அநுகூலதர்க்கத்தோடு சாதனமிருப்பின் சாத்திய வியா பகத்துவமிராமையின் பக்ஷத்தில் உபாதி சம்பவியாது” என்று சங்கரகிங்கராற் கூறப்பட்டிருக்கின்றது.

(ஆ.) ஈசுவரன் கர்த்தாவாக விருப்பின், அப்போது அவன் சரீரியாக விருக்கவேண்டுமெனப் பிரதிகூலதர்க்க மிருக்கின்றது.

(ச.) ஈசுவரனது சித்தி (பெறப்படுவது) அசித்திகளால் † வியாகாததோஷம் சம்பவிக்கின்றது.

"ஆகமாதிகட்குப் பிராமாணியம் அங்கீகரிக்குமிடத்துப்பாதம் ஏற்படுவதால்நிஷேதம் ஏற்படமாட்டாது. ஆபாச(தோஷ)மெனக் கூறுமிடத்து ஆசிரயாசித்தி விருத்தமென்னு மிவைவருகின்றன" என்றுஉதயனுசாரியராற் குசுமாஞ்சலியிற் கூறப்பட்டிருக்கின்றது.

விசேஷவிரோதம் வருமென்றும் ஆசங்கித்தல் கூடாது; ஈசுவரனது ஞாதத்துவ (அறியப்படுந்தன்மை), அஞ்ஞாதத்துவ விகற்பத்தா லடிபட்டுப் போகின்றமையின்.

(ஆ.) பரமேசுவரனுக்கு ஜகந்நிர்மாணத்தி (உலகத்தைப் படைப்பதி) லுண்டான பிரவிர்த்தி சுவார்த்தமா (தன் பொருட்டா)? பரார்த்தமா (பிறர்பொருட்டா)?

(1.) முதலாவது பக்ஷத்திலும், இஷ்டப் பிராப்தியின் பொருட்டா? அநிஷ்டப்பரிகாரத்தின் பொருட்டா?

(க.) முதலாவது பக்ஷங்கூடாது; சமஸ்த காமங்களையும் (விரும்பியபொருளெல்லாவற்றையும்) அடைந்தவனுக்கு இஷ்டப் பிராப்தி பொருந்தாமையால்.

(உ.) ஆகையினுற்றான், இரண்டாவது பக்ஷமுங்கூடாது.

(2.) இரண்டாவது பக்ஷத்திற் பிரவிர்த்தியே பொருந்தாது. பரார்த்தமாகப் பிரவிர்த்திக்கின்றவனை யெவன் தெரிந்தவனென்று கூறுவான்?

கருணையால் பரமேசுவரனுக்குப் பிரவிர்த்திபொருந்துகின்ற தென்று கூறுவோமெனின், ஈசுவரன் சர்வப்பிராணிகளையும் சுகிகளாகச் சிருஷ்டித்தல்வேண்டும்; துக்கிகளாகச் சிருஷ்டித்தல் கூடாது; கருணைக்குவிரோதம் வருகின்றமையின். ஆகையால், ஈசுவரனுக்கு ஜகத்சிருஷ்டி பொருந்தாது.

சுவப்பிரயோஜனத்தை (தன்பயனை) விரும்பாது பிறனது துக்கநிவிர்த்தியிலுண்டாகும் இச்சை காருண்யமாம்.

---

† ஒருஅதிகரண (இட)த்தில் பரஸ்பரவிருத்த (ஒன்றற்கொன்று மாறுபட்ட) தருமங்களின் சமுச்சயம் (கலப்பு) வியாகாதமெனப்படும். அதற்குதாரணம்: என்றுய்மலடி, எனக்குநாக்கில்லையென்முற்போல்வதாம்.

"பிரயோசனத்தைக் கருதாது மந்தனும் ஒருகாரியத்திற் பிரவிர்த்திக்க மாட்டான். ஜகத்தைச் சிருஷ்டியாதுள்ள ஈசுவரனுக்கு என்ன பிரயோசன முண்டாகாமலிருக்கின்றது?" என்று பட்டாசாரியராற் கூறப்பட்டிருக்கின்றது.

(ச.) நாஸ்திகக் கூட்டத்திற்குச் சிரோரத்தினம் (முடிமணி) போன்றவனே! நீபொறுமையாற் கலங்கியகண்களைக் கணப்போது மூடிக்கொண்டு யான்கூறுவதைப் பரியாலோசித்துப்பார். கருணையால் ஈசுவரனுக்குப் பிரவிர்த்தி யிருக்கின்றது. சுபாவத்தினாற் சுகமயமான சிருஷ்டி ஏற்படாது. சிருஷ்டிக்கப் போகின்ற பிராணிகளாற் செய்யப்பட்ட புண்ணியபாவ விசேஷத்தினால் வைஷம்யம் (சுகதுக்க வேறுபாடு) பெருந்துகின்றது.

(ஆ.) அங்ஙனமாயின், சுவாதந்திரியம் போய்விடுமன்றோ?

(ச.) அங்ஙனம் ஆசங்கித்தலடாது. "தனதங்கந் தனக்கு மறப்பை யுண்டுபண்ணமாட்டாது" என்னும் நியாயத்தினாலும், அதற்கு (அசுவாதந்திரியத்திற்கு) விபரீதமாகச் சுவதந்திரியத்தை யுண்டுபண்ணுவதாலு மென்க.

"ஒரேருத்திரன் இரண்டாவதில்லை" என்றற் றொடகத்து வேதம் ஈசுவரனிருப்பதிற் பிரமாணமாம்.

(ஆ.) இங்ஙனமாயின், பரஸ்பராசிரய (அந்நியோந்நியாசிரய) தோஷம் வருமன்றோ? அதற்கு நிவிர்த்தியாது?

(ச.) அஃதுண்டாகாமையின், பரஸ்பராசிரய தோஷம் உற்பத்தியிலா? ஞெப்தியிலா (அறிவிலா)?

(1.) முதலாவது தோஷம் சம்பவியாது. வேதம் ஈசுவராதீனமான உற்பத்தியுடைத்தா யிருப்பினும், அவன் நித்தியனாகையால் அவனுக்கு உற்பத்தி பொருந்தாது.

(2.) ஞெப்தியிலும் பரஸ்பராசிரய தோஷமின்று. ஈசுரன் வேதாதீனமான (வேதத்தின் வசமான) ஞெப்தி யுடையவனா யிருப்பினும், அவ்வேதத்தின் ஞானம் வேறொன்றினா லுண்டாகின்றது. வேதம் அநித்திய மென்றறிவதில் பரஸ்பராசிரய தோஷம் சம்பவியாது; வேதம் அநித்தியமென்பது யோகியால் இலகுவாக அறியப்படுவதா யிருக்கின்றமையின். ஆகையினால், தருமாநுஷ்டான வசத்தினால் ஈசுவரப்பிரசாதம் சித்திக்கின்றது; ஈசுவரப் பிரசாதத்தினால் இஷ்டசித்தி யுண்டாகின்றது.

இங்ஙனம் எல்லாம் சுத்தம்.

நியாய தரிசனம்

முற்றிற்று.



## பன்னிரண்டாவது

# ஜைமினி தரிசனம்.

(ஆ.) தர்மானுஷ்டானவசத்தால் இஷ்டமான தர்மம் சித்திக்கின்றதென்று உம்மாற் கூறப்பட்டது. அங்ஙனமாயின், தர்மத்திற்கு லக்ஷணம் யாது? பிரமாணம் யாது?

(ச.) சாவதானமாய் நான் கூறுவதைக்கேள். இவ்வினாவிற்கு விடை பூர்வமீமாம்சையில் ஜைமினி ருஷியாற் கூறப்பட்டிருக்கின்றது. அது பன்னிரண்டத்தியாயமுடையது. அதனது முதல் அத்தியாயத்தில், விதி, அர்த்தவாதம், மந்திரம், ஸ்மிருதி, நாமதேயம் என்னுமிவற்றிற்குப் பிராமாணியம் நிரூபிக்கப்பட்டிருக்கின்றது; இரண்டாவ தத்தியாயத்தில்,கர்மபேதத்திற்கு† உபோத்காதம், பிரமாணுபவாதம் (பிரமாணவிசேடம்), பிரயோக பேதம் என்னுமிவை நிரூபிக்கப்பட் டிருக்கின்றன; மூன்றாவதத்தியாயத்தில், சுருதி, லிங்கம், வாக்கியம், பிரகரணம், ஸ்தானம், சமாக்கியை யென்னுமிவற்றிற்கு விரோதங்களும், ‡ பிரதிபத்தி கர்மாவும், 0 அநரப்பியாதீதமும்,பகுப்பிரதானத்திற்குபகாரமான பிரயாஜமுதலிய கர்மங்களின் விசாரமும், யஜமானன் செய்யும் கர்மமும் விசாரிக்கப்பட்டிருக்கின்றன; நான்காவதத்தியாயத்தில், இராஜசூயயாகத்திற் கங்கமான பிரதானப் பிரயோஜகத்துவம், அப்பிரதானப் பிரயோஜகத்துவம், பர்ணமயமான ஜுஹூவின் பலம்,சொக்கட்டாடல்முதலியன விசாரிக்கப்பட்டிருக்கின்றன; ஐந்தாவதத்தியாயத்தில், சுருதியாதிக்கிரமங்கள், அவற்றின் விசேஷங்கள், பிராபல்லிய, தௌர்பல்லியங்கள் விசாரிக்கப்பட்டிருக்கின்றன; ஆறாவதத்தியாயத்தில், அதிகாரி, அவன்தர்மம்,

† சொல்லத்தக்க அர்த்தத்தை மனதில் வைத்துக்கொண்டு அதன் பொருட்டு வேறர்த்தத்தைக் கூறுதல் உபோத்காதமாம். அதற் குதாரணம், மோர்விரும்பிய ஒருவன் பிறனது வீட்டிற்சென்று "உன்பசு கறக்கின்றதா" என்று வினவுவதுபோலாம்.

‡ யாகத்திற் குபயோகப்படுத்தும் பதார்த்தத்துள் எஞ்சியதை விகிதமான மற்றோரிடத்து உபயோகப்படுத்தல் பிரதிபத்தி கர்மமாம்.

0 ஒன்றைப்பற்றி யாரம்பியாது பொதுவாக ஒருவிஷயத்தை நிரூபிப்பது அநர்ப்பியாதீதமாம்.

திரவியப்பிரதிநிதி, அர்த்தலோபப் பிராயச்சித்தம், சத்திரம், தேசம், அக்னி (தீ) என்னுமிவை விசாரிக்கப்பட் டிருக்கின்றன. ஏழாவதத்தியாயத்தில்பிரத்தியக்ஷவசனாதிதேசங்களின்நாமலிங்க 0 அதிதேச விசாரம் செய்யப்பட் டிருக்கின்றது. எட்டாவதத்தியாயத்தில், ஸ்பஷ்டமாயும் அஸ்பஷ்டமாயும் பிரபலமாயுமுள்ள லிங்காதி தேசத்தின் அதிதேசவிசாரஞ் செய்யப்பட் டிருக்கின்றது. ஒன்பதாவ தத்தியாயத்தில், யூகவிசாரத்திற் குபயோகமான சாமாவின்யூகம், மந்திரயூகம், பிரசங்கத்தாற் பெறப்பட்ட விஷயங்களின் விசாரஞ் செய்யப்பட்டிருக்கின்றது. பத்தாவதத்தியாயத்தில்பாதத்திற்குக்காரணமானதுவாரலோபம்விஸ்தாரமான பாதகாரணம் † நஞ்சர்த்தமென்னுமிவற்றின்விசாரஞ்செய்யப்பட்டிருக்கின்றது. பதினொன்றாவதத்தியாயத்தில், தந்திர உபோத்காதம் தந்திராபாவம் தந்திரப பிரபஞ்சனமுதலியன விசாரிக்கப்பட்டிருக்கின்றன. பன்னிரண்டாவ தத்தியாயத்தில், பிரசங்கம் தந்திரநிர்ணயம் சமுச்சயம் விகற்பம் என்னு மிவை விசாரிக்கப்பட்டிருக்கின்றன. அவற்றுள்,

173. "அதாதோ தர்மஜிஞ்ஞாஸா" என்னும் முதலாவது அதிகரணம் பூர்வமீமாம்சா சாஸ்திரத்தின் ஆரம்பத்திற் குபயோகமாயிருக்கின்றது. "அதிகரணமும் ஐந்தவயவத்தோடுகூடியது" என்று கூறப்பட் டிருக்கின்றது. அவ்வைந்தவயவமும் விஷய, சம்சய, பூர்வபட்ச, சித்தாந்த, சங்கதிவடிவமா யிருக்கின்றன. அவற்றுள்,

---

0 "அதிதேசம் விபதேச மாமாட் டெறிதல்" என்பது பிரயோக விவேகவுரைச் சூத்திரம். அதனிலக்கணத்தை "அகன்றுபொருள் கிடப்பினு மணுகிய நிலையினு, மியன்றுபொருண் முடியத் தந்தன ருணர்த்தன், மாட்டெனமொழிய பாட்டியல் வழக்கின்." என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தானறிக.

† "நஞ்சுச், சொற்பொருளன்மை மறையின்மை காட்டும்" என்பதற்குப் பிரயோக விவேகநூலார் "நேர்ந்த மொழிப்பொருளை நீக்க வருநகரஞ், சார்ந்த துடலாகிற் றன்னுடல்போஞ்—சார்ந்ததுதா, னுவியேற் றன்னுவி முன்னுகும்." என்பதனுன் 'அகளங்கன்' 'அநங்கன்' என்றும், 'அப்பிராமணன்' 'அநச்சுவம்' என்றும், 'அதன்மம்' என்றும் முறையே இன்மை, அன்மை, எதிர்மறைமூன்றினும் நஞ்சு (ந)வரும்.'ததபாவந்ததன்னியந்தத் விருத்த மென மூன்றுகு நஞ்சுதற் புருடன்' என்றுரைகூறுவதறிக.

ஆசாரிய (பட்டபாதர்) மதத்தை யநுசரித்து அதிகரணம் நிரூபிக்கப்படுகின்றது. இவ்வதிகரணத்திற்குத் தனது சாகையை அத்தியயனஞ் செய்தல் வேண்டும் என்னும் வாக்கியம் விஷயம். வேதார்த்த விசாரமாகிய ஜைமினிசாஸ்திரம் ஆரம்பிக்கத்தக்கதா? தகாததா? என்பது சந்தேகம் அத்தியயனவிதி அதிருஷ்டார்த்த மாயும் திருஷ்டார்த்தமாயு மிருப்பதாற் சந்தேகமுண்டாகின்றது. இங்ஙனம் சந்தேக முண்டாகும்போது சாஸ்திரம் ஆரம்பிக்கத் தகாதென்பது பூர்வபட்சம். (அது வருமாறு):—

அத்தியயனவிதிக்கு அர்த்தஞானவடிவ பிரத்திபட்ச பலம் பொருந்தாமையின், அர்த்தஞான முண்டாதற்பொருட்டு அத்தியயனவிதி யேற்பட்டிருக்கின்றதென்று கூறும்வாதி: இதரப் பிரமாணங்களா லறியப்பட்டாத அத்தியயனத்தை (சாஸ்திரம்) விதிக்கின்றதா? அல்லது, அவகாதம் (நெல்லைக்குத்துதல்) போல் பட்சத்திற் பெறப்பட்ட அத்தியயனத்தை நியமனப்படுத்துகின்றதா? என்று வினவத் தக்கவனாகின்றான்.

முதலாவது பட்சம்பொருந்தாது; விவாதத்திற்குவிஷயமான வேதாத்தியயனம் அர்த்த ஞானகாரணம்; அத்தியயனத் தன்மையால்; பாரதஅத்தியயனம்போல் என்னும் அநுமானத்தினால் விதியை யபேட்சியாமலே பெறப்படுகின்றமையின். ஆனால், இரண்டாவதுபட்சம்பொருந்தாதோவெனின்; †நகத்தாலுரிப்பது முதலியவற்றால் அரிசி வெளிப்படுத்தப்படினும், குத்தினதினால் வெளிப்பட்ட அரிசியினாலேயே மாவரைத்துப் ‡ புரோடாச முதலியவற்றைச் செய்வதால்அவாந்திரமான 0 அபூர்வ முண்டாகின்றது. அதன்வாயிலாகத் தரிச பூர்ண மாச யாகங்கள் பரமா பூர்வத்தை (மேலான புண்ணியத்தை) யுண்டு

† எங்ஙனம் குத்தினதினால் வெளிப்பட்ட அரிசியினாலேயே புரோடாசம் செய்யப்படுகிறது; விதியிராதபக்ஷத்தில் நகத்தினாலுரித்தும் கல்லாற்றேய்த்தும் அரிசி வெளிப்படுத்தப்படும் என்பது கருத்து.

‡ புரோடாசம் - உப்புச்சேராத ஒர்வகை மாவின் விசேடம்.

0 சுபாசுப கர்மங்களா லுண்டாகிக் காலாந்தரத்திற் சம்பவிக்குஞ் சுவர்க்க நரகங்கட்குக் காரணமாய் அந்தக் கரணத்தில் அல்லது ஆத்மாவில் தங்கியிருப்பவை தர்மா தர்மங்க ளெனப்படும்; இவை அபூர்வமென்றும் அதிருஷ்டமென்றும், புண்ணிய பாவமென்றுஞ் சொல்லப்படும்.

பண்ணுகின்றன; †† வேறுவகையாக வுண்டுபண்ணுகின்ற தில்லை. ஆகையால், அபூர்வம் அவகாதத்திற்கு நியம ஹேதுவாம். பிரகிருதத்தில் எழுதிப்படிப்பதாலுண்டான அர்த்தஞானத்தினலாவது அத்தியயனத்தின லுண்டான அர்த்தஞானத்தினலாவது யாகாநுஷ்டானம் சித்திக்கின்றமையின் அத்தியயனத்திற்கு நியமஹேதுவில்லை. ஆகையால், அர்த்தஞானத்திற்குக் காரணமான விசாரசாஸ்திரத்திற்கு விதியில்லை.

ஆனல் கூறப்பட்ட விதிக்குப் பிரயோசனம் யாதெனின், அத்தியயனவிதிக்குப் பலம் சுவர்க்கமாம். ஆகையால் நீ அதனல் சந்தோஷமடையக்கடவாய்; 0 விஸ்வஜித் நியாயத்தினல் பலங்கூருததற்குக்கூடச் சுவர்க்கத்தைப் பலமாகக் கற்பித்தல் முடியுமாதலின். எங்ஙனம் அச்சுவர்க்கம் (அடையவேண்டிய அதிகாரிகள்) யாவருக்கும் சமானமாயிருத்தலின் விஸ்வஜித் என்னும் யாகத்திற்கு அதிகாரிகூறப்படாமலிருப்பினுங் கூறப்படாத அதிகாரியைச் சம்பாதித்துத் தருகிறபுருஷனல் அவனுக்கு விசேஷணமாகச் சுவர்க்கவடிவபலம் யுக்தியால் நிச்சயம்பண்ணப்பட்டிருக்கின்றதோ அங்ஙனமே, வேதாத்தியயனத்தினு மிருத்தலையும். "விதியின்றியும் அதிருஷ்டம் சம்பவிக்கின்றமையின், விதிக்குஅதிருஷ்டம் பிரயோஜன மாகமாட்டாது. விதியின்பலத்தினல் விஸ்வஜித்முதலிய யாகம்போல் சுவர்க்கம் கற்பிக்கத்தக்கது" என்று கூறப்பட்டிருக்கின்றது.

இங்ஙனங் (அத்தியயனஞ்செய்வதா லதிர்ஷ்டப் பிரயோசனமுண்டாகு மெனக்) கூறினுற்முன் அது "வேதத்தை யத்தியயனஞ்செய்து ஸ்நாநம் (விரதசமாபதி) செய்தல் வேண்டும" என்னும் ஸ்மிருதியை அநுசரித்ததாம். ஈண்டு வேதாத்தியயனம் சமாவர்த்தனம் (விரதசமாப்தி) என்னு மிவ்விரண்டற்கும் அவ்வியவதானம் (மறைப்பின்மை) தெரியவருகின்றது. உனது மதத்திலோ வேதாத்தியயனம் செய்தபிறகும் தர்மவிசாரத்தின் பொருட்டுக் குருகுலவாசம் செய்யவேண்டும். அங்ஙன

†† நெல்லைக்குத்தி அரிசியை வெளிப்படுத்தாது, நகத்தாலுரித்தும் கல்லாற்றேய்த்தும் வெளிப்படுத்தி அதனற் புரோடாசம் செய்து யாகமியற்றின் அஃது அபூர்வ சாதனமவதில்லையென்பது சித்தாந்தம்.

0 விஸ்வஜித் என்பது ஒர்யாகவிசேடம்.

மாயின் அவ்வியவதானம் பாதிக்கப்படுகின்றது. ஆகையால்,விசார சாஸ்திரத்திற்கு விதியிராமையின் (மூல) பாட மாத்திரத்தினுலேயே சுவர்க்கம் சித்திப்பதாலும், சமாவர்த்தன சாஸ்திரத்தாலும் தர்மவிசார சாஸ்திரம் ஆரம்பிக்கத் தக்கதன்று.

(இதுகாறும் பூர்வபட்சம்).

174. சித்தாந்தமோ இதரப் பிரமாணத்தினுல் பெறப்படுகின்றமையின், அபூர்வவிதியென்று சொல்லுதல்கூடாது. நியம விதியென்னும் பட்சமோ வஜ்ஜிர அஸ்தத்தாலும் பரிகரித்தல் முடியாது. அங்ஙனமன்றோ, சுவாத்தியாயமோ (தனதுவேத சாகையை யோதுதலோ) "அத்யேதவ்யஃ-தனது சாகை அத்தியயனஞ் செய்யத்தக்கது" என்னும் வாக்கியத்திலுள்ள 'தவ்ய' என்னும் பிரத்தியயம் பிரேரணையென்னும் பெயருடைய தாயும் புருஷப்பிரவிர்த்தியாகிய அர்த்த பாவனையைப் பிரயோசனமாக வுடையதாயுமுள்ள சப்தபாவனையைப் போதிக்கின்றது. அச் சப்தபாவனை அர்த்தபாவனையோடுகூடிய பிரயோசனத்தை யபேக்ஷிக்கின்றதேயன்றிச்சமானபதத்தினுற்கூறப்பட்டஅத்தியயனத்தைப் பிரயோசனமாக அபேக்ஷிக்கின்றதில்லை; சுவாதீன உச்சாரணத்திற்குத் தகுதியாகவும், வாக்கு மனங்களின் வியாபாரமாகவும், கிலேசவடிவமாகவுமுள்ள அத்தியயன சப்தார்த்தத்திற்குப் பிரயோசனம் சம்பவியாமையின். சமானவாக்கியங்களாற் கூறப்பட்ட சுவாத்தியாயமும் பிரயோசனமாவதில்லை; சுவாத்தியாயமென்னும் சப்தத்தின் அர்த்தமான அக்ஷரசமூகம் (எழுத்தின்கூட்டம்)நித்தியமாகையாலும் விபுவா(வியாபகமாகையாலும்) அவற்றிற்கு † உற்பத்திமுதலிய நான்குவகையான கிரியாபலமும் சம்பவியாமையின்.

ஆகையால், சாமர்த்தியத்தாற் பெறப்பட்ட அவபோதம் (ஞானம்) பிரயோஜனமாயிருக்கின்றது. "அர்த்திபா (சுவர்க்காதிகளைவிரும்பினவனு)யும்,சமர்த்தனுயும், வித்துவானுயுமிருக்கின்றவன் யாகத்திலதிகாரத்தை யடைகின்றுன்" என்னும் நியாயத்தினுல் தரிச பூரண மாச முதலியவற்றை விஷயமாகவுடைய

† உற்பத்தி, ஸ்திதி, விருத்தி (வளர்தல்), பரிணமம் (திரிதல்) க்ஷயம் (குறைதல்), நாசம் என்னும் சட்பாவ விகாரங்களுள் ஸ்திதியும் பரிணமமுமொழிய யேனைய நான்கு கிரியையுங்கொள்க.

ஞானத்தை யடைந்தவர்கள் (கர்மகாண்ட) தத்துவஞானத்தில் சுவாத்தியாயத்தை விநியோகப்படுத்துகின்றார்கள். அத்தியயன விதியும் எழுதிப்படிக்கும் பாடத்தைநிவர்த்திப்பதால் அத்தியயன வடிவமான சம்ஸ்காரத்தினுல் சுவாத்தியாயத்தைச் சுத்தஞ்செய்கிறதாகப் போதிக்கின்றது. ஆகவே, எங்ஙனம் தரிசபூரண மாச முதலியவற்றின் காரியமான பரமாபூர்வமானது அவகாதமுதலியவற்றின்காரியமான அவாந்தரமான அபூர்வத்திற்குக் கற்ப(சாத)கமோ அங்ஙனமே சர்வயாகங்களின் காரியமான அபூர்வங்கள் கிருது (யாக)ஞானத்திற்குச்சாதனமான அத்தியயன நியமத்தினுலுண்டான அபூர்வத்தைக் கற்பிக்கின்றன. நியம அதிருஷ்டத்தை அங்கீகரிக்காவிடத்து இவ்விதி வியர்த்தமாய்விடும். விஸ்வஜித் நியாயத்தினுல் பலகற்பனையும் பொருந்தாது; அர்த்த ஞானமாகிய திருஷ்ட (பிரத்தியக்ஷ) பலமிருக்கும்போது வேறு பலகற்பனை சம்பவியாமையின்.

" திருஷ்டப்பிரயோசனம் கிடைக்கும்போது அதிருஷ்டப் பிரயோசனங் கற்பித்தல்கூடாது. விதியானது நியமரூப பிரயோசனத்தை யுடைத்தா யிருத்தலின் வியர்த்தமாகாது " என்று கூறப்பட்டிருக்கின்றது.

(ஆ.) வேதமாத்திரம் அத்தியயனஞ் செய்தவனுக்குஅர்த்த ஞான முண்டாகாமற் போயினும் சாங்க (அங்கத்தோடு கூடிய) வேதாத்தியயன புருஷனுக்கு அர்த்தஞான முண்டாவதால் விசார (மீமாம்சா) சாஸ்திரம் (படித்தல்) வியர்த்தமாம்.

(ச.) இஃதங்கீகரிக்கத்தக்கதன்று; ஞானமாத்திரம் சம்பவித்தாலும் நிச்சயம் விசாரவசமாயிருத்தலின். அஃதெங்ஙனமெனின், " சுக்கான்கற்களை நனைத்துப்புதைத்தல் வேண்டும் " என்புழி, (எதனுல் நனைக்கின்றதென விசேஷங் கூறப்படாமையின் வாக்கியசேஷத்தில் நெய்யைத்தோத்திரஞ்செய்திருப்பதால் அவற்றை) நெய்யாலேயே நனைக்கவேண்டுமேயன்றித் தயிலாதிகளால் நனைத்தல்கூடாதென்னும் நிச்சயம் வியாகரணத்தினுலாவது நிகமத்தினு லாவது † நிருத்தத்தினு லாவது சித்திப்பதில்லை. விசார சாஸ்திரத்தினுலோ " கிருதம் தேசசு-நெய்பிரகாசமுடை

‡ " நிருவசன நிருத்தியென விருவகை வசனமுஞ், சொல்லின் முடியு மிலக்கணத்ததுவே" என்பது பிரயோசவிவேகவுரைச்சூத்திரம்.

யது" என்னும் வாக்கியசேஷ (குறைவாக்கிய) த்தினால் அர்த்த நிச்சயம் சித்திக்கின்றது. ஆகையால், விசாரசாஸ்திரம் விதியினாற் பிராப்தமென்று சித்திக்கின்றது.

இது, "வேதத்தை அத்தியயனஞ் செய்தபின்னர் ஸ்தானம் (விரதசமாப்தி) செய்தல்வேண்டும்" என்று குருகுலத்தினின்றும் நிவிர்த்தியைப் போதிக்கின்ற ஸ்மிருதிக்கு விரோதமென்றுங் கருதுதல்கூடாது; "ஸ்தானம் செய்தபின்னர்ச் சாப்பிடுகிறான்" என்பதுபோல் முன்னும் பின்னுங் கர்த்தா வொருவனே யென்று தெரிவதால், அத்தியயனத்திற்கும் சமாவர்த்தனத்திற்கு மிடையில் அந்தராளம் (இடைவெளி) காணப்படாமையின். ஆகையால், விதிசாமர்த்தியத்தினாலேயே ஆயிரமதிகரண சொரூபமாயுள்ள பூர்வமீமாம்சா சாஸ்திரம் ஆரம்பிக்கத்தக்கதாம். இவ்வதிகரணமும் உபோத்காதமாகையால் சாஸ்திரத்தோடு சம்பந்தப்படுகின்றது. "பிரகிருத சித்திக்கு அநுகூலமான சிந்தை (விசாரம்) உபோத்காதம்" என்று கூறப்படுகின்றது.

'அதாதோ தர்மஜிஞ்ஞாஸா' என்னுமிவ்வதிகரணம் குரு (பிரபாகர) மதத்தை யநுசரித்து உபந்நியாசம் செய்யப்படுகின்றது.

175. "எட்டு வயதுள்ள பிராமணனுக்கு உபநயனம் செய்து அத்தியயனம்செய்வித்தல் வேண்டும்" என்புழி, அத்தியாபனம் (சொல்லிவைத்தல்) நியோகத்திற்கு (விதிக்கு) விஷயமாகத் தோன்றுகின்றது; நியோகமும் நியோஜ்ஜியனை (விதிக்கப்படுகிறவனை) அபேக்ஷிக்கின்றது. ஈண்டு யார் நியோஜ்ஜிய னெனின் உபநயனத்தில் யார் நியோஜ்ஜியனோ அவனேயாம். அவன் அத்தியபனத்திலும் நியோஜ்ஜியன்; உபநயனம் அத்தியயனமென்னுமிரண்டும் ஒரேபிரயோகமாயிருத்தலின். "எந்தப்பிராமணன் சிஷ்யனுக்கு உபநயனஞ்செய்து சாங்கமாயும் ஸரகசியமா (உபநிஷத்தா) யுமுள்ள வேதத்தை யத்தியயனஞ்செய்துவைக்கின்றானோ அவனை ஆசிரியனென்று சொல்லுகின்றார்கள்" என்றிங்ஙனம் மனுவினால் (2—140ல்) கூறப்பட்டிருக்கின்றது. ஆகையால், ஆசாரியராற் செய்யப்பட்ட அத்தியாபனம் மாணாக்கனாற்செய்யப்பட்ட அத்தியயனமின்றிச் சித்திப்பதில்லை. ஆகையால், அத்தியாபன விதியினாலேற்பட்ட அத்தியயன அனுஷ்டானம் சித்திக்கின்றது; சிஷ்யனது வியாபாரமின்றிக் குருவினது வியாபாரம் சித்தியாமையின்.

(ஆ.) அங்ஙனமாயின் அத்தியயனஞ் செய்யத்தக்கது என்னும் விதி சித்தியாது.

(ச.) சித்தியாவிடத்து நமக்கென்ன கெடுதி. வேறே அத்தியபன விதியை யங்கீகரிக்குமிடத்துப் பிரயோசன மின்மையின், விதியானது நித்தியா நுவாதத்தாலும் பொருந்துகின்றது. ஆகையால், அத்தியயனவிதியை யனுசரித்துப் பூர்வபட்ச சித்தாந்தங்கள் காட்டப்பட்டன. இபபோது வேறுபிரகாரம் காட்டப்படுகின்றது.

(176.) விசார சாஸ்திரத்திற்கு விதியின்மையின் சாஸ்திரம் ஆரம்பிக்கத்தக்கதன்றென்பது பூர்வபட்சம். விசாரசாஸ்திரத்திற்கு விதியிருப்பதால் அஃதாரம்பிக்கத்தக்கதென்பது சித்தாந்தம். அவற்றுள்,

(177.) விசாரசாஸ்திரத்திற்குவிதியிருக்கின்றதென்று கூறுகின்றவனை நோக்கி அத்தியாபனவிதி மாணவனுக்கு அர்த்தபோதத்தை யுண்டுபண்ணுகின்றதா? அல்லது பாடமாத்திரம் விதிக்கின்றதா? என்று வினவல்வேண்டும்.

முதலாவது பட்சங்கூடாது; அர்த்தஞானமின்றி அத்தியாபனம் சித்திபபதால்.

இரண்டாவது பட்சமுங்கூடாது; பாடமாத்திரத்தில் விசாரத்திற்கு விஷயப்பிரயோஜனங்கள் சம்பவியாமையின்.

சாமாநியமாகத்தோன்றுஞ் சந்தேக விஷயமான அர்த்தம் விசாரத்திற்கு விஷயமாகின்றது. அங்ஙனமாக, யாண்டு அர்த்தஞானமேயின்றோ ஆண்டுச் சந்தேகத்தைப்பற்றி யாதுவார்த்தையிருக்கின்றது? விசாரபலமாகிய நிச்சயத்தைக் குறித்த ஆசை சேய்மையி (தூரத்தி) லேயே யிருக்கின்றது.

178. ஆகவே, எது சந்தேகமற்றதாயும் பிரயோஜன மற்றதாயு மிருக்கின்றதோ அது விசாரத்திற்கு விஷயமாவதில்லை. "மனதோடுகூடிய இந்திரியத்தின்சம்பந்தத்தையடைந்து ஸ்பஷ்டமான பிரகாசமத்தியிலுள்ள கடம்போல" என்னும் நியாயத்தால் விஷயப்பிரயோஜனங்கள் சம்பவியாமையின் விசாரசாஸ்திரம் ஆரம்பிக்கத்தக்கதன்று என்பது பூர்வபட்சம்.

179. அத்தியாபன விதியினால் அர்த்தஞானம் உண்டாவதில்லையாயினும், சாங்கவேதாத்தியயனம் செய்தவனும் பதம் பதார்த்தசம்பந்தஞானமுடையவனுமுள்ள புருஷனுக்குப்பௌருஷேயமான பிரபந்தம்போல (புருஷனாற்செய்யப்பட்ட சாஸ்திரம்போல) வேதத்திலும் அர்த்தஞான முண்டாகின்றதென்பது சித்தாந்தம்.

(ஆ.) எங்ஙனம் விஷத்தைச் சாப்பிடு என்புழித்தோன்றும் அர்த்தத்திற் கருத்தின்றி இவனுடைய கிருகத்திற் சாப்பிடாதே என்று போஜனத்தின் விலக்கு மாதுருவாக்கியத்திற்கு விஷயமாயிருக்கின்றதோ அங்ஙனமே வேதார்த்தத்திலும் கருத்திராத அர்த்தவிஷயத்தில் விஷயப்பிரயோசனங்களின்அபாவமாகிய முற்கூறிய தோஷம் சம்பவிக்கின்றது.

(ச.) அங்ஙனங் கூறுதல்கூடாது; திருஷ்டாந்த (உவமான) தார்ஷ்டாந்த (உவமேய)ங்கட்கு வைஷம்யம்(வேறுபாடு) சம்பவித்தலின். விஷபோஜனவாக்கியம் ஆப்தனாற் கூறப்பட்டமையின் முக்கி ார்த்தத்தைக்கிரகிப்பதில் பாதமேற்படுதலின்அவ்வர்த்தத்திற்றாற்பரியம் அங்கீகரிக்கத் தக்கதன்று. அபௌருஷேயமான (புருஷனாற் செய்யப்படாததான)வேதத்திலோதோன்றும் அர்த்தத்தில் ஏன் தாற்பரியமங்கீகரித்தல்கூடாது? தாற்பரியத்திற்கு விஷயமானவேதார்த்தத்தில்புருஷனுக்குயாண்டுயாண்டுச்சந்தேகமுண்டாகின்றதோ அவைபாவும் விசாரசாஸ்திரத்திற்கு விஷயமாகின்றன. அதன் நிச்சயம் பிரயோஜனமாம்; அத்தியாபன விதியினாலேற்பட்ட அத்தியயனத்தினா லறியப்படும் அர்த்தம் விசாரத்திற்குத் தகுதியாயிருத்தலின். விசார சாஸ்திரம் விதிக்கப்பட்டதாயிருத்தலின் அஃதாரம்பிக்கத்தக்கதென்பது சித்தாந்தத்தின் சுருக்கம்.

(ஆ.) அஃதங்ஙனமிருக்கட்டும். வேதம் எங்ஙனம் அபௌருஷேயமெனலமையும்? அபௌருஷேயம் என்று கூறும் பிரமாண மின்மையின். வேதம் அபௌருஷேயம்; சம்பிரதாய விச்சேதம் (கேடு) இன்றியும் † கர்த்தாவின் ஸ்மரணமின்றியுமிருத்தலின்; ஆத்மாப்போல என்று கருதுவாயாயின் அதுவும் அங்கீகரிக்கத் தக்கதன்று; (சம்பிரதாய விச்சேதமின்றியும் என்னும்) விசேஷணம் சித்தியாமையின், வேதம பௌருஷேயம்

என்னும்வாதியால்சம்பிரதாயவிச்சேதம்பிரளயகாலத்திருக்கின்ற தென அங்கீகரிக்கப்பட் டிருத்தலின். மேலும், ஸ்மரிக்கப்படா துள்ள கர்த்தாவையுடைத்தா யிருக்குந் தன்மை, தோன்றும துள்ள கர்த்தாவையுடைத்தா யிருக்குந் தன்மையா? அல்லது ஸ்மரணத்திற்கு விஷயமாகாதுள்ள கர்த்தாவை யுடைத்தாயிருக் குந் தன்மையா?

முதலாவது பக்ஷம் பொருந்தாது ; பரமேசுவரன் கர்த்தா வென்னும் யதார்த்த ஞானம் அங்கீகரிக்கப்பட் டிருத்தலின்.

இரண்டாவது பட்சமும் பொருந்தாது; விகற்பத்தைச் சகிக்காமையால்.

வேதத்திற்குக் கர்த்தாவின்றென்னும் ஸ்மரணம் எவனுவ தொருவனுக் கிருக்கின்றதா? அல்லது ஒருவனுக்குக்கூடவில்லையா?

முதலாவது பக்ஷம் பொருந்தாது; "எவன் தர்ம சீலனையும் காமாதிகளை ஜயித்தவனையுமிருக்கின்றனனோ" என்றற் றொடக் கத்து வாக்கியங்களில் வியபிசாரம்வருதலின்.

இரண்டாவது பக்ஷமும் பொருந்தாது; வேதத்திற்குக் கர்த் தாவின்றென்னும் ஸ்மரணம் (ஞானம்) சர்வஞ்ஞத்தன்மை யின் றிய வொருவனுக்குஞ் சம்பவியாமையின்.

180. மேலும், வேதம் பௌருஷேய மென்பதிற் பிரமாணம் சம்பவிக்கின்றது. வேதவாக்கியங்கள் பௌருஷேயங்கள்; வாக்கி யத்தன்மையால்; காளிதாசன் முதலியோரது வாக்கியம்போல. வேத வாக்கியங்கள் ஆப்தனாற் செய்யப்பட்டவை; பிரமாணத் துடன்கூடிய வாக்கியத்தன்மையால்; மநுமுதலியோரது வாக்கி யம்போல (என்னு மிவை யனுமானங்களுளாம்).

181. வேதாத்தியயன மெல்லாம் குருவத்தியயன பூர்வக மாக விருக்கின்றன; வேதாத்தியயன சாமாணியத்தால்; இப்போ துள்ள அத்தியயனம்போல என்னும் அநுமானம் (முற்கூறிய அநுமானத்திற்குச்) சற்பிரதிபக்ஷமா யிருக்கிறதென்று கூறுவை யாயின், அதுவும் (தார்க்கிகமதப்படி) பிராமாணிகமாகமாட்டாது. பாரத அத்தியயனமெல்லாம் குருவின் அத்தியயன பூர்வகமாக விருக்கின்றன; பாரதாத்தியயனத் தன்மையால்; இப்போது செய் யும் பாரதாத்தியயனம்போலும் என்னும் ஆபாசாநுமானத்திற் கொத்திருத்தலின்.

(மீமாம்சகன் தார்க்கிகனை மறுத்தல்.)

(ஆ.) பாரதத்திற்கு வியாசர் கர்த்தாவென்று கூறப்பட்டிருக்கின்றது. "புண்டரீகாக்ஷனையன்றி மற்றொருவன் மகாபாரதத்திற்குக் கர்த்தாவாவனோ?" என்றதற்றொடக்கத்து வசனங்களால் பாரதத்திற்கு வியாசரே கர்த்தாவென்று கூறப்பட்டிருக்கின்றது.

(தார்க்கிகன் சமாதானங்கூறல்)

(ச.) நீ கூறியது சாரமுடையதன்று; "ரிக்வேதம், சாமவேதம், சந்தசு, யசுர்வேதம் என்னுமிவையாவும் அவனிடத்தினின்றுமுண்டாயின" என்று புருஷசூக்தத்தி (ரிக் 5-10-90)ல் வேதம் கர்த்தாவோடு கூடியதெனக் கூறப்பட்டிருத்தலின்.

மேலும், சப்தம் அநித்தியம்; சாமாநியமுடையதாய் நம்மனோரது பாகிய இந்திரியத்தா லறியப்படுதலின்; கடம்போல.

இவ்வநுமானம் இஃதந்தக் ககரமென்னும் பிரத்தியபிஞ்ஞாப்பிரத்தியக்ஷப் பிரமாணத்தினால் பாதிக்கப்படுகின்றதென்று கூறுவையாயின், அங்ஙனங் கூறுவது பயனுடையதன்று. சிரைத்துக் கொண்டபி னுண்டாகுமயிரை இந்தமயிர்தான் அந்த மயிர் என்பதுபோலும், மல்லிகையரும்பை மலர்ந்தபின்னரும் கண்டு இந்தமல்லிகைதான் அந்தமல்லிகை என்பது போலும் பிரத்தியபிஞ்ஞைக்கு (இஃதந்தக் ககரமென்பது) சாமாநியவிஷயமாயிருத்தலின் அது பாதகமாகமாட்டாது.

(மீமாம்சகன் ஆட்சேபித்தல்.)

(ஆ.) சரீரமின்றிய ஈசுவரனுக்குத் தாலுவாதி (கன்னமுதலியன) இன்மையின் வர்ணோச்சாரணம் சம்பவியாது; சம்பவியாமையின், வேதம் எங்ஙனம் அவனாற் சொல்லுதல் கூடும்?

(தார்க்கிகன் சமாதானங்கூறல்.)

(ச.) நீ கூறியது தகுதியன்று; இயல்பாகவே ஈசுவரன் சரீரமற்றவனா யிருப்பினும் அவனுக்குப் பக்தர்களுக் கநுக்கிரகஞ் செய்யு நிமித்தம் லீலையினால் சரீராதிக்கிரகணம் (எடுத்தல்) சம்பவித்தலின். ஆகையால், வேதம் அபௌருஷேயம் என்னும பட்சம் யுக்தியுடையதன்று.

("வேதம் எங்ஙனம் அபௌருஷேயமெனலமையும்" என்னும் ஆக்ஷேபமுதலிதுகாறும் ஓரே பூர்வபட்சம். மத்தியிலுள்ள ஆக்ஷேப சமாதானங்கள் அவாந்தரமானவை).

(மீமாம்சகன் சமாதானங்கூறல்.)

(ச.) வேதம் பௌருஷேயமென்பது எங்ஙனம்? 1. வேதம் நம்மனோரால் தினந்தோறும் உச்சரிக்கப்படுவதுபோல் புருஷனிடத்தினின்றும் உத்பன்னத்துவ (உண்டானது) மாத்திரமா? 2. வேதத்தின் அர்த்தத்தை வேறுபிரமாணத்தாற்கண்டு அது பிரகாசித்தற்பொருட்டுச்செய்யப்படுகின்றதா? அல்லது நம்மனோரால் எழுதப்பட்ட சாஸ்திரத்தின் அர்த்தத்தை வேறு பிரமாணத்தாற் கண்டு அது பிரகாசித்தற்பொருட்டுச் செய்யப்படுகின்றதா?

முதலாவது பக்ஷத்தில் விரோதமின்று.

இரண்டாவது பக்ஷத்தில்அஃது. அநுமானபலத்தால் சாதிக்கப்படுகின்றதா? அல்லது 2. வேதபலத்தால் சாதிக்கப்படுகின்றதா?

(1.) முதலாவது பக்ஷங்கூடாது; †மாலதிமாதவாதிவாக்கியங்களில் வியபிசாரம் வருதலின்.

(ஆ.) "பிரமாணத்தோடு கூடியதென" ஒருவிசேஷணங் கொடுக்கின்றோம்.

(ச.) இதுவும் வித்வான்களா லங்கீகரிக்கத் தக்கதன்று. பிரமாணாந்தரத்திற்கு விஷயமாகாத அர்த்தத்தைப் பிரதிபாதிக்கும் வாக்கியங்கள் வேதவாக்கியங்களாம். அவை பிரமாணாந்தரத்திற்கு விஷயமான அர்த்தத்தைப்பிரதிபாதிக்கின்றன வென்று சாதிக்குமிடத்து அது "என்தாய்மலடி" என்பதுபோல் வியாகாததோஷமாம்.

பரமேசுவரனுக்கு லீலையினால் விக்கிரகத்தை (சரீரத்தை) அங்கீகரிப்பினும் அவருக்கு அதீந்திரியார்த்த தரிசனம் (இந்திரியத்திற்கு விஷயமாகாததைக் காண்டல்) பொருந்தாது; தேசம், காலம், சுபாவம் என்னுமிவற்றால் விலகியுள்ள அர்த்தவிஷயத்தை யறிவதிற் சாதனமின்மையின். அவரது நேத்திர முதலிய இந்திரியங்களே அப்படிப்பட்ட ஞானத்தை யுண்டுபண்ணத்தக்க

† மாலதிமாதவமென்பது ஓர் நாடகம்.

சாமர்த்திய முடையன வென்று கருதுதல் கூடாது; பிரத்தியக்ஷத்தையனுசரித்தே கற்பனை (அநுமானங்) களை யங்கீகரிக்க வேண்டுமாதலின்.

“எவ்விந்திரியத்தில் விசேஷம் காணப்பட்டிருக்கின்றதோ அவ்விந்திரியம் தனது விஷயத்தை யதிக்கிரமிக்காம லிருத்தலின் நேத்திரேந்திரியம் தூரம் சூட்சுமம் முதலியவற்றையறிவதிற்சாதனமாக ஏற்படுமேயன்றி உருவத்தையறிவதில் சுரோத்திரம்பிரவிர்த்திக்காது” என்று பிரபாகரரால் சர்வஞ்ஞனாகிய கர்த்தாவின்றென்று நிராகரிக்குமிடத்துக் கூறப்பட்டிருக்கின்றது.

(2.) ஆகையால், “ரிக்கு சாமம் அவராற் சொல்லப்பட்டன” என்றற்றொடக்கத்து வேதபலத்தினால் சர்வஞ்ஞனான ஈசுவரனுண்டெனச் சாதித்தல் முடியாது. பாணினீய (4. 3, 101) சூத்திரப்படி காடகம், காலாபம், தைத்திரீய முதலிய சமாக்கியை (பெயர்) அத்தியயன சம்பிரதாயப் பிரவர்த்தகர்களை விஷயமாகச் செய்வதுபோல், ஈண்டும் சம்பிரதாயப் பிரவர்த்தகனை விஷயமாக வுடைத்தா யிருக்கின்றமையின் அதுவும் (அவராற் சொல்லப்பட்டன வென்பதும்) பொருந்து கின்றது.

182. அநுமான பலத்தினாற் சப்தம் அநித்திய மென்பதும் சித்திப்பதில்லை; பிரத்தியபிஞ்ஞையோடு விரோதம்வருகின்றமையின். (அந்தக்ககரந்தான் இந்தக்ககரம் என்பதில் அக்ஷரங்கட்கு) ஏகத்துவமில்லையாயினும் ஜாதி (கத்துவாதிஜாதியா லேற்பட்ட) நிபந்தனத்தால் அட்சரங்கட்கு ஏகத்துவமுண்டென்றுகூறுவதும் அங்கீகரிக்கத்தக்கதன்று. அக்ஷரங்கட்குச் சாமாநியநிபந்தனம் பலமுடைய பாதகத்தா லங்கீகரிக்கப்பட்டதா? அல்லது வியபிசாரம் சிலவிடத்துக் கண்டிருப்பதுபற்றி அங்கீகரிக்கப்பட்டதா?

(1.) (ஒருவன்) சிலவிடத்து வியபிசாரதரிசனத்தினால் (இந்தக்ககரந்தான் அந்தக்ககரம் என்று ஜாதிபற்றிக்) கற்பித்தானேயாயின் அது சுவதஃபிரமாணிய வாதி (மீமாம்சகர்) களால்

“எவன் அஞ்ஞானத்தினால் அறியப்படாத பதார்த்தத்தையும் கற்பிக்கின்றானோ அச்சம்சயாத்மா வானவன் சர்வ வியவகாரங்களிலும் நாசத்தை யடைகின்றான்” என்று கூறப்பட்டிருக்கின்றது.

(தார்க்கிகன் ஆட்சேபித்தல்.)

(2.) (ஆ.) இந்தப் பிரத்தியபிஞ்ஞைக்குக் கத்துவாதிஜாதி விஷயமேயன்றிக் ககாரமுதலியவியக்தி விஷயமன்று; அந்தக் (ககாரமுதலிய)சப்தவியக்திகள் புருஷன்தோறும்வெவ்வேறாகக் காணப் படுதலின். அன்றாயின், சோமசன்மா அத்தியயனஞ் செய்கின்றான் என்னும் வேறுபாடு சம்பவியாது.

(ச.) இதுவும் அழகன்று; ககாரமுதலிய வியக்திபேதத்திற் பிரமாணமின்மைபோன்று ககாரத்தன்மைமுதலிய ஜாதிவிஷய கற்பனையிலும் பிரமாணமின்று.

எங்ஙனம் (நையாயிகமதப்படி)கத்துவஜாதி அறியாதவனுக்கு ஒன்றே (ஜாதியே) பின்னமான தேசம் (இடம்), பரிமாணம் (அளவு), சம்ஸ்தானம் (அவயவம்), வியக்தி (ஜாதியுடையது) என்னுமிவ் வுபாதிவசத்தினால் பின்னதேசம்போலும், அற்பம் போலும், மகத்துவம்போலும், தீர்க்கம் (நீட்சி) போலும், வாமனம் (குறுமை) போலும் பிரகாசத்தை யடைகின்றதோ அங்ஙனமே, (மீமாம்சகமதப்படி) ககாரவியக்தியை யறியாதவனுக்கு அஃதொன்றாயிருப்பினும் வியஞ்சகபேதத்தால் (பிரகாசஞ் செய்யும் கண்டமுதலியவற்றின் வேறுபாட்டால்) அதனதன் தர்மத்துடன் கூடியதாகத் தோன்றுகின்றது. இங்ஙனம் ககாரத்திற்கு விருத்த தர்மாத்தியாச மிருப்பதுபோல் வெவ்வேறு ககாரங்கட்கும் பேதத்தோற்றம் அத்தியாசமா யிருக்கின்றது. ஆனால், இந்த விருத்த தர்மாத்தியாசம் சுவாபாவிகமா யிருக்கின்றதா? கற்பனையாக விருக்கின்றதா?

முதலாவது பக்ஷத்திற் பிரமாணமின்று; அன்றாயின், சுவாபாவிகமான பேதத்தை யங்கீகரிப்பதால் "தச (10)ககாரத்தைச் சைத்திரனுச்சரிக்கின்றா னென்னும் ஞானம் சம்பவிக்குமேயன்றி ஒரேககாரத்தைப் பத்துமுறை யுச்சரிக்கின்றானென்னும் ஞானம் சம்பவியாது.

இரண்டாவது பக்ஷத்தில், ககாரங்கட்குச் சுவாபாவிகமான பேதம் சித்திப்பதில்லை. பரோபாதி (அந்நியவுபாதி) பேதத்தினால் சுவாபாவிகமான ஐக்கியங்கெடாது. (கெடுமாயின்) கடாதிகளாய வுபாதிபேதத்தினால் ஆகாயத்திற்கும் சுவாபாவிகமான அபேதம் கெடும். ஆகையால் சுவாபாவிகமான அபேதங்கெடாது; ககார

விஷயத்தில் பேதவியவகாரம் நாதத்தி (கண்டத்தொனியி) னால் சம்பவிக்கின்றது.

"ஜாதிக்கு எது பிரயோசனமோ அது வர்ணத்தினாலேயே சம்பவிக்கின்றது. வியக்தியில் சம்பவின்றபேதமோ நாதத்தாற் சம்பவிக்கின்றது. ஆகையால், கத்துவாதிஞானம் வியர்த்தம்" என்று ஆசாரியராற் கூறப்பட்டிருக்கின்றது.

"எப்போது பிரத்தியபிஞ்ஞை சப்தத்தில் பாதமின்றி ஜாக்கிரதையா யிருக்கின்றதோ அப்போது அந்தப் பிரத்தியபிஞ்ஞையே சப்தத்தின் அநித்தியத்துவ அநுமானங்களைப் பாதிக்கின்றது" என்றுங் கூறப்பட்டிருக்கின்றது.

183. இதனால் "சப்தம் அநித்தியம்; இந்திரியக்கிராகியமான விசேஷகுணத் தன்மையால்; சட்சுவிந்திரியத்திற்கு விஷயமான ரூபம்போல்" என்று (நையாயிகருள் ஒருவரான) வாசீசுவரரால் மானமனோகரம் என்னுங் கிரந்தத்தில் யாதுகூறப்பட்டதோ அது நிக்கிரகிக்கப்பட்டது.

184. சப்தத்தைத் திரவியமென் றங்கீகரிக்கும் (சாங்கியர்களும் வேதாந்திகளுமாகிய) வாதிகட்கும் சப்தம் சித்தித்திருப்பதாலும், தொனி அம்சத்திலோ † சித்தசாதனம் வருவதாலும், அஸ்சிராவணத்துவ (சுரோத்திரேந்திரியத்தாற் கிரக்கப்படாத) உபாதியினாற் பாதிக்கப்பட்டிருப்பதாலும் அது நிராகரிக்கப்படும்.

உதயநாசாரியரோ, ஆசிரயம் அப்பிரத்தியட்சமா யிருப்பினும் அபாவத்திற்குப் பிரத்தியட்சத்தன்மையைப் பெரிய பிரபந்தத்தாற் பிரதிபாதித்துக் கோலாகலம் (பேரிரைச்சல்) நிவிர்த்தியாயிற்று, சப்தமுண்டாயிற் றென்னும் வியவகாரத்தில் காரணமான பிரத்தியட்சத்தைச் சப்தம் அநித்தியமென்பதிற் பிரமாணமாகக் கொண்டிருக்கின்றனர்.

அதுவும் விருத்ததர்ம சம்பந்தம் ஔபாதிகம் என்னும் நியாயத்தினால் ரக்தபலிகொடுத்த புருஷனால் வேதாளம் (பிசாசு) நிவிர்த்தியாவதுபோல் நிவிர்த்திசெய்யப்பட்டது.

---

† முன்னர் ஒரேதுவாற் சித்தித்த அர்த்தத்தைப் பின்னர் மற்றோரேதுவாற் சித்திக்கச் செய்தல் துணிந்ததனைத் துணிவிப்பதென்னும் சித்தசாதனமாம்.

சப்தம் நித்தியமென்னும் பட்சத்தில் நியாயபூஷணகாரராற் கூறப்பட்ட சர்வதோஷங்களின் ¶ உபலப்தி § அநுபலப்திப் பிரசங்கமாகியதோஷ மெதுவோ அதுவும் தொனி (கண்டத்தொனி) யினாலே சம்ஸ்காரத்தை யடைந்த அக்ஷரங்கட்கு உபலப்தியை (விளக்கத்தை) யங்கீகரித்திருப்பதாற் றள்ளப்பட்டது. அக்ஷரத்திற்கும் கண்டத்தொனிக்கும் ஏககாலத்தி லிந்திரிய சம்பந்தத்தினால் தனித்தனியாய்ச் சம்ஸ்கார ஜனகத்தினால் சம்ஸ்காரத்தை யடையுந் தன்மைவடிவ அநுமான மெதுவோ அஃதாத்மாவினிடத்து அனைகாந்திகமா (வியபிசாரியா) ம்.

185. ஆகையால், வேதம் அபௌருஷேயமென்று நிச்சயிக்கப்பட்டது. ஆதலால், அதனிடத்துச் சமஸ்தசங்கைகளும் நிவாரணம் செய்யப்பட்டன. ஆகையால், தர்மவிஷயத்தில் வேதத்திற்குப் பிராமாணியம் ஸ்திரமாயிருக்கின்றது.

(ஆ.) ‡ பிராமாண்ய (பிரமாத்தன்மை) அப்பிராமாண்யங் (அப்பிரமாத்தன்மை) கள் சுவதஃ (தன்னால்) உண்டாகின்றனவென்று சாங்கியர்கள் அங்கீகரித்திருக்கின்றனர்.

நையாயிகர்கள் பிரமாண்ய அப்பிராமாண்யங்கள் பரதஃ(பிறிதால்-அநுமானம் அல்லது அநுவியவசாய ஞானத்தால்) உண்டாகின்றனவென் றங்கீகரித்திருக்கின்றனர்.

சௌகதர்(சுகதர்வழிவந்தோர்-பௌத்தர்)அப்பிராமாண்யம் தன்னாலுண்டாகின்ற தென்றும், பிராமாண்யம் பிறிதாலுண்டாகின்ற தென்றுங் கூறுகின்றனர்.

வேதவாதிகள் (மீமாம்சகர்கள் வேதாந்திகள்) பிராமாண்யம் தன்னா லுண்டாகின்ற தென்றும், அப்பிராமாண்யம் பிறிதாலுண்டாகின்ற தென்றுங் கூறுகின்றனர்.

---

¶ சாதனாபாவம் வாதியினாற் காட்டப்பட்டிருப்பினும் சாத்தியோபலப்தி கதனம் (சாத்தியம் காணப்படுவதாகக்கூறல்) உபலப்திசமை.

§ வாதி அனுபலப்தி வசத்தினாலே சிலபதார்த்தங்களை யங்கீகரியாதிருக்கும்போது பிரதிவாதி அனுபலத்தி வசத்தினாலேயே வாதி யங்கீகரித்துள்ள சில பதார்த்தங்களின் அபாவத்தைச் சாதிப்பது அனுபலப்திசமை.

‡ பிராமாண்ய அப்பிராமாண்ய விசாரங்களை விருத்திப் பிரபாகரத்தின் 7 - வது பிரகாசத்தில் விரிவாயக்காண்க

186. இங்ஙனம் வாதிகளின் விவாதம்காணப்படுதலின் எங்ஙனம் மீமாம்சகர்கள் தர்மப் பிராமாண்யம் சுதசித்தம் (தன்னாலுண்டாகின்றது) என்று அங்கீகரித்திருக்கின்றனர்? சுவதஃபிராமாண்யமாவது யாது? (1)பிராமாண்யத்திற் குற்பத்தி தானேயுண்டாகின்றதா? அல்லது (2) தனதாசிரய ஞான ஜன்னியத்துவமா (ஞானத்தாலுண்டாகுந் தன்மையா)? அல்லது (3) தனதாசிரய ஜானசாமக்கிரி (ஞானகரணமான நேத்திரமுதலிய இந்திரியங்களின்) ஜன்னியத்துவமா? அல்லது (4) ஞானசாமக்கிரி ஜன்னிய ஞானவிசேஷத்தை யாசிரயித்துக்கொண் டிருக்குந்தன்மையா? அல்லது (5) ஞானசாமக்கிரிமாத்திர ஜன்னிய ஞானவிசேஷத்தை யாசிரயித்துக் கொண் டிருக்குந்தன்மையா? அவற்றுள்,

(1.) முதலாவது பக்ஷம் தோஷமுள்ளது; காரணகாரிய பாவம் (தன்மை) பேதசமானாதிகரணமா (வேற்றுநிலைக்களமா) யிருப்பதால் ஓரிடத்திற் சம்பவியாமையின்.

(2.) இரண்டாவது பக்ஷமும் பொருந்தாது; குணவடிவ ஞானம் பிராமாண்யத்தைக்குறித்துச் சமவாயிகாரணமா யிருப்பதால் ஞானத்திற்குத் திரவியத்தன்மை சம்பவிக்குமாதலின்.

(3.) மூன்றாவது பக்ஷமுங்கூடாது; பிராமாணியம் உபாதியாயிருப்பினும் ஜாதியாயிருப்பினும் உற்பத்தி சம்பவியாமையின். ஸ்மிருதித்துவ அநதிகரணமான (ஸ்மிருதித்தன்மைக்கு இடமாகாத) ஞானத்திற்குப் பாத அத்தியந்தாபாவம் பிராமாண்ய உபாதி அவ்வுபாதிக்கு உற்பத்திசம்பவியாது; அத்தியந்தாபாவம் நித்தியமென் றங்கீகரிக்கப்பட் டிருத்தலின். ஆகையினாற்றான், ஜாதிக்கும் உற்பத்தி சம்பவிப்பதில்லை; (அதுவும் நித்தியபதார்த்தங்களுள் ஒன்றாயிருத்தலின்).

(4.) நான்காவது பட்சமுங் கூடாது. அயதார்த்தஞானமே ஞானவிசேஷ (பேத)ம். விசேஷசாமக்கிரியினும் சாமாநியசாமக்கிரி பிரவேசிக்கின்றது; † சிம்சுபா சாமக்கிரியில் விருட்சசாமக்கிரி பிரவேசிப்பதுபோலும். அன்றாயின், அதற்கு (ஞானவிசேஷத்திற்கு)க் காரணமின்றி யிருக்குந்தன்மை சம்பவிக்கும். ஆகையால், பிறிதா லுண்டாகின்றதென் றங்கரித்துள்ள அப்பிராமாண்யம்

† சிம்சுபா - ஓர் விருட்ச விசேஷம்; அஃதாவது அசோகமரம்.

விஞ்ஞான சாமக்கிரியினு லுண்டானதை ஆசிரயித்திருக்கின்ற தென அதிவியாப்தி யுண்டாகின்றது.

(5) ஐந்தாவது பட்சத்தை விகற்பிக்கின்றோம். (பிராமாண்யத்திற்குத்) தோஷாபாவத்தோடு கூடிய ஞானசாமக்கிரி ஜன்னியத்தன்மையே ஞானசாமக்கிரி மாத்திர ஜன்னியத்தன்மையா? அல்லது தோஷாபாவத்தோடுகூடாத ஞானசாமக்கிரி ஜன்னியத்தன்மையா?

முதலாவதுபக்ஷங் கூடாது; தோஷாபாவத்தோடு கூடிய ஞானசாமக்கிரி ஜன்னியத் தன்மையே பிறிதாற் பிராமாண்யமென்று பிறிதாற் பிராமாண்ய வாதிகள் (நையாயிகர்கள்) அங்கீகரித்திருத்தலின்.

இரண்டாவது பக்ஷமுங்கூடாது; தோஷாபாவத்தோடுகூடிய சாமக்கிரி சித்தமாயி (பெறப்பட்டி) ருக்கும்போது பிறிதாற் பெறப்பட்ட அந்வய வியதிரேகிகளாற் சித்தமான தோஷாபாவம் காரணமாக விருத்தல் வஜ்ஜிரலேபம் (வச்சிரம்பூசியது) போலாய் விட்டமையின்.

அபாவம் காரணமாகாதெனக் கூறின், அப்போது விஞவத்தக்கது அபாவம் காரியமா? அன்று? என்பது. (அபாவம் காரியம்) அன்றெனின், அப்போது ஆடையினழிவிற்கு வேறு விதமான பொருத்தம் சம்பவியாமையின் ஆடை நித்தியமென அங்கீகரித்தல் வேண்டும்; (அபாவம்) காரியமெனின், ஏன் அது (அபாவம்) காரணமுமாகமாட்டாது? ஆதலால் உபயபாசரஜ்ஜுவாம். (அல்லது, இருதலைக்கொள்ளி எறும்பு போலாம்; அஃதாவது பாதமாம்).

"எங்ஙனம் பாவம் காரணமும் காரியமுமா யிருக்கின்றதோ அங்ஙனமே அபாவமுமாம்" என்று (குசுமாஞ்சலி 1-10 ல்) உதயனுசாரியராற் கூறப்பட் டிருக்கின்றது.

187. அங்ஙனமே விமதமான (சந்தேகத்திற்கு விஷயமான) பிரமையானது ஞானஹேதுவினும் வேறான ஹேதுவின் வசமாயிருக்கின்றது; காரியத் தன்மையுடன்கூடிய விசேஷஞானத் தன்மையால்; அப்பிரமைபோல. பிராமாணியம பிறி (அநுமானத்)தா

லறியப்படுகின்றது; அப்பியாச மின்றிய காலத்து (அதன்கண்) சம்சய முண்டாகின்றமையின்; அப்பிராமாணியம்போல. ஆகையால், உற்பத்தியிலும் ஞப்தியிலும் பராதீனமாயிருக்கும் (பிறிதாற்பெறப்படுஞ்) தன்மையில் பிராமாண்யம் சம்பவித்தலின் "சுத சித்தம் பிராமாண்யம்" என்னும் மீமாம்சக மதம் அழுகற் பூசணிக்காய்க் கொப்பாம்.

(ச.) நீ கூறியது ஆகாயத்தைக் குத்துவதற் கொப்பாம்;

(1) விஞ்ஞான சாமக்கிரியினு (இந்திரியார்த்த சையோக முதலியவற்று) லுண்டாய் வேறேதுவினுலுண்டாகாமலிருக்குந் தன்மை பிரமைக்குச் சுதஸ்துவம் என்று நிர்வசனம் (நிரூபணம்) சப்பவித்தலின். அநுமானமு மிருக்கின்றது.

(அது வருமாறு):— சந்தேகத்திற்கு விஷயமான பிரமை விஞ்ஞான சாமக்கிரியினுலுண்டாயும், வேறு சாமக்கிரியினு லுண்டாகாமலு மிருக்கின்றது; அப்பிரமாத் தன்மைக்கு அனதிகரணத் தன்மையால்; கடாதிபோல. உதயணசாரியர் கூறிய அநுமானமும் பரதஸ்துவ (பிராமாணியம் பிறிதாற் பெறப்படுகின்றதென்பதற்குச்) சாதகமென் றுசங்கித்தல் கூடாது; பிரமை தோஷத்தினும் வேறாயும் ஞானவேதுவினும் வேறேதுவினுலுண்டாகாததாயு மிருக்கின்றது; ஞானத் தன்மையால்; அப்பிரமை போலும் என்று வேறேதுவுடன் (சற்பிரதி பட்சத்துடன்) கூடியிருப்பதாலும், ஞானசாமக்கிரியினுலேயே பிரமைக்கு உற்பத்தி சம்பவிக்கும் போது அதனினும் வேறான † குணத்தை யாவது

---

† குணமின்றிய இந்திரிய முதலியவற்றுலுண்டாகும் ஞானம் பிரமையன்றுமென்பவர் (1) பிரத்தியட்சப்பிரமையி னுற்பத்தியில் குணம் விஷயத்தின் அதிகதேசத்தில் இந்திரியங்களின் சையோகமாம்; (2) அநுமிதிப்பிரமையி னுற்பத்தியில் குணம் சாத்தியத்தின் வியாப்பியமான ஏதுவின் சாத்தியமுடைய பட்சத்தின் ஞானமாம்; (3) உவமிதிப் பிரமையி னுற்பத்தியில் குணம் மெய்யான ஒப்புமை ஞானமாம்; (4) சாப்திப் பிரமையி னுற்பத்தியில் குணம் மெய்யானதகுதி முதலியவற்றின் ஞானமாமென்றும்,

(1) பிரத்தியட்சப்பிராந்தியி னுற்பத்தியில் குற்றம் நேத்திரமுதலியவற்றின் மஞ்சள் காமாலை முதலிய தோஷமும், விஷயத்தின் சாதிருசிய

தோஷ (குற்ற) த்தையாவது காரணமாகக் கற்பிப்பதில் ‡ கற்பனு கௌரவ தோஷம் சம்பவிப்பதாலுமென்க.

(ஆ.) தோஷம் அப்பிரமைக் கேதுவாயிருத்தலின் அதனபாவம் பிரமைக் கேதுவாயிருக்கு மென்பதில் யாதொரு தடையு மில்லை.

(ச) தோஷாபாவம் அப்பிரமைக்குப் பிரதி பந்தகமா (தடையா) யிருத்தலின் அன்னியதாசித்தமா (பிறிதொரா ற்றாற் பெறப்படுவதா) ம். ஆதலின் அது கூடாது.

"ஆகையால் குணங்களாலே தோஷாபாவ மறியப்படுகின்றது; தோஷாபாவத்தினுல், இரண் டப்பிராமாணி யங்களின் அபாவமுண்டாகின்றது; அதனுல் பிராமாணிய முண்டாகின்றது" என்று கூறப்பட்டிருக்கின்றது.

(2.) அங்ஙனமே, பிரமா ஞெப்தியும் (பிரமையையறிதலும்) ஞான ஞாபக சாமக்கிரியினுலேயே யுண்டாகின்றது. ஆனுல் சம்சய முண்டாகாமற் போமென்னும் பிரசங்கம் (அதற்குப்) பாதகமென்று கூறுதல் கூடாது. ஞானகாரணம் பூரணமா யிருக்கும் போதும் தோஷமுதலிய பிரதிபந்தகமிருப்பதால் அது (சம்சயம்) சம்பவிக்கின்றது.

மேலும், உனதநுமானம் சுவதః (தானே) பிரமாணமா? அன்ரு?.

முதலாவது பக்ஷத்தில் வியபிசார தோஷம் வருகின்றது; இரண்டாவது பக்ஷத்தி லவ்வநுமானத்திற்குப் பரதః (பிறிதாற்)

தோஷமும் பிறவுமாம்; (2) அநுமிதிப்பிராந்தியி னுற்பத்தியிற் குற்றம் அசித்தமுதலிய எதுப்போலியாம்; (3) உவமிதிப் பிராந்தியி னுற்பத்தியிற் குற்றம் பிராந்திசகித ஒப்புமை ஞானமாம்; (4) சாப்தப்பிராந்தியினுற்பத்தியிற் குற்றம் கேட்போனிடத்து வாக்கியதாற்பரியத்தைக் கிரகிக்காமையும்,கூறுவோனிடத்து வஞ்சகத்தன்மை முதலியனவும்,சப்தத்திற்பிறிதோர்வகையால் போதிக்குந் தன்மைமுதலியனவுமாம் என்றும் கூறுவர்.

‡ ஒரு வஸ்துவினுலேயே ஒரு காரியஞ் சித்திக்கக் கூடியதாயிருக்க அதற்குப் பல வஸ்துக்களை யேதுவாகக் கற்பித்தல் கற்பனு கௌரவமாம்.

பிராமாண்யம், அதற்கும் பரதః பிராமாண்யம் என இங்ஙனம்வரம்பின்றிச் சேறலென்னும் அனவஸ்தாதோஷம் சம்பவிக்கின்றது.

188. குசுமாஞ்சலியில் விரைவிலுண்டாகும் அதிகப் பிரவிர்த்தி பிராமாண்ய நிச்சயத்தின் அதீன (வச) மின்றி யிருக்கின்றதென்று கூறும் உதயனாசாரியரால் "பிரவிர்த்தி இச்சையை யபேக்ஷிக்கின்றது; அதிகப் பிரவிர்த்தி அதிக இச்சையை யபேக்ஷிக்கின்றது; இச்சையும் இஷ்டசாதனத் தன்மையின் ஞானத்தை யபேக்ஷிக்கின்றது; அந்த ஞானமும் இஷ்ட ஜாதீயத்துவ லிங்கானுபவத்தை (இஷ்டத்திற்குச் சமானத் தன்மையை யுடைய இலிங்க ஞானத்தை) அபேக்ஷிக்கின்றது; அவ்வநுபவமும் இந்திரிய விஷய சம்பந்தத்தை யபேக்ஷிக்கின்றது. பிராமாண்யக் கிரகமோ (ஞானமோ) ஓரிடத்தும் உபயோகப் படவில்லை" என்றுயாது கூறப்பட்டதோ அதுவும் திருடன் தனதக்குளில் சுவர்ணத்தை வைத்துக்கொண்டு எல்லா அவயவங்களையும் விரித்துக்காட்டுவது போலிருக்கின்றது. ஆகையால் இஷ்டசாதன ஞானமே பிரமாணமாக அறியப்பட்டதாக விருந்து இச்சையை யுண்டுபண்ணுகின்றது. இவ்விஷயத்தில் வெளிப்படையாகப் பிராமாண்யம் ஞானத்திற் குபயோகமாம்.

189. மேலும், யாதானு மோரிடத்தில் சந்தேகமற்ற பிரவிர்த்தி யுண்டாகுமாயின் அப்போது எவ்விடத்தும் அங்ஙனமே சம்பவிக்கும். அங்ஙனம் சம்பவித்தலின் பிராமாண்ய நிச்சயம் வியர்த்தமாம். நிச்சயம் பண்ணப்படாத வஸ்துவிற்கு இருப்பே பெறப்படமாட்டாது. ஆகையினால் பிரமாண்யத்திற்குச் சலாஞ்சலி (தத்தநீர்) கொடுப்பதாயிற்று. ஈண்டு அதிகமாய்க் கூறிய தமையும்.

" ஆகையால், சத்தை போதிப்பதால் புத்திக்குப் பிராமாண்யம் ஏற்பட்டிருக்கின்றது. அந்தப்பிராமாண்யமும் அர்த்தம்வேறுபடக்கூடிய ஏதுவினாலுண்டான தோஷ ஞானத்தினாற் றள்ளப்படுகின்றது" என்று கூறப்படுகின்றது.

190. ஆகையால் தர்மத்தில் சுத சித்தமான பிரமாணபாவத்தை யுடையதாயும் 'சுவர்க்கத்தை விரும்பியவன் ஜோதிஷ்டோமமென்னும் யாகத்தைச்செய்க' என்றற்ரொடக்கத்து விதி, அர்த்தவாதம், மந்திரம், நாமதேயம் என்னுமிவற்றின் ரூபமாயுமுள்ள வேதத்தில் "யஜேத் - யாகஞ்செய்யவேண்டும்" என்னுமிடத்தி லுள்ள 'த' என்னும் பிரத்தியயமானது, சித்தார்த்தத்தில் † வியுற்பத்தியை யங்கீகரித்துள்ள அபிஹிதான்வய வாதிகளான குமாரில பட்டருடைய சித்தாந்தம்போல், பிரகிருதி (பகுதி) அர்த்தத் தோடுகூடிய பாவனையைக் கூறுகின்றது; ஆனால், அந்விதாபிஹிதான. வாதிகளான பிரபாகர குருக்களது சித்தாந்தம் யாகவிஷயமான நியோகத்தை (ஏவலை) க் குறிக்கின்றது.

இங்ஙனம் எல்லாம் சுத்தம்.

ஜைமினி தரிசனம்

முற்றிற்று.



† வியுற்பத்தி—பதசக்தி.

# பதின் மூன்றாவது

# பாணினி தரிசனம்.

(ஆ.) இதுபிரகிருதி (பகுதி) பாகம், இது பிரத்தியய(விகுதி) பாகம் என்று பிரகிருதி பிரத்தியய விபாகம் யாண்டறிதல்கூடும்?

191. (ச.) பாதஞ்சல சாஸ்திரமென்னும் ஜலத்தைப்பானஞ் செய்தவர்களுக்கு இவ்வினு வியப்பையுண்டுபண்ணாது; வியாகரண (இலக்கண) சாஸ்திரம் பிரகிருதி பிரத்தியய விபாக பரமென்பது பிரசித்தமாயிருக்கின்றமையின். அங்ஙனமன்றோ "அதசப்தாநு ஸாஸநம்" என்பது மகா பாஷியகாரராகிய பதஞ்சலி பகவானது முதலாவது வாக்கியம். இங்கு 'அத' என்னும் பிரகிருதிக்கு ஆரம்பம் அல்லது பிரஸ்தாபம் என்பது பொருள்; 'சப்தாநுசாசநம்' என்னும் பதத்திற்குப் பாணினி மகா முனிவரா லியற்றப்பட்ட வியாகரண மென்பது பொருள். ஈண்டு இப்பதத்தால் 'சப்தாநு சாசநம்' தலைமை விஷயமெனப் பொருள் படுமா! அன்று ? என்றையம் நிகழும். அங்ஙனமுண்டாகும் ஐயநிவிர்த்தியின்பொருட்டு 'அத' என்னும் பிரகிருதி பிரயோகிக்கப்பட்டது 'அத' சப்தார்த்தமானது அர்த்தாந்தரத்தைவிலக்கிப் பின் சொல்லப்படுவதே பிரதம விஷயமாமெனப் பொருள் படுவதால்.

இதனால் "சமநோதேவீ ரபீஷ்டயே - பிரகாசமான ஜலதேவதைகளே! எங்களது இஷ்டசித்தியின் பொருட்டுச் சுகத்தையுண்டுபண்ணுங்கள்" என்றற்றொடக்கத்து வைதிகசப்தங்களும், இவற்றிற்குபகாரியா யிருக்கின்ற கோ (பசு), குதிரை, புருஷன், யானை, பறவை என்றற்றொடக்கத்து லௌகிக சப்தங்களும் வியுத்பாதநஞ்செய்து (சொற்பொருளுணர்ச்சியை யுண்டுபண்ணி) சம்ஸ்காரம் செய்கின்றன. அஃதாவது (சம்ஸ்காரமாவது) பிரகிருதி பிரத்தியய விபாகத்தாலே போதிக்கப்படுவதென்று அநுஸாஸந சப்த பலத்தால் இந்தச்சஷ்டி (ஆறும் வேற்றுமை) கர்மார்த்தத்தி (செயப்படுபொருளி)ல் விதிக்கப்பட் டிருக்கிறது. ஆகவே,

"கர்மணிச" என்னுஞ் சூத்திரத்தினால் சமாஸ (தொகை) நிஷேதம் சம்பவிப்பதால் 'சப்தாநுஸாஸந' சப்தம் பிராமாணிக மாக மாட்டா தென்னு மாட்சேபத்திற்குச் சமாதானங் கூறப்படுகின்றது.

யாண்டுக் கிர்த் பிரத்தியய மிருக்கும்போது கர்த்தா (செய்பவன்) கர்மா (செயப்படு பொருள்) என்பவற்றின் பிராப்தி (அடைவு) இருக்கின்றனவோ (பாணினி 2-3. 66 சூத்திரப்படி) ஆண்டுக் கர்மார்த்தத்திலேயே சஷ்டிவிபக்தி (ஆறும்வேற்றுமை) வருமேயன்றிக் கர்த்தாவர்த்தத்தில் வருவதின்று; ஆகையினால், பகுவிரீகி (அன்மொழித்தொகை) ஞானபலத்தினால் நியமஞ்செய்யப் படுகின்றது. எங்ஙனம்: "அப்பியாச மின்றிய இடையன் கோக்களின் கறவை ஆச்சரியத்தை விளைவிக்கின்றது" என்னுமிடத்துக் கர்த்தாவர்த்தத்திலும் சஷ்டி வருகின்றதென்று சிலர் கூறுகின்றனர். ஆகையாற்றான் " சிலர் பொதுவாகவே (கர்மணி கர்த்தா வென்னும்) விகற்பத்தை விரும்புகின்றார்கள். உபாத்தியாயரின் சப்தாநுஸாஸநம் (சொற்களின் வியாக்கியானம்) அல்லது உபாத்தியாயரால் சொல்லப்பட்ட சப்தாநுஸாஸநம்" எனக் காசிகா விருத்தியில் கூறப்பட்டிருக்கிறது.

சப்தங்களின் அநுஸாஸநம் என்னுமிடத்திலோ சப்தங்களின் அநுஸாஸநம் (உரை) என்று பெறப்படுமேயன்றி அர்த்தங்களின் அநுஸாஸநமென்று பெறப்படாதென்னு மிவ்வர்த்தம் ஆசாரியரான கர்த்தாவைக்கூறாமலே எளிதி லறியக்கூடியதா யிருத்தலால்,ஆசாரியரைக்கூறுவது பயனற்றவார்த்தையாம். ஆகையினால் கர்த்துரு கர்மாவென்னு மிரண்டற்கும் பிராப்தியின்மையின் உபயப் பிராப்தி (இரண்டினடைவு) வரும்போது இந்தச் சஷ்டி கர்மார்த்தத்தில் வாராது. ஆனால் " கர்த்துரு கர்மணோகிர்தி கிர்த்" என்னும் பிரத்தியயத்தின் சம்பந்த மிருக்கும்போது கர்த்துரு அர்த்தத்திலும் கர்மார்த்தத்திலும் சஷ்டி விபக்தி வருமாகையால் கிர்த் பிரத்தியயத்தின் சம்பந்தத்தினால் சஷ்டி வரும். ஆகவே, "இத்ம பிரவசந பலாச சாதநாதிவத்—விறகு, போதித்தல், பலாசு, விழுதல் என்றற் றொடக்கத்தன வற்றிற்குச் சமாச மேற்படுவது போல்" ' சப்தாநுஸாஸநம் ' என்பதற்குஞ் சமாச மேற்படும். அல்லது, இது சேஷசஷ்டி; இச்சேஷசஷ்டியை யங்கீகரிக்குமிடத்து ஒரு விரோத முண்டாகாது.

(ஆ.) இங்ஙனமாயின், † சேஷசஷ்டி (குறைவேற்றுமை—ஆறும் வேற்றுமை)யே யாண்டு மெளிதா யிருத்தலால் சஷ்டிசமாசத்தை நிஷேதிக்கும் சூத்திரங்கள் வியர்த்தமாம்.

(ச.) நீ கூறிய துண்மையே. அந்தச் சூத்திரங்களுக்குச் சுவ விசாரத்தில் உபயோகமென்று (பர்த்துருஹரியால் செய்யப்பட்ட) வாக்கியபதீயத்தில் காட்டப்பட்டிருக்கிறது.

"லௌகிக வியவகாரங்களில் மக்கள் விரும்பியவாறு சப்தங்களை யுபயோகப் படுத்தினாலும் வைதிகமார்க்கத்திலோ விசேஷ வார்த்தைகளை யுபயோகித்தல் வேண்டும்".

" எவர் எக்காரணத்தால் இங்ஙனம் பாணினி சூத்திரங்களுக்கு அர்த்தமாத்திரஞ் சொன்னாரோ அவரே அக்காரணத்தால் 'ஜநிகர்த்து' என்றும், 'தத்பிரயோஜகம்' என்றும் சூத்திரங்களைக் கூறியிருக்கிறா" ரென்றும் மஹா மஹோபாத்யாய வர்த்தமானரால் கூறப்பட்டிருக்கிறது. ஆதலால்,சப்தாநுசாஸந மென்னு மபிதான (பேருள்ள) வியாகரண சாஸ்திரமானது ஆரம்பிக்கத் தக்கதென் றறியவேண்டு மென்னும் வாக்கியார்த்த முடிந்தது.

(ஆ.) அதன் (சப்தாநுஸாஸந மென்பதன்) அர்த்தம் விரைவாகத்தெரியும்பொருட்டு 'அதவியாகரணம்' என்றே கூறல்வேண்டும். 'அதசப்தாநு ஸாசநம்' என்றதிகமாக அட்சரத்தைப் பிரயோகஞ் செய்தது பயனற்றதாம்.

192. (ச.) 'சப்தாநுஸாஸநம்' என்று காரணப்பெயரைக் கூறின் வியாகரணத்திற்கு வேதாங்கத்துவப் பிரதிபாதந மாகிய பிரயோஜனஞ் சித்திப்பதால் நீ கூறியது சரியன்று.

பிரயோஜனத்தைக் கூறுவிடத்து வியாகரணத்தை யத்தியயநஞ் செய்வதில் பிரவிர்த்தி யுண்டாகாமற்போம்.

---

† கர்மணிசஷ்டி சேஷசஷ்டி என சஷ்டி இருவகைத்தாம்.

(1) செயப்படுபொருளில் வரும் ஆறும் வேற்றுமை கர்மணிசஷ்டியாம். (2) இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து, எழுஎன்னும் வேற்றுமைப் பொருளில் சம்பந்தத்தைப்பற்றி மாத்திரம் வரும் ஆறும் வேற்றுமை சேஷசஷ்டியாம்.

(ஆ.) பிரயோஜனங் கருதாமலே ஆறங்கங்களுடன் கூடிய வேதத்தை யத்தியயனஞ் செய்யவேண்டுமென் றத்தியயனத்தை விதித்திருப்பதினாலேயே பிரவிர்த்தி சித்திக்கின்றது.

(ச.) அங்ஙனம் விதியிருப்பினும் (வியாகரணத்திற்கு) வேதாங்கத்துவமாகிய பிரயோஜனத்தைக் கூறாவிடத்து அவர்களுக்கு (அத்தியயனஞ் செய்பவர்களுக்கு) அத்தியயனத்திற் பிரவிர்த்தி பொருந்தாமற்போம்.

193. அங்ஙனமன்றோ, முற்காலத்தில் மாணாக்கர்கள் வேதத்தை யத்தியயனஞ்செய்த பின்னர் "வேதத்தில் வைதிக சப்தங்களும், லோகத்தில் லௌகிக சப்தங்களும் சித்தமா யிருக்கின்றமையின், வியாகரணம் நிஷ்பிரயோஜனமாம் (ஆதலால் வியாகரணத்திற் பிரவிர்த்தி பொருந்தாது)" என்று பதட்டமாய்ப் பேசுகின்றவர்களானார்கள். ஆகையினால், வியாகரணம் வேதாங்க மென்று தெரிந்த பிறகுதான் அவர்களுக்கு அதன் அத்தியயனத்திற் பிரவிர்த்தி யுண்டாகின்றது.

ஆதலின், அங்ஙனமே இப்போ திருப்பவர்களுக்கும் வியாகரண சாஸ்திரத்திற் பிரவிர்த்தி பொருந்தாமற்போம். அதனை நிவிர்த்தித்தற்பொருட்டு வியாகரணம் வேதத்திற்கங்கமாமென்று பிரயோஜனம் கூறவேண்டிய தாயிற்று. அங்ஙனங்கூறினும் பிரவிர்த்தி யுண்டாகாமற் போயின், அப்போது லௌகிக சப்த சம்ஸ்காரம் ஞானமென்னு மிவையில்லாதவர்கள் யாககர்மத்தில் பிரத்திவாய (பாவ) மடைவார்கள்; தர்மத்தினின்றுந் தவறிப் போவார்கள்.

ஆகையினாற்றான் "ஆஹிதாக்கினி (ஹக்கினி ஹோத்தாஞ் செய்கிறவன்), அப (தவறான) சப்தத்தைப் பிரயோகஞ் செய்தால் அவன் சாரஸ்வதேஷ்டி (ஓர்யாக விசேஷம்) என்னும் பிராயச்சித்தஞ் செய்யவேண்டியவனாகின்றான்" என்று யாகஞ்செய்பவர்கள் கூறுகின்றனர்.

194. ஆகையினாலே வேதாங்கத்துவப் பிரதிபாதனமாகிய பிரயோஜனங் கூறும்பொருட்டு 'அதஸபதாநுஸாஸநம்' என்றே கூறப்பட்டிருக்கின்றது; 'அதவியாகரண'மென்று சொல்லப்படவில்லை; இதனால் வியாகரண சாஸ்திரத்திற்குப் பிரயோஜன மேற்பட்டது.

வியாகரணசாஸ்திரத்தின் பிரவிர்த்தி அதனை (வேதாங்கத்துவப் பிரதிபாதனத்தை) யுத்தேசித்திருப்பதால் அதற்கு (வியாகரண சாஸ்திரத்திற்கு) அது (வேதாங்கத்துவப்பிரதிபாதனம்) பிரயோஜனமாம்.

எங்ஙனம் சுவர்க்கத்தை யுத்தேசித்துப் பிரவிர்த்தித்த யாகத்திற்குச் சுவர்க்கம் பிரயோஜனமோ அங்ஙனமே † சம்ஸ்காரபதத்தா லறியக்கூடிய சப்தத்தின் வியாக்கியானம் 'சப்தாநுஸாஸந' த்திற்குப் பிரயோஜனமா யிருக்கிறது.

(ஆ.) இங்ஙனங்கூறினும் இஷ்டமானபிரயோஜனஞ்சித்திப்பதில்லை; அதற்கு உபாய (சாதன) மின்மையின். பிரதிபத (கோ, குதிரை என்றற்றொடக்கத்து ஒவ்வொருபத) பாடமே உபாயமென்று கருதின் அப்போது சப்தங்களை யறியவேண்டிய விஷயத்திற் பிரதிபதபாடம் உபாயமாவதின்று; நற்சப்தம் அபசப்தமென்னும் பேதத்தால் சப்தம் பலவகைத்தா யிருத்தலின்.

"பிருகஸ்பதியானவர் இந்திரன் பொருட்டு ஆயிரந் தேவவருஷம் பிரதிபத பாடோபதேசஞ் செய்தார்; செய்தும் அவன் எல்லை காணவில்லை.

பிருகஸ்பதியோ வக்தா (சொல்லுகிறவர்); இந்திரனே அத்தியபனஞ் செய்கிறவன்; அத்தியயனகாலமோ ஆயிரந் தேவவருஷம்; முடிவோ உண்டாகவில்லை.

இப்போது எவன் சிரஞ்சீவியா (வெகுகாலம் பிழைத்திருப்பவனா) யிருந்து அத்தியபனஞ் செய்யப்போகின்றான்? இதுபற்றிக் கேட்கவேண்டிய தென்னை?

அத்தியயனம், அதனர்த்தஞானம், அதனனுஷ்டானம், பிரசாரணம் (பிறரையனுஷ்டானஞ் செய்யும்படி செய்தல்), என்னுமிந்நால்வகை யுபாயங்களால்வித்தையானது உபயோகத்தையடைகின்றது.

அவற்றுள், அத்தியயன காலத்தினாலேயே ஆயுள் முழுவதும் உபயோகத்தை யடைந்துவிடு மாயின் சப்தங்களை யறியும்விஷயத்திற் பிரதிபதபாடம் உபாயமாகமாட்டாது. ஆகையால்

---

† சம்ஸ்காரம் - இது நற்சத்தம், இஃது அபசப்தம் என்னும் பேதத்தைக் காட்டக்கூடிய பிரகிருதி பிரத்தியய விசாரம.

பிரயோஜனஞ் சித்திக்கவில்லை" என்றிங்ஙனம் சொல்லப்படு கின்றது.

(ச.) இங்ஙனம் சொல்லுதல் பொருந்தாது; சப்தஞான மானது பிரதிபதபாட சாத்தியமென் றங்கீகரியாமையாலும், பிரகிருதி (பகுதி) முதலிய விபாக கற்பனைகளுடன் கூடிய லக்ஷியங்களில் சாமானிய விசேஷரூபமான லக்ஷணங்கள் மேகம்போல் ஒருமுறை பிரவிர்த்திக்கும்போது வெகுசப்தங்களின் அநுசாஸநம் காணப்பட் டிருப்பதாலுமென்க. அங்ஙனமன்றே, கர்மணி (கர்மத்தில்) என்னும் சாமானியவடிவ லக்ஷணத்தால் கர்மாவை உபபதமாகவுடைய பகுதியில் அண்பிரத்தியயத்தைச் சேர்க்கும் போது கும்பகார (குயவன்), காண்டலாவ (கழிமுதலிய வற்றை யறுப்பவன்) என்றற் றொடக்கத்துச் சப்தங்களின் அநுஸாஸநம் (வியாக்கியானம்) காணப்படுகின்றது. ஆனால், 'ஆத்' பிரத்திய யத்தின்கண் உபசர்க்கம் சேராதிருக்கும்போது ஆதோ அனுப சர்க்கே (ஆதோ என்னும் பிரத்தியயத்தில் உபசர்க்கம் சேரா திருக்கும்போது) என்னும் பதபாடத்திற்கு அசக்திய (பொருளாகா)த் தன்மையைக் கூறுகின்ற அர்த்தவாதமாம்.

(ஆ.) அநேக அங்கங்க ளிருக்கும்போது யாதுபற்றி யிது வே (வியாகரணமே) ஆதரிக்கப் படுகின்றது?

195. (ச.) அங்கமாறனுள், வியாகரணம் பிரதானமாம்; பிரதானத்திற் செய்யு முயற்சி பிரயோஜனமுடைய தாகின்றது.

"அந்தப் பிரஹ்மத்திற்கு (வேதத்திற்கு) நெருங்கியதாயும், தபசுகளுள் உத்தமமான தபசாயும், சந்தசுகளுள் முற்பட்ட தாயும் வியாகரணமென்னு மங்க மிருக்கிறதென்று பண்டிதர்கள் கூறுகின்றார்கள்" என்று கூறப்பட்டிருக்கின்றது.

196. ஆகையால் வியாகரண சாஸ்திரத்திற்குச் சப்தாநு ஸாஸநம் சாக்ஷாத் பிரயோஜனமாகின்றது. வேதரக்ஷண (வேதத்தைக் காப்பாற்றல்) முதலியன பரம்பரையாகப் பிரயோஜன மாகின்றன. ஆகையினாற்றான் "ரக்ஷணம், ஊகம், ஆகமம், லகு, அசந்தேக மென்னு மிவை பிரயோஜனங்கள்" என்று பாஷியகாரரால் (பதஞ்சலி முனிவரால்) கூறப்பட் டிருக்கின்றது.

மேலும், ஸாது (நற்) சப்தப் பிரயோகத்தால் அப்புதயமு (சுவர்க்காதி) ண்டாகின்றது. "சாஸ்திர பூர்வகமாகச சப்தப

பிரயோகஞ்செய்தால் அப்பியுதயமுண்டாகின்றது; அது வேதத்திற்குச் சமானமாகவு மிருக்கின்றது. வேதசப்தத்தினால் அதற்குச் சமானமான பலனுமுண்டாகின்றது" என்று காத்தியாயனரால் கூறப்பட் டிருக்கின்றது.

" (ஒருவன்) நன்றாகவறிந் தொரு சப்தத்தைப் பிரயோகஞ் செய்தால் (அதனாலவன்) சுவர்க்கலோகத்தில் விரும்பிய தடைகின்றான்" என்று மற்றவர்களாலும் கூறப்பட்டிருக்கின்றது.

"எவர்கள் நற்சப்தப் பிரயோகஞ் செய்கிறார்களோ அவர்கள் நற்சப்தமாகிய இரதத்தின்மேலேறி விரும்பிய சுகமுடைய சுவர்க்கத்தை யடைகிறார்கள்; எவர்கள் அபத்தமான சப்தப்பிரயோகஞ் செய்கிறார்களோ அவர்கள் காலால் நடப்பார்கள்" என்றுங் கூறப்பட் டிருக்கின்றது.

(ஆ.) அசேதனமான சப்தத்திற்கு இப்படிப்பட்டசாமார்த்திய மெவ்வாறு பொருந்தும்?

197. (ச.) இங்ஙனங் கருதவேண்டாம்; சப்தங்களை மகாதேவருக்குச் சமமாகச் சொல்லி யிருப்பதால். அடியில் வருஞ் சுருதி அதனையே கூறுகின்றது.

"சத்துவாரி சிர்ங்கா ஸ்தி ரயோஸ்ய பாதா துவே சிர்ஷே ஸப்த ஹஸ்தஸ: அஸ்ய திர்தா பத்தோவிருஷபோ ரோரவீதிமஹோ தேவோ மர்த்யா: ஆவிவேச".

சத்துவாரி சிர்ங்கா-நான்குகொம்புகள்; அவை † நாம, ஆக்யாத, உபசர்க்க, நிபாதங்கள்;

திரயோஸ்யபாதா:-இதற்கு (சப்த சாஸ்திரத்திற்கு)மூன்று பாதங்கள்: அவை ‡ லடாதிகளுக் கர்த்தமான பூத (இறந்த) பௌஷ்ய (நிகழ்) வர்த்தமான (எதிர்) காலங்கள்;

துவேசிர்ஷே - இரண்டுதலைகள்; அஃதாவது வேங்கியம் (பிரகாசியம்) வியஞ்சகம் (பிரகாசம்) என்னு மிருவகைப் பேதத்தினால் § நித்தியமாயும் காரியமாயுமுள்ள சொரூபமுடைய தென்பது.

---

† பெயர், வினை, இடை, உரி. ‡ லடாதி—லட், லிட், முதலிய தசலகாரங்கள். § நித்தியம்—பிரகிருதி; காரியம்—விகிர்த்தி.

ஸப்தஹஸ்தாஸഃ—ஏழுகைகள்; அஃதாவது சப்த விபக்தி (ஏழுவேற்றுமை) கள்.

திர்த்தாபத்தഃ—மூன்று பிரகாரமாய்க் கட்டப் பட்டவை; அஃதாவது மார்பு, கண்டம், சிரசென்னு மிவ் விடங்களில் அது (சப்த சாஸ்திரம்) கட்டப்படுகிறது;

விருஷபഃ—பிரசித்த ரிஷபம்போல் நிரூபிக்கப் படுவதால் ரிஷப மென்று அதற்குப் பெயர்கொடுக்கப்பட்டது; வர்ஷணம்—ஞான பூர்வகமான கர்மானுஷ்டானத்தினால் பலத்தைக் கொடுக்கின்றது;

ரோரவீഃ—ரோரவீயென்னுஞ் சப்தத்தைச் செய்துகொண்டிருக்கின்றது. சப்தமென்னுஞ் சப்தத்தினால் பிரபஞ்சம் சொல்லப்படுகின்றது;

மகோதேவഃ—மகாதேவர்; அஃதாவது மகாதேவர்க்குச் சமானமானது சப்தம்;

மர்த்யாഃ—மரணத்தையடையக்கூடிய மனிதர்களை;

ஆவிவேசഃ—பிரவேசித்தது.

ஆகையால், மகாதேவர்க்கு அஃதாவது பரப் பிரஹ்மத்திற்குச் சப்தம் சமமென்றுரைக்கப் பட்டதாயிற்று.

198. இதனால் ஜகத்திற்கு முதற்காரணமும், நிரவயவமும், நித்ய சப்தரூபமுமான ஸ்போடம் பிரஹ்மமேயா மென்று பெறப்பட்டது.

"எதனிடத்தினின்றும் ஜகத் உண்டாகின்றதோ, எது அர்த்தரூபமாய் விவர்த்த (மித்தியாகாரிய) த்தை யடைகின்றதோ, எது அக்ஷரமா (நாசமற்றதா) யுள்ள சப்ததத்துவமோ அதுவே ஆதிநிதன (உற்பத்திநாச) மற்ற பிரஹ்மம்" என்று பர்த்துருஹரியால் பிரமகாண்டத்திற் சொல்லப்பட் டிருக்கின்றது.

(ஆ.) நாமம் (பெயர்), ஆக்கியாதம் (வினை) என்னும் பேதத்தால் பதமிரண்டுவகை யென்று காணப்படுவதால், எங்ஙனம் நான்குவகை (நாமம், ஆக்கியாதம், உபசர்க்கம், நிபாதம்) என்று சொல்லப்பட்டது?

199. (ச.) இங்ஙன மாட்சேபித்தல் கூடாது;பிரகாராந்தரம் (வேறு பிரகாரம் - வகுப்பு) பிரசித்தமா யிருப்பதால். "சிலரால் பதம் இருவகைத்தென்றும், சிலரால் நால்வகைத் தென்றும், சில ரால் ஐவகைத்தென்றும், பிரகிருதி பிரத்தியயாதிகளைப் போல் வாக்கியங்களினின்று மெடுத்தே பிரிக்கப்பட்டது" என்று பிரகீர் ணகமென்னுங் கிரந்தத்திற் சொல்லப்பட் டிருக்கிறது.

கர்மப்பிரவசநீய மென்பதனையுங் கூட்டிப் பதம் ஐவகைக் த்தாமென்று ஏலாராஜர்வியாக்கியானஞ் செய்திருக்கின்றார். கர்மப் பிரவசநீயமாவது கிரியாவிசேஷத்தா லுண்டான சம்பந்தாவச் சேதத்திற்கேது. ஆகையால், அது சம்பந்தவிசேஷத்தைக் காட் டுவது வாயிலாகக் கிரியாவிசேஷத்தைக் காட்டுவதால் உபசர்க் கத்திலேயே அடங்கி விடுகிறதென்னு மபிப்பிராயத்தினுல் பதம் நால் வகைத்தென்று பாஷ்யகாரர் கூறியது யுக்தமானதாம்.

(ஆ.) உன்னுல் ஸ்போடரூபமான சப்தம் நித்தியமென்று சொல்லப்பட்டது. அஃதொப்புக்கொள்ளத் தக்கதன்று; அவ் வாறு கூறுவதற்குப் பிரமாண மின்மையால்.

200. (ச.) (ஸ்போடரூபமான சப்தம் நித்திய மென்னும்) இதில் பிரத்தியக்ஷமே பிரமாணம்; கௌஃ என்னுமொருபதம் அநேக வர்ணங்களை (எழுத்துக்களை) க் காட்டினும் வேறுன தென்னு ஞானம் சர்வஜனப் பிரசித்தமா யிருப்பதால்.

பாதமின்றி யிருக்கும்போது கௌஃ என்னும் பதாநு பவத்தை மித்தையென்று சொல்லுதல் கூடாது; பதார்த்த ஞானத்திற்கு அந்நிதா னுபபத்தி (வேறு விதமான பொருத்த மின்மை) யாலும் ஸ்போடம் ஒப்புக்கொள்ளல் வேண்டும்.

வர்ணங்க (எழுத்துக்க) ளாலேயே அந்த (பதார்த்த) ஞான முண்டாகின்றதென்பது ஆராய்சி முன்னர் நிற்காது; விகற்பஞ் சகிக்கா (பொருந்தா) மையின்.

வர்ணங்கள் கூடி அர்த்த ஞானத்தையுண்டு பண்ணுகின் றனவா? அல்லது தனித்தனியே பிரிந்து அர்த்தஞானத்தை யுண்டுபண்ணுகின்றனவா? இவற்றுள்,

முதலாவது பக்ஷம் கூடாது; க்ஷணிகங்களான (க்ஷணப்போ திருப்பதான) வர்ணங்களுக்குச் சமூகம் (கூட்டம்) சம்பவியா மையின்.

இரண்டாவது பக்ஷமுங் கூடாது; தனித்தனியே பிரிந்த வர்ணங்களால் அர்த்த ஞானஞ் சம்பவியாமையின்.

'வியாசம் (பிரிந்தும்) சமாசம் (சேர்ந்தும்) என்னும் பிரகாரத்தைவிட வேறு பிரகாரமோ இல்லை. ஆகையால், வர்ணங்களுக்கு வாசகத்துவம் பொருந்தாமலிருக்கும்போது எதன் பலத்தால் அர்த்தஞான முண்டாகின்றதோ அது ஸ்போடமெனப்படும். வர்ணத்தைவிட வேறாயும், வர்ணங்களாலே அபிவியங்கியமா (பிரகாசிப்பதா) யும், அர்த்தஞானத்தை யுண்டுபண்ணுவதாயும், நித்தியமாயு முள்ள சப்தம் ஸ்போடமென்று சப்த தத்துவ மறிந்தவர்கள் சொல்லுகிறார்கள். ஆகையினாற்றான் வர்ணங்களால் ஸ்புட்டியதே (பிரகாசம் பண்ணப்படுவதால்) ஸ்போடமென்றும், அர்த்தமானது ஸ்புடமாய் (ஸ்பஷ்டமாய்) வெளியாவதால் ஸ்போடமென்றும், ஸ்போடசப்தத்தின் அர்த்தம் இருவகையாகச் சொல்லப்படுகின்றது.

"கௌঃ என்னுமிடத்துச் சப்தம்யாது? எதனையுச்சரிப்பதால் சாஸ்நா (அலைதாடி) லாங்கூலம் (வால்) ககுத் (நுசுப்பு) குரம் (குளம்பு) விஷாணம் (கொம்பு) என்னுமிவற்றின் ஞானமுண்டாகின்றதோ அது சப்தமென் றுரைக்கப்படுகின்றது" என்று பகவானான பதஞ்சலியால் மகாபாஷியத்திற் சொல்லப்பட்டிருக்கின்றது.

"வையாகரணர் (வியாகரண மறிந்தவர்கள்) வர்ணத்தைக் காட்டிலும் வேறான † பதத்தை வாசகமென்று விரும்புகின்றனர். வர்ணத்திற்கு வாசகத்துவஞ் சொல்லும்பக்ஷத்தில் இரண்டாவது வர்ணத்தை யுச்சரிப்பது வியர்த்தமாய்விடும்" என்றாரம்பித்து, "வர்ணத்தைவிடவேறாயும், நாதத்தினால் அபிவியங்கியமாயு முள்ளவாசகம் ஸ்போடம்" என்று வாக்கியபதீயத்தில் விசேஷமாக முடிவுசெய் திருக்கின்றதென்று கையடரால் வியாக்கியானம் செய்யப்பட் டிருக்கின்றது.

(ஆ) ஸ்போடத்திற்கு அர்த்தஞானத்தை யுண்டுபண்ணுந் தன்மை சம்பவியாது; விகற்பஞ் சகிக்காமையின். அபிவியக்த (பிரகாச) மான ஸ்போடம் அர்த்த ஞானத்தையுண்டு பண்ணு

---

† அர்த்தவாசகம் - பதம்.

கிறதா? அல்லது அநபிவியக்தமான ஸ்போடம் அர்த்தஞானத்தை யுண்டுபண்ணுகிறதா?

இரண்டாவதுபக்ஷம் கூடாது; எப்போதும் அர்த்தஞான மாகிய காரியம் உண்டாகும்படி நேரிடுவதால். ஸ்போடம் நித்திய மென்று ஒப்புக்கொண்டிருப்பதால் நிரபேக்ஷிகமான ஹேது எப் போது மிருக்கின்றது. ஆகையினால் காரியத்திற்கு லயம் நேரி டாது.

இத்தோஷத்தைப் பரிகரிக்கும் நிமித்தம் அபிவியக்தமான ஸ்போடம் அர்த்த ஞானத்தை யுண்டுபண்ணுகின்ற தென்று சொல்லும் பக்ஷத்தில் (ஸ்போடத்தைப்) பிரகாசம்பண்ணுகின்ற வர்ணங்கள் தனித்தனியே பிரகாசம் பண்ணுகின்றனவா? சேர்ந்து பிரகாசம் பண்ணுகின்றனவா ? இரண்டுபக்ஷத்திலும் வர்ணங்கள் வாசகமென்று சொல்லுமிடத்து யாது தோஷம் உன்னால்சொல் லப்பட்டதோ அத்தோஷமே (வர்ணங்கள்) ஸ்போடங்களைப் பிரகாசம் பண்ணுகின்றன வென்னும் பக்ஷத்திலும் நேரிடும்; அவையும் பரிகரிக்கத் தக்கனவாம்.

"அவயவமற்ற ஸ்போடம் வர்ணஞானத்தினாற் பிரகாசிக் கப் படுகின்றதென்று எந்த வையாகரணன் கூறுகின்றானோ அவன் ஒரு தோஷத்தினின்றும் விடுபட மாட்டான்" என்று மீமாம்ச சுலோகவார்த்திகத்தில் பட்டாசாரியரால் சொல்லப்பட் டிருக்கின்றது.

விபக்தியந்தமான (வேற்றுமையை யீற்றிலுடைய) வர்ணங்க ளிருக்கும்போதே விபக்தியந்தமான வர்ணங்களே பதமென்று பாணினியினாலும் கௌதமராலும் சொல்லப்பட்டிருப்பதால், சங் கேதக்கிரகணத்தினால் அநுக்கிரகமுண்டாய் அதனால் வர்ணங் களிலேயே பதஞான முண்டாகும்.

ஆனால் 'சர' வென்னும் பதத்தில் எத்தனை வர்ணங்களிருக் கின்றனவோ அவ்வளவே 'ரச' வென்னும் பதத்திலு மிருக்கின் றன. இவ்வாறே, வநம் நவம், நதீ தீந, ராமோ, மாரோ, ராஜா ஜாரா இவைமுதலிய விடங்களில் அர்த்தபேதஞானம் உண்டாக மாட்டாதென்று ஆக்ஷேபிப்பதும் சரியன்று; வர்ணங்களின் கிர மத்தினால் அர்த்தபேதம் சம்பவிப்பதால். "எந்த அர்த்தத்தைப் பிரதிபாதிப்பதில் எப்படிப்பட்ட எவ்வளவு வர்ணங்கள் ஒரு பதத்தி லிருக்கின்றனவோ அவ்வர்ணங்கள் அறியப்பட்ட

சாமர்த்தியத்தை யுடையனவா யிருந்துகொண்டு அவ்வாறே அர்த்தத்தைப் போதிக்கின்றன" என்று தௌதாதிக பட்டாற் கூறப்பட்டிருக்கின்றது.

இரண்டுபக்ஷத்திலும் தோஷமும்பரிகாரமும் சமமாயிருக்குமாயின் ஒருவன் மற்றொருவனை ஆக்ஷேபித்தல் கூடாதென்னும் நியாயத்தினால் வர்ணங்களே வாசகமென்பது பொருந்தும்போது ஸ்போடகற்பனை அப்பிரயோசனமாம்.

(ச.) நீ கூறியது பொருந்தாது; விகற்பம் பொருந்தாமையின்.

201. வர்ணமாத்திரத்தில் பதஞான முண்டாகின்றதா? அல்லது வர்ண சமூகத்திலா? முதலாவது பக்ஷங்கூடாது; ஒன்றற்கொன்று விலக்ஷணமான வர்ண (எழுத்து) மாலையில் அபின்னமான நிமித்தமன்றி, புஷ்பங்களில் சூத்திரமன்றி மாலையின் ஞானமுண்டாகாததுபோல், ஏகம் (ஓரெழுத்து) பதமென்னும் ஞானமுண்டாகாமையின். இரண்டாவது பக்ஷமுங்கூடாது; உச்சரிக்கப்பட்டு நாசத்தையடைந்த வர்ணங்கட்குச் சமூகம் சம்பவியாமையின். ஓரிடத்திற் சேர்ந்துள்ள அநேகமான பதார்த்தங்கள் அநுபவிக்கப் படும்போது சமூகமென்னும் வியவகார மேற்படுகின்றது. ஓரிடத்திற் சேர்ந்திருக்க அனுபவிக்கப்படுகிற தவ, கதிர (கருங்காலி), பலாசு முதலிய விருக்ஷங்களில் சமூகமென்னும் வியவகாரம்போலும்; அல்லது ஓரிடத்திற் சேர்ந்திருக்கின்ற யானை, குதிரை, மனிதன் முதலிய வஸ்துக்களில் சமூகமென்னும் வியவகாரம்போலும்.

அந்தவர்ணங்கள் அங்ஙனம் ஓரிடத்திற் சேர்ந்திருக்க அனுபவிக்கப் படுகின்றன வன்று; உண்டாய் நாசத்தை யடைகின்றமையின்.

அபிவியக்தி (பிரகாச) பக்ஷத்திலும் † கிரமமா யபிவியக்தியாகும் பக்ஷத்தில் சமூகம் சம்பவியாது. வர்ணங்களில் கால்பநிகமான (கற்பனையா லேற்பட்ட) சமூகமும் கற்பிக்கமுடியாது; அந்நியோந்நியாசிரயம் வருமாகையால். ஒரே அர்த்தஞானத்தை யுண்டுபண்ணுந் தன்மை சித்திக்கும்போது அதனுபாதியினால் வர்ணங்களில் பதத்துவஞான முண்டாகின்றது. அது சித்திக்கும்

† கிரமமாய்-ஒவ்வொன்றாய்.

போது ஒரே அர்த்த ஞானத்தை யுண்டுபண்ணுந் தன்மை சித்திக்கின்றது. ஆகையால், வர்ணங்களுக்கு வாசகத்துவஞ் சம்பவிக்கமாட்டாமையின்; ஸ்போடம் அங்கீகரிக்கத் தக்கதாம்.

(ஆ.) ஸ்போடத்திற்கு வாசகத்துவஞ் சொல்லும்பக்ஷத்திலும் மேற்கூறிய விகற்பம் வருமாகையால் அது † கட்டகுடிப் பிரபாதம்போலாகின்றது (உத்தேசியாசித்த முண்டாகின்றது).

(ச.) நீ கூறியது மனோராச்சிய விருத்தியே (வீணெண்ணமே) யன்றி வேறன்று; வேறுபாடு சம்பவிப்பதால்.

2]2. அங்ஙனமன்றே, அபிவியஞ்சகமா (பிரகாசஞ்செய்வதா) ன பிரதமத்தொனியும் ஸ்போடத்தை ஸ்புடமாக (வெளிப்படையாக) ப் பிரகாசஞ் செய்கின்றது; உத்தரோத்தர அபிவியஞ்சகமான தொனிகளும் கிரமமாக ஸ்புடமாயும், ஸ்புடதரமாயும், ஸ்புடதமமாயும் பிரகாசம் பண்ணுகின்றன. எங்ஙனம்: ஸ்வாத்தியாயம் (தன்னுடைய அத்தியயன சாகை அஃதாவது வேதத்தினோர்பகுதி) ஒருமுறை படிக்கப்பட்டால் அது நிச்சயம் பண்ணப்படுகின்றதின்று; அப்பியாசத்தாலோ ஸ்புடமாய் (நன்றாய்) நிச்சயம் பண்ணப்படுகின்றது. அல்லது எங்ஙனம் பிரதமப் பிரதீதியில் (முதலி லுண்டாகும் ஞானத்தில்) இரத்தினத்தின் தத்துவம் நன்றாகவிளங்குவதின்று; ஆனால், ஈற்றி லுண்டாகும் ஞானத்தினால் உள்ளவாறு தோன்றுகின்றது. அங்ஙனமே, நாதங்களாலே ‡ பீஜங்களுண்டாய் அந்தப் பீஜங்களுடன் கூடியும் அந்தியமான (ஈற்றதான) தொனியுடன் கூடிய ஆவர்த்தியினால் (அடிக்கடி சொல்லுவதால்) பரிபாகத்தை யடைந்துமுள்ள புத்தியில் சப்தமானது நிச்சயிக்கப் படுகின்றதென்று பிராமாணிகர்களால் கூறப்பட்டிருக்கின்றது. "இந்தச்சப்தத்தால் இந்த அர்த்தத்தை யறிகிறேமென்னும் வியவகாரத்தினால் வர்ணங்களுக்கு அர்த்த வாசகத்துவம் பொருந்தவில்லை" என்று முதலாவதுகாண்டத்தில் பூச்சியரான பர்த்ருஹரியால் கூறப்பட் டிருப்பதால் நிரவயவ

† கட்டகுடி - ஆயச்சாலை, பிரபாதம்-பொழுதுவிடிதல். ( ஆயச்சாலை வழியாய்ப்போகக் கூடாதென்று இரவிற் பிரயாணஞ் செய்த ஒருவன் பொழுது விடியும்போது ஆயச்சாலைக்கே வந்துவிடுதல்). சுற்றிச்சுற்றிப் போனாலும். சுங்கச்சாவடிக்கே வந்தானும் என்னும் பழமொழியு மீண் டறிதற் பாற்றும். உத்தேசியாசித்தம் - கருதியது முடியாமை. ‡ பீஜம்-சம்ஸ்காரம்.

மாயும் அர்த்தஞானஜநகமாயுமுள்ள ஸ்போடமென்னும்பேருள்ள சப்த தத்துவத்தை யொப்புக்கொள்ளல் வேண்டும். இவ்வெல்லாம் "பரமார்த்த ஞானசொரூப சத்தையாகிய ஜாதியே சர்வ சப்தங்கட்கும் அர்த்தம்" என்று பிரதிபாதிக்கின்ற ஜாதி சமுத்தேசமென்னும் பிரகரணத்திற் சொல்லப்பட் டிருக்கின்றன.

(ஆ.) சர்வ சப்தங்கட்குஞ் சத்தையே அர்த்தமாயின் அப்போது எல்லாச் சப்தங்களும் பரியாய சப்தமாய் விடுகின்றன. ஆகவே, ஓரிடத்திலும் இரண்டு மூன்றுபதங்களைச் சேர்த்துப் பிரயோகஞ் செய்தல் கூடாது.

"பரியாயபதங்களின் பிரயோக மேககாலத்தில் சொல்லப்படுகின்றதின்று; அந்தப்பதங்கள் கிரமமாகவே பிரயோகிக்கப்படுகின்றன. கிரமமாகப் பிரயோகிக்கப்பட்ட அப்பரியாய பதங்கள் கிரமமாகவே அர்த்தத்தைப் போதிக்கின்றன; சேர்ந்து போதிப்பதில்லை. ஆகையால், இப்பக்ஷமானது சரியன்றென்று கூறுவையாயின் அதுவுஞ் சரியன்று" என்று சொல்லப்பட் டிருக்கின்றது.

203. (ச.) உனக் கதிக சாமர்த்திய மிருக்கின்றது. நீலம், லோகிதம் (சிகப்பு), பீதம் (மஞ்சள்) என்றற்றொடக்கத்து வர்ணங்களுடன் கூடிய திரவிய பேதத்தினால் ஸ்படிக மணிக்குப் பேதம் ஏற்படுவதுபோலச் சம்பந்திபேத முண்டாவதால், சத்தைக்கு அந்தந்த ரூபமான பேதத்தால் ஞானஞ் சித்திக்கும் போது கோ ஸத்தாதிவடிவான கோத்துவாதி பேதத்தினால் வியவகார பேதம் பொருந்துகின்றது. "நிர்மலவடிவ ஸ்படிகத் திரவியமானது நீலாதி வர்ணமுள்ள அந்நிய திரவியங்களுடன் சேர்ந்து (நீல லோகித பீதாதி வர்ணங்களுடன்) தனித்தனியாக எங்ஙனங் காணப்படுகின்றதோ (அங்ஙனமே சத்தை காணப்படுகின்றது)" என்று பிராமாணிகர்களால் சொல்லப்பட் டிருக்கின்றது.

(1) "கோ (பசு) முதலியவற்றிற் சம்பந்தி பேதத்தினால் பேதத்தையடைந்த சத்தையே ஜாதியென்று சொல்லப்படுகின்றது; அந்த ஜாதியில் சர்வ சப்தங்களு மிருக்கின்றன."

(2) "அந்தஜாதியைப் † பிராதிபதிகார்த்தமென்றும் தாது (பகுதி) அர்த்தமென்றும் சொல்லுகிறார்கள்; அது சத்தை; அது

† பெயர்பகாப்பதம் பிராதிபதிக மெனப்படும்.

மகாத்மா. துவதலாதய: (த்துலமுதலிய பிரத்தியயங்கள்) அதனையே சொல்லுகின்றன" என்று பர்த்ருஹரியாலும் சொல்லப்பட்டிருக்கின்றது.

ஆசிரயங்களான சம்பந்திகளால் பேதத்தை யடைந்தும், கோ முதலியவற்றில் கற்பிதமான பேதத்தை யுடையதுமான சத்தையே மஹாசாமாந்யம்; அதுவே ஜாதி. கோத்துவாதிகள் அபரசமாந்யம்; அது வாஸ்தவத்தில் அம்மஹா சாமாந்நியத்தி (பரஜாதியி)னும் வேறன்று. கோசத்தையே கோத்துவம்; கோவில் அது தோன்றுகின்றதே யன்றி மற்றொன்று தோன்றுவதில்லை. இங்ஙனமே, அசுவ (குதிரை) சத்தையானது அசுவத்துவம். இங்ஙனமே மற்றவற்றையுங் கொள்க. இங்ஙனம் கோ முதலிய வியக்திகளால் பேதத்தையடைந்த சத்தையாகிய ஜாதியிலேயே கோ முதலிய சகலசப்தங்களும் வாசகமா யிருக்கின்றன.

பிராதிபதிகார்த்தமும் சத்தையென்பது பிரசித்தம். தாதுவானது பாவார்த்தத்தைக் கூறுமிடத்துப் பாவமே சத்தை. சத்தையே தாது அர்த்தமாகின்றது. தாதுவானது கிரியை (வினை) யைக் கூறுமிடத்துங் கிரியையே சத்தை; "சிலர் கிரியையை அநேக வியக்திகளிலுள்ள ஜாதியாகச்சொல்லுகின்றனர்" என்று ஜாதிபதார்த்த (ஜாதியைப் பதார்த்தமென்று கூறுகின்ற) சாஸ்திரத்தை யநுசரித்து அநேக வியக்தி கிரியாசமுத்தேசம் என்னும் பிரகரணத்தில் கிரியையை ஜாதியென்று பிரதிபாதித் திருப்பதால். தாது வர்த்தம் சத்தையே. "தஸ்யபாவஸ்துவதலௌ" என்று பாவார்த்தத்தில் துதலாதிகளை விதித் திருப்பதால் துதலாதிகள் சத்தையை யறிவிக்கின்றனவென்ப தமையும்.

அது சத்தை; உற்பத்தி விநாசமற்றிருப்பதால். அது நித்தியமா யிருக்கின்றது; சர்வப் பிரபஞ்சமும் அதன் விவர்த்தமா யிருப்பதால் தேச கால வஸ்து பரிச்சேதமற்றதா யிருக்கின்றமையின். அந்தச் சத்தையானது மகத்தான ஆத்மா என்று சொல்லப்படுகின்ற தென்பது பர்த்ருஹரி கூறிய சுலோக மிரண்டின் பொருளாம்.

"சத்தியமானவஸ்து அசத்தியவஸ்துவின் ஆகாரத்தினால் நிச்சயிக்கப்படுகின்றது. அசத்தியமான வுபாதியையுடைய சப்தங்களால் சத்தியமே சொல்லப்படுகின்றது. எங்ஙனம் கிருகசப்தமானது அநித்தியமான காரணத்தால் தேவதத்த கிருகத்தைக் கிரகித்துக்கொண்டு சுத்த (வாஸ்தவ) த்தையே சொல்லுகின்றதோ அங்ஙனமே" சம்பந்த சமுத்தேச மென்னும் பிரகாணத்தில் திரவிய பதார்த்தமாகிய சம்வித் (ஞான) சொரூபமான தத்துவமே சர்வ சப்தார்த்தமென நிரூபிக்கப்பட் டிருக்கின்றது.

பாஷியகாரரா (பதஞ்சலியா) லும் "சப்தார்த்த சம்பந்தம் சித்தமாயிருக்கும்போது" என்னும் வார்த்திகத்திற்கு வியாக்கியானஞ் செய்யும்போது "திரவியம் நித்தியம்" என்னும் வாக்கியத்தினால் "அசுவத்தோபாதியவச்சின்ன (அரசமரத்தை யுபாதியாகவுடைய) பிரஹ்மதத்வம் திரவிய சப்தவாச்சியம்; அதுவே திரவிய சப்தார்த்தம்" என்று நிரூபிக்கப்பட் டிருக்கின்றது.

ஜாதியைச் சப்தார்த்தமாகச் சொல்லுகிற வாஜப்பியாயனர் மதத்தில் 'கோ' முதலிய சப்தங்கள் அன்னிய திரவியத்தில் சமவாய சம்பந்தத்தா லிருக்கின்ற ஜாதியை யறிவிக்கின்றன.

அந்தச் சாதி கிரகிக்கப்படுமாயின் அதன் சம்பந்தத்தினால் திரவியங் கிரகிக்கப் படுகின்றது.

† சுக்கிலாதிகளான சப்தங்கள் குணத்தில் சமவாய சம்பந்தத்தி லிருக்கின்ற ஜாதியை யறிவிக்கின்றன; குணத்தில் அதன் சம்பந்த மிருப்பதால்.

ஞானம் திரவிய சம்பந்தியின் சம்பந்தத்தி லுண்டாகின்றது. சமிஞ்ஞா (சங்கேதமான) சப்தங்கட்கு உற்பத்தி முதல் நாசம் வரையில் ‡ சைசவம், கௌமாரம், யௌவன முதலிய அவஸ்தாதிகட்குப் பேதமிருப்பினும் 'அவனே இவன்' என்னும் பிரத்தியபிஞ்ஞா பலத்தினாற் சித்தமான தேவதத்துவாதி ஜாதியை யொப்புக்கொள்ளல் வேண்டும்.

204. கிரியையிலும் ஜாதிகாணப்படுகிறது; அவனே வாசிக்கிறான் என்றற் றொடக்கத்தனவற்றில் அநுவிர்த்தப் பிரத்தியயம் (தொடர்ச்சியா யுண்டாகும் ஞானம்) உண்டாவதால்.

---

† சுக்கிலம்-வெண்மை. ‡ சைசவம் - சிசுத்தன்மை.

205. சப்தங்கள் திரவிய பதார்த்தத்தைப் பிரதிபாதிக்கின்றன வென்னும் வியாடி மதத்தில் சப்தம் வியக்தியைக் கூறுகின்றபடியால் வியக்தியே அர்த்தமென்று காணப்படுகின்றது; ஜாதியோ உபலட்சணத்தினு லறியப்படுகின்றது. ஆகையினுல் ஆனந்திய (முடிவற்றது) முதலிய தோஷங்கட் கிடமின்று.

பாணினியாசிரியர்க்கு இவ்விரண்டும் சம்மதம்.

206. ஜாதியைப் பதார்த்தமாக ஒப்புக்கொண்டு ஜாதியைச் சொல்லுமிடத்தில் "ஏகஸ்மின் பகுவசனம் அந்நியதரஸ்யாம்- † ஜாதியொருமைப் பிரயோகத்தில் பன்மைப்பிரயோகம் கொள்ளப் படுகின்றது" என்றற் ருெடக்கத்து வியவகாரங்க ளிருக்கின்றன.

திரவியத்தைப் பதார்த்தமாக ஒப்புக்கொண்டால் "சரூபாணும் ஏகசேஷஃ ஏகவிபக்தௌ - ஒரே வேற்றுமையில் சரூப (சமான) பதங்கட்கு ஒரேபதம் சேஷமாம் (மிஞ்சியதாம்)" என்னும் வியவகாரங்க ளிருக்கின்றன.

வியாகரணம் எல்லாச் சாஸ்திரங்கட்கும் உபகாரமா யிருட் பதினுல் இரண்டு மதங்களையும் ஒப்புக் கொள்ளுவதில் யாதொரு விரோதமுமில்லை.

ஆகையினுல் (ஜாதிசக்திவாதம், வியக்தி சக்திவாதம் என்னும்) இரண்டும் சத்தியம்.

207. (இதனுல்) பிரஹ்மதத்துவம் சர்வசப்தத்தின் அர்த்தமா மென்று முடிந்தது.

"ஆகையினுல் சக்தியின்பேதத்தினுல் சதாத்மக (சத்வடிவ) மான யாவும் சத்தியம்; அந்த அர்த்தம் சப்தத்தினுற் கூறப்படும் போது அநேகவடிவமாய்ப் பிரகாசிக்கின்றது" என்று சொல்லப் பட்டிருக்கின்றது.

சத்திய சொரூபமும் சம்பந்த சமுத்தேசமென்னும் பிரகரணத்தில் "எதனிடத்தில் திருஷ்டாவும், திருசியமும், ஞானமும்

† பிராமணன் பூசிக்கத்தகுந்தவன் என்னும் வாக்கியத்தில் பிராமணரியாவரும் பூசிக்கத்தகுந்தவர் என்று அர்த்தமேற்படுவதுபோலாம்.

கற்பிக்கப்பட வில்லையோ அந்த அர்த்தத்தையே வேதார்த்த வேதிகள் (தெரிந்தவர்கள்) சத்தியமென்று சொல்லுகின்றார்கள்" என்று பர்த்ரு ஹரியினால் கூறப்பட் டிருக்கின்றது.

திரவிய சமுத்தேச மென்னும் பிரகரணத்திலும் "எது விகாரகாலத்திலும் சத்தையாகவே யிருக்கின்றதோ சுவர்ணம் குண்டல மாவதுபோல் எதனிடத்தில் விகாரந் தோன்றி யழி கின்றதோ அதனைப் பரமமான பிரகிருதியென்று சொல்லுகிறார் கள்" என்று கூறப்பட் டிருக்கின்றது.

208. இங்ஙனம் அத்வைதத்தை யொப்புக்கொண்டு அதனை நிர்வாகம் பண்ணும் பொருட்டு வாச்சிய வாசகங்கட்கு அபேதம் காட்டப்படுகின்றது.

"சர்வ சப்தங்கட்கும் அது (பரமப் பிரகிருதி) தான் வாச்சியம்; அது சப்தத்தினும் வேறன்று; அஃது ‡ அபார்த்தகமா யிருந்தாலும் அனேக ரூபங்களை யடைந்த வஸ்துக்களுக்குச் சம்பந்த முண்டாதல்போன் றதற்கு முண்டு".

அவ்வவ்வுபாதியினாற் கற்பிக்கப்பட்ட பேதத்தையுடைத்தா யிருப்பதாலும் வியவகாரம் அவித்தையினால்மாத்திரம் கற்பிக்கப் பட் டிருப்பதாலும் அவ்வவ்வாகாரமான உபாதியின் பேதத்தினால் பேதத்தையடைந்த பிரஹ்ம தத்துவமானது சர்வ சப்தத்திற்கும் வாச்சிய (விஷய) மாயிருக்கின்றது.

அபேதம் பாரமார்த்திகமா யிருப்பினும் அஞ்ஞானவசத்தினால் வியவகார காலத்தில் சொப்பனவஸ்தைபோல் பல்வேறு வகைத்தாயுள்ள பிரபஞ்சமானது விவர்த்தத்தை யடைகின்றதென்பது அடியில்வருஞ் சுலோகத்தின் அர்த்தமாம்.

" எங்ஙனம் சொப்பனப் பிரபஞ்சமானது என்னிடத்தில் மாயையினால் விர்த்தியடைகின்றதோ அங்ஙனம் ஜாக்கிரப்பிரபஞ்சமும் என்னிடத்தில் மாயையினாற் கற்பிக்கப்பட் டிருக்கின்றது" என்று வேதாந்தத்திற் சமர்த்தர்கள் சொல்லுகின்றனர்.

‡ அபார்த்தகம் - வேற்றுமையின்றி யிருத்தல்.

209. ஆகையினால் இப்படி கூடஸ்தமாயும் சச்சிதானந்த வடிவமாயுமுள்ள பரப்பிரஹ்மமானது பிரத்தியக்கான ஜீவனிலும் வேறன்றென் றறியப்படும்போது அனாதியான அவித்தை நிவிர்த்தியாகின்றது; நிவிர்த்தியாவதால் அப்படிப்பட்ட பிரஹ்மவடிவ † அவஸ்தானமென்னு மோக்ஷஞ் சித்திக்கின்றது.

"சப்தப் பிரஹ்மத்தில் நிஷ்டையை யடைந்தவன் பரப்பிரஹ்மத்தை யடைகின்றான்" என்று பெரியோர்கள் கூறியிருப்பதால் சப்தானுசாசன சாஸ்திரத்திற்கு மோக்ஷ சாதனத்துவஞ் சித்தித்தது.

"அஃதபவர்க்க (மோட்ச) த் திற்குத் துவாரம் (வாயில்); வாக் மல (தோஷ) ங் கட்குச் சிகிச்சிதம் (மருந்து); சர்வ வித்தைகளையும் பரிசுத்த மாக்குவது; வித்தைக்கும் வித்தை என்று கூறுகின்றார்கள்" என்றும்,

"இது சித்திசோபான மார்க்கத்திற்கு முதற் சோபானம் (படி)" என்றும், "இது மோக்ஷமார்க்கத்திற்கு நேரான இராஜமார்க்கம்" என்றும் கூறப்படுகின்றன.

210. ஆகையால் வியாகரண சாஸ்திரம் பரமபுருஷார்த்தத்திற்குச் சாதனமா யிருப்பதால் அத்தியயனம் பண்ணத்தக்கதென்பது சித்தம்.

பாணினி தரிசனம்

முற்றிற்று.

---

† அவஸ்தானம் - இருப்பு.

பதினைந்காவது

# சாங்கிய தரிசனம்.

211. (பின்னர்ச் சாங்கியமதம் உபந்யசிக்கப் படுகின்றது). விரோதமுள்ள பரிணாமவாதம் ஜாகரூபமாயிருக்க எங்ஙனம் விவர்த்தவாதம் ஆதரிக்கத்தக்கதாம்? அவ (சாங்கிய) மதபிப்பிராயம் வருமாறு:—

சாங்கிய சாஸ்திரத்தின் பிரகாரம் சங்கிரகமாக நால்வகைத்தாம்.

(1) சில பதார்த்தம் பிரகிருதியாகவே யிருக்கின்றன;

(2) சில பதார்த்தம் விகிருதியாகவே யிருக்கின்றன;

(3) சில பதார்த்தம் பிரகிருதியாகவும் விகிருதியாகவு மிருக்கின்றன;

(4) சில பதார்த்தம் அவ்விரண்டுமாகா திருக்கின்றன.

அவற்றுள்,

i. பிரகிருதி, பிரதான பதத்தாற் கூறத்தக்க மூலப் பிரகிருதியாம். இது மற்றொன்றற்கு விகிருதி (காரியம்) ஆவதின்று. பிரகிருதி என்னும் பதம் பிருகுதியாகச் செய்வதென்னும் வியுற்பத்தி (சொற்பொரு ளுணர்ச்சி) யால் சத்வ ரஜஸ் தமோகுணங்களின் சாம்மியாவஸ்தை (ஒத்தநிலைமை) யைக் கூறுகின்றது. "மூலப்பிரகிருதி அவிகிருதி (காரியமாகாதது)" என்று சாங்கியகாரிகையிற் கூறப்பட் டிருக்கின்றது. மூலமாயும் பிரகிருதியாயு மிருத்தலால் மூலப்பிரகிருதியென்று கூறப்பட்டிருக்கின்றது. மகதாதிகளாய காரியங்கட்கு இது மூலம் (காரணம்). இந்தப் பிரதானத்திற்கு வேறு மூலமின்று. இதற்கு வேறு மூலமுண்டென் றங்கீகரிக்கின் அநவஸ்தையாம்.

(ஆ.) பீஜாங்குரம்போல் அநவஸ்தாதோஷம் சம்பவியாது.

(ச.) பிரமாண மின்மையி னங்ஙனங் கூறுதல் பொருந்தாது.

ii. மகதத்துவம், அகங்காரம், தன்மாத்திரங்கள் (5) என்னும் இவ்வேழும் விகிருதியாயும் பிரகிருதியா (காரணமா) யு மிருக்கின்றன.

" மகதாதி ஏழும் பிரகிருதியும் விகிருதியாயு மிருக்கின் றன" என்று சாங்கியகாரிகையிற் கூறப்பட்டிருக்கின்றது. அவற் றுள், மகதத்துவம் அந்தக்கரண (புத்தி) முதலிய பதங்களா லறி யத்தக்கது; அகங்காரத்திற்குப் பிரகிருதியாயு மிருக்கின்றது. அங்ஙனமே அபிமான மென்னும் அபிதானமு (பெயரு) ள்ள அகங்கார தத்துவம் மகதத்துவத்தின் விகிருதியாம்; ஆனால், இந்த வகங்கார தத்துவம் தமோகுண சகிதமாய்ச் சூக்கும மென் னும் அபிதானமுள்ள பஞ்ச தன்மாத்திரை கட்கும், சத்துவ குண சகிதமாய்ச் சட்சு சுரோத்திரம் கிராணம் சிங்ஙுவை துவக்கு என்னும் ஞானேந்திரிய பஞ்சகத்திற்கும், வாக்கு பாதம் பாணி பாயுரு உபத்தம் என்னும் கர்மேந்திரிய பஞ்சகத் திற் கும், உபய (சத்துவ தமோகுண) சொரூபமான மனதிற்கும் பிரகிருதியா யிருக்கின்றது. இரஜோகுணம் (இந்திரிய மனமென் னும்) இரண்டிடத்தும் கிரியையை யுண்டுபண்ணும் வாயிலாகக் காரணமா யிருத்தலின் வியர்த்தமன்று.

" அபிமானவடிவ அகங்காரத்தி னின்றும் இருவகைத்தாய சிருஷ்டியுண்டாயிற்று. அவ்விருவகைச் சிருஷ்டியுள், ஒன்று கர் மேந்திரிய பஞ்சகம், ஞானேந்திரிய பஞ்சகம், மனது என்னும் பதினொன்றும்; மற்றொன்று பஞ்சதன்மாத்திரைகளாம். சாத்விக அகங்காரத்தினின்றும் இப்பதினொன்று முண்டாயின. தாமச அகங்காரத்தினின்றும் பூதாதிகளின் காரணமான பஞ்சதன்மாத் திரைக ளுண்டாயின. இராஜத அகங்காரத்தி னின்றும் இரு வகைத்தாய கிரியை யுண்டாயிற்று. ஞானேந்திரியங்கள்:—சட்சு, சுரோத்திரம், கிராணம், சிங்ஙுவை, துவக்கு என்பன. கர்மேந் திரியங்கள்:—வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபத்தம் என் பன. சங்கற்ப விகற்பவடிவ (அகவிந்திரிய) மனதும் இவ்விரண் டிடத்தும் சமானமாயிருக்கின்றது" என்று ஈசுவர கிருஷ்ணரால் கூறப்பட் டிருக்கின்றது. இவ்வெல்லாம் வாசஸ்பதி மிசிரரால் சாங்கிய தத்துவ கௌமுதி என்னும் நூலில் வியாக்கியானஞ் செய்யப்பட் டிருக்கின்றன.

iii. ஆகாசமுதலிய பூதங்கள் ஐந்தும், பதினொரு இந்திரி யங்களும் விகிருதிகளேயாம். " பதினாறும் விகிருதியே யன்றிப் பிரகிருதியன்று" என்று சாங்கியகாரிகையிற் கூறப்பட்டிருக்கின் றது. பிருதிவிமுதலியன கடாதிகளுக்குப் பிரகிருதியாம் (உபா

தானமாம்). அங்ஙனமாயினும் அவை (கடாதிகள்) பிருதிவி முதலியனவேயன்றி வேறுதத்துவங்களன்று; ஆகையால், அவை (பிருதிவி முதலியன) பிரகிருதியன்று; வேறு (விகிருதியே). தத்துவ (பதார்த்த) ங்களைக் குறித்து உபாதானமா யிருப்பதே ஈண்டுப் பிரகிருதியென்று அங்கீகரிக்கப்பட் டிருக்கின்றது.

கடாதிகட்கு ஸ்தூலத்துவம் (பரியதாயிருக்குந் தன்மை), இந்திரிய கிராகியத்துவம் (இந்திரியங்களா லறியப்படுந்தன்மை) என்னுமிவை சமானமாயிருத்தலின் அவை வேறு தத்துவமன்று. பூர்வ பூர்வ (முன் முன்) சூட்சும பூதங்களோடு கூடிய சப்த, ஸ்பரிச, ரூப, ரச, கந்தம் என்னும் பஞ்சதன்மாத்திரைகளி னின்றும் ஆகாசமுதலிய ஐந்து ஸ்தூலபூதங்களும் கிரமமாக ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து என்னும் சப்தமுதலியகுணங் களு முண்டாயின. இந்திரியங்களின் உற்பத்தி முன்னரே கூறப் பட்டது.

"பிரகிருதியினின்று மகதத்துவமும், மகதத்துவத்தினின்று அகங்கார தத்துவமும், அகங்கார தத்துவத்தினின்று ஞானேந் திரிய பஞ்சகம் - கர்மேந்திரிய பஞ்சகம் - மனது-பஞ்சதன் மாத் திரை என்னும் பதினாறுதத்துவங்களும், பஞ்சதன் மாத்திரையி னின்று பஞ்சபூதங்களு முண்டாயின" என்று சாங்கியகாரிகை யிற் கூறப்பட் டிருக்கின்றது.

iv. புருஷன் இரண்டு சொரூபமுமற்றவன். "புருஷன் பிரகிருதி விகிருதியென்னும் இரண்டு சொரூபமு மற்றவன்" என்று காரிகையிற் கூறப்பட்டிருக்கின்றது. புருஷனே கூடஸ்த னும் நித்தியனும், விகாரமற்றவனு மிருத்தலின் அவன் ஒன் றற்குப் பிரகிருதியும் மற்றொன்றற்கு விகிருதியுமல்லன் என்பது அதன் பொருள். இவ்விருபைத்தைந்து தத்துவங்கட்கும் சாதன மாகப் பிரமாணத்திரயம் அங்கீகரிக்கப்பட் டிருக்கின்றன.

"பிரத்தியட்சம், அநுமானம், ஆப்தவசனம் என்னு மிம் மூன்றுமே பிரமாணமென் றங்கீகரிக்கப்பட்டிருக்கின்றது. ஏனைய பிரமாணங்க ளிவற்று ளந்தர்க்கதமாம். இப் பிரமாணத்திரயமே இஷ்டம். பிரமாணத்தினுற் பிரமேயம் சித்திக்கின்றது" என்று காரிகையிற் கூறப்பட்டிருக்கின்றது.

காரியகாரண பாவங்களில் நால்வகைத்தாய விப்பிரதிபத்தி (பிரதிகட்சி) சம்பவிக்கின்றது.

a. சௌகதர் (பௌத்தர்) அசத்தினின்றும் சத்துண்டாகின்றதென்று கூறுகின்றனர்.

b. நையாயிகர் சத்தினின்றும் அசத்துண்டாகின்றதென்று கூறுகின்றனர்.

c. வேதாந்திகள் சத்தினின்றும் விவர்த்தவடிவ காரியமுண்டாகின்றது; அது சத்தன்று என்று கூறுகின்றனர்.

d. சாங்கியர்களோ சத்தினின்றும் சத்துண்டாகின்றதென்று கூறுகின்றனர். அவற்றுள்,

(a) அசத்தினின்றும் சத்துண்டாகின்றதென்னும் (பௌத்தர்) பக்ஷம் பிராமாணிகமன்று; நிரூபிக்கத்தகாத அசத்திற்குச் சசவிஷாணம் (முயற்கொம்பு) போல் காரணத்துவம் பொருந்தாமையாலும், துச்சம் (அசத்து) அதுச்சம் (சத்து) என்னு மிவற்றிற்குத் தாதாத்மியம் (அபேதம்) சம்பவியாமையாலு மென்க.

(b) சத்தினின்றும் அசத்துண்டாகின்றதென்னும் (தார்க்கிகர்) பக்ஷமும் பொருந்தாது; சாதன வியாபாரத்திற்கு முன்னர்ச் சசவிஷாணம்போல் அசத்தா யிருப்பதற்குச் சத்தின் சம்பந்தமாகிய வுற்பத்தி பொருந்தாமையின், சமர்த்தனான புருஷனாலும் நீல வர்ணமுள்ள வஸ்துவை மஞ்சள்வர்ண வஸ்துவாகச் செய்ய முடியாமையின்.

(ஆ.) சத்துவாசத்துவங்கள் கடத்தின் தர்மமாம்.

(ச.) இஃது சிதமன்று; தர்மியிராதவிடத்து அதன் தர்ம வியவகாரம் பொருந்தாமையின். அவசியம் தர்மியிருத்தல்வேண்டும். ஆகையால், † காரகவியாபாரத்திற்கு முன்னரும் காரியம் சத்தாகவே யிருக்கின்றது. சத்தான காரியத்திற்கும் அபிவியக்தி (வெளிப் படுதல்) (காரக வியாபாரத்தால்) பொருந்தும். எங்ஙனம்? செக்கிலிட்டு ஆட்டுவதால் எள்ளினின்று எண்ணெயும் கறப்பதால் ஆ (பசு) வினின்று பாலும் அபிவியக்த மாவது போலும். காரணத்திலிராதவஸ்து புதிதாயுண்டாகின்றதென்பதற்கு உதாரணங் காணப்படுவதில்லை.

---

† காரகம்-கருவி- செய்வது.

மேலும், காரியத்தோடு காரணம் சம்பந்தப்பட்டுக்காரியத்தை உண்டுபண்ணுகின்றதா? சம்பந்தப்படாது உண்டுபண்ணுகிறதா?

முதலாவது பக்ஷத்தில் காரியம் சத்தென் றேற்படுகின்றது; சத்பதார்த்தங்கட்கே சம்பந்தமென்னும் நியமமிருப்பதால்.

இரண்டாவது பக்ஷத்தில் ஒருகாரியம் பிறிதொரு காரணத்தினின்றும் உண்டாதல் வேண்டும்; சம்பந்தப்படா திருத்தல் யாண்டும் சமானமாயிருத்தலின்.

"சத்தையின் சம்பந்தத்தோடு கூடிய காரணங்களோடு அசத்தான காரியத்திற்குச் சம்பந்தமில்லை. அசத்தா யிருப்பதால் காரணத்துடன் சம்பந்தமடையாம லிருப்பதற்கு உற்பத்தியை யங்கீகரிப்பின் வியவஸ்தை யில்லாமற்போம்" என்று சாங்கியாசாரியர்களாற் கூறப்பட்டிருக்கின்றது.

(ஆ.) காரணம் காரியத்தோடு சம்பந்தப் படாவிடினும்எதனை யுண்டு பண்ணுவதில் எந்தவஸ்து சக்திசகிதமா யிருக்கின்றதோ அஃததனையே யுண்டுபண்ணும். அந்தச்சக்தியும் காரியத்தைக் காண்டலால் அநுமானிக்கப்படுகின்றது.

(ச.) அது பொருந்தாது; எள்ளில் எண்ணெயை யுண்டுபண்ணும் சக்தியிருக்கின்றதெ தன்பதில் எண்ணெயிராவிடின் அந்தச் சக்தி சம்பந்தித்துக்கொண்டிருக்கிறதா? இல்லையா? என்று விகற்பித்தால் அதன் சக்தியென்றே நிரூபிக்கமுடியாது.

காரியகாரணங்கட்கு அபேதமிருப்பதால் காரியத்தின் சத்துவமானது காரணத்தின் சத்துவத்தினும் வேறன்று. எங்ஙனம்? ஆடை நூலினும் வேறன்று; அதன் தர்மமாகையால். யாண்டு இவ்வபேதம் காணப்படுவதின்றோ ஆண்டுக் காரண காரிய சம்பந்தங் காணப்படுவதில்லை; கோவும் குதிரையும் தம்முள் வேறுபட்டிருத்தல் போல. நூலின்தர்மம் (காரியம்) ஆடையாயிருத்தலின் அது நூலினும் வேறுபதார்த்தமன்று. ஆயின், நூற்களே தனித்தனி பிராவர்ண (மறைத்தல்வடிவ) காரியத்தைச் செய்க வென்று கூறுவையாயின், அது பொருந்தாது; அவயவபேதத்தினு லுண்டான படபாவத்தையுடைய நூற்களுக்குப் பிராவர்ண காரியத்தைச் செய்வது பொருந்துகின்றமையின். எங்ஙனம்? கூர்மத்தின் (ஆமையின்) அங்கங்கள் சரீரத்தினுள் அடங்கும் போது மறைந்திருக்கின்றன; வெளிப்படும்போது காணப்படுகின்றன.

அங்ஙனங் காரணமான நூல்முதலியவற்றின் விசேடமான ஆடை முதலியன வெளிப்பட்டுத் தோன்றும்போது உண்டாகின்றன வென்றும், அடங்கி மறையும்போது அவை நாசமாகின்றனவென் றும் சொல்லப்படுகின்றன. இவையன்றி, அசத்துண்டாகின் றென்பதும் சத்து நாசமடைகின்ற தென்பது மொன்றில்லை.

"அசத்திற்குப் பாவமில்லை, சத்திற் கபாவமில்லை" என் பகவத்கீதையி (ii - 16) ல் கூறப்பட்டிருக்கின்றது.

ஆகையினால் காரியத்தைக்கொண்டு காரணத்தை யநுமா னிப்பதால் அந்தப் பிரதானம் பெறப்படுகின்றது.

"அசத்து எவ்வேதுவினாலும் பாவமடைத லின்மையா னும், தகுதியான சககாரிகள் சேர்க்கப்படுவதாலும், யாவும் எவ் வேதுவினாலும் சம்பவியாமையானும், சக்தமான வஸ்து சக்கி யத்தைச் செய்வதாலும், ஒருவகையான பதார்த்தத்தினின்றும் அதேவகையான பதார்த்த முண்டாவதாலும் காரியம் சத்து" என்று காரிகையிற் கூறப்படுகின்றது.

(c) சத்வடிவு பிரஹ்மதத்துவத்தின் விவர்த்தம் பிரபஞ்சம் என்னும் (வேதாந்திகளின்) கொள்கையும் அங்கீகரிக்கத் தக்க தன்று; பாதம் காணப்படாமையின், அதிஷ்டான ஆரோப்பிய மான சித்சடங்கட்குத் தங்கத்திற்கும் வெள்ளிக்கும் சாதிருசிய மிராமைபோல், சாதிருசியமிராமையின் ஆரோபம் சம்பவிக்கா யின்.

ஆகையால், சுக துக்க மோகவடிவமான பிரபஞ்சத்திற்குஅப்ப டிப்பட்டகாரணம் நிச்சயிக்கத்தக்கதாம்.(அனுமானம்வருமாறு:-)

(1) விவாதத்திற்கு விஷயமான பிரபஞ்சம் சுக துக்க மோக வடிவமான காரணத்தினின்றும் உண்டானது; (2) சுகதுக்க மோ கங்களோடு கூடியிருத்தலின்;(3)எது எதனுடன் சேர்ந்திருக்கின் றதோ அஃது அதனைக் காரணமாக வுடையது; கடகமுதலியன சுவர்ணத்துடன் சேர்ந்திருப்பதால் அவை சுவர்ணத்தைக்காரண மாக வுடையன;(4)அங்ஙனமே இவ்வுலகமும்;(5)ஆதலின் இவ்வு லகமும் சுகதுக்க மோகவடிவ காரணத்தினின்று முண்டானதே.

ஜகத்காரணத்தில் எது சுகசொரூபமோ அது சத்துவ குணம்; எது துக்கசொரூபமோ அது ரஜோகுணம்; எது

மோகசொரூபமோ அது தமோகுணம். ஆதலால் முகுண சொரூபமான காரணம் பெறப்பட்டது. அங்ஙனமன்றே, ஒவ்வொரு பதார்த்தமும் முக்குணத்தோடு கூடியதாகக் காணப்படுகின்றது. எங்ஙனம்? மயித்திரனுக்குத் தனது மனைவியாகிய சத்தியவதியினிடத்தினின்றும் சுகமுண்டா கின்றது; அவளையுத்தேசித்துச் சத்துவகுணம் வெளிப்படுத்தலின்; சபத்தினி (சக்களத்தி) களுக்குத் துக்கமுண்டாகின்றது; அவர்களையுத்தேசித்து ரஜோகுணம் வெளிப்படுதலின். அவளையடையாதுள்ள சைத்திரனுக்கு உபேக்ஷையுண்டாகின்றது; அவளையுத்தேசித்துத் தமோகுணம் வெளிப்படுதலின். இங்ஙனமே கட முதலியன தாமடையப் பட்டால் ஒருவனுக்குச் சுகத்தையுண்டு பண்ணுகின்றன; அந்நியர்களால் அபகரிக்கப்பட்டால் துக்கத்தையுண்டுபண்ணுகின்றன; உதாசீன (விருப்புவெறுப்பின்றியவ) னுக்கு உபேக்ஷக்கு விஷயமா யிருக்கின்றன. உபேக்ஷக்கு விஷயமாந்தன்மை மோகம். முக (வைசித்திய) என்னும் பகுதிக்கு (உபேக்ஷாவிஷயத்தில்) சித்தவிருத்தியுண்டாகாமலிருத்தல் என்பதுபொருள்; இப்பகுதியினின்றும் மோகசப்தம் உண்டாயிற்று.

ஆகையால், சுக துக்க மோக சொருபமான சர்வஜகத்தும் முக்குணவடிவான பிரதானத்தைக் காரணமாக வுடைத்தாயிருத்தல் வேண்டுமெனப் பெறப்படுகின்றது.

"செம்மை வெண்மை கருமையுடையதாய்த் தனக்கொத்த அனேக பிரஜைகளை யுற்பத்தி செய்துகொண் டிருக்கிற ஒரு அஜையை (பிரதானத்தை) ஒரு அஜன் (ஜீவன்) சேவித்துக் (பிரீதியுடன் அநுபவித்துக்) கொண் டவளுடன் சயனஞ்செய்கிறான்; மற்றொருவன் இவளை யனுபவித்தபிறகு விடுகின்றான்" என்று சுவேதாசுவர உபநிஷத்து கூறுகின்றது.

ஈண்டுச் செம்மை, வெண்மை, கருமை என்னும் பதங்கள் ரஞ்சகத்துவம் (திருப்தி செய்யுந்தன்மை), பிரகாசகத்துவம் (பிரகாசஞ் செய்யுந்தன்மை), ஆவரகத்துவம் (மறைக்குந் தன்மை) என்னும் சாதிருசிய மிருப்பதால் ரஜசு, சத்துவம், தமசு என்னும் குணங்களைப் பிரதிபாதிக்கின்றன.

(ஆ.) அசேதன வடிவப் பிரதானம் சேதனவடிவ அதிஷ்டாதா (கர்த்தா) வின்றி மகதாதிகாரியத்தில் பிரவிர்த்திக்க மாட்

டாது. ஆதலால், சேதனவடிவ அதிஷ்டாதா ஒருவன் வேண்டும். ஆதலின், சர்வஞ்ஞனை பரமேசுவரனை யங்கீகரித்தல் வேண்டும்.

(ச.) இஃதங்கீகரிக்கத் தக்கதன்று; பிரதானம் அசேதனமா யிருப்பினும், அதற்குப் பிரயோசனத்தை யுத்தேசித்துப் பிரவிர்த்தி பொருந்துகின்றமையின். அசேதனமானது சேதனவடிவ அதிஷ்டாதாவின்றி (ஆத்மாவின் நன்மையின்பொருட்டு) பிரவிர்த்திப்பது காணப்படுகின்றது. எங்ஙனம் கன்று குட்டியின் விர்த்தியின்பொருட்டு அசேதனமான க்ஷீரம் (பால்) பிரவிர்த்திக்கின்றதோ அசேதனமான மழை லோகோபகார நிமித்தம் பிரவிர்த்திக்கின்றதோ அங்ஙனமே அசேதனவடிவ பிரகிருதி புருஷனது மோட்ச நிமித்தம் பிரவிர்த்திக்கின்றது.

"கன்றுகுட்டியின் விர்த்தி (வளர்ச்சி) யின் பொருட்டு க்ஷீரம் பிரவிர்த்திப்பதுபோல் புருஷனுடைய மோக்ஷநிமித்தம் ஜடமான பிரதானம் பிரவிர்த்திக்கின்றது" என்று சாங்கிய காரிகையிற் கூறப்பட்டிருக்கின்றது.

"பரமேசுவரன் கருணையினால் பிரதானத்தைப் பிரவிர்த்திக்கும்படி செய்கிறார்" என்று பரமேசுவரனை அங்கீகரிப்பவரது பிதற்றுத லெதுவோ அது முற்றும் நிவிர்த்தியாயிற்று; விகற்பத்தினால் பொருந்தாமையின். அங்ஙனமன்றோ,

அந்த ஈசுவரன் சிருஷ்டிக்கு முன்னர்ப் பிரவிர்த்திக்கின்றாரா? சிருஷ்டிக்குப் பின்னர்ப் பிரவிர்த்திக்கின்றாரா?

முதலாவது பக்ஷத்தில் (ஜீவர்களுக்குச்) சரீரமுதலியன வின்மையின் துக்க முண்டாதலில்லை; (உண்டாகாமையின்), அப்போது பரமேசுவரனுக்கு ஜீவர்களது துக்கநிவிர்த்தியில் இச்சை சம்பவியாது.

இரண்டாவது பட்சத்தில் கருணையினால் சிருஷ்டிக்கின்றாரென்றுகூறின், (கருணையினால் சிருஷ்டியுண்டாகின்றது, சிருஷ்டியினால் கருணையுண்டாகின்ற தென்னும்) அந்நியோந்நியாசிரய தோஷம் வருகின்றது.

ஆகையால் சுதந்தரமான பிரதானம் அசேதனமா யிருப்பினும் அதற்கு மகதாதிவடிவமாகப் பரிணமித்தல் ஒக்கும். அது (பரிணாமம்) புருஷனது பிரயோசனத்தை யுத்தேசித்தும் பிரதான புருஷ சையோகத்தாலு முண்டாகின்றது.

எங்ஙனம் காந்தம் வியாபார மற்றிருந்தும் அதன் சந்நிதானத்தினால் இரும்பிற்கு வியாபாரமுண்டாகின்றதோ அங்ஙனமே வியாபாரமற்ற புருஷனது சந்நிதானத்தினால் பிரதானத்திற்குப் பிரவிர்த்தியுண்டாகின்றது; பிரகிருதி புருஷ சம்பந்தமும் † அந்த பங்கு நியாயம்போல் பரஸ்பர அபேக்ஷயினா லேற்படுகின்றது. பிரகிருதியோ போக்கியமா (அநுபவிக்கத்தக்கதா) கையால் போக்தாவான புருஷனை யபேக்ஷிக்கின்றது; புருஷனும் பேத ஞானமின்மையால் புத்திதாதான்மியத்தை (புத்தியின் சாயையை) யடைந்திருப்பதால் அதன்கணுள்ள (ஆதியாத்மீகமுதலிய) மூவகைத் துன்பத்தை நிவிர்த்திக்க மோக்ஷத்தை யபேக்ஷிக்கின்றான். அந்தமோக்ஷம் பிரகிருதி புருஷ விவேகஞானத்தா லுண்டாகின்றது; அஃதன்றி மோட்சம் சம்பவியாமையின் மோட்சமடையும் பொருட்டுப் புருஷன் பிரதானத்தை விரும்புகின்றான். எங்ஙனம் குருடனும் (இருகண்ணில்லானும்) முடவனும் (நடத்தற்குரிய இருகாலில்லானும்) பிரயாணிகளுடன் செல்லும்போது தெய்வ (தீயூழ்) வசத்தினால் தமக்குரியவர்களை விட்டு நீங்கி அங்குமிங்கு மலைந்து நல்லூழ் வசத்தால் ஓரிடத்திற் சேர்ந்தார்கள்; அப்போது குருடனது தோளில் முடவனேறிக் கொண்டான்; முடவன் காட்டிய வழியாய்க் குருடன் விரும்பிய விடத்தைச் சென்றடைந்தான்; முடவனும் போய்ச்சேர்ந்தான்; அங்ஙனமே பிரதான புருஷ பரஸ்பர அபேக்ஷயால் சிருஷ்டியுண்டாகின்றது.

“புருஷனது ஞானத்தின் பொருட்டும் மோட்சத்தின் பொருட்டும், முடவனுக்குங் குருடனுக்கு முண்டான சம்பந்தம்போல், பிரதானத்திற்கும் புருஷனுக்கும் சம்பந்த முண்டாகின்றது. அச் சம்பந்தத்தால் சிருஷ்டி யுண்டாகின்றது” என்று காரிகையிற் கூறப்பட் டிருக்கின்றது.

† “இருகா லிழந்த வொருமுடவ னிருகண் ணில்லான் மீதேறி வருமா றதுபோல்” என்பது அந்தபங்குநியாயமாம்.

(ஆ.) புருஷப்பிரயோஜனத்தின் பொருட்டுப் பிரதானத்திற்குப் பிரவிர்த்தியுண்டாதல் கூடும்? நிவிர்த்தி எவ்வாறு சம்பவிக்கும்?

(ச.) கணவனாலறியப்பட்ட தோஷமுடைய ஜாரிணி (வியபிசார ஸ்திரி) தனது கணவனை எங்ஙனம் மீண்டும் அடையாளோ, அல்லது தனது பிரயோஜனத்தை யடைந்த நர்த்தகி (நடனஞ் செய்பவள்) எங்ஙனம் நடனசாலையி னின்றும் நீங்கிவிடுவளோ அங்ஙனமே பிரதானமும் நிவிர்த்தியாகின்றது.

" நர்த்தகி நடனசாலையி லுள்ளவருக்குத் தனது நர்த்தனத்தைக் காட்டி எங்ஙனம் அவ்விடத்தினின்றும் நீங்கி விடுகின்றாளோ அங்ஙனமே பிரதானமும் புருஷனுக்குத் தனது சொரூபத்தைக் காட்டி நிவிர்த்தியாகின்றது" என்று காரிகையிற் கூறப்பட் டிருக்கின்றது.

இத் தத்துவத்தை யடைதற்கு நிரீசுவர சாங்கியப் பிரவர்த்தகரான கபிலரை யநுசரித்தவரது மதம் உபந்நியசிக்கப்பட்டது.

சாங்கியதரிசனம்

முற்றிற்று.



பதினைந்தாவது

# பதஞ்சலி தரிசனம்.

## (யோகமதம்).

---

212. இப்போது † சேசுரசாங்கியப் பிரவர்த்தகரான பதஞ்சலிமுதலிய முனிவரது மதத்தை யநுசரித்தவரது மதம் உபந்நியசிக்கப்படுகின்றது. சாங்கியப் பிரவசன மென்னும் அபிதானமுள்ள யோகசாஸ்திரம் பதஞ்சலி முனிவரா லியற்றப்பட்டது. அது நான்கு பாதமுடையது. அவற்றுள்,

முதலாவது பாதத்தில், பகவானான பதஞ்சலி முனிவர் "யோகசாஸ்திரம் ஆரம்பிக்கப்படுகிறது" என்று யோகசாஸ்திரத்தின் ஆரம்பப் பிரதிஞ்ஞையைச் செய்து "யோகமாவது சித்த விருத்தி நிரோதம்" என்பதனால் யோகத்தி னிலக்கணத்தைக் கூறிச் சமாதியைப்பற்றி விஸ்தாரமாகக் கூறியிருக்கின்றனர்.

இரண்டாவது பாதத்தில், "தவம், வேதாத்தியயனம், ஈசுவரத் தியானம் என்னுமிவை கிரியா யோகம்" என்றாரம்பித்த வாக்கியத்தினால் பகிர்முகப்பட்ட சித்தமுடையவர்கட்குக் கிரியா யோகமும் இயமமுதலிய வைந்தும் பகிரங்க சாதன மென்று கூறப்பட் டிருக்கின்றது.

மூன்றாவது பாதத்தில், "தேசபந்தம் சித்ததாரணை" என்றற் றொடக்கத்து வாக்கியங்களால் தாரணை, தியானம், சமாதி என்னுமிம் மூன்றும் "சம்யம" பதத்தினாற் கூறத்தக்க அந்தரங்க சாதனங்கள்; இவற்றிற்கு அவாந்தர பலம் அணிமாதி சித்தி என்று கூறப்பட் டிருக்கின்றது.

---

† சாங்கியம் ஸேசுவர சாங்கியம், நிரீசுவர சாங்கியமென விருவகைத்தாம். (ஜகத்காரணமாக வீசுவரனொருவனுண்டென்னும்)ஸேசுவர சாங்கியத்தை யங்கீகரித்தவர் கர்த்தம தேவஹூதிகளின் புத்திரரான (விஷ்ணுவி னவதாரமான) கபிலர்; (ஜகத்காரணமாக வீசுவர னொருவனில்லை யென்னும்) நிரீசுவரசாங்கியத்தை யங்கீகரித்தவர் மற்றோர் கபிலர். முன்னவரது சரித்திரத்தைப் பாகவதம் மூன்றாவது ஸ்கந்தத்திலறிக; ஈண்டுக் கூறியுள்ள சாங்கியமும் யோகமு முறையே நிரீசுவர சாங்கியமும் ஸேசுவர சாங்கியமுமாம்.

நான்காவது பாதத்தில், "ஜன்மம், ஔஷதி, மந்திரம், தபசு, சமாதிஎன்னு மிவற்றாலுண்டாகும் சித்திகள்" என்றற் றொடக் கத்து வாக்கியங்களால் பஞ்சசித்தியின் நிரூபணத்துடன் பரமப் பிரயோசனமான மோட்சமும் நிரூபிக்கப்பட் டிருக்கின்றது.

பிரதானமுதலிய இருபத்தைந்து தத்துவங்கள் இவர்களா லும் அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றன. இருபத்தாறுவது தத்து வமோ பரமேசுவரன். பரமேசுவரனோ ‡ கிலேச கர்ம விபாக ஆசய சம்பந்த மடையாதுள்ள புருஷன்; தனதிச்சையினால் சரீ ரத்தைச் சிருஷ்டித்துக்கொண்டு லௌகிக வைதிக சம்பிரதாயங் களைப் பிரவிர்த்திக்கச் செய்து சம்சார மென்னுந் தீயில்விழுந்து தாபமடைகின்ற பிராணிகட்கு அநுக்கிரகஞ் செய்கின்றனன்.

(ஆ.) தாமரையிலைக்கும் நீர்க்கும் சம்பந்தமிராமை போல் அசங்கனான (சம்பந்தமற்ற) அந்தப் புருஷ (ஜீவ) னுக்குத் தாபம் எங்ஙனம் சம்பவிக்கும்? இவனுக்குள்ள எத்தாபத்தினால் பரமேசு வரன் அநுக்கிராகர் (அநுக்கிரகஞ்செய்பவர்) என் றங்கீகரிக்கப் பட்டதோ அத்தாபம் எங்ஙனம் சம்பவிக்கும்?

(ச.) தபிக்கும்படி செய்வது ரஜோகுணம். சத்துவகுணமே தாபத்தையடைகின்றது. சத்துவகுணம் புத்திவடிவமாய்ப்பரிண மிப்பதால் தாபத்தையடைகின்றது; அப்போது புருஷன் தமோ குண வசத்தினால் சத்துவ குணத்தோ டபேத மடைவதால் அவன் தாபமடைகின்றா னென்று சொல்லப்படுகின்றது.

"புத்தி வடிவமாகப் பரிணமத்தை யடைந்த சத்துவமா னது தாபமடைகின்றது; சகல பதார்த்தங்களும் ராஜசங்கள். அவை தபிக்கும்படி செய்கின்றன. தப்பியமான (தாபத்தை யடைந்த) சத்துவத்திற்கும் புருஷனுக்கும் அபேதத்தைக் கிர கிப்பது தாமசவிர்த்தி. அந்தத் தாமசவிர்த்தி யுள்ளபோதுஆத்மா

† கிலேசம் - பஞ்சக்கிலேசம் (ஐவகைத்துன்பம்). அவை அவித்தை, அஸ்மிதை, இராகம், துவேஷம், அபினிவேசமென்பனவாம். (1) அவித்தை- அஞ்ஞானம் (விபரீதவுணர்ச்சி), (2) அஸ்மிதை - புத்தியான்மாக்களி னொருமை யுணர்ச்சி, (3) இராகம் - அனுகூலபதார்த்த ஞானத்தாலுண் டாகும் புத்திவிருத்தி, (4) துவேஷம் - பிரதிகூலபதார்த்த ஞானத்தா லுண்டாகும் புத்திவிருத்தி, (5) அபினிவேசம் - மரணபயத்தால் சரீரத் தைக் காப்பாற்றுதலி லுண்டாகு மாக்கிரகம் (பிடிவாதம்). கர்மம் - தர்மா தர்மம். விபாகம் - கர்மபலம் (சுகதுக்கம்). ஆசயம் - வாசனை (சம்ஸ்காரம்).

தப்பியன் (தபிக்கப் படுகின்றான்)" என் றாசாரியர்களாற் கூறப் பட்டிருக்கின்றது.

"போக்திருசக்தி பரிணமிப்பதில்லை. பரிணாமத்தை யடை தற்பொருட்டுச் சம்பந்தமடைகின்றதில்லை. அப்படி சம்பந்தித் தால்; அதன் விருத்தியை யநுபவிக்கின்றான்" என்று பதஞ்சலி முனிவராலும் கூறப்பட்டிருக்கின்றது. இதன்கருத்து வருமாறு:—

போக்திருசக்தி சிற்சக்தியென்று கூறப்படுகின்றது; அது வும் ஆத்மாவே; பரிணாமத்தையடைந்த புத்திதத்துவத்தில் பிரதி பிம்பிக்கும்போது அந்த விர்த்தியை யநுபவிப்பதால் புத்தியில் அது பிரதிபிம்பித் திருக்கின்றதென்று வியவகரிக்கப் படுகின் றது. அந்தப் பிரதிபிம்பம் புத்தியின் சாயையை யடைவதால் புத்தி விருத்தியை யநுசரிக்கின்ற தென்பதாம். அங் ஙனமே, புருஷன் சுத்தனாயிருப்பினும் புத்திவிருத்தியினால் எங் ஙனம் ஞானமுண்டாகின்றதோ அங்ஙனமே அநுபவிக்கின்றான்; பின்னரவன் அதனாகாரமாகத் தோன்றுகின்றான். இங்ஙனம் வருந்துகிற புருஷனுக்கு எப்போதும் ஈசுவர விஷயமான ஆதர வினாலும், வெகுகாலம் இயமநியமாதி யஷ்டாங்கயோக அப்பி யாசத்தாலும்,பரமேசுவரத்தியானத்தினாலும், சத்துவகுணத்திற் கும் புருஷனுக்கும் பேதம் காணப்படாமை குறையுங்காலத்து அவித்தை முதலிய பஞ்சக் கிலேசமும் சமூலமாக (முற்றும்) நாசு மாகின்றன. † குசலா குசலமான கர்மாசய (புண்ணியபாவ) ங் களும் மூல (காரண) த் தோடு நாசமாகின்றன. ஆகையாலே நிர் லேபமான (ஒன்றுடனும் சம்பந்தமற்ற) புருஷனுக்குக் கேவல (தான்மாத்திர) மா யிருப்பதே கைவல்லியம் என்பது பெறப்பட் டது.

"அதயோகாநுசாசனம்" என்னும் முதலாவது சூத்திரத்தி னால் சாஸ்திரப் பிரவித்திக்கு அங்கமான விஷயம், பிரயோசனம், சம்பந்தம், அதிகாரி என்னும் அநுபந்தசதுஷ்டயம் கூறப்படுகின் றன. ஈண்டு 'அத' சப்தத்திற்கு ஆரம்பம் என்னும் அர்த்தம் கிரகிக்கபபடுகின்றது.

(ஆ.) 'அத' சப்தத்திற்கு அநேகார்த்த மிருத்தலின் அதற்கு எங்ஙனம் ஆரம்பமென்னும் அர்த்தமாத்திரம் கிரகித்

---

† குசலம் - சக்தியுள்ளது; அகுசலம் - சக்தியில்லது.

தல் அமையும்? மங்களம், அநந்தரம் (பிறகு), ஆரம்பம், பிரஸ்நம் (கேள்வி), சமஸ்தம் (எல்லாம்) என்று (அதற்குப் பலவர்த்தம்) அமரகோசத்திற் கூறப்பட்டிருக்கின்றது. ஈண்டுப் பிரஸ்நம் சமஸ்தம் என்னும் அர்த்தங்கள் பொருந்தாவிடினும் அநந்தரம், மங்களம், பூர்வப் பிரகிருதாபேக்ஷை, ஆரம்பம் என்னும் நான்கர்த்தங்களும் சம்பவிக்கின்றமையின் ஆரம்பார்த்தமாத்திரம் சம்பவியாது.

(ச.) இங்ஙனங் கருதுதல் கூடாது; விகற்பம் பொருந்தாமையின். அநந்தரம் (பிறகு) என்னும் அர்த்தத்தைக் கிரகிக்குமிடத்து (அது) ஏதாவதொன்றற்குப் பிறகா? அல்லது காரணத்திற்குப்பிறகா? முதலாவது பக்ஷம்பொருந்தாது; "ஒருவனும் கணப்போதாவது ஒருகாலத்திலுங் கர்மத்தைச் செய்யாம லிருப்பதில்லை" என்னும் நியாயத்தினல் (கீதை - 3 - 5 வாக்கியத்தால்) சர்வப்பிராணிகளும் ஏதோ வொன்றைச்செய்து பிறகு மற்றொன்றைச் செய்கின்றன. ஆகையால் அதைக் கூறுவிடினும் அது (பிறகென்பது) கிடைத்து விடுகின்றமையின் அவ்வர்த்தத்தில் 'அத' சப்தத்தைப் பிரயோகஞ்செய்வது பிரயோசன மற்றதாம். இரண்டாவது பக்ஷமும் பொருந்தாது;சமமுதலிய குணங்களை யடைந்த பிறகு யோகத்திற்குப் பிரவிர்த்தி யிருப்பினும் அஃது (யோகம்) அநுசாசன (சாஸ்திர)ப் பிரவிர்த்தியோடு கூடியிருத்தலின் அதற்குச் சப்தத்தினுற் பிராதான்னியம் (தலைமை) இல்லை.

(ஆ.) சப்தத்தினுற் பிரதானமாயுள்ள சாஸ்திரத் திற்குச் சமமுதலியவற்றின் ஆனந்தரீயம் (பிறகு) 'அத' சப்தத்தின் அர்த்தமாக ஏன் சம்பவியாது?

(ச.) இங்ஙனங் கூறுவது அங்கீகரிக்கத் தக்கதன்று; அநுசாசனமென்றுல் சாஸ்திரமென் றர்த்தம். லக்ஷணம், பேதம், உபாயம், பலம் என்னு மிவற்றுடன் கூடியயோகம் எதனுல் வியாக்கியானம் செய்யப் படுகின்றதோ அஃது அநுசாசனமென்று பொருள் சம்பவிக்கின்றமையின். இந்த அநுசாசநமும் தத்துவஞானத்தை விசாரிக்க வேண்டுமென்னும் இச்சையின் பிறகு உண்டாவதால் அதற்கு (சமதமாதிகளுக்கு)ப் பிறகு என்னும் நியமம் சம்பவியாது. ஜிஞ்ஞாசா (அறியும் வேட்கை), ஞானம் என்னுமிவையோ "சாந்தி, தாந்தி, உபரதி, திதீட்சை,

சிரத்தை, சமாதானமென்பவற்றையுடையவனாய் ஆத்மாவிலேயே ஆத்மாவைப் பார்க்கின்றான்" என்றற்றொடக்கத்துச் சுருதிகளால் சம முதலியவற்றிற்குப் பிறகு உண்டாகின்றனவென்று கூறப் பட்டது.

(ஆ.) 'அத' சப்தத்தின் அர்த்தம் தத்துவஞானத்தையறிய வேண்டுமென்னும் இச்சைக்குப் பிறகென்று ஏனிருத்தல்கூடாது?

(ச.) நீ கூறியதடாது; அவ்வர்த்தம் சம்பவிக்கினும் சுரோ. தாவின் (கேட்பவனின்) ஞானம் பிரவிர்த்தி என்னு மிவற்றிற்கு உபயோகப் படாமையின் இவ்வர்த்தம் 'அத' சப்தத்தாற் கூறப் படவில்லை.

ஆயினும், மோட்சத்திற்குச் சாதனமாக யோகசாஸ்திரம் நிச்சயிக்கப் படுகின்றதா? இல்லையா? முதலாவது பக்ஷத்தில், சமமுதலியவற்றின் ஆநந்தரீயமன்றியும் இச்சாஸ்திரம் கிரகிக்க யோக்கியமாகின்றது. இரண்டாவது பக்ஷத்தில் ஆநந்தரீய மன்றி யுந் தள்ளத்தக்கதாகின்றது.

"தீரன் (வித்வான்) அத்யாத்ம (ஞான) யோகத்தினால் பூர் வோக்த(முற்கூறிய)பிரகாரமாகத் தியானஞ்செய்து ஹர்ஷ(சுக), சோக (துக்க) ங்களை விடுகின்றான்" என்னும் (ii - 12 கட) சுருதியினாலும்,

"எப்போது புத்தி சமாதியில் அசலமாய் விடுகின்றதோ அப்போது யோகத்தையடையப் போகிறாய்" என்னும் ஸ்மிருதி (ii - 53 கீதை) யினாலும்,

இச்சாஸ்திரத்திற்கு மோட்சசாதனத்துவம் நிச்சயிக்கப்பட் டிருக்கின்றது. ஆகையினாற்றான் சிஷ்யப்பிர வசனம் (மாணாக் கன் வினா), தவம்புரிதல், ரசாயனம் (இரசகுளிகை முதலியன) என்னு மிவற்றிற்குப் பிறகென்பது 'அத' சப்தத்தின் அர்த்த மென்பார் கூற்று நிராகரிக்கப் பட்டது.

"அதாதோ பிரஹ்ம ஜிஞ்ஞாசா" என்னு மிடத்திலோ, பிர ஹ்ம ஜிஞ்ஞாசையானது ஆரம்பிக்கத் தகாமையின் ஆரம்பார்த் தத்தைவிட்டுச் சாதன சதுஷ்டய சம்பத்தியோடு கூடிய அதிகாரி யைப் பிரதிபாதித்தற்பொருட்டுச் சமதமாதி வாக்கியத்தால் விதிக் கப்பட்ட சமமுதலியவற்றின் ஆநந்தரீயம் 'அத' சப்தத்திற் கர்த்தமென்று சங்கராசாரியரால் நிச்சயிக்கப்பட்டிருக்கின்றது.

(ஆ.) ஆநந்தரியார்த்தம் வேண்டாம்; மங்களார்த்தமேன் கொள்ளக்கூடாது?

(ச.) மங்களவடிவ அர்த்தத்திற்கு வாக்கியார்த்தத்திற் சமந்வயம் (அந்வயம்) இராமையின் அது பொருந்தாது. மங்களமோ நிந்திக்கப் படாதுள்ள இஷ்டப் பிராப்தியாம்; இஷ்டமும், சுகப்பிராப்தியும் துக்கநிவிர்த்தியுமாம். யோகசாஸ்திரமோ சுகப்பிராப்தி வடிவமும் துக்கநிவிர்த்தி வடிவமுமன்று; ஆகையால் மங்களமன்று; ஆகவே யோகசாஸ்திரம் மங்களமென்று பெறப்படவில்லை. மிருதங்க வோசைபோல் 'அத' சப்த சிரவண முண்டாவதால் மங்களம் 'அத' சப்தத்தின் வாச்சியமா(வெளிப்படைப் பொருளா) கவும், லக்ஷியமா (குறிப்புப்பொருளா) கவும் சம்பவியாமையாலும், ஆர்த்திகமான (அர்த்தத்தாற் பெறப்பட்டதான) அர்த்தம் வாக்கியார்த்தத்தில் அடங்கியிருப்பதுபோல் சிரவணத்தாலுண்டான அர்த்தமும் அடங்கியிருக்கின்றது; இரண்டற்கும் பதார்த்தம் ஒன்றென்பது சமானமாயிருத்தலின், வாக்கியார்த்தத்தில் பதார்த்தத்தோடு பதார்த்தம் (பதப்பொருள்) அந்வயமாகின்றது; அன்றாயின், சப்தத்தையே பிரமாணமாக வுடையவருக்குச் சப்தாகாங்க்ஷை (சப்தத்தின் அவாய்நிலை) சப்தத்தினாலேயே பூர்த்திசெய்ய வேண்டுமென்னும் நியமம் கெட்டுப்போம்.

(ஆ.) ஆரம்பித்த கிரந்தத்தின் முடிவிற்கு இடையூற்றை நிவிர்த்தித்தற் பொருட்டும், சிஷ்டாசார (ஆன்றோரொழுக்க) த்தைப் பாதுகாத்தற் பொருட்டும் சாஸ்திராரம்பத்தில் மங்களமநுஷ்டித்தல் (கூற) வேண்டும்; "மங்களத்தை முதலிலும் இடையிலும் கடையிலு முள்ள சாஸ்திரங்கள் பிரசித்தியடைகின்றன; அவை சிஷ்யர்கட்கு நீண்ட ஆயுளையும் (சொற்போர்புரிந்து வெல்லும்) வீரத்தையுந் தருகின்றன" என்று பெரியோர்களாற் கூறப்பட்டிருத்தலின்,

"ஓங்காரமும் அதசப்தமும் முற்காலத்திற் பிரம்மாவின் கண்டத்தைப் பேதித்து (பிளந்து) வெளிப்பட்டன; ஆகையால் அவை மங்களகரமா யிருக்கின்றன" என்று ஸ்மிருதி கூறுவதால் 'அத' சப்தமானது மங்களார்த்த முடையதாம்.

(பாணிநீயத்தின்) "விர்த்திராதைச்" என்னும் முதற் சூத்திரத்தில் 'விர்த்தி' முதலிய சப்தம் மங்களவடிவார்த்தத்தைக்கூறுவதுபோல் 'அத' சப்தமும் மங்களார்த்தத்தைக் கூறட்டுமே?

(ச.) நீ இங்ஙனங் கூறுவது பொருந்தாது; வேறர்த்தத்தைத் தெரிவித்தற்பொருட் டுபயோகிக்கப்பட்ட 'அத' சப்தத்தின் சிரவணத்தினால் சங்கு வீணை முதலியவற்றின் ஒலிபோல் மங்களத்தின் பிரயோசன முண்டாகின்றமையின்.

(ஆ.) யோகசாஸ்திரம் ஆரம்பிக்கத் தக்கதென்னும் வாக்கியார்த்த ஞானமாகிய பிரயோசனத்தையுடைய 'அத' சப்தத்திற்கு எங்ஙனம் வேறுபிரயோசன முண்டாகுமெனச் சொல்லுதல் கூடும்?

(ச.) இது கூடாது; வேறர்த்தத்தின் பொருட்டுக் கொண்டு வரும் நீர்க்குடம்போல் அது (பிரயேசனம்) சம்பவிக்கின்றமையின். ஆனால், ஸ்மிருதிவிரோதம் வருகின்றதென்று கூறுவையாயின் அதுவுங் கூடாது; மங்களத்தின் பிரயோசனத்தைக் கூறும் பொருட்டே ஸ்மிருதியின் பிரவிர்த்தி யிருத்தலின்.

'அத' சப்தத்திற்குப் பூர்வப்பிரகிருதாபேக்ஷை (முன்னர்ப் பிரஸ்தாபித்த விஷயத்தை விரும்புதல்) என் றர்த்தங் கூறுவதும் சரியன்று; பலத்தில் 'பிறகு' என்னும் அர்த்தமும் (பூர்வப்பிரகிருதா பேக்ஷை என்னும்) இவ்வர்த்தமும் ஒன்றாய் விடுகின்றமையின் மேற்கூறிய தோஷம் சம்பவியாது. மேலும், இந்த 'அத' சப்தமானது அதிகாரார்த்தத்தை (ஆரம்ப மென்னும் பொருளை)க் கூறுகின்றதா? அல்லது ஆனந்தரியம் என்னும் அர்த்தத்தைக் கூறுகின்றதா? என்றற் றொடக்கத்து விமரிச (பரியாலோசனை) வாக்கியத்தில் வேறுபட்சத்தை உபந்நியாசஞ் செய்பு (நிரூபிக்கு) மிடத்து அது (பூர்வப்பிரகிருதா பேக்ஷை என்னும் பொருள்) சம்பவித்தாலும் பிரகிருதத்தில் (ஈண்டு) அது சம்பவியாது.

ஆகையால், பரிசேடத்தால் அதிகாரமென்னும் பதத்தாலறியக் கூடிய ஆரம்பார்த்தத்தை 'அத' சப்தம் கூறுகின்றதென்று விசேடார்த்தம் கூறப்படுகின்றது. "அதைஷஜோதி", "அதைஷ விஸ்வஜோதி" என்னுமிடத்து 'அத' சப்தத்திற்கு யாக விசேஷத்தின் ஆரம்பார்த்தம் கிரகிக்கப்பட் டிருக்கின்றது; "அதசப்தாநுசாசநம்" என்னுமிடத்து 'அத' சப்தத்திற்கு வியாகரண சாஸ்திரம் ஆரம்பிக்கத் தக்கதென்று பொருள் கிரகிக்கப் பட்டமை போலாம்.

யோக சூத்திர விவரண (வியாக்கியான) மாகிய வியாசபாஷியத்தில் 'அத' சப்தத்திற்கு அதிகாரமெனப் பொருள் கூறப்பட்டிருக்கின்றது. அவ்வியாச பாஷியத்திற்கு வியாக்கியானஞ் செய்த வாசஸ்பதியென்பார் 'அத' சப்தம் ஆரம்பார்த்தத்தையும் மங்களார்த் தத்தையும் சூசி (குறி) ப் பிக்கின்ற தெனக் கூறியிருக்கின்றார். ஆகையால் இந்தப் பிரகாரம் இந்த 'அத' சப்தம் ஆரம்பார்த்தத்தைச் சூசிப்பிக்கின்ற தென்னுமிடத்துச் சாஸ்திரத்தினு லாரம்பிக்கத்தக்க யோகத்தின் சம்பந்த மிருப்பதால் சமஸ்த சாஸ்திர தாற்பரியங்களையும் வியாக்கியானஞ் செய்வதால் சாஸ்திர சுகபோதப் பிரவிர்த்தி (சாஸ்திரத்தை நன்ருயறியும் முயற்சி) யுண்டாகுமென்பது பொருந்தும்.

(ஆ.) "யோக சாஸ்திரத்தைக் கூறியவர் ஹிரண்ணியகருப்பரே யன்றிப் பிராசீனமான ஒருவருமல்லர்" என்று யாஞ்ஞவல்கிய ஸ்மிருதி கூறுவதால் எங்ஙனம் பதஞ்சலி முனிவர் யோக சாஸ்திர மியற்றினு ரென்று சொல்லுதல் கூடும்?

(ச.) உண்மையே. ஆகையினுற்ருன், அங்கங்கே புராணுதிகளில் யோகம் சிதறிக்கிடக்கின்றமையின் அதனை மக்கள் கிரகிக்க முடியாதென்று கருதிக் கிருபாசமுத்திரமான பகவான் பணிபதி (பதஞ்சலி) சாரத்தைக் கிரகித்து யோகசாஸ்திர மியற்றினுரே யன்றிச் சுதந்திரமாக வியற்றவில்லை.

எப்போது இந்த 'அத' சப்தமானது ஆரம்பார்த்தத்தைக் கூறுகின்றதோ அப்போது இங்ஙனம் வாக்கியார்த்தம் சம்பாதிக்கப்பட்டது. 'யோகாநுசாசநம்' என்னும் சாஸ்திரம் ஆரம்பிக்கப்பட்டதென்று கூறல் வேண்டும். அந்தச்சாஸ்திரத்தில் (சித்த) சமாதானவடிவ யோகம் பலத்துடன் நிரூபிக்கப் படுகின்றமையின் அது விஷயமா யிருக்கின்றது. அதன் நிரூபணம் அவாந்தரப் பிரயோசனம். நிரூபிக்கப்பட்ட யோகத்திற்குப் பரமப் பிரயோசனம் கைவல்லியம். சாஸ்திரத்திற்கும் யோகத்திற்கும் பிரதிபாதக (சொல்லுதல்) பிரதிபாத்திய (சொல்லப்படுதல்) பாவ சம்பந்த மிருக்கின்றது. யோகத்திற்கும் கைவல்லியத்திற்கும் சாதன சாத்தியபாவ சம்பந்தமிருக்கின்றது. அந்தச் சம்பந்தமும் சுருதி முதலியவற்றில் பிரசித்தமென்று முன்னரே கூறப்பட் டிருக்கின்றது. மோட்சத்தை விரும்புகின்றவர்கள் சிரவணத்தில் அதிகாரி

ளாவரென்பது அர்த்தாத் சித்தம் (அர்த்தத்திற் பெறப்படு கின்றது).

"அதாதோ பிரஹ்ம ஜிஞ்ஞாசா" என்றற்றொடக்கத்திடங் களில் அதிகாரி அர்த்தாத்சித்தி என்றுசங்கித்தல் கூடாது. ஆண்டு 'அத' சப்தம் பிறகு என்னும் அர்த்தத்தைக் கூறும்போது பரம் பரையாக அதிகாரியைக் கூறுகின்றது; அங்ஙனங் கூறுமிடத்து அதிகாரி அர்த்தாத் சித்தி என்னும் ஆசங்கை யுண்டாகாமையின். ஆகையாற்றான் "சுருதிப் பிரசித்தமான அர்த்தத்தில் பிரகாரணாதி கட்கு அவகாச (இட) மில்லை" என்று கூறப்பட்டிருக்கின்றது.

இதன் பொருள் வருமாறு:—யாண்டுச் சுருதியினால் அர்த்த மானது பெறப்படவில்லையோ ஆண்டே பிரகரணாதிகள் அர்த்தத் தைப் போதிக்கின்றன; ஏனையவிடத்து(சுருதியினாலர்த்தம்பெறப் படுமிடத்துப்) போதிப்பதில்லை. யாண்டுச் சப்தத்தினாலேயே அர் த்த ஞானமுண்டாகின்றதோ ஆண்டுப் பிரகரணாதிகள் சம்பவிப்ப தில்லை. வினைவாக அர்த்தத்தைப் போதிக்கிற சுருதியினால் அர்த் தம் போதிக்கப்படுமிடத்துப் பிரகரணாதிகள் அதற்கு விருத்த மான அர்த்தத்தைப் போதிக்கின்றனவா? அல்லது அதற்கு அவிருத்தமான அர்த்தத்தைப் போதிக்கின்றனவா? அவற்றுள், முதலாவது பக்ஷங் கூடாது; விருத்தார்த்தத்தை (விரோதப்பொ ருளைப்) போதிக்கிற அந்தப் பிரகரணாதிகள் (சுருதியினாற்) பாதிக்கப்பட்டிருத்தலின். இரண்டாவது பக்ஷமுங்கூடாது; வியர் த்தமாகின்றமையின். "சுருதி, லிங்க, வாக்கிய, பிரகரண, ஸ்தான, சமாக்கியைகளுக்கு ஒரு விஷயத்தில் சமவாயம் (சம்பந்தம்) நேரி டும்போது பாரதௌர்பல்லியம் (பிந்தியிருப்பதற்கு அர்த்தபோத அசக்தி) இருக்கின்றது; அர்த்தம் விலகியிருத்தலின்" என்று ஜைமினி முனிவரால் பூர்வ மீமாம்சையிற் கூறப்பட்டிருக்கின் றது.

"எப்போதும் சுருதியானது (லிங்கமுதலிய வற்றைப்) பாதிப்பதாவே யிருக்கும். சமாக்கியையானது எப்போதும் (மற்ற வற்றால்) பாத்தியமாகவேயிருக்கும். இடையி லிருப்பனவற்றிற் கோ பாதகபாத்தியத்துவம் ஆபேக்ஷிகமா யேற்படுகின்றது" என்று கூறப்பட்டிருக்கின்றது.

213. ஆகையினுல் விஷயமுதலியவற்றுடன் கூடியிருத்தலின் பிரஹ்மவிசாரசாஸ்திரம் போன்று யோகாநுசாசனமாகிய சாஸ்திரமும் ஆரம்பிக்கத் தக்கதென்பது பெறப்பட்டது.

(ஆ.) நிரூபிக்கத்தக்கது யோகமேயன்றிச் சாஸ்திரமன்று.

(ச.) நீகூறியதுண்மையே. யோகந்தான் பிரதான விஷயமாக நிரூபிக்கப்படுகின்றது. அந்தயோகம் அந்தச் சாஸ்திரத்தால் பிரதிபாதிக்கப் படுகின்றது. ஆகையால் அதைப் பிரதிபாதிப்பதில் சாஸ்திரம் கரண (சிறந்தகாரண) மாம். கர்த்தாவின் வியாபாரம் கரணத்தை விஷயமாகச் செய்கின்றதேயன்றிக் கர்மத்தை விஷயமாகச் செய்கின்றதில்லை. எங்ஙனம் வெட்டுகிறவனுகிய தேவதத்தனது (கரங்களால் கோடரியைத்) தூக்கிப்போடுதலாகிய வியாபாரம் கரணமாகிய கோடரியை விஷயமாகச் செய்கின்றதேயன்றிக் கர்மமாகிய (செயப்படுபொருளாகிய) விருக்ஷமுதலியவற்றை விஷயமாகச் செய்கின்றதில்லையோ அங்ஙனமே வக்தாவான பதஞ்சலியின் பிரவசன (வார்த்தை) வியாபார அபேக்ஷயினுலே யோகசாஸ்திரம் ஆரம்பிக்கத்தக்கதாம். கரணமாகிய யோகசாஸ்திரத்தின் அபிதான வியாபாரத்தை அபேக்ஷித்து யோகத்திற்கேஆரம்பம் சித்திக்கின்றது; ஆகவே, யோகசாஸ்திராரம்பம் சம்பவிக்கும். ஈண்டுச் சொல்லத்தக்க யோகமானது 'சித்தவிருத்தி நிரோதம் (மனோவிருத்தியைத் தடுத்தல்)' எனக் கூறப்படுகின்றது.

(ஆ.) 'யுஜி' என்னும்பகுதியின் பொருள் யோகம்; யோகம் என்னும் பதத்தின் பொருள் சம்யோகம் (கூட்டம்) என்று (வியாகரணத்தில்)படித்திருப்பதால் இப்பகுதியிலிருந் துண்டாய யோகசப்தம் சம்யோகத்தைக் கூறுமேயன்றி நிரோதத்தைக் கூறமாட்டாது. ஆகையினுற்றுன்,

"ஜீவாத்ம பரமாத்மாக்களின் சம்யோகம் யோகமெனக் கூறப்பட்டிருக்கின்றது" என்று யாஞ்ஞவல்கியரால் கூறப்பட்டிருக்கின்றது.

(ச.) நீ கூறிய தங்கீகரிக்கத்தக்கதன்று; ஜீவேசுவரருடைய சம்யோகத்திற்குக் காரணமாகக் கர்மமுதலியன சம்பவியாமையாலும், நித்திய பதார்த்தங்கட்குச் சம்யோகம் கணுத கௌதமர் முதலி யோர்களால் நிக்கிரகிக்கப்பட் டிருக்கின் றமையாலும்,

மமாமசக மதத்தையநுசரித்து அதனை யங்கீகரித்தாலும் நித்திய சித்தமான அந்தச் சையோகம் சாத்தியமாக விராமையின் சாஸ் திரம் வியர்த்தமாய் விடுகின்றமை யானும், பகுதிகட்கு அநேகார்த்த மிருப்பதால் 'யுஜி' என்னும் பகுதிக்குச் சமாதி என்னும் பொருள் பொருந்துகின்றமையானும் என்க.

"(ச முதலிய) நிபாதங்களும், (பிரா முதலிய) உபசர்க்கங்களும், தாது (பகுதி) க்களும் அனேகார்த்த முடையன" என்று கூறப்பட்டிருக்கின்றது.

ஆகையினாற்றான் சிலர் 'யுஜி' என்னும் பகுதிக்குச் சமாதி என்று பொருள் கூறுகின்றனர். யாஞ்ஞவல்கிய வசனத்திற்கு விரோதம் வருமேயெனின், ஆண்டுள்ள யோகசப்தத்திற்குச் சமாதியெனப் பொருளாகையால் விரோதம் வரமாட்டாது.

"சமாதியாவது ஜீவாத்ம பரமாத்மாக்களின் சமாவஸ்தை (ஒத்துள்ளநிலை). பிரத்தியகாத்மாவிற்குப் பிரஹ்மத்தி னிடத்திலேயே யாதொருஸ்திதியுண்டோ அதுவே சமாதி" என்று யாஞ்ஞவல்கியராலேயே கூறப்பட்டிருக்கின்றது.

"யோகம் சமாதி" என்று பகவானான வியாசராலுங் கூறப் பட் டிருக்கின்றது.

(ஆ.) இங்ஙனமாயின், அஷ்டாங்கயோகத்தில் சமாதி எட்டாவதங்கமெனப் பதஞ்சலியால் கூறப்பட்டிருக்கின்றது. அங்கியா (யோகமா)னது அங்க (இயமநியமாதி) பாவத்தையடைய மாட்டாது;உபகாரிய(உபகாரத்தையடைவது)உபகாரக (உபகாரத்தை யுண்டுபண்ணுவது) பாவம் தரிசபூரணமாசப் பிரயாஜாதிகளில் (அங்கயாகங்களில்)வெவ்வேறதிகரணத் திருத்தலின் அவற்றிற்கு அத்தியந்தபேத மிருப்பதுபோல் ஈண்டும் பேதமிருத்தலின் சமாதி யோகசப்தத்தின் பொருளாகமாட்டாது.

(ச.) நீ கூறிய தடாது; வியுற்பத்திமாத்திரம் கூறவேண்டு மென்னு மிச்சையால் அர்த்தமாத்திரத் தோற்றமாயும் சொரூப சூனியம்போலு மிருக்கின்றது எட்டாவதங்கமாகிய சமாதி என்று நிரூபிக்கப்பட்ட எட்டாவதங்கத்தைக் கூறும் சமாதிசப் தத்தினால் அங்கியான யோகத்தின் அபேதத்தைக் கூறவேண்டு மென்னுங் கருத்தினால் 'யோகம் சமாதி' என்று கூறியது பொருந்துகின்றது.

(ஆ.) வியுற்பத்தி பலத்தாலேயே சப்தம் எங்கும் பிரவிர்த்திக்கின்றதெனின், 'கௌঃ (ஆ)' என்னும் பதத்திற்குச் 'கச்சதி' (நடக்கிறது) என்னும் வியுற்பத்தியால் நிற்கின்ற கோ (பசு) கோவாகாது; நடக்குந் தேவதத்தன் கோசப்தத்தாற் கூறப்படுவன். (யோக) சப்தப் பிரவிர்த்திக்கு (ப் பொருள்) சித்தவிருத்தி நிரோதமென முன்னரே கூறப்பட்டிருக்கின்றது.

விருத்திகளின் நிரோதம் யோகமென்றங்கீகரிக்கின் அவை ஞானமாகையால் ஆத்மாவை யாசிரயித்துக்கொண் டிருக்கின்றன; ஆத்மாவை யாசிரயித்துக்துக்கொண் டிருத்தலின் பிரத்துவம்சமெ (பின்னின்மை யெ) ன்னும் பதத்தாலறியக்கூடிய விருத்திகளின் நிரோதமும் ஆத்மாவை யாசிரயித்துக்கொண் டிருத்தல் வேண்டும்; பிராகபாவத்திற்கும் பிரத்துவம்சா பாவத்திற்கும் பிரதியோகி (எதிர்மறை) சமானாதிகரண (ஒருநிலைக்கள) மாயிருக்கின்றதென்பது நியமமாகலின். ஆதலால் "உண்டாகின்ற இத்தர்மம் தர்மியை விகாரப்படுத்தும்" என்னும் நியாயத்தினால் (விருத்தியின் நிரோதத்தால்) ஆத்மாவின் கூடஸ்தத் தன்மை கெட்டுப்போம்.

(ச.) அதுவும் அங்கீகரிக்கத்தக்கதன்று; பிரமாணம், விபர்யயம், விகற்பம், நித்திரை, ஸ்மிருதி என்னு மிவ்வடிவ விருத்திகள் அந்தக்கரணமென்னும் அபிதானமுள்ள சித்தத்தின் தருமமாக அங்கீகரிக்கப் படுகின்றமையின். கூடஸ்த நித்தியமாயும் பரிணாமத்தை யடையாததாயுமுள்ள சித்சக்தி விஞ்ஞானதருமத்திற் காசிரய மாகமாட்டாது. சித்சக்திக்குப் பரிணாமமின்மை பெறப்படவில்லை யென்றுங் கருதுதல்கூடாது; (1) 'சித்சக்தி பரிணாமத்தையடைவதின்று; (2) எஞ்ஞான்றும் ஞாதுருத்தன்மையிருத்தலின்; (3)யாதிங்ஙனமாயதன்றே அஃதத் தன்மையதன்று; சித்தமுதலியனபோல என்னும் (வியதிரேகி) அநுமானம் சம்பவித்தலின். அங்ஙனமே, இந்தப்புருஷன் பரிணாமியாயிருப்பின் அப்போது பரிணாமம் ஒருசமயமுண்டாதலின் அந்தப்புருஷனுக்கு எஞ்ஞான்றும் ஞாதுருத்தன்மை பொருந்தாது. எப்போதும் அதிஷ்டாதா (கர்த்தா) வாயுள்ள சித்வடிவபுருஷனுக்கு அந்தரங்கமாயும் நிர்மலமாயுமுள்ள சத்துவ (குண)மெதுவோ அச்சத்துவம் எப்போது மிருத்தலின் அஃதெவ்வெவ்விஷயங்களோடு சம்பந்தப்படுகின்றதோ அவ்வவ்விஷயங்கட்கு அப்

போது சித்சாயை (சித்தின்பிரதிபிம்பம்) உண்டாகின்றது; உண்டாதலின், பானம் (தோற்றம்) பொருந்துகின்றது; பொருந்துவதால், புருஷனுக்கு நிஸ்சங்கத்துவம் (சம்பந்தமின்றி யிருக்குந் தன்மை) சம்பவிக்கின்றது. ஆகையால் புருஷனுக்கு எப்போதும் ஞாதுருத்துவம் சித்தமாயிருக்கின்றது. சித்தமாயிருத்தலின் ஒரு சமயம் (சித்சக்தி) பரிணாமத்தை யடைவதென்னும் ஆசங்கை யுண்டாவதில்லை. சித்தம் எவ்விஷயத்திற் சம்பந்தப் படுகின்றதோ அவ்விஷயம் ஞாதமா (அறியப்படு) கின்றது; அது எவ் விஷயத்தோடு சம்பந்தமடையவில்லையோ அவ்விஷயம் ஞாதமாவதில்லை. ஆகையால் அயஸ்காந்தமணி(ஊசி காந்தக்கல்லு)க்கொத்த வஸ்துவின் ஞாதாஞ்ஞானங்கட்குக் காரணமான உபராகம் (சம்பந்தம்) அநுபராகம் (சம்பந்தமின்மை) ஆகிய தர்மித்துவாதிகள் தர்மத்தோடு கூடியதாயும் பரிணாமியுமான சித்தமென்று கூறப் படுகின்றன.

(ஆ.) சித்தத்திற்கும் அகங்கார சம்பந்தமுடைய இந்திரியத்திற்கும் சர்வகதத்துவம் (எல்லாவற்றோடுஞ் சம்பந்தித்திருக்குந் தன்மை) இருத்தலின், அவை எப்போதும் சர்வவிஷயங்களுடனும் சம்பந்தப்பட்டிருக்கின்றன; இருத்தலின், எப்போதும் எவ் விடத்தும் எல்லாவற்றின் ஞானமும் சம்பவித்தல்வேண்டும்.

(சு.) சித்தம் சர்வகதமாயிருப்பினும் அஃதெந்தச் சரீரத்தில் விர்த்தியுடன் கூடியிருக்கின்றதோ அந்தச்சரீரத்தோடு எந்த விஷயத்திற்குச் சம்பந்தமுண்டா யிருக்கின்றதோ அந்த விஷயத்திற்றான் இவ (ஜீவ) னுக்கு ஞானமுண்டாகின்றது; ஏனைய விஷயங்களின் ஞானமுண்டாவ தின்று. ஆகையால், † அதிப்பிரசங்கமில்லை. ஆகையினாற்றான், அயஸ்காந்தமணிக்குச்சமானமாக விஷயங்களும், அயசுக்குச் சமானமாகச் சித்தமு மிருத்தலின் அந்தச சித்தம் இந்திரிய வாயிலாக விஷயங்களுடன் சம்பந்தப்படுகின்றது. ஆகையால், விருத்திகள் சித்தத்தின் தருமங்களேயன்றி ஆத்மாவின் தருமங்களன்று. "காமம், சங்கற்பம், சம்சயம், சிரத்தை, அசிரத்தை, திருதி (தைரியம்), அதிருதி என்னு மிவையாவும் மனமே" என்று சுருதிகூறுவதால் சித்சக்தி அபரிணாமியென்று பெறப்படுகின்றது. "அபரிணாமி போக்திருசக்தி" என்று பஞ்சசிகாசாரியாராற் கூறப்பட்டிருக்கின்றது.

---

† அதிப்பிரசங்கம்-மிகைபடக்கூறல்.

"சித்தவிருத்திகள் எப்போதும் ஞாதங்கள்; புருஷன் அபரிணுமியாகையால்" என்று (iv - 18 ல்) பதஞ்சலியாலுங் கூறப்பட்டிருக்கின்றது. (1.) சித்தம் பரிணுமி (பரிணுமத்தையுடையது); † (2.) ஞாதாஞ்ஞாதமான விஷயங்களை யுடைத்தா யிருத்தலின்; (3.) சுரோத்திரேந்திரிய முதலிய வற்றைப்போல (என்பது அனுமானம்).

பரிணுமமும்:—தர்மம், இலக்ஷணம், அவஸ்தை யென்னும் வேறுபாட்டால் மூவகைத்தாம்.

(1.) தர்மியான சித்தத்திற்கு நீலாதி சிந்தனம் (நீலநிறமுதலியவற்றைப் பற்றிச் சிந்தித்தல்) தர்மபரிணுமம். எங்ஙனம்? கடக மகுட கேயூரமுதலியவற்றைத் தர்மமாகவுடைய சுவர்ணத்தைப் போல. (2.) வர்த்தமானத்துவம் (நிகழ்காலத் திருக்குந்தன்மை) முதலியன இலக்ஷணபரிணுமம். (3.) நீலாதி சிந்தனத்தின் ஸ்புடத்துவ (விளக்க) முதலியன அவஸ்தா பரிணுமம். சுவர்ணுதி கட்கோ நவபுராணத்துவாதி (புதிதாயிருக்குந் தன்மை, பழமையதா யிருக்குந்தன்மை முதலியன) அவஸ்தாபரிணுமமாம். இங்ஙனமே, ஏனையவிடங்களிலும் சம்பவித்தவரையில் மூன்று பரிணுமத்தையும் ஊகித்துக்கொள்ளல் வேண்டும். ஆகவே, பிரமாணுதி விருத்திகள் சித்தத்தின் தருமமாயிருத்தலின் அவற்றின் நிரோதமும் அதனையே ஆசிரயித்துக் கொண்டிருக்கின்றது. ஆதலால், யாதோ ரநுபபத்தி (பொருந்தாமை) யுமின்று.

(ஆ.) விருத்தி நிரோதம் யோகமென் றங்கீகரிக்குமிடத்துச் சுழுப்தி முதலிய அவஸ்தைகளில் மூடமான சித்தவிருத்திகளின் நிரோதம் சம்பவித்தலின் அவ்வவஸ்தைகளும் யோகமாதல் வேண்டும்.

(ச.) நீ கூறியதடாது; க்ஷிப்தாதி அவஸ்தைகளில் (பஞ்சக்) கிலேச நிவிர்த்தி சம்பவியாமையின், அவை மோட்ச விரோதியாயிருத்தலின். அங்ஙனமன்றோ, (1.) அவ்வவ் விஷயங்களிற் சென்றலையும் அஸ்திரமான சித்தம் க்ஷிப்தமாம்; (2.) தமோகுணவடிவ சமுத்திரத்தி லாழ்ந்து நித்திரா விர்த்தியோடு கூடிய சித்தம்

---

† ஞாதாஞ்ஞாதம் - ஞாத அஞ்ஞாதம் எனப்பிரிபடும்; ஞாதம்-அறியப்பட்டது, அஞ்ஞாதம் - அறியப்படாதது.

மூடமாம்; (3) க்ஷிப்தத்தினும் விசேஷமானசித்தம் விக்ஷிப்தமாம். (4) விசேஷமாவது ஸ்தைரியம்.

"ஓகிருஷ்ண! மனம் சஞ்சல முடையதாயும், பிரமாதத்தோடும் பலத்தோடுங் கூடியதாயு மிருக்கின்றது" என்று (vi-34) கீதையிற் கூறியவாறு மனம் அஸ்திரமாயிருப்பினும் அதற்கொரு சமயம் விஷய ஸ்தைரியம் (ஸ்திரத்தன்மை) சம்பவித்தலால் ஸ்தைரிய முண்டாகின்றது.

(5.) அஸ்திரத்தன்மையும் சுபாவத்தாலாவது, வியாதிமுதலிய அநுசயத்தா (பூர்வவினையினு) லாவது உண்டாகின்றது. வியாதி, ஸ்தியானம், சம்சயம், பிரமாதம், ஆலசியம், அவிரதி, பிராந்தி, அலப்தபூமிகத்துவம், அனவஸ்தி தத்துவம் என்னுமிவை சித்தத்திற்கு விக்ஷேப (கலக்க) த்தை யுண்டுபண்ணுகின்றன. இவை (யோக) விக்கினங்கள். அவற்றுள்,

i. (வாத பித்த கப மென்னும்) தோஷத்திரயத்தின் வைஷம்மியத்தி (வேறுபாட்டினு) லுண்டாகின்ற சுரமுதலியன வியாதி.

ii. சித்தத்திற்கு அகர்மணீயத்துவம் (கிரியையின்றி யிருக்குந்தன்மை) ஸ்தியானம்.

iii. (கயிறோபாம்போ என்று) மாறுபட்ட இரண்டுபக்ஷத்தை யநுசரிக்கும் ஞானம் சம்சயம்.

iv. சமாதிசாதனங்களின் அபாவனம் (பாவியாமை) பிரமாதம்.

v. சரீரம், வாக்கு, சித்தம் என்னு மிவற்றிற்குக் குருத்துவம் (திண்மை) இருப்பதால் பிரவிர்த்தியுண்டாகாமை ஆலசியம்.

vi. விஷயவிச்சை அவிரதி.

vii. அஃதில்லதன்கண் அதன் கவர்ச்சி (கயிற்றி லரவின் ஞானம்) பிராந்தி.

viii. யாதாவதொரு நிமித்தத்தால் சமாதிபூமி பெறப்படாமை அலப்தபூமிகத்துவம்.

ix. அது பெறப்படினும் அதில் சித்தத்தின் அப்பிரதிஷ்டை (சித்தம் நிலைக்காதிருப்பது) அநவஸ்திதத்துவமாம்.

(ஆ.) ஆகையால் (இங்ஙனங் கூறின்) 'விருத்தி நிரோத' யோகபதத்தின் அர்த்தமாக மாட்டாது.

இங்ஙனங் கூறுதலொட்டாது; தள்ளக்கூடிய க்ஷிபதமுதலிய மூன்றவஸ்தைகளில் விருத்தி நிரோதம் தள்ளக்கூடியதெனப் பெறப்படினும் கிரகிக்கத்தக்க ஏகாக்கிர நிருத்த அவஸ்தைகளில் விருத்தி நிரோதம் யோகமாகச் சம்பவித்தலின்.

ஒன்றையே விஷயமாகவுடைய சித்தம் ஏகாக்கிரமென்று கூறப்படுகின்றது.

சர்வவிருத்திகளையும் நிரோதஞ்செய்து சம்ஸ்கார மாத்திரமுடைய சித்தம் நிருத்தமாம்.

சமாதி சம்பிரஞ்ஞாதம் அசம்பிரஞ்ஞாதம் என இருவகைத்து. அவற்றுள்,

ஏகாக்கிரமான மனதில் பாகியவிஷயமான பிரமாணாதி விருத்தியின் நிரோதம் சம்பிரஞ்ஞாத சமாதியாம்.

அச் சம்பிரஞ்ஞாதசமாதி சவிதர்க்க முதலிய வேறுபாட்டால் நால்வகைத்தாம். சமாதியாவது பாவனை.

அப்பாவனையும் பாவி (பாவனாவிஷ) யத்தை விஷயாந்தர பரிகாரத்தினால் மனதில் அடிக்கடி ஸ்தாபித்தலாம்; பாவியமும் ஈசுவரன்: தத்துவம்(பதார்த்தம்)என இருவகைத்தாம். அத்தத்துவமும் ஜடம் அஜடமென்னும் வேறு பாட்டா லிருவகைத்தாம். ஜடமும் பிரகிருதி அகங்காரமுதலிய இருபத்துநான்கு தத்துவங்களாம். அஜடன் புருஷன். அவற்றுள்,

(1) எப்போது பிருதிவி முதலிய ஸ்தூலபூதங்களை விஷயமாகக் கிரகித்துப் பூர்வாபர ஸ்மரணத்தினாலும், சப்தார்த்த (சொற்பொருள்) சம்பந்தத்தினாலும் எந்தப்பாவனை யுண்டாகின்றதோ அப்போது அது சவிதர்க்க சமாதியாம்.

(2) எப்போது தன்மாத்திரை (சூட்சுமபூதம்), அந்தக்கரண லக்ஷணம் (வடிவம) என்னும் சூட்சும விஷயங்களை யநுசரித்துத் தேசாதி (இடங் காலங்) களோடு கூடியதாக எப்பாவனை யுண்டாகின்றதோ அப்போது அது சவிசார சமாதியாம்.

(3) எப்போது சித்தம் இரஜோகுண தமோகுணங்களின் லேசத்தோடு கூடிப் பாவிக்கின்றதோ, எப்புருஷனுச்குப் பத்துவ

குணம் மிகுதியாயிருப்பதால் சுகம் விளங்குகின்றதோ அப்போது அது சாநந்த சமாதியாம்.

(4) எப்போது இரஜஸ் தமோகுணங்களின் லேசசம்பந்தமுமில்லாமல் சுத்த சத்துவகுணத்தையே யநுசரித்து எப்பாவனையுண்டாகின்றதோ அப்போது அப்பாவனையில் சத்துவம் குறைந்திருப்பதாலும் சித்சத்திக்கு ஆதிக்கியம் (முதன்மை) இருப்பதாலும் சத்துவ மாத்திரமாயுள்ள சமாதி சாஸ்மித சமாதியாம்.

விதர்க்கம், விசாரம், ஆநந்தம், அஸ்மிதம் என்னுமிவற்றின் சம்பந்த முடையபோது சம்பிரஞ்ஞாத சமாதி என்று பெயராம்.

சர்வ விருத்திபு மடங்கியபோது அசம்பிரஞ்ஞாத சமாதி என்று பெயராம்.

(ஆ.) சர்வவிருத்திகளின் நிரோதம் யோகமென்று கூறின், சம்பிரஞ்ஞாத சமாதியில் அவ்வியாப்தி தோஷம் சம்பவிக்கின்றது. அதில் சத்துவப் பிரதானமான சத்துவபுருஷ அந்நியதாக்கியாதிவடிவ விருத்தியின் நிரோத மின்மையின்.

(ச.) இங்ஙனம் ஆசங்கிப்பது அங்கீகரிக்கத் தக்கதன்று; கிலேச, கர்ம, விபாக, ஆசயம் என்னு மிவற்றிற்கு விரோதியான சித்தவிருத்திநிரோதம் யோகமென அங்கீகரித் திருத்தலின்.

அவித்தை, அஸ்மிதை, இராகம், துவேஷம், அபிநிவேசமெனக் கிலேசம் ஐவகைத்து; இவை வெளிப்படை.

(ஆ.) அவித்தை யென்னுமிடத்துப் † (1) பூர்வபதார்த்தத்திற்குப் பிராதான்யம் (முக்கியத்தன்மை) அங்கீகரிக்கப் படுகின்றதா? அமட்சிகம் (ஈயன்றி) இருப்ப தென்பதுபோல். அல்லது, (2) உத்தர பதார்த்தத்திற்குப் பிராதான்யம் அங்கீகரிக்கப்

---

**பூர்வபதார்த்தப் பிராதாந்நியம்.**

† அவித்தியா (அவித்தை) என்பது ந—வித்தியா யெனப் பிரிபடும். இது அவ்வியயீபாவசமாசம். ஈண்டுப் பூர்வபதார்த்தத்திற்குப் பிராதாந்நிய மிருக்கின்றது; அமட்சிகம் என்பதுபோல்.

**உத்தரபதார்த்தப் பிராதாந்நியம்.**

இராஜ (இராஜனது) புருஷன் என்பது தத்புருஷசமாசம்; ஈண்டு உத்தர பதார்த்தத்திற்குப் பிராதாந்நிய மிருக்கின்றது

படுகின்றதா? இராஜபுருஷன்போல். அல்லது (3) அந்நிய பதார்த்தத்திற்குப் பிராதான்யம் அங்கீகரிக்கப் படுகின்றதா? அமட்சிக தேசம்போல். அவற்றுள்,

முதற்பக்ஷங் கூடாது; பூர்வ பதார்த்தத்திற்குப் பிராதாந்நியத்தை யங்கீகரிக்குமிடத்து அவித்தையில் ‡ பிரஸஜ்ய பிரதிஷேதம் சம்பவிக்கின்றது; அங்ஙனஞ் சம்பவிக்கவே கிலேசாதிகளுக்குக் காரகத்துவம் (செய்யுந்தன்மை) பொருந்தாமையாலும் அவித்தியா சப்தத்திற்கு ஸ்ரீலிங்கம் (பெண்பாலைக் குறிப்பித்தல்) வாராமற்போ மாகையாலு மென்க.

இரண்டாவது பக்ஷமும் பொருந்தாது; ஓரபாவத்தோடு கூடிய வித்தைக்குக் கிலேசமுதலியவற்றோடு விரோதமிருத்தலின் அது கிலேசாதிகளுக்குக் காரணமாகமாட்டாது.

மூன்றாவது பக்ஷமும் பொருந்தாது; "நஞோஸ்தி அர்த்தாநாம் பகுவிரீகிர்வா சோத்ரபதலோப இதி" என்னும் (வியாகரண) விர்த்திகாரர் வசனத்தை யநுசரித்து எதற்கு வித்தை

---

அந்நியபதார்த்தப் பிராதாந்நியம்.

அமட்சிக தேசமென்பது வெகுவிரீகி சமாசம்; ஈண்டு, ஈயானது யாண்டில்லையோ அது ஈ யற்ற இடம் என அன்னிய பதார்த்தத்திற்குப் பிராதான்னிய மிருக்கின்றது.

ஈண்டு "முன்மொழி பின்மொழி பன்மொழி புறமொழி, எனு நான்கிடத்துஞ் சிறக்குந் தொகைப்பொருள்" என்னும் நன்னூற் சூத்திரத்தின் சங்கர நமச்சிவாயப் புலவருரை கவனிக்கத்தக்கதாம்.

‡ பிரசங்கத்தாற் பெறப்படுவது பிரஸஜ்யம், பிரதிஷேதம்—(நிஷேதம்) விலக்கு.

நிஷேதம்:—பிரதிஷேதம், பரியுதாசம் என இருவகைத்தாம். பிரதிஷேதமாவது சுராபானம் செயயக்கூடாதென்னு மிடத்து ராகத்தி (இச்சையி)னல் சுராபான பிரசக்தி (சம்பந்தம்) உண்டாக அதை நிஷேதிப்பதாம்.

பரியுதாசமாவது மகாவிருதமென்னும் யாகத்தில் "ஒதாரம் நவர்ணீயதே-ஒதாவை (ஒமஞ்செய்பவனை) வரிக்க வேண்டாம்" என்று நிஷேதத்தைக் கூறவில்லை; ஆனல், ஒதாவினும் வேறான அத்வரியூமுதலியவர்களை வரிக்கவேண்டுமென்று விதிக்கப்பட்டிருப்பதாம்.

யான நில்லையோ அஃதவித்தை; அதுபுத்தி என்று வெகுவிரீகி சமாசம். பெறப்பட்டிருக்கும்போது அவ்வவித்தைக்குக் கிலே சாதி காரணத்துவம் பொருந்தாமையாலும் விவேக ஞானத்தை முன்னிட்டுள்ள சர்வவிருத்தியோடுங்கூடிய அப்புத்திக்குக் கிலே சாதி காரணத்துவம் வாராமையாலு மென்க.

" அஸ்மிதாதி வடிவக்கிலேசங்கட்கு அவித்தை மூதற்காரண மென்றும், மேலேயுள்ள அஸ்மிதாதிகட்கு அவித்தை க்ஷேத்திர மென்றும், பிரசுக்த, தநு, விச்சின்ன, உதாரம் என்றும்" கூறப் பட்டிருக்கின்றன. அவற்றுள்,

பிரசுக்தத்வ மாவது ஞானத்திற்குச் சககாரியின்மையால் அஃது அநபிவியக்தி (பிரகாசியாமை).

தநுத்துவமாவது பிரதிபட்ச பாவனையினால் (அவித்தையை) சிதல்மாகச் செய்வது.

விச்சின்னத்துவ மாவது பலமுடைய கிலேசத்தினால் அபி பவம் (மறைபட்டுப்போதல்).

உதாரத்துவமாவது சககாரி சமீபத்திருப்பதால் காரியத்தை யுண்டுபண்ணுந்தன்மை.

வாசஸ்பதி மிசிரரால் வியாசபாஷிய வியாக்கியானத்தில்

" தத்துவத்தில் மறைந்திருப்பவருக்குப் பிரசுக்தங்களாயும், யோகிகட்குத் தநுதக்தங்களாயும், விஷயசம்பந்த முள்ளவர்கட்கு விசசின்ன உதாரரூபங்களாயும் கிலேச மிருக்கின்றது" என்று கூறப்பட்டிருக்கின்றது.

துவந்துவசமாசம் (உம்மைத்தொகை) போல் சுதந்தர மான பதார்த்தத்துவயத்தைத் தெரியப்படுத்தாமையின் உபய பதார்த்தப பிரதானத்துவம் ஆசங்கிக்கத் தக்கதன்று; ஆகை யால், இரண்டுபக்ஷத்திலும் அவித்தை கிலேசாதிகளுக்கு அதி கரணமாய்ப் பிரசித்தமா யிருக்கின்றதென்பது தவறும்.

(ச.) அதுவும் செவ்வியதன்று; பரியுதாச சக்தியை யநு சரித்து அவித்தியாசபதம் வித்தைக்கு விருத்தமான விபரீத ஞானத்தைப் போதிக்கின்றதென்று பெரியோர்கள் அங்கீகாரஞ் செய்திருத்தலின்.

" நாமம் தாது என்னுமிவற்றின் அர்த்தசம்பந்த மிருக்கும் போது நஞ்சானதுநிஷேதத்தைக் கூறுவதின்று. அப்பிராமணன் அதர்மம் என்னுஞ் சப்தங்கள் அந்நியமாத்திர விரோதியான அர்த்தங்களைக் கூறுகின்றன" என்றும்,

" சப்தார்த்தங்களெல்லாம் நம்மனோருக்கு விருத்தப் பிரயோகத்தால் (முதியோர்வழக்கால்) அறியத்தக்கனவாம். ஆகையால் எவ்வர்த்தத்தில் எச்சப்தம் பிரயோகம் செய்யப்பட்டிருக்கின்றதோ அவ்வர்த்தத்தினின்றும் அச்சப்தத்தை விலக்குதல் கூடாது"

என்றும் கூறப்பட்டிருக்கின்றன.

" சப்தார்த்தங்களின் சம்பந்தம் உலக வியவகாரத்திஞற் பெறப்படுகின்றது; உலகத்திலும் நகாரம் (நஞ்சுதத் புருஷன்) உத்தர பதார்த்தத்திற் பிரதானமா யிருப்பினும் அஃது உத்தர பதார்த்தத்திற்கு விரோதியாக ஆண்டாண்டுக் காணப்பட் டிருப்பதால் ஈண்டும் (அவித்தையிலும்) அதற்கு (வித்தைக்கு) விருத்தார்த்தத்திலும் பிரவிர்த்தி யிருக்கின்றது" என்று வாசஸ்பதி மிசிரராலும் கூறப்பட்டிருக்கின்றது. இது கருதியே "அநித்திய, அசுசி, துக்க, அநாத்மா என்னு மிவற்றில் முறையே நித்தியக்கியாதி (பிராந்தி), சுசிக்கியாதி, சுகக்கியாதி, ஆத்மக்கியாதி யுண்டாவது அவித்தை" என்று (யோகசூத்திரம் ii - 5 ல்) கூறப்பட்டிருக்கின்றது.

இதஞல், அதுவல்லாததன்கண் அதுவென்னும் ஞானம் விபர்யயமெனக் கூறப்பட்டதாயிற்று. எங்ஙனம்? அநித்தியமான கடாதிகளில் நித்தியமென்னும் அபிமான முண்டாகின்றது, அசுசியான தேகாதிகளில் சுசியென்னும் ஞானமுண்டாகின்றது.

" ஸ்தான (கருப்ப) த்திஞலும், பீஜத்திஞலும், அவஷ்டம்பத்திஞலும் (சேர்க்கையிஞலும்) நிஷ்பந்தத்திஞலும் (வியர்வை முதலியன பெருகுதலிஞலும்), நிதனத் (மரணத்) திஞலும் தேகத்திற்குச் சுசியை யுண்டுபண்ண வேண்டியிருத்தலின் அதனைப் பண்டிதர்கள் அசுசியென அறிகின்றார்கள்" என்று கூறப்பட்டிருக்கின்றது.

" பரிணமம் (திரிவு), தாபம் (துக்கவேது), சம்ஸ்காரம் என்னுமிவற்றால் குணங்கட்கு விருத்தி (வளர்தல்), க்ஷயம் (குறை

தல்) வருவதாலும் விவேகிகட்குச் சர்வமும் துக்கமே யென்னும் நியாயத்தாலும் துக்கவடிவ பூமாலை சந்தனம் பெண் என்னுமிவற்றில் சுகத்தன்மையி னாரோபமும் அநாத்மாவாகிய தேகத்தில் ஆத்மபுத்தியும் (அவித்தையாம்)" என்று (ii - 15ல்) கூறப்பட்டிருகின்றது.

"அநாத்மாவாகிய தேகங்களில் ஆத்மபுத்தி யுண்டாதல் அவித்தை; அதனாற்செய்யப்படுவது பந்தம்; அதன் நாசம் மோட்சம்" என்று கூறப்பட்டிருக்கின்றது.

இவ்வவித்தை நான்கு பாதமுடையதாம்.

(ஆ.) இவ்வவித்தியா விசேஷ (பேத) ங்கள் எல்லாவற்றினும் சம்பந்தப்பட்டதாக ஒரு சாமாநிய லக்ஷணங் கூறல் வேண்டும்; கூறுவிடின், விசேஷம் சித்தியாது.

"சமாநிய லக்ஷணத்தைவிட்டு விசேஷ லக்ஷணமாத்திரம் கூறுதலமையாது. (சாமாநிய லக்ஷணங்கூறுது) அதனது (விசேஷ லக்ஷணத்தினது) அங்கங் கூடக் கூறுதலமையாது" என்று குமாரிலபட்டாராற் கூறப்பட் டிருக்கின்றது.

(ச.) அங்ஙனங் கூறுதலமையாது;

(1.) அதுவல்லாததன்கண் அது வென்னும் ஞானம் அவித்தை என்று (அவித்தைக்குச்) சமாநியலக்ஷணங் கூறுவதால் விடைதரப்பட்டது.

(2.) சத்துவகுணம் ஆத்மா என்னும் இவ்விரண்டினும் நானென்னும் ஒருமையபிமானம் அஸ்மிதை.

"திருக் தரிசன சக்திகளின் ஏகாத்மத்தன்மையாகிய யபிமானம் அஸ்மிதை" என்று (ii - 6 ல்) கூறப்பட்டிருக்கின்றது.

(3.) சுகத்தை யறிந்தவனுக்குச் சுகஸ்மரண பூர்வகமாகச் சுக சாதனங்களி னுண்டாகும் இசசை இராகம்.

(4.) துக்கத்தை யறிந்தவனுக்குத் துக்கஸ்மரண பூர்வகமாக அதன் சாதனங்களின் நிந்தை துவேஷம்.

"சுகாநுசயம் (சுகத்திற் கிருப்பிடம்) இராகம்; துக்காநுசயம் துவேஷம்" என்று கூறப்பட்டிருககின்றது.

* * * * *

(5.) பூர்வஜன்மத்தில் அநுபவித்த மரணதுக்க வாசனுதி -த்திஞல் கிருமிமுதல் வித்வான் வரையிலுமுள்ள சர்வப்பிராணி ட்கும் ஒவ்வொருநாளும் சரீராதிகட்கும் எனக்கும் வியோகம் பிரிவு) வேண்டாமெனக் காரணமின்றி நான் இருப்பனே, இல் ாமற் போவனே என்றுண்டாகின்ற இருவகைத்தாய அபினி வேசம் ஐந்தாவதான கிலேசமாம்.

"வித்துவானுக்கும் சுபாவமாக அபினிவேசம் உண்டா யிருக்கின்றது" என்றும் (ii-9 ல்) கூறப்பட்டிருக்கின்றது.

அவ்வவித்தை முதலிய ஐந்தும் சம்சாரத்தா லுண்டாய பலவகைப்பட்ட துக்கங்கட்குக் காரணமாயிருத்தலின் புருஷ னைக் கிலேசப்படுத்துகின்றன; ஆகையால் அவை கிலேசங்களென் பது பிரசித்தம்.

கர்மங்கள் விகித பிரதி நிஷித்த வடிவமான ஜோதிஷ்டோ மம் பிரஹ்மஹத்தி முதலியனவாம். விபாகங்கள் கர்மபலங்கள்; அவை ஜாதி ஆயுள் போகங்களாம்.

தர்மாதர்ம வடிவ சம்ஸ்காரங்கள் கர்மபல முண்டாகும் பரி யந்தம் சித்த பூமியில் (சித்தத்தில்) சயனஞ் செய்திருப்பதால் (தங்கியிருத்தலால்) ஆசயங்கள் என்று கூறப்படுகின்றது. அவற் றிற்கு விரோதியான சித்தவிருத்தியின் நிரோதம் யோகமே யன்றிக் கேவலம் அபாவமாத்திரம் யோக மென்றங்கீகரிக்கப்பட வில்லை; அது (அபாவம்) துச்சமாகையால் அதற்குப் பாவவடிவ சம்ஸ்காரத்தை யுண்டுபண்ணும் சாமர்த்தியம் சம்பவியாமை யின். ஆனுல், அது (யோகம்) அதை (சித்தத்தை) ஆசிரயித்துக் கொண்டுள்ள மதுமதி, மதுப்பிரதீகம், விசோகம், சம்ஸ்கார சேஷத்துவம் என்னு மிப்பதங்களாற் கூறத்தக்க சித்தத்தின் அவஸ்தாவிசேஷமாம்; ஈண்டுப் பிரமாணுதிகளாய சித்தவிருத்தி கள் நிரோதஞ் செய்யப்படுகின்றன வென்னும் வியுற்பத்தி பொருந்துகின்றமையின்.

அப்பியாச வைராக்கியங்களால் சித்தவிருத்தியின் நிரோத முண்டாகின்றது. ஆண்டுச் சித்தத்திலுள்ள யத்தனம் அப்பி யாசமாம். பிரகாசப் பிரவிர்த்தி வடிவவிருத்தியின்றிய சித்தத்திற் குச் சொருபநிஷ்டமான(சொருபத்தி லிருப்பதான)பரிணுமவிசே ஷம் ஸ்திதி. அதன் நிமித்தமாயுண்டான யத்தனம், அப்பியாசம்

அடிக்கடி சித்தத்தில் அந்தரூபமாக்வைத்தல் அப்பியாசமாம். சர்மத்தில் புலியைக்கொல்லுகின்று னென்பதுபோல் நிமித்தார்த்தத்தில் ஏழாம்வேற்றுமை யென்று கூறுவதாயிற்று. சர்மத்தில் புலியைக் கொல்லுகிறு னென்பதற்குச் சர்மத்திற் (தோலிற்) காகப் புலியைக் கொல்லுகிறு னென்பது நிமித்தார்த்தத் திற்குப்பொருளாம். கண்டுங் கேட்டுமுள்ள விஷயத்தில் ஆசையற்றவனுக்கு வசீகாரம் (வசப்படுதல்) என்னும் பேருடைய வைராக்கியஞ் சித்திக்கின்றது. இகபரலோக விஷயங்களில் தோஷத்தைக் கண்டிருப்பதால் ஆசையற்ற வெனக்கு இவ்விஷயங்க ளெல்லாம் வசியமாயிருக்கின்றன. நான் இவற்றிற்கு வசப்படுகிறதில்லை யென்னும் சிந்தனையே வைராக்கியமென்று கூறப்பட்டதாயிற்று.

சமாதிக்கு விரோதியான கிலேசத்தைச் சூட்சுமமாய்ச் செய்தற்பொருட்டும் சமாதி சித்தித்தற் பொருட்டும யோகியானவன் ஆரம்பத்தில் கிரியாயோக விதிபரனுயிருக்க (கிரியாயோகத்தை யநுஷ்டிக்க) வேண்டும். கிரியாயோகம் சம்பாதிக்கப்பட்டதாயின் அப்பியாச வைராக்கியங்கள் சம்பவிக்கின்றன.

"யோகத்திலேற வேண்டுமென்னு மிச்சையுள்ள முனிக்குக் கர்மமானது காரணமென்று கூறப்படுகின்றது. யோகாரூடனுன (யோகத்திலேறினவனுன) அந்தமுனிக்கே சமம் காரணமென்று கூறப்படுகின்றது" என்று பகவானுல் கீதையி (vi- 3)ல் கூறப்பட்டிருக்கின்றது.

" தபசு, சுவாத்தியாயம், ஈசுவரப்பிரணிதானம் (ஈசுவரத்தியானம்) என்னுமிவை கிரியாயோகம்" என்று பதஞ்சலியால் கிரியாயோகம் உபதேசிக்கப்பட் டிருக்கின்றது.

i. "சாஸ்திரங் கூறிய வாறு கிருச்சிர சாந்திராயண முதலிய விரதங்களை யநுஷ்டித்துச் சரீரத்தை சோஷணஞ்செய் (வாட்டு) தல் தபசுகளெல்லாவற்றிலும் மேன்மையான தபசு" என்று யாஞ்ஞவல்கியரால் தபசின்சொரூபம் நிரூபிக்கப்பட்டிருக்கின்றது.

ii. " பிரணவம் காயத்திரி முதலிய மந்திரங்களை அத்தியயனஞ் செய்வது சுவாத்தியாயம்" என்று கூறப்பட்டிருக்கின்றது. அம்மந்திரங்கள் வைதிகம், தாந்திரிகம் என இருவகையாம். வைதிகமந்திரமும் பிரகீதம் அப்பிரகீதம என இருவகையாம். அவற்

றுள், † பிரகீதம் சாமங்கள். ‡ அப்பிரகீதமும் : சந்தசோடு கூடியது கூடாதது என இருவகையாம். அவற்றுள், முதலாவது இருக்குகள். இரண்டாவது யஜுஸ் (யசுர்வேதம்). அவற்றுள், யாண்டு அர்த்த வசத்தால் பாத வியவஸ்தை யேற்படுகின்றதோ அதுருக்கு; கானமேற்படுகிற விஷயத்தில் சாமங்கள்; ஏனையவெல்லாம்யஜுஸ் சப்தத்தாற் கூறத்தக்கனவாம்." என்று ஜைமினியாற் கூறப்பட்டிருக்கின்றது. காமிக் காரண பிரபஞ்ச முதலிய ஆகமங்களிலெவ்வெம் மந்திரங்கள் வர்ணிக்கப்பட் டிருக்கின்றனவோ அவ்வம் மந்திரங்கள் தாந்திரிகங்கள். அம்மந்திரங்கள் ஸ்திரீ புருஷநபுஞ்சக மென்னும் வேறுபாட்டால் மூவகையாம்.

"மந்திரங்கள் ஸ்திரீ, புருஷ, நபுஞ்சகமென மூவகையாம். வன்னி, ஜாயை யென்னுமிவற்றை அந்தமா (ஈறு)க வுடையன ஸ்திரீமந்திரங்கள்; த ம சை அந்தமாகவுடைய மந்திரங்கள் நபுஞ்சகங்கள்; ஏனைய மந்திரங்களெல்லாம் புருஷ மந்திரங்கள். அந்தமந்திரங்கள் வசியமுதலிய கர்மங்களிற் சிலாக்கியமானவை" என்று கூறப்பட்டிருக்கின்றது.

மந்திரங்கள் ஸ்நாபனம் (நீராடல்) முதலிய சம்ஸ்காரமின்றியிருப்பினும் சமஸ்த தோஷங்களு மற்றிருப்பதால் சித்திக்கேதுவாயிருக்கின்றன. ஆகையால் அவற்றிற்குச் சித்தத்துவம் (சித்திக்குக்காரணமா யிருக்குந்தன்மை) பொருந்துகின்று.

அந்தச் சம்ஸ்காரம் பத்துவகையென அடியில் வருமாறு சாரதாதிலகம் என்னுந் தந்திரத்திற் கூறப்படுகின்றது.

"(மந்திரங்கட்குச்) சித்தியைத் தரக்கூடிய சம்ஸ்காரங்கள் பத்தாம். செவ்வையாகச் சம்ஸ்காரங்கள் செய்யப்பட்ட அம்மந்திரங்கள் விரைவாகத் தோஷமற்ற தன்மையையடைகின்றன. ஜனனம், ஜீவனம், தாடனம், போதனம், அபிஷேகம், விமலீகரணம், ஆப்பியாயனம், தர்ப்பணம், தீபனம், குப்தி எனச் சம்ஸ்காரங்கள் பத்துவகையாம்.

(1.) மாதுர்காவர்ணங் (உயிர்மெய்யெழுத்து)களி லிருந்து மந்திரங்களை உத்தாரம் (எடுத்தல்) செய்வது ஜனனம்.

---

† பிரகீதம் கானத்துடன் கூடியது. சாமங்கள் சாமவேதத்தினோர் பகுதி.

‡ அப்பிரகீதம் -கானத்துடன் கூடாதது.

(2.) புத்திமான் மந்திரவர்ணங்களை எண்க...... முறைமையோடு பிரணவ (ஓங்கார) சகிதமாகச் செய்து சபித்தல் ஜீவனம்.

(3.) மந்திரவர்ணங்களைச் (செப்புத்தகடு முதலியவற்றில்) எழுதிச் சந்தனக்குழம்பினால் (அவற்றின்மேல்) தெளித்து ஒவ்வோர்முறையும் வாயுபீஜத்தை யுச்சரித்தல் தாடனம்.

(4.) மந்திரவர்ணங்களை யெழுதி அவ்வக்ஷரங்கட்குச்சமான எண்ணுள்ள கரவீர (அலரி) புஷ்பத்தால் அவற்றை அர்ச்சித்தல் போதனம்.

(5.) தனது தந்திரத்திற்கூறிய விதிப்படி மந்திரி மந்திராக்ஷரங்களின் முறைமைப்படி அரசந்தளிரால் அவற்றை அர்ச்சித்தல் அபிஷேகம்.

(6.) மந்திரத்தை மனதினால் தியானஞ்செய்து அம்மந்திரத்தின் மலத்திரயத்தை ஜோதிர்மந்திரத்தினு லொழித்தல் விமலீகரணம்.

(7.) ஜோதிர்மந்திரத்தைத் தாரக (ஓங்கார), வியோம, அக்கினி, மனு என்னு மிம்மந்திரங்களோடு ஜபித்து விதிப்படி ஜலபீஜத்தோடுகூடிய ஜலத்தைத் தர்ப்பையினால் மந்திரத்தின் ஒவ்வோர் அக்ஷரங்களின் மேலும் புரோக்ஷித்தல் ஆப்பியாயனம்.

(8.) மந்திரத்தினாற் பரிசுத்தமான ஜலத்தினால் மந்திரத்தில் அர்ப்பணஞ் செய்வது தர்ப்பணம்.

(9.) மந்திரத்தைத் தாரகம் (ஓங்காரம்), மாயை (ஹ்ரீம்) ரமா (ஸ்ரீம்) என்னு மிவற்றோடு சேர்த்தல் தீபனம்.

(10.) ஜபிக்கும் மந்திரத்தை வெளிப்படுத்தாமை குப்தி (கோபனம்).

இப்பத்துச் சம்ஸ்காரங்களும் சகலதந்திரங்களிலும் கோபன (இரகசிய) மாயிருக்கின்றன; மந்திரியானவன் சம்பிரதாயப்படி அப்பத்துச் சம்ஸ்காரத்தையுஞ் செய்து இஷ்டசித்தியடைகின்றான்.

ருத்த, கீலித, விச்சின்ன, சுப்த, சப்த முதலிய மந்திரதோஷங்களும் இவ்வுத்தமமான சம்ஸ்காரங்களால் நாசத்தை யடைகின்றன

அசமயத்தி (இடையி) ல் மந்திரசாஸ்திரத்தின் இரகசியத்தை யெடுத்துக் கூறியதமையும்.

iii. கூறப்பட்டதும் கூறப்படாததுமான எல்லாக்கிரியைகளையும் பரமேசுவரனான பரமகுருவினிடத்துப் பலனை விரும்பாது சமர்ப்பணஞ் செய்தல் ஈசுவரப்பிரணி[illegible]ன (தியான) மாம்.

"சுபகர்மத்தையாவது, அசுபகர்மத்தையாவது, காமத்தினாலாவது, அகாமத்தினாலாவது செய்கின்றேனோ அவ்வெல்லாவற்றையும் உம்மா லேவப்பட்டவனாயிருந்து உமக்கே அர்ப்பணஞ் செய்கின்றேன்" என்று கூறப்பட்டிருக்கின்றது.

கிரியையின் பலத்தை விடுவதும் பிரணிதானமே. மனிதர்கள் பெரும்பான்மையும் பலனைக்கருதியே கர்மத்தைச் செய்வதால் அஃதொரு பக்திவிசேஷமாம்.

"(அர்ஜுனா!) கர்மஞ்செய்வதிலேயே உனக்கதிகார மிருக்கின்றது; (ஆனால்) ஒருபோதும் (கர்ம) பலத்தி லதிகாரமின்று. (ஜனனமரணத்திற் கேதுவாகிய) கர்மபலத்திற்குப் பாத்திரனாகாதே; கருமஞ் செய்யாமலிருப்பதி லாசைவையாதே"

என்று பகவானால் கீதையி (ii - 47) ல் கூறப்பட் டிருக்கின்றது.

"பிரயாசத்தால் சம்பாதிக்கப்பட்ட தபசு ஆசையாற் கெட்டுவிடுகின்றமையின் அது பரமேசுவரனுக்குப் பிரீதியாகாது; நாய் நக்கிய பாயசம்போலும்" என்று பகவானான ஸ்ரீநீலகண்டபாரதியாரால் பலத்திலுண்டாகு மிச்சை மோக்ஷத்திற்குப் பிரதிபந்தகமெ (தடையெ) ன்று கூறப்பட்டிருக்கின்றது.

தபசு, சுவாத்தியாயம், ஈசுவரப்பிரணிதானம் என்னு மிக்கிரியைகள் யோகத்திற்குச் சாதனமாயிருப்பதால் சுத்தசாரோப லக்ஷணாவிர்த்தியால் (காரியவாகு பெயரால்) யோகமென்று சொல்லப் படுகின்றன; ஆயுள்விர்த்திக் கேதுவான நெய்யை ஆயுளென்று கூறுவதுபோலாம்.

சுத்த சாரோப லக்ஷணை லக்ஷணைகளுள் ஒன்று. லக்ஷணையாவது முக்கியார்த்த பாதம் (விட்டவிலக்கணை), முக்கியார்த்த யோகம் (விடாதவிலக்கணை) என்னு மிவற்றால் வேறர்த்தத்தைப் பிரதிபாதிப்பதாம்.

இந்தலக்ஷணை ரூடிமூலம் பிரயோஜனமூலமென் றிருவகைத்தாம்.

"முக்கியார்த்தத்திற்கு (செம்பொருட்குப்) பாதமிருக்கும்போகாவது முக்கியார்த்தத்தின் சம்பந்த மிருக்கும்போதாவது ரூடியினாலாவது பிரயோஜனத்தினாலாவது வேறர்த்தம் லக்ஷணையினாற் சித்திப்பது ஆரோபிதலக்ஷணை" என்று காவியப்பிரகாசத்திற் கூறப்பட்டிருக்கின்றது.

* * * * *

கர்மணிகுசலன் (கர்மத்திற்சமர்த்தன்) என்றற்றொடக்கத்தன ரூடிலக்ஷணைக் குதாரணமாம். குசங்களைச் சேதி (தர்ப்பையையறு)க்கின்றான் என்னும் வியுற்பத்தியினால் தர்ப்பைகளையறுத்துக்கொண்டு வருகிற புருஷனிடத்து இந்தக் குசலபதம் காரணப்பெயராகவும் பகுத்தறியும் புருடனிடத்து அநாதிவிருத்த(தொல்லாசிரிய)வியவகார பரம்பரையினால் வந்த சப்தம்போல் பிரயோஜனத்தை யபேட்சியாதும் பிரவிர்த்திக்கின்றது.

"சிலநிரூடமான லக்ஷணைகள் சாமர்த்தியத்தால் அபிதானம் போல் (வாசக சப்தம்போல்) பிரவிர்த்திக்கின்றன" என்று சொல்லப்பட்டிருக்கின்றது.

ஆகையினால் ரூடிலக்ஷணைக்குப் பிரயோஜனாபேட்சையில்லை. பிரயோகம் பண்ணப்பட்ட சப்தம் முதலில் முக்கியார்த்தத்தைப் பிரதிபாதிக்கின்றது; அவ்வர்த்தத்தினால் வேறர்த்தம் லக்ஷணையினா லறியப்படுகின்றது; ஆகையினால், லக்ஷணையானது முக்கியார்த்ததர்மமன்றிச் சப்ததர்மமன்று. ஆயினும், அவ்வர்த்தத்தைக் கூறும் சப்தத்தில் (லக்ஷணை) ஆரோபிக்கப்பட்டதா யிருத்தலின் சப்தவியாபாரமென்று கூறப்படுகின்றது. இதுகருதியே காவியப்பிரகாசத்தில் "ஆரோபிதலக்ஷணை" என்று கூறப்படுகின்றது.

பிரயோசன லக்ஷணையோ:— உபாதானலக்ஷணை, லக்ஷிதலக்ஷணை, கௌணசாரோபம், கௌண சாத்தியவசானம், சுத்தசாரூபம், சுத்தசாத்தியவசானம் என்றறுவகைத்தாம்.

(1.) குந்தங் (ஈட்டி) கள் செல்லுகின்றன. (இங்குக் குந்தமென்றது குந்தங்களை யுடையவர்களுக்காயது).

(2.) மஞ்சங் (கட்டில்) கள் ரோதனஞ் செய்கின்றன. (இங்கு மஞ்சமென்றது மஞ்சத்திலுள்ள புருடர்களுக்காயது).

(3.) கௌர்வாஹிகః—இந்தமனிதன் மாடு.

(4.) அயங்கௌः—இது மாடு.

(5.) ஆயுஸ் கிருதம் - ஆயுள் நெய்.

(6.) ஆயுரேவ இதம் - இது ஆயுசே.

கிரமமாக இவ்வாறினையும் உதாரணமாக அறிந்துகொள்க.

"தான் சித்திப்பதன் பொருட்டு மற்றொன்றை யபேக்ஷித்தலும், அன்னியார்த்தமாகத் தன்னைப் பிரதிபாதிப்பதும், உபாதானமும், லட்சணமும் (லட்சித லட்சணையும்) என்று லட்சணை நால்வகைத்தாம். சுத்தலட்சணையும்; சாரோபம், சாத்தியவசானமென இருவகைத்தாம். சாத்தியவசான லட்சணையும் சாதிருசியத்தினாலும் சம்பந்தாந்தரத்தினாலு (மற்றொன்றன் சம்பந்தத்தினாலு)ம் கௌணம், சுத்தம் என இருவகையாம். இங்ஙனம் அறுவகைத்தாம்" என்று காவியப்பிரகாசத்தில் சொல்லப்பட்டிருக்கின்றது.

இதுகாறும் காவிய மீமாஞ்சையின் மர்மத்தை (இரகசியத்தை) விசாரித்த தமையும்.

அந்தயோகம் இயமாதிகளின் வேறுபாட்டால் அஷ்டாங்கமெனக் காட்டப்படுகின்றது:—அவற்றுள்,

(1.) இயமம் அஹிம்சை முதலியனவாம். "அஹிம்சை (கொல்லாமை), சத்தியம் (உண்மை யுரைத்தல்), அஸ்தேயம் (திருடாமை), பிரமசரியம் (ஸ்திரீசங்கமின்மை), அபரிக்கிரகம் (ஏற்காமை)என்னுமிவை இயமமாம்" என்று பதஞ்சலி கூறுகின்றனர்.

(2.) நியமம் சௌசமுதலியனவாம். "சௌசம்(நீராடல், அஃதாவது சுத்தமாயிருத்தல்).

"சந்தோஷம், தபசு, சுவாத்தியாயம் ஈசுவரத்தியானம் என்னுமிவை நியமமாம்" என்றுங் கூறுகின்றார்.

"பிரமசரியம், அஹிம்சை, சத்தியம், திருடாமை, ஏற்காமை என்னு மிவற்றை நிஷ்காம யோகி தன் மனத்திற்கு யோக்கியதையை யுண்டு பண்ணிக்கொண் டநுஷ்டிக்கின்றான். சுவாத்தியாயம், சௌசம், சந்தோஷம், தபசு என்னுமிந்நியமங்

களை யநுஷ்டித்துப் பரப்பிரஹ்மத்தினிடத்து மனது மிகவும் பிர விர்த்திக்கும்படி செய்தல்வேண்டும். இவை முறையே இயமம் ஐந்து, நியமம் ஐந்து என்று சொல்லப்படுகின்றன. இவை காமிக்கு (பலனைவிரும்பினவனுக்கு) விசேஷ பலனைக் கொடுக்கின்றன; நிஷ்காமிக்கு முத்தியைக் கொடுக்கின்றன" என்று விஷ்ணு புராணத்தில் (vi. 7,36-38) கூறப்படுகின்றது.

(3.) ஆசனமாவது ஸ்திரமாயும் சுகமாயுமிருப்பது. அது பத்மம், பத்ரம், வீரம், சுவஸ்திகம், தண்டகம், சோபாசிரயம், பரியங்கம், கிரௌஞ்சநிஷதனம், உஷ்ட்ரநிஷதனம், சமசமஸ்தானம் என்னும் வேறுபாட்டாற் பத்துவகையாம்.

"தொடைக்கு மேலே பாததலங்களை (உள்ளங்காலை) வைத்து, பாதங்களின் பெருவிரல்களைக் கரங்களால் மாறிப்பிடித்தல்வேண்டும். இது யாவராலும் பூசிக்கத்தக்க பத்மாசனமென்னும் பெயருடையதாம்" என்றற்றொடக்கத்து வாக்கியங்களால் யாஞ்ஞவல்கிய மகரிஷியால் பத்மாசன முதலியவற்றின் சொரூபம் நிரூபிக்கப்பட்டிருக்கின்றது; ஏனையவற்றை ஆண்டேயறிக.

(4.) அவ்வாசனம் ஸ்திரப்பட்டால் பிராணாயாமம்சித்திக்கின்றது. அப்பிராணாயாமமும் சுவாசப்பிரசுவாசங்களின் கதிவிச்சேத (போதல்வருதலைத்தடுத்தல்) வடிவமா யிருக்கின்றது. அவற்றுள், சுவாசமாவது புறத்துள்ள வாயுவை அகத்தேயிழுத்தல். பிரசுவாசமாவது அகத்துள்ள வாயுவைப் புறத்தே விடுதல். இவ்விரண்டற்கும் சஞ்சாரமின்மை பிராணாயாமமாம்.

(ஆ.) இது பிராணாயாமத்தின் சாமாநிய லக்ஷணமன்று; பிராணாயாமத்தின் விசேஷமான ரேசக, பூரக, கும்பகங்களில் மேற்கூறிய சாமாநிய லக்ஷணம் சம்பந்தப்படாமையின்.

(ச.) நீகூறிய தோஷம் சம்பவியாது; யாண்டும் சுவாசப் பிரசுவாசங்களின் கதிவிச்சேதம் சம்பவித்தலின். அங்ஙனமன்றோ, அகத்தேயுள்ள வாயுவை புறத்தேவிடுவதாகிய ரேசகப்பிராணாயாமம் பிரசுவாசமென்று முன்னர்க் கூறப்பட்டது. புறத்தேயுள்ள வாயுவை அகத்தே தாரணஞ்செய்வதாகிய பிரசுவாசம் எதுவோ அது பூரகமாம். அந்தஸ்தம்ப விருத்தி (உள்ளே வாயு அசைவின்றி யிருத்தல்) கும்பகமாம். யாண்டுக்கும்பத்தில் ஜலமிருப்பது போன்று பிராணனென்னும் பெயருள்ள வாயு

நிச்சலமாய் ஸ்தாபிக்கப்பட் டிருக்கின்றதோ ஆண்டு முற்றும் சுவாசப்பிரசுவாசங்களின் கதிவிச்சேத மிருக்கின்றது.

சுவாசப் பிரசுவாசங்களின் கதிவிச்சேதவடிவ பிராணாயா மம் யாண்டும் சம்பவித்தலின் ஆசங்கைக்கிடனின்று.

அந்தவாயு சூரியோதய முதற்கொண்டு இரண்டரை இரண்டரைநாழிகை ஒவ்வொரு நாடியிலும் † கடியந்திர கடப்பிரமண நியாயம்போல் தங்குகின்றது. இங்ஙனமாயின், அகோராத்திரம் (இரவும்பகலும்) 21, 600 சுவாசப்பிரசுவாசங்க ளுண்டாகின்றன; ஆகையினாற்றான் மந்திர சமர்ப்பண ரகசியவே திகளால் (பரமேசுவரனுக்கு மந்திரத்தைச் சமர்ம்பிக்கும் சூட்சு மத்தை யறிந்தவர்களால்) அஜபாமந்திர சமர்ப்பணப் பிரகரணத் தில் தான் செய்தஜபத்தை "கணேசற்பொருட்டு அறுநூறும், பிரம்மாவின் பொருட்டு ஆறாயிரமும், விஷ்ணுவின்பொருட்டு ஆறாயிரமும், சிவன்பொருட்டு ஆறாயிரமும், குருவின்பொருட்டு ஆயிரமும், பரமாத்மாவின்பொருட்டு ஆயிரமும், ஆத்மாவின்பொ ருட்டு ஆயிரமும், சமர்ப்பிக்கின்றேன்" என்று கூறப்பட்டிருக் கின்றது.

அங்ஙனமே, நாடியில் வாயு சஞ்சரிக்குங்காலத்தில் பிரு திவி முதலிய தத்துவங்கள் வர்ண(நிற) விசேஷவசத்தினால் புரு ஷார்த்தத்தை விரும்பும் பிராணிகளால் அறியத் தக்கனவாம்.

"சூரியோதயமுதல் ஒவ்வொருநாடியும்இரண்டரைநாழிகை வாயுவை வகிக்கின்றது. நிசுவாச (ரேசக) உசுவாச (பூரக) நாடி கட்கு ஆரட்டகடிப் பிரமண நியாயம்போல (ஏற்றச்சாலிரண் டடிக்கடி சுற்றுவது போல) மாறுதலேற்படுகின்றது. வாயுவின் நிசுவாச உசுவாசங்கள் இரண்டரைநாழிகையில்(ஒருமணி நேரத் தில்) 900 உண்டாகின்றன. எல்லாஞ் சேர்ந்து அகோராத்திரம் 21, 600 நிசுவாச உசுவாசங்கள் ஏற்படுகின்றன. 36 குணவர்ணங் (எழுத்துக்)களை யுச்சரிப்பதற்கு எவ்வளவுகாலம் வேண்டுமோ அவ்வளவுகாலம் இரண்டுநாடிகளிலும் சஞ்சரிக்கும் வாயுவிற்கு ஏற்படுகின்றது. சுற்றிகொண்டிருக்கும் நாடிகளுள் ஒவ்வொரு

† கடியந்திரம் - ஏற்றம், கடம் - நீரெடுக்குஞ்சால், பிரமணம் - மாறு தல்; அஃதாவது ஏறி இறங்குதல்;நியாயம் திருஷ்டாந்தம்.

நாடியிலும் ஐந்து தத்துவங்கள் (அகோராத்திரம்) சுற்றிக்கொண்டிருக்கின்றன என்று யோகிகளால் அறியத் தக்கனவாம். மேலே வன்னி (தீ) யும், கீழே ஜலமும், குறுக்கே வாயுவும், கீழ்ப்பாதியில் பிருதிவியும் ஆகாயமெங்கும் சஞ்சரிக்கின்றன. இவை கிரமமாக இரண்டு நாடிகளிலுஞ் சஞ்சரிக்கின்றனவென் றறிதல்வேண்டும். பிருதிவிக்கு 50 பலமும், ஜலத்திற்கு 40 பலமும், வன்னிக்கு 30 பலமும், வாயுவுக்கு 20 பலமும், ஆகாயத்திற்கு 10 பலமுமாம். இக்காலவளவு பூதங்கள்நாடிகளில் சுற்றுமளவாம். பிருதிவி ஐந்து குணமும், அப்பு நான்குகுணமும், தேயு மூன்றுகுணமும், வாயு இரண்டு குணமும், ஆகாயம் ஒரு குணமு முடையனவாம். ஒவ்வொருகுணமும் பத்துப்பத்து பலமுடையதாம். ஆகையால், பிருதிவியில் ‡ 50 பல மிருக்கின்றது; அப்பு முதலியவற்றில் ஒவ்வொருகுணங் குறைவாக விருக்கின்றது. அங்ஙனமன்றே, பிருதிவிக்குக் கந்தம், ரசம், ரூபம், பரிசம், சப்தம் என்னும் ஐந்து குணங்களிருக்கின்றன; ஏனைய பூதங்கட்கு முறையே ஒவ்வொரு குணம் குறைவாக விருக்கின்றது. பிருதிவி அப்பு என்னுந் தத்துவங்கள் சாந்தி கர்ம (காரிய) த்தினால் விசேஷ பலத்தைத் தருகின்றன. தேயு பிரகாசத்தினாலும், வாயு சலிப்பதினாலும், ஆகாயம் மகத்துவத்தினாலும் பலத்தைத் தருகின்றன. பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயங்கட்குச் சின்ன (லட்சண) ங் கூறப்படுகின்றது. சித்தத்திற்குப் பிருதிவியினால் ஸ்திரத்தன்மையும், அப்புவின் சீதளத்தன்மையால் காமமும், தேயுவினால் கோப தாபங்களும், வாயுவினால் சலனமும், ஆகாயத்தினால் சூனியத்தன்மையும், அல்லது தர்ம (அபூர்வ) வாசனையு முண்டாகின்றன.

யோகாப்பியாசி இரண்டு பெருவிரல்களால் இரண்டு காதையும், நடுவிரல்களால் மூக்கையும், சுண்டுவிரல்களாலும் பௌத்திர விரல்களாலும் கடைவாயையும், சுட்டு விரல்களால் கடைக்கண்களையும் மூடிக்கொண்டால் கிரமமாகப் பீதம் (மஞ்சள்), சுவேதம் (வெண்மை), அருணம் (சிவப்பு), சியாமம் (கறுப்பு) என்னுமிவற்றோடு கூடிய பிருதிவியாதி நான்கன் தத்துவஞான முண்டாகின்றது; நிருபாதிகமாக ஆகாயத்தின் தத்துவஞான முண்டா

‡ 50—40—30—20—10=150 பலம்=$2\frac{1}{2}$கடிகை(நாழிகை)=ஒரு மணி. 60 பலம் கொண்டது ஒருகடிகை (நாழிகை) யாம்.

கின்றது" என்றற்றொடக்கத்து வாக்கியங்களாலுள்ளவாறு வாயு தத்துவத்தையுணர்ந்து அதனை அடக்கினால் விவேக ஞானத்திற்கு ஆவரணமாகிய கர்மக்ஷய முண்டாகின்றது. அங்ஙனமன்றோ,

"பிராணாயாமத்தினும் மேலான தபசு வேறொன்று மில்லை" என்றும்,

" எங்ஙனம் உலோகங்களின் மலம் (களங்கம்) புடம்போடுவதால் தகிக்கப்படுகின்றதோ, அங்ஙனமே இந்திரியமாகிய பன்னகம் (பாம்பு-துர்வாசனை)பிராணாயாமத்தால் தகிக்கப்படுகின்றது" என்றுங் கூறப்பட்டிருக்கின்றன.

(5.) இவ்வாறு இயமமுதலியவற்றால் சம்ஸ்காரத்தையடைந்த மனதுடையயோகி சம்யமம் பிரத்தியாகார மென்னு மிரண்டையும் அடையவேண்டும்; நேத்திராதி இந்திரியங்கட்குத் தனித் தனியாக ரஞ்சநீயம் (இச்சையை யுண்டாக்குந் தன்மை), கோபநீயம் (கோபத்தை யுண்டாக்குந் தன்மை), மோகநீயம் (மோகத்தை யுண்டாக்குந் தன்மை) என்னு மிவற்றை நிராகரிப்பதால் அவிகிர்தமான (விகாரமடையாததான) சொரூபத்தை யடைந்த சித்தத்தின் அநுசரணம் (இந்திரியங்கள் சித்தத்தை யநுசரித்திருத்தல்) பிரத்தியாகாரமாம்.

இந்திரியங்களை விஷயங்களினின்றும் விஷயங்கட்கு விபரீதமா(வேறா)ன இச்சொரூபத்தில் இழுக்கின்றமையின் பிரத்தியாகாரமென்று (சொற்பொருள்) கூறப்படுகின்றது.

(ஆ.) அப்போது சித்தம் இந்திரியங்களை நோக்குவ தில்லை. அவ்விந்திரியங்கட்குப் பாஹியம் விஷயமா யிருத்தலின் அந்தப் பாஹியத்தைக் கிரகிப்பதில் அவற்றிற்குச் சாமர்த்திய மில்லை. ஆகையால் இந்திரியங்கட்குச் சித்தானுசரணம் (சித்தத்தை யனுசரித்தல்) எங்ஙனம் பொருந்தும்?

(ச.) நீ கூறியதுண்மையே. ஆகையினாற்றான் சூத்திரகாரர் (பதஞ்சலிமுனிவர்) உண்மையில் சித்தானுசரணம் இந்திரியங்கட்குச் சம்பவியாதெனக்கருதி "இந்திரியங்கட்குந் தமது விஷய சம்பந்த மிராதபோது அவை சித்த சொரூபத்தை யநுசரித்தது போலிருப்பது பிரத்தியாகாரம்" என்று கூறிய சூத்திரத்தில் 'போல்' என்னும் அர்த்தத்தைத்தரும் 'இவ' என்னும் சப்தந்

ஹைதக் கூறியிருக்கின்றனர். (இவ என்னும்) சாதிருசியமும் சித்தாநுசரண நிமித்தமான விஷயத்தின் சம்பந்த மின்மையாம். எப்போது சித்தமானது தடுக்கப் படுகின்றதோ அப்போது நேத்திராதி இந்திரியங்களைத் தடுத்தற்பொருட்டு வேறு பிரயத்தனஞ் செய்யவேண்டுவதின்றாம். எங்ஙனம் மதுகரராஜாவை அநுசரித்து ஏனைய மதுகரங் (தேனீக்) கள் செல்லுகின்றனவோ அங்ஙனமே சித்தத்தை யநுசரித்து இந்திரியங்கள் செல்லுகின்றன.

"பிரத்தியாகாரஞ்செய்யவேண்டுமென்னும் யோகி சப்தாதி விஷயங்களிற் பிரவேசிக்கும் இந்திரியங்களையடக்கிச் சித்தத்தை யநுசரிக்கும்படி செய்தல்வேண்டும். இங்ஙனஞ் செய்வதால் மிகவும்சலனவடிவமாயுள்ள இந்திரியங்கட்கு மேலானவசியத்தன்மை (முற்றும் அடக்கம்) உண்டாகின்றது. இவற்றை யடக்காவிடில் யோகி யோகத்தையடைதல் முடியாது" என்று விஷ்ணுபுராணத்தில் (vi - 7, 43, 44 ல்) கூறப்பட்டிருக்கின்றது.

(6.) நாபிச்சக்கரம், இருதயபுண்டரீகம், நாடி (சுழு முனை) முதலிய ஆதியாத்மிக தேச (இட) த்திலாவது ஹிரண்யகர்ப்ப, வசவ,பிரஜாபதி முதலிய பாகியதேசத்திலாவது சித்தத்தை விஷயாந்தரத்தி னின்றும் பரிகரித்து நிறுத்துவது தாரணை.

" சித்தத்தைத் தேசத்திற்கட்டுவது தாரணை" என்று கூறப்பட் டிருக்கின்றது.

"பிராணாயாமத்தினால் வாயுவையும், பிரத்தியாகாரத்தினால் இந்திரியங்களையும் சுவாதீனப்படுத்திப் பிறகு சுகத்திற் கிருப்பிடமான சித்தஸ்தானத்தை (சித்தம் ஸ்திரமாயிருப்பதை) ச செய்தல்வேண்டும்" என்று பௌராணிகர் கூறுகின்றனர்.

(7.) விஜாதீய (வேற்றின) மான விர்த்தியை நீக்கி அவ்வத் தேசத்தில் தியேயத்தை (தியானஞ் செய்யத்தக்கதை) ப் பற்றிய பிரத்தியய (ஞான) த்தின் பிரவாகம் தியானம்.

" ஒரேவகையான பிரத்தியயம் தியானம்" என்று கூறப்பட்டிருக்கின்றது.

" அதன் விஷயமான பிரத்தியயத்தின் ஏகாக்கிரகத்துவத்தின் (ஒருமுகத்தன்மையின்) சந்ததியும் (பிரவாகமும்) அந்நிய விஷயத்தில் ஆசையில்லா நிருத்தலும் தியானம். அது முதலி

ளுள்ள ஆறங்கத்தா லுண்டாகின்றது" என்றும் சிலராற் கூறப் பட் டிருக்கின்றது.

(8.) * பிரசங்கத்தினாலே (யோகாப்பியாசத்தின்) ஈற்றங்க மான யோகம் முன்னரே (257 - வது பக்கத்தில்) நிரூபிக்கப்பட் டது. விருப்பத்தோடு நீண்டகாலம் இடைவிடாது யோகங்களை யநுஷ்டிப்பதனால் சமாதியின் பிரதிபட்சமாகிய கிலேசங்கள் நாசமாகின்றன. அங்ஙனம் நாசமாவதால் அப்பியாசத்தாலும் வைராக்கியத்தாலும் மதுமதி முதலிய சமாதிலாப முண்டா கின்றது.

(ஆ) அத்தியந்தம் அப்பிரசித்தமா யுள்ள கர்நாட, கௌட, லாட முதலிய பாஷைகளால் நீவிரேன் எங்களுக்குக் காரண மின்றி அதிபயங்கரத்தைச் செய்கின்றீர்?

(ச) நாங்கள் உன்னை பயமுறுத்தவில்லை. ஆனால், மதுமதி முதலிய பதார்த்தங்களை யெடுத்துக் கூறுவதால் (அவற்றின் ஆவரணத்தை நீக்கிச்) சந்தோஷப்படுத்தி வைக்கின்றோம். ஆகை யால் காரண மின்றிப் பயமடைந்த நீ சாவதானமாகக் கேட்கக் கடவாய். அவற்றுள்,

i. மதுமதியாவது அப்பியாச வைராக்கிய முதலிய சாதனங்க ளால் இரஜோ தமோகுணங்களின் லேசமுமின்றிச் சுகப்பிரகாசமய மான சத்துவபாவனை யுண்டாவதாம். அந்தப்பாவனையால் தோஷ மற்று நிர்மலமாயுள்ள ஸ்புரணவடிவ ரிதம்பரைப் பிரஞ்ஞை யென்னும் அபிதானமுள்ள சமாதி சித்தியாம்.

" ரிதம்பரையாவது அதன் விஷயத்தி லுண்டான பிரஞ்ஞை" என்று கூறப்பட் டிருக்கின்றது. ரிதம் என்பது சத்தி யம்; அந்தச் சத்தியைத் தரித்துக்கொண் டிருப்பது ரிதம்பரை; அஃதொருகாலும் விபரீதத்தால் மறைபடுகிறதில்லை; இங்ஙனந் திடமாக விருக்கும்போது இரண்டாவது யோகிக்கு அந்த ரிதம் பரை யென்னும் பிரஞ்ஞை யுண்டாகின்றது.

---

* நினைப்பிற்கு வந்ததை யுபேட்சை (அசட்டை) செய்யாதிருப்பது பிரசங்கமாம். அது சாதுக்களைப் பற்றிப்பேசும்போது அசாதுக்களைப்பற்றி நினைப்புண்டாயின் அவர்களைப்பற்றியும் பேசுவதுபோல்வதாம்.

பிரதமகல்பிகன், மதுபூமிகன், பிரக்ஞா ஜோதி, அதிக்கிராந்த பாவநீயன் என்று யோகிகள் நால்வகையின ரென்பது பிரசித்தம். அவர்களுள்,

(1.) பிரவிர்த்திமாத்திர ஜோதியுடைய அப்பியாசி பிரதம கல்பிகன். இதனால் "இவன்பிறாது சித்த முதலியவற்றை விஷயமாகவுடைய ஞானவடிவ ஜோதியை வசப்படுத்தவில்லை" என்று கூறியதாக வாயிற்று.

(2.) ரிதம்பரைப் பிரஞ்ஞன் மதுபூமிகன்.

(3.) பூதேந்திரிய ஜயமுடையவன் பிரக்ஞாஜோதி.

(4.) பரம (மிக) வைராக்கிய சம்பன்னன் அதிக்கிராந்த பாவநீயன்.

ii. மனோஜவித்துவ முதலியன மதுப்பிரதீக சித்திகள்.

"மனோஜவித்துவம், விகரணபாவம், பிரதானஜயம் (மதுப்பிரதீகசித்திகள்)" என்று கூறப்பட்டிருக்கின்றது.

மனோஜவித்துவ மாவது மனம்போலக் காயத்திற்கு உத்தமமான கதி (கமன-நடை) லாபம்.

விகரணபாவ மாவது சரீரத்தை யபேட்கியாத இந்திரியங்கட்கு அபிமத (இஷ்ட) மான தேசகால விஷயங்களை யபேட்சித்து விர்த்தி (காண்டல் முதலியன) லாபம்.

பிரதானஜய மாவது பிரகிருதி விகாரங்களெல்லா வற்றின் வசித்துவம் (சுவாதீனப் படுத்துந் தன்மை).

இச் சித்திகளெல்லாம் கரண (இந்திரிய) பஞ்ச சொரூபத்தை ஜயிப்பதால் மூன்றுவது யோகிக்குண்டா கின்றன. எங்ஙனம் மதுவி (தேனி) ன் ஏகதேசமும் நக்கப்படுகின்றதோ அங்ஙனம் அச்சித்திகளும் தனித்தனி யாகவே அநுபவிக்கப் படுகின்றன; ஆகையால் இரண்டாவதுநிலை மதுப்பிரதீக மென்று கூறப்படுகின்றது.

iii. சகல பதார்த்தங் கட்கும் அதிர்ஷ்டாத்ருத்துவ (நியமனஞ் செய்யுந்தன்மை) முதலியன விசோக (சோகமற்ற) சித்தி. "சத்துவ புருஷ அன்னியத்துவக் கியாதி(பேதஞான)மாத்திரத்தில் பிரதிஷ்டை யடைந்தவனுக்குச் சர்வபாவா திருஷ்டாத்திருத்

துவமும் சர்வஞ்ஞத்துவமும் (உண்டாகின்றன)" என்று கூறப்பட்டிருக்கின்றது. வியவசாய (ஞான), அவ்வியவசாய (விஷய) வடிவமாகவும் குணபரிணும வடிவமாகவுமுள்ள சகலபதார்த்தங்களையும் சுவாமி (உடையவன்) போல் ஆக்கிரமிப்பது (வசப்படுத்தியிருப்பது) சர்வபாவாதிருஷ்டாத் திருத்துவம். பூத, பௌஷிய, வர்த்தமான (இறப் பெதிர் நிகழ்) காலங்களிலுள்ள அப்பதார்த்தங்களின் விவேக (பேத) ஞானம் சர்வஞ்ஞத்துவம். "விசோகமாவது ஜோதியோடு கூடியது" என்று கூறப்பட்டிருக்கின்றது.

iv. சர்வவிர்த்தி சூனியமுண்டாகும்போது மிகவும் வைராக்கியத்தை யடைந்த புருஷனது ஜன்மாதி காரணமான கிலேசங்களின் நிரோத (நாச) சமர்த்தமானது நிர்ப்பீஜசமாதி. அஃதசம்பிரஞ்ஞாத மென்னும் பதத்தாலறியக் கூடியதாயும், சம்ஸ்கார சேஷத்துவமென்னும்பதத்தாற்கூறத்தக்கதாயுமுள்ளசித்தத்தின் அவஸ்தாவிசேஷமாம். "பிரத்தியயா (ஞான) ப்பியாசத்தாலுண்டான அன்னிய சம்ஸ்கார சேஷம் விராகம் (ஒழிவு)" என்று கூறப்பட்டிருக்கின்றது. இங்ஙனமாயின், சர்வபதார்த்தங்களிலும் வைராக்கியத்தை யடைந்த அப்புருஷ சிரேஷ்டனது சர்வக் கிலேச பீஜங்களும் வறுக்கப்பட்ட நெல் காரியத்தை யுண்டுபண்ணும் சாமார்த்திய மற்றிருப்பதுபோலிருந்து மனதுடன் நாசத்தை யடைந்துவிட்டன. ஆகையால், இவையாவும் நாசத்தையடைந்திருக்கும்போது பிரதிபந்தகமின்றிய விவேகக்கியாதியி (பேதஞானத்தி) ன் பரிபாகவசத்தால் காரியகாரணவடிவ பதார்த்தங்கட்குப் பிரதானத்தில் லயமுண்டா கின்றது. சித்சக்தி வடிவ (ஆத்மாவின்) பிரதிஷ்டையோ (இருப்போ) புத்தியின் சம்பந்த மற்றிருத்தலால் கைவல்லியத்தை (தான்மாத்திரமா யிருத்தலை) யடைகின்றது.

* * * * * *

இது (சித்சத்தி சொரூபப் பிரதிஷ்டை) யிருந்தாலும் எக்காரணத்தினல் பிராணியுண்டாக (பிறவியடைய) வில்லையென்று ஆசங்கித்தல் கூடாது; காரணமிராமையின் காரியமுமில்லை என்று பிரமாண சித்தமான அர்த்த (விஷய)த்தில் ஆக்ஷேபசமாதானங்கள் சம்பவியாமையின். அன்ருயின், காரணமின்றிக் காரியம் சம்பவிக்குமெனின், குருடர்களாலும் நூலால் (சிறு) மணிகளைக்

கோத்தனும் சம்பவிக்கும்; ஆகவே, பொருந்தாமையான அர்த்தத்தைக் கூறும் லௌகிக வாக்கியத்திற்குப் பொருத்தமான அர்த்தம் சம்பவிக்கும். அங்ஙனமே, "ஒரு குருடனுக்கு ஓரிரத்தின மாலை கிடைத்தது; விரல்களில்லாத ஒருவன் அதனைப் பிடுங்கிக்கொண்டான்; கழுத்தில்லாத வொருவன் அதனைத் தரித்துக் கொண்டான்; ஊமையன் அதனைப் புகழ்ந்துபேசினான்" என்று சுருதியிலுங் கூறப்பட்டிருக்கின்றது.

இங்ஙனம் இந்த யோகசாஸ்திரம் வைத்திய சாஸ்திரம் போன்று நான்கு பிரிவினை யுடைத்தாயிருக்கின்றது. எங்ஙனம் வைத்திய சாஸ்திரம் ரோகம், ரோகஏது, ஆரோக்கியம், ஔஷதம் என்னுமிவற்றைப் பற்றிக் கூறுகின்றதோ, அங்ஙனமே யோகசாஸ்திரமும் சம்சாரம், சம்சார ஏது, மோட்சம், மோட்சவுபாயம் என்னு மிவற்றைப்பற்றிக் கூறுகின்றது. அவற்றுள்,

(1.) துக்கவடிவ சம்சாரம் தள்ளத்தக்கது.

(2.) பிரதான (பிரகிருதி) புருஷ சையோகம் ஹேயமான (தள்ளத்தக்கதான) போக (சம்சார)த் திற்கு ஏது.

(3.) பிரகிருதிபுருஷசையோகத்தின் அத்தியந்த (முற்றும்) நிவிர்த்தி மோட்சம்.

(4.) அதன் (மோட்ச) உபாயம் சம்யக்தரிசனம் (யதார்த்த ஞானம்).

இங்ஙனம் ஏனைய சாஸ்திரங்களும் சம்பவித்த வரையில் நான்கு பிரிவினையுடையனவென் றாகிக்கத்தக்கனவாம்.

இங்ஙனம் நிரூபிக்க வேண்டியன வெல்லாம் செவ்வையாக நிரூபிக்கப்பட்டன.

பதஞ்சலி தரிசனம்
முற்றிற்று.



இதற்குமேல் சர்வசாஸ்திரங்கட்குஞ் சிரேஷ்டமான சாங்கர (சங்கரராற் கூறப்பட்ட அத்வைத) தரிசனம் மற்ருேரிடத் தெழுதப்பட் டிருத்தலின் அஃதீண் டெழுதப்பட வில்லை. (அது பஞ்சதசியென்று கூறப்படுகின்றது).

சர்வதரிசன சங்கிரக முற்றிற்று.



## பதினெருவது

# சாங்கர தரிசனம்.

214. அந்த இந்தப் பரிணும வாதம் பிராமாணிகர்களால் நிந்திக்கத் தக்கதாம். அசேதனமான பிரதானம் சேதன அநதிஷ்டித (அப்பிரவிர்த்தித) மாகப் பிரவிர்த்திக்கமாட்டாது; கடகாதிகளுக்கு உபாதானமான சுவர்ணுதிகள் பொற்கொல்லர் முதலிய சேதனரால் பிரேரிப்பிக்கப்பட்டனவாகக் கண்டிருப்பதால். * நித்தியத்துவத்திற்குச் சாதகமான (ஹேதுவான) கிருதகத்துவம்போல் † சுக துக்க மோக ரூபமாக அந்விதத்தன்மை (சம்பந்திக்குந் தன்மை) யான சாதனம் சாத்திய விபர்யய (அபாவ) வியாப்தமா யிருப்பதால் விருத்தமாயும் சொரூபாசித்தமாயுமிருக்கின்றது.

மேலும், சுக துக்க மோகங்கள் ஆந்தரங்கள்; அவை சுகதுக்கங்களை விஷயமாக்கும் ஞானத்தை விட வேறு ஞானத்தாலறியத்தக்க பாகியாதிகளான சந்தனுதிகளைவிடப் பின்னங்களாகக் காணப்படுகின்றன.

சந்தனுதிகள் சுகாதி சுபாவங்களாயின் பனிக்காலத்திலும் சந்தனம் சுகமாக விருத்தல்வேண்டும்; அந்தப்பதார்த்தம் ஒருகால் சந்தனமாகவும் ஒருகால் அசந்தனமாகவு மிருக்கமாட்டாது. அங்ஙனமே, வேனிற்காலத்திலும் குங்குமக் குழம்பு சுகமாகவிருத்தல்வேண்டும்; இஃது ஒருகால் குங்குமக் குழம்பன்றிப் போகமாட்டாது.

இங்ஙனமே கண்டகமா(முள்ளா)னது கிரமேல(ஒட்ட)கத்திற்குப்போல் மக்கள் முதலிய பிராணிகளுக்குஞ் சுகமாக வேண்டும்; இது சிலருக்கு முள்ளாகவும் சிலருக்கு முள்ளாகாமலு

---

* ..ம் நித்தியம்; கிருதகத்வாத்; யாதுயாது கிருதகத்தன்மையோடு கூடியது அதுவது நித்தியத்தன்மையோடு கூடியது.

† சகலகாரியங்களும் சுகதுக்கமோக ரூபமான வஸ்துவினின்றும் உண்டாயின; சுகதுக்கமோகத்தோடு கூடியிருப்பதால்; கடமுதலியன மிருத்துவோடு கூடியிருப்பதால் மிருத்துவைக் காரணமாகவுடையதாகக் காணப்பட்டிருப்பதுபோல்.

மிருப்பதில்லை. ஆகையால், சந்தனமுதலிய பதார்த்தங்கள் காலாதிகளை யபேக்ஷித்துச் சுகசாதனங்க ளாகின்றனவே யன்றிச் சுக சொரூபங்களாகமாட்டா வென்பது உசிதம். ஆதலின், ஏது அசித்தமென்பது சித்தம் (ஹேது சித்திக்க வில்லை).

பிரதானங் காரணமென்று கூறுமிடத்துச் சுருதியும் பிரமாண மன்று.

"அக்கினியிலுள்ள செம்மை தேஜசின் ரூபம்; வெண்மை ஜலத்தின் ரூபம்; கருமை அன்னத்தின் (பிருதிவியின்) ரூபம்" என்று எவை சாந்தோக்கிய சாகையில் தேஜசு, அப்பு, பிருதிவி வடிவான பிரகிருதியின் லோகித சுக்கில கிருஷ்ணரூபங்கள் கூறப்பட்டிருக்கின்றனவோ அவையே மீண்டும் பிரத்தியபிஞ்ஞைக்கு விஷயமா யிருக்கின்றன. (ஆதலின் இந்தச் சுருதியும் பிரமாணமன்று).

அதில் சிரௌதப் பிரத்தியபிஞ்ஞை பிரபலமாகையாலும், லோகிதாதி சப்தங்களுக்கு முக்கியார்த்தம் சம்பவிப்பதாலும், தேஜசு அப்பு பிருதிவி ரூபமான ஜராயுஜ, அண்டஜ, சுவேதஜ, உத்பிஜ்ஜமென்னும் பூதக் கூட்டங்களாய நான்கிற்கும் (சாந்தோக்கியத்திற் கூறப்பட்ட லோகித சுக்கில கிருஷ்ண ரூபவஸ்து) பிரகிருதி யென்று நிச்சயிக்கப்படுகின்றது.

தேஜசு, அப்பு, பிருதிவி கட்குப் பிரகிருதியானது உற்பத்தி யடைந்திருப்பதா லதற்கு அஜை யென்னும் பெயர் காரணப் பெயராக மாட்டாது.

ஆயினும், இடுகுறிப்பெயரால் அஜாத் தன்மையானது கூறிய பிரகிருதியின்கண் சுகமா யறியும் பொருட்டுக் கற்பிக்கப் படுகின்றது. எங்ஙனம் "ஆதித்தியன் தேவமது" என்று கூறும் வாக்கியம் ஆதித்தியனுக்கு மதுத்தன்மையைக் கற்பிக்கின்றதோ அங்ஙனமே தேஜசு அப்பு பிருதிவி வடிவமான பிரகிருதியே அஜையென்று கற்பிக்கப்படுகின்றது. ஆகையினால், "அஜாமேகாம்" என்றற் றொடக்கத்துச் சுருதியும் பிரதானத்தைக்கூறவில்லை.

அசேதனமான க்ஷீராதி சேதன அதிஷ்டிதமாகவே கன்றின் விருத்தியின் பொருட்டுப் பிரவிர்த்திக்கின்றனவென்று யாது திருஷ்டாந்தங் கூறப்பட்டதோ, அது சாரமுடையதன்று;

சர்வஞ்ஞனை பரமேசுவரனை க்ஷீரத்திலும் அதிஷ்டாதாவாக வங்கீகரித்திருப்பதால்.

பரமேசுவரனுக்குக் கருணையால் பிரவிர்த்தியை யொப்புக்கொள்ளின், மேற்சொன்ன விகற்பத்திற் கிடனின்று; சிருஷ்டிக்கு முன்னர்ப் பிராணிகளுக்குத் துக்க சம்பந்தம் சம்பவியாதிருப்பினும் அதற்குக் காரணமான அதிர்ஷ்டம் சம்பவிப்பதால் அதன் நிவிர்த்தியி னிச்சையினாற் பிரவிர்த்தி பொருந்துகின்றமையின்.

மேலும், பிரதானத்தின் பிரவிர்த்தி புருஷார்த்தத்தின் பொருட்டென்று கூறப்பட்டது. அது விசாரிக்கத் தக்கதாம். பிரதானம் புருஷனது (1) கேவலம் போகார்த்தமாகப் பிரவிர்த்திக்கின்றதா? அல்லது (2) கேவலம் மோக்ஷார்த்தமாகப் பிரவிர்த்திக்கின்றதா? அல்லது (3) உபயார்த்தமாகப் பிரவிர்த்திக்கின்றதா?

(1) முதலாவது பக்ஷங்கூடாது; அநாதேயனும், அநாசயனும், கூடஸ்தனும், நித்தியனுமுள்ள புருடனுக்குத் தாத்துவிகமான (யதார்த்தமான) போகம் சம்பவியாமையாலும், (அது சம்பவிக்கினும்) மோட்சம் சம்பவியாமையாலு மென்க.

எந்தப் பிரயோசனத்தை யுத்தேசித்துப் பிரதானம் பிரவிர்த்திக்கின்றதோ அஃது அதனையே யுண்டு பண்ணல் வேண்டும். போகரூபமான பிரயோசனத்தைக் குறித்துப் பிரவிர்த்திக்கின்றதெனின், போகத்தையே யுண்டுபண்ணல் வேண்டும்; மோட்சத்தை யுண்டுபண்ணல் கூடாது. (ஆதலின் முதலாவது பக்ஷங் கூடாது).

(2) இரண்டாவது பக்ஷமுங் கூடாது; சைதன்னியம் நித்திய, சுத்த, புத்த, முக்த சுபாவமாகையால் (அதற்குக்) கர்மாநுபவ வாசனை சம்பவியாமையின் பிரதானப் பிரவிர்த்திக்கு முன்னரும் முக்தமா யிருப்பதால் புருஷனது முத்தியினிமித்தம் பிரதானப் பிரவிர்த்தி பொருந்தாமையாலும், சப்தாதிகளின் உபபோகார்த்தம் பிரவிர்த்தியாமையின் பிரதானத்திற்கு உபபோக ஜனகத்துவம் சம்பவியாமற் போகுமாதலாலுமென்க.

(3) மூன்றாவது பட்சமுங் கூடாது; மேற் கூறிய தூஷணங்களை நிவிர்த்திக்கக் கூடாமையாலும், பிரவிர்த்தி சுபாவமான பிரதானத்திற்கு ஔதாசீனியம் (உதாசீனத்துவம்) சம்பவியாமையாலு மென்க.

அற்றேல், தனக்கும் புருஷனுக்கும் பேதஞானம் புருஷார்த்தமாம். அந்தப் பேதஞான முண்டான பிறகு அந்தப் பிரகிருதி செய்யவேண்டிய காரியத்தைச் செய்து நிவிர்த்தியாகின்றதெனின்,

அது (நீகூறுவது) உசிதமன்று; அசேதனமான பிரகிருதிக்கு விசாரித்துக் காரியத்தைச் செய்புந்தன்மை பொருந்தாமையின். எங்ஙனம் சப்தாதிகளின் சாட்சாத்காரம்வரினும் அதனிமித்தம் மீண்டும் பிரதானம் பிரவிர்த்திக்கின்றதோ அங்ஙனமே மீண்டு மீண்டும் பிரவிர்த்திக் கட்டும்; சுபாவத்திற்கு அபாயம் (நிவிர்த்தி) இராமையின்.

மேலும், அந்தப் பிரகிருதி விவேகக்கியாதி (பிரகிருதி புருஷபேதஞான) வசத்தினால் நிவிர்த்தியடைகின்றதா? அன்று?

நிவிர்த்தியாகும் பட்சத்தி லியாவருக்குஞ் சம்சாரம் இப்பொழுதே நிவிர்த்தியாதல் வேண்டும்.

நிவிர்த்தியாகாத பட்சத்தில் ஒருவருக்கும் மோட்சமுண்டாதல் கூடாது.

அற்றேல், பிரதானம் ஒன்றாயிருப்பினும் அந்தந்தப் புருஷர்களிடத்துள்ள அவிவேகக் கியாதிவடிவ அவித்தை யிருப்பதால் பந்தமும் அது நிவிர்த்தி யடைவதால் மோட்சமும் பொருந்து மெனின்,

இஃதாச்சரியமே! அங்ஙனமாயின், பிரகிருதியால் பிரயோசன மின்று; அவித்தையின் சத்துவா சத்துவங் (உண்மை யின்மை) களாலேயே பந்தமோட்சங்கள் பொருந்துகின்றமையின்.

அற்றேல், அவித்தியா பட்சத்திலும் இத்தோஷ முண்டாகுமே யெனின்,

இங்ஙனம் ஆட்சேபிப்ப துசிதமன்று. நாங்கள் பிரதானத்தைப்போன்று அவித்தையைச் சர்வஜீவர்களிடத்திலும் ஒன்றாகச் சொல்வதில்லை. எதனாலிவ்வாறு நிந்தைக்கிட மாவோமோ, பின்னரோ இது ஜீவன்தோறும் வெவ்வேறென்று சொல்லுகின்றோம், அதனால் எந்த ஜீவனுக்கு வித்தை யுண்டாகின்றதோ அவனுடைய அவித்தை நிவிர்த்தி யாகின்றதே யன்றி மற்றையோருடைய அவித்தை நிவிர்த்தியாகின்ற தில்லை; வெவ்வேறிடத்

துள்ள வித்தை யவித்தைகளுக்கு விரோதமின்மையின். ஆதலின், (எமது மதத்தில்) சமஸ்த சம்சார நிவிர்த்திப் பிரசங்க தோஷ மின்று. ஆகையினுல், பரிணுமவாதந் தள்ளத்தக்கதாம்; விவர்த்த வாதங் கொள்ளத்தக்கதாம்.

215. ஜீவஜடங்கட்குச் சாதிருசிய மின்மையின் பிரபஞ்சம் சித்தின் விவர்த்த மாகமாட்டா தென்று முன்னரே கூறியிருக்கி ன்றோ மெனின்,

நீ கூறிய துசித மன்று. உலகத்தின்க ணுள்ள பிராந்தி யாவும் சாரூப்பிய (சாதிருசிய)த்தினு லுண்டாகின்றனவென்னும் வியாப்தியின்று; காந்தையின் (யௌவனமாதின்) ஆலிங்கன முத லியவற்றினைப் போன்று சொப்பன விப்பிரமனுக்கு (பிராந்தி யுடையவனுக்கு) அசத்வடிவத்தினின்றும் காமாதிகளின் பிரதீதி (தோற்றம்) உண்டாதலின். மேலும், ஒருசமய முண்டாகின்ற பிராந்தியில் சாரூப்பியம்வேண்டும்; அநாதியவித்தையினு லுண் டாய பிரபஞ்சத்தில் சாரூப்பியம் வேண்டுவதில்லை.

"பரிணுமத்தை யடையாத பிரஹ்மத்தின் விவர்த்தம் இந்தப் பிரபஞ்சம்; அநாதிவாசனையினு லுண்டாயது; சாரூப்பி யத்தை யபேட்சிப்ப தில்லை" என்று வாசஸ்பதி யாசாரியர் கூறி யிருக்கின்றனர். இவையாவும் வேதாந்த சாஸ்திரத்திற் பரிசிரமத் தை யடைந்தவர்கட் கெளிதாம்.

216. இந்த வேதாந்த சாஸ்திரம் நான்கு அத்தியாய முடை யது. பகவானுன வாதராயண (வியாச) ரால் செய்யப்பட்ட வே தாந்த சாஸ்திரத்திற்கு ஜீவப் பிரஹ்ம ஐக்கியம் விஷயமென்று ஸ்ரீசங்கராசாரியர் பிரதிபாதித்திருக்கின்றனர்.

முதலாவதான சமன்வய அத்தியாயத்தில் சகலவேதாந் தங்கட்கும் பிரஹ்மத்தி னி ட த் தி ற் ருற்பரியத்தால் பரியவ சானமும் (முடிவும்), இரண்டாவதான அவிரோத அத்தியாயத் தில் சாங்கிய முதலிய தர்க்கவிரோத நிராகரணமும், மூன்ருவ தான சாதன அத்தியாயத்தில் பிரஹ்மவித்தியா சாதனமும், நான்காவதான பல அத்தியாயத்தில் வித்தியா பலமும் நிரூபிக்கப் பட்டிருக்கின்றன.

அவற்றுள், அத்தியாயந்தோறும் நான்குபாதங்களுள.

I. (1) அவற்றுள், முதலாவதத்தியாயத்தின் முதலாவது பாதத்தில் ஸ்பஷ்டப் பிரஹ்மலிங்க வாக்கிய சமுதாயம் விசாரிக்கப்பட்டிருக்கின்றது. (ஸ்பஷ்டம் - வெளிப்படை).

(2.) இரண்டாவது பாதத்தில் உபாசியப் பிரஹ்மத்தைக் கூறும் அஸ்பஷ்டப் பிரஹ்மலிங்கவாக்கியம் விசாரிக்கப்பட்டிருக்கின்றது.

(3.) மூன்றாவது பாதத்தில் ஞேயப்பிரஹ்மத்தைக் கூறும் அஸ்பஷ்டப்பிரஹ்மலிங்கவாக்கியம் விசாரிக்கப்பட்டிருக்கின்றது.

(4.) நான்காவது பாதத்தில் அவ்வியக்தம் அஜாபதம் முதலிய சந்திக்த(சம்சய)பதசமூகங்கள் விசாரிக்கப்பட்டிருக்கின்றன.

II. (1.) இரண்டாவதத்தியாயத்தின் முதலாவது பாதத்தில் சாங்கிய யோக கணாதமுதலிய சாஸ்திரங்களிலுள்ள விரோதபரிகாரஞ் செய்யப்பட்டிருக்கின்றது.

(2.) இரண்டாவது பாதத்தில் சாங்கியாதி மதங்கள் தோஷமுடையனவென்று சொல்லப்பட்டிருக்கின்றது.

(3.) மூன்றாவது பாதத்தில் பஞ்சமகாபூத சுருதிகளுக்கும் ஜீவ சுருதிகளுக்கும் பரஸ்பரமுள்ள விரோதபரிகாரம் செய்யப்பட்டிருக்கின்றது.

(4.) நான்காவது பாதத்தில் லிங்க சரீரத்தைக்கூறுஞ் சுருதிகளின் விரோதபரிகாரம் செய்யப்பட்டிருக்கின்றது.

III. (1.) மூன்றாவதத்தியாயத்தின் முதலாவது பாதத்தில் ஜீவனது பரலோக கமனாகமனத்தை (போதல்வருதலை) நிரூபித்து அதன் வாயிலாக வைராக்கியம் பிரதிபாதிக்கப்பட்டிருக்கின்றது.

(2.) இரண்டாவது பாதத்தில் தத்துவம் பதார்த்த பரிசோதனஞ் செய்யப்பட்டிருக்கின்றது.

(3.) மூன்றாவது பாதத்தில் சகுணவித்தையில் (உபாசனையில்) குணோபசம்மாரம் (குணமுடிவு) செய்யப்பட்டிருக்கின்றது.

(4.) நான்காவது பாதத்தில் நிர்க்குணப்பிரஹ்ம வித்தைக்குப் பகிரங்க அந்தரங்க ஆச்சிரம யக்ஞாதி சாதனங்களானவை பிரதிபாதிக்கப்பட் டிருக்கின்றன.

IV. (1.) நான்காவதத்தியாயத்தின் முதலாவது பாதத்தில் பிரஹ்மசாட்சாத்காரத்தினுல் பாப புண்ணிய கிலேச நிவிர்த்திவடிவ ஜீவன்முத்தி சொல்லப்பட் டிருக்கின்றது.

(2.) இரண்டாவது பாதத்தில் மரணகாலத்தில் பிராணன் வெளிப்படும் பிரகாரம் பிரதிபாதிக்கப்பட் டிருக்கின்றது.

(3.) மூன்ருவது பாதத்தில் சகுணப்பிரஹ்மோபாசகனுக்கு உத்தர (மேலேசெல்லும்) மார்க்கம் கூறப்பட் டிருக்கின்றது.

(4.) நான்காவது பாதத்தில் நிர்க்குணப்பிரஹ்மவித்துக்கு விதேககைவல்லியமும், சகுணப்பிரஹ்மவித்துக்குப் பிரஹ்மலோகப் பிராப்தியும் கூறப்பட் டிருக்கின்றன.

இங்ஙனம் பிரஹ்மவிசாரசாஸ்திரத்தின் அத்தியாயார்த்த சங்கிரகமும் பாதார்த்த சங்கிரகமுங் கூறப்பட்டன.

217. அவற்றுள், "அதாதோபிரஹ்மஜிஞ்ஞாசா" என்பது முதலாவது அதிகரணம். இது பிரஹ்மமீமாம்சையின் ஆரம்பத்தைப் பிரதிபாதிக்கின்றது.

அதிகரணமும் ஐந்தவயவத்தோடுகூடியதென்பது பிரசித்தம். அந்த அவயவங்கள் விஷயம், சந்தேகம், பூர்வபட்சம், சித்தாந்தம், பிரயோசனம் என்பனவாம்.

(1.) இவ்வதிகரணத்திற்கு "ஏ! மைத்திரேயீ! ஆத்மா பார்க்கத்தக்கது கேட்கத்தக்கது சிந்திக்கத்தக்கது" என்னு மிவ்வாக்கியம் விஷயம்.

(2.) ஜிஞ்ஞாசியத்துவ வியாபகமான சந்தேகப்பிரயோசனங்கள் சம்பவிக்கின்றனவென்று சிலவாதிகளும், சம்பவிக்கமாட்டாவென்று சிலவாதிகளும் கூறுவதால் பிரஹ்மம் விசாரிக்கத்தக்கதா? அன்று? என்பது சந்தேகம்.

ஆண்டு எவனுக்கு இந்த ஜிஞ்ஞாசியத்துவம் (விசாரியத்துவம்) பிரதீதியாகின்றது.?

(i) அகமநுபவத்தினு லறியக் கூடியவனுக்கா? (ii) சுருதியினு லறியக் கூடியவனுக்கா ?

(i) முதலாவது பட்சங் கூடாது; சர்வஜனப்பிரசித்த மான நானென்னும் அநுபவத்தினுல் இஃதென்னும் அநுபவத்திற்கு விஷயமான தேகாதிகளினும் வேறாக ஆத்மா ஸ்பஷ்டமாகப் பிரதீதியாகின்றமையின்.

அற்றேல், இவ்வகங்காரம் நான் பருத்திருக்கின்றேன், நான் இளைத்திருக்கின்றேன் என்றற் றொடக்கத்துத் தேகதர்ம சாமாநாதி கரண்ய வநுபவத்தால் அத்தியாசஞ் செய்யப்பட்ட ஆத்மபாவத்தையுடைய தேகத்தை விஷயமாகவுடையதெனின்,

அற்றன்று; பாலியாதி யவஸ்தைகளில் வெவ்வேறு பரிணாமம் சரீரத்திற் கிருப்பதால் நெல்லிக்கனி இலந்தைக்கனிகளுக்குப் பரஸ்பரம்(ஒன்றற்கொன்று)பேதந் தோன்றுவதுபோல் சரீரத்திற்கும் பேதமிருப்பதால் அதற்குப் பிரத்தியபிஞ்ஞை பொருந்தாமையின்.

எங்ஙனம் பீலுபாக பட்சத்திலாவது பிடரபாக பட்சத்திலாவது காலபேதத்தினுல் ஒரு வஸ்துவில் பாகத்தினுலுண்டான பேதங்கூடுமோ அங்ஙனமே சரீரமென்னும் பேருள்ள வொருவஸ்துவில் காலபேதத்தினுல் பரிணாமபேதங் கூடும். ஆகையினுற்றான்,லௌகிக ஜனங்கள் சரீரத்தை ஆத்மாவினுடன் அபின்னமாகக் கிரகித்துப் † பிரத்திய பிஞ்ஞையோடு கூடியிருக்கின்றனர் என்றுகூறின்,

இதுசரியன்று; மணி மந்திர ஔஷத முதலியவற்றின் உபாயபேதத்தினுல் ‡ பூமிகாதனம்போல் அநேகவித தேகங்களையடைந்ததாயும்,அகமாகாரத்திற்குவிஷயமாயும்,பின்னமாயுமுள்ள ஆத்மா சரீரத்தைவிட வேறாகத் தோன்றுவதால். ஆகையினுற்றான்,சட்சுராதிகளையும்¶ அகமாலம்பனமாகச் சங்கித்தல்கூடாது; அந்நியன் பார்த்ததை அந்நியன் ஸ்மரிக்கமாட்டானென்னும் நியாயத்தினுல் சட்சுராதிகள் நாசத்தை யடைந்திருந்தாலும் ரூபாதி ஸ்மரணம் பொருந்தாமையின்.

அந்தக்கரணமும் அகமாலம்பனமாக ஒப்புக்கொள்ளல் கூடாது.

---

† சரீரத்தையும் ஆத்மாவையு மொன்றாகக் கிரகித்திருக்கின்றனர்.

‡ பூமிகாதனம்-பூமிக்கும் புதையலுக்கு முள்ளபேதம்.

¶ அகமாலம்பனமாக-அகமாகார விர்த்திக்கு விஷயமாக.

யாது விருத்ததர்மாத்தியாசமும் காரணபேதமுமுடை யதோ அதுவே பேதமாகவாவது பேதஹேதுவாகவாவது இருத் தல் வேண்டு மென்னும் நியாயத்தினால் கர்த்தாவாகவுங் கரணமா கவு மிருக்கிற ஆத்மாந்தக்கரணங்கட்குத் தச்சனுக்கும் வாச்சிக்கு முள்ள பேதம்போன்று பேதம் சம்பவிக்கமாட்டாது.

அபேதத்தையே யங்கீகரியாமற் போயின் நான் பருத் திருக்கின்றேன், நான் இளைத்திருக்கின்றேன், நான் கருத்திருக் கின்றே னென்றற்றொடக்கத்து ஞானம் உலகத்தி லிரா திருத் தல் வேண்டுமெனின்,

அங்ஙன மாகமாட்டாது; உலகத்திலும் சாஸ்திரத்தி லும் இருவகைத்தாகச சப்தப் பிரயோகங் கண்டிருப்பதால் முக்கி யார்த்தத்துவம் பொருந்தாதபோது மஞ்சங்க ளழுகின்றனவென் பதுபோ லுபசாரமாகப் பொருந்துகின்றமையின். அங்ஙனமாக, இவ்வனுமானப் பிரயோகம் வருமாறு குறிப்பிக்கப்படுகின்றது:— விவாதத்திற்கு விஷயமான ஆத்மா விசாரிக்கத்தக்க தன்று; சந்தேகமிராமையின்; கையிலுள்ள நெல்லிக்கனிபோல். அங்ஙன மே, பலம் பலத்தன்மையைப் பார்க்கமாட்டாது. புருஷர்களாற் பிரார்த்திக்கத் தக்கதென்னும் விற்பத்தியால் நிஸ்ஸேஷ (அத்தி யந்த) துக்க நிவிர்த்தியோடு கூடியதும் பரமானந்தைக ரசமாயு முள்ளது யாது அது புருஷார்த்த சப்தத்தின் பொருளாம்; அந் தப் புருஷார்த்தம் மகாபுருஷர்க ளியாவராலும் பிரார்த்திக்கத்தக் கது; சாம்சாரிகமான சுகம பிரார்த்திக்கத் தக்கதன்று; (ஏனெ னின்) அந்த இகலோக பரலோக சுகத்திற்குச் சாதிசயத் தன்மை யும் விஷயத் தன்மையு மிருத்தலின் அது முமுட்சுக்களால் பிரார்த்திக்கத்தக்க தாகாமையின்.

எது விரோதியான துக்கமோ அது தள்ளத்தக்கது; அஃது அவித்தை யென்னும் பரியாயமு (பேரு)ள்ள சம்சாரமே. சரீராதி கட்கும் ஆத்மாவிற்குமு ஏகீகரண (தாதாத்மிய) மிருக்கும்போது அவித்தை கர்த்துருத்வாதி சகல வனர்த்தங்களையுஞ் செய்கின் றது; அங்ஙனமே அபேதமிருக்கும்போது காணப்படுதலின்.

அங்ஙனமாகத், தேகத்தோடு ஆத்மாவை தாதாத்மி யித்துச் சுவர்க்க நரகமார்க்கங்களில் எதனால் புருஷன் சஞ்சரிக் கின்றானோ அஃது அவித்தியா சப்தார்த்தமாம் பரமாம்; அதன் நிவிர்த்தியே பலவான்களா லெல்லாஞ் செய்யத் தக்க பலன்.

அங்஝னமே, "அவித்தியாநாசம் மோட்சம் அவித்தையே பந்தம்" என்று சொல்லப்பட் டிருக்கின்றது.

அதுவும் நாணலைப் பற்றுக்கோடாகப் பிடித்தலை யொக்கும்; ஆத்மாவின் யதார்த்தாநுபவத்தோடு கூடியுள்ள சம்சாரத்திற்கு ரூபரசம்போன்று விரோதமின்மையின் நிவிர்த்திய நிவர்த்தகத் தன்மை யின்மையின். சம்சாரத்தோடு கூடியிருக்கிற ஞானம் சம்சாரத்தைப் பாதிக்கவேண்டாம்; கூடியிராத ஞானமோ பிரகாசமானது தமசைப்பாதிப்பது போன்று பாதிக்கலாமேயெனின்,

இங்஝னங்கூறியது பயனற்ற வார்த்தையே; அகமநுபவத்தினும் வேறான ஆத்மஞானம் முஞ்சூறுவின் கொம்பை யொத்ததாம்.

பாமரர்களுக்கு அகமநுபவத்தினும் வேறான அநுபவமுண்டாகவேண்டாம்; வேதாந்தவாக்ய சமுதாய விசாரத்திலாசக்தி யுள்ள பண்டிதர்களுக் கவசியமுண்டாகலா மென்றுங் கூறற்க;வேதாந்த வாக்கியங்கட்கு அபாதிதமான அநுபவத்தோடு விரோதம் வருதலின் அவை "கற்கள் மிதக்கின்றன" என்னும் வாக்கியங்கட்குச் சமானமா யிருத்தலின்.

எண்ணிறந்த மறைகள் கூடினுங் கடத்தைப் படமென்று சொல்லுவதற்குச் சமர்த்தங்க ளாகமாட்டா. அத்தியயனவிதி விரோதமும் வாராது; குரு (பிரபாகரர்) மதத்தை யநுசரித்து "ஹும்பட்" என்றற்றொடக்கத்து வாக்கியம் போன்று ஜபமாத்திரத்தி லுபயோகப்படுவதால்.

ஆசாரிய (பட்ட பாதாசாரிய) மதத்தை யநுசரித்தாவது "யஜமானன் † பிரஸ்தரம்" என்றற் றொடக்கத்து வாக்கியம் போன்று ஸ்துதிசெய்வதினால் வேதாந்த சித்தாந்தத்திற்கு அர்த்தியயனத்தன்மை சம்பவிப்பதால்.

விவாதத்திற்கு விஷயமான பிரஹ்மம் விசாரியமாவதில்லை; பலமின்மையின்; காகதந்தம்போல் என்று அநுமானப் பிரயோகமு மிருக்கின்றது.

நானென்னும் ஞானத்தினால் ஆத்மா சித்தித்திருப்பதாலும், அந்த ஆத்மாவிற்கே பிரஹ்மத்தன்மையிருப்பதாலும்,

---

† பிரஸ்தரம் - தர்ப்பை முடிச்சு.

அதன் ஞானத்தினால் முந்தியிராமையாலும் விசாரமானது பொருந்தாதென்று ஆசாரியர்கள் கூறுகின்றனர்.

அபேதமாக அத்தியஸ்த தேகாதியின் நிவிர்த்தி பலமாகையால், பலமிராமையின் (விசாரிக்கத் தக்கதன்று) என்று கூறியஹேது அசித்தமென் றுணரற்க;

(அது) வியாபக நிவிர்த்தியால் வியாப்பியம் நிவிர்த்தியாகின்றதென்னும் நியாயத்தினால் பேதத்தைக் கிரகிக்காமைக்கு விரோதியான பேதசம்ஸ்காரத்தை யபேட்சிக்கின்றது; இரஜத சம்பந்தமற்ற சுத்தியில் இரஜத சமாரோபங் காணப்படாமையின் சம்ஸ்காரமும் பிரமையை யபேட்சிக்கின்றது; அநுபவிக்காத வஸ்துவின் சம்ஸ்கார முண்டாகாமையின்.

பிராந்திவடிவமான அநுபவம் அதற்கு (சம்ஸ்காரத்திற்கு)க் காரணமென்றுஞ் சொல்லுதல் கூடாது. பிராந்தியானது பிரமாபூர்வக மாகையால் ஓரிடத்திற் பிரமையை யவசிய மொப்புக்கொள்ளல்வேண்டும்.

விவாதத்திற்கு விஷயமான ஆத்மா னாத்மாக்கள் யதார்த்தமாக வேறாகக் கிரகிக்கப்பட்டிருக்கின்றன; அபேதத்திற்கு அயோக்கியமாயிருத்தலின்; தமப் பிரகாசம் போல்.

ஆத்மானாத்மாக்களின் அபேத அயோக்கியத்துவமான ஹேது அசித்தமென்று சங்கித்தல் கூடாது; விகற்பம் பொருந்தாமையின். அங்ஙனமன்றோ (1) அனாத்மா ஆத்ம † பரிசேடமா? அல்லது (2) ஆத்மா அனாத்ம பரிசேடமா?

(i.) முதலாவது பட்சத்தில் முத்திதசையிற் போன்று காணப்படுகிற ஜகத்து அஸ்தமனமாகவேண்டும்.

(ii.) இரண்டாவது பட்சத்தில் ஜகத்திற்குக் குருட்டுத்தன்மை (விளங்காமை) சம்பவிக்கும்.

தமப்பிரகாசம்போல் திருக்திருசியங்களான ஆத்மானாத்மாக்களுக்கு விருத்த சுபாவத்தன்மை யிருத்தலின் அபேத அயோக்கியத்தன்மை யுண்டென நிச்சயித்தல்வேண்டும்.

(3) ஆகையால், அர்த்தாத்தியாசம் பொருந்தாமலிருக்கும்போது அதைக்காரணமாகவுடைய ஞானாத்தியாசம் சம்பவியா

† பரிசேடம்-அடக்கம்.

மையால் பிரஹ்மத்திற்கு † விசாரியத்துவம் சம்பவியாது; ஆகை யால், விசாரவடிவமாகிய நான்கத்தியாயமுள்ள சாரீரகமீமாம் சையானது ஆரம்பிக்கத்தக்கதன்றென்பது பூர்வபட்சம்.

(4) இனிச் சித்தாந்தங் கூறப்படுகின்றது.

அகமநுபவத்தாலறியக்கூடியதினும் வேறாக ஆத்ம தத் துவ மில்லையென்று சொல்லுதல்கூடாது; சமஸ்தவுபாதியுமற்ற ஆத்மதத்துவம் சுருதிமுதலியவற்றிற் பிரசித்தமாயிருப்பதால்.

அந்த வேதங்களின் அர்த்தத்தை யுபசாரார்த்த மென் றும் சொல்லுதல் கூடாது; உபக்கிரம உபசங்காரமுதலிய சட்வித தாற்பரியலிங்கத்தோடுகூடித் தத்துவத்தைப் போதிக்கிற வேதாந் தங்கட்கு உபசாரார்த்தம் பொருந்தாமையின்.

"உபக்கிரமம், உபசம்மாரம், அப்பியாசம், அபூர்வ தை, பலம், அர்த்தவாதம், உபபத்தி என்னுமிவை தாற்பரிய நிர் ணயத்தில் ஹேது" என்று பூர்வாசாரியர்கள் கூறியிருக்கின்றனர். அவற்றுள்,

(i.) "பிரியதரிசனமுள்ளவனே! இந்த வுலகம் சிருஷ்டிக்கு முன்னர்ச் சத்தாகவேயிருந்தது" என்பது உபக்கிரமம்.

"இவ்வெல்லாம் ஆத்ம சொரூபம்; அது சத்தியம்; அஃது ஆத்மா; சுவேதகேதுவே! அது நீயாயிருக்கின்றாய் (தத்துவ மசி)" என்பது உபசம்மாரம்.

இவ்வுபக்கிரம உபசம்மாரங்கள் பிரஹ்ம விஷயமாகை யால் ஏகரூபமான ஒரேலிங்கம்.

(ii) அடிக்கடி அது நீயாயிருக்கின்றாய் என்று கூறுவது அப்பியாசம்.

(iii.) இதரப்ரமாணத்தா லறியப்படாம லிருக்குந் தன்மை அபூர்வதை.

(iv.) ஏகவிஞ்ஞானேந ஸர்வவிஞ்ஞானம் (ஒன்றை யறிந்ததினுல் எல்லாவற்றையுமறிதல்) பலம்.

(V.) சிருஷ்டி, ஸ்திதி, பிரளயம், பிரவேசம், நியமனம் என்னு மைந்தும் அர்த்தவாதம்.

(vi) மிருத்தாதி (மண்முதலிய) திருஷ்டாந்தங்கள் உபபத்தி.

† விசாரியத்துவம்-விசாரயோசகியத்தன்மை.

ஆகையால் இவ்விலிங்கங்களால் வேதாந்தங்களுக்கு நித்திய சுத்த, நித்தியபுத்த, நித்தியமுக்த சுபாவமான பிரஹ்மாத்ம பரத்வம் நிச்சயிக்கத்தக்கது.

ஆகையினால் இந்தப்பிரகாரம் உபநிஷத்தினு லறியக் கூடிய ஆத்மதத்துவம் அகமநுபவத்தில் பிரகாசிக்காததலால், பிரகாசிக்கிற ஆத்மதத்துவம் அத்தியஸ்தமான ஆத்மவிஷயமென்று சித்தித்தது.

கணாத கௌதமாதிகளால் அங்கிகரிக்கப்பட்டஆத்மாவிற்குப் பான (விளக்க) மிராமையின் அகமநுபவத்தை யத்தியஸ்தாத்ம விஷயமென் ருெப்புக்கொள்ளல் வேண்டும்.

அகமநுபவமானது ஆத்மாவின் † சர்வகதத் தன்மையைக் கிரகிக்கச் சமர்த்தமன்று; நானிவ் வீட்டிலறிந்துகொண் டிருக்கின் றேனென்னு மகமநுபவம் பரிசசின்னத்துவத்தைக் கிரகிப்பதால்.

இப் பரிச்சின்னத்துவம் தேகத்திற்குத் தோன்றுகின்றதென் றறிதல் கூடாது; நானென்னு மநுபவம் ‡ முண்டாதலின்.

எங்ஙனம், இராஜாவின் சர்வப் பிரயோசனத்தையுஞ் செய்யக்கூடிய சேவகனிடத்தில் (அவன்) "இப்பத்திரசேனன் என்னுடைய ஆத்மா" என்றுபசாரமாகச் சொல்லுவதுபோல் ஆத்மாவைக் கூறுகிற அகம்சப்தம் தேகத்தி லுபசாரமாகப் பிரயோகம் பண்ணப்பட் டிருக்கின்றதென்று கூறற்க; கௌணமாக ஆத்மபாவத்தையுடைய தேகாதிகளுக்குத் தேகசமானாகாரமான பிரதிமாதிகளுக்குப்போல் ஞாதுருத்துவம் பொருந்தாமையின்.

ஞாதுருத்துவமும் உபசாரமென்று சொல்லுதல் கூடாது; சப்தப்பிரயோகம் பண்ணுகின்றவனுடைய ஞானத்தைப பிரகாசம் பண்ணுகிற பிரயோகத்தில் ஞாதுருத்தன்மை யுபசாரமென்பது கூடாமையின்.

தேகதர்மமான பரிச்சின்னத்துவம் ஆத்மாவினிடத்தில் உபசாரமாகச் சொல்லப்படின் அப்போது தேகாத்மாக்களுக்குப் பேதமிருத்தல்வேண்டும்; பிரசித்த பேதமுடைய மாணுக்கனிடத்தில் சிம்மசப்தப்பிரயோகம் போல் ¶ சாம்பிரதிக கௌணத் தன்மையிலாவது, பேதப்பிரதீதியற்ற கடுகுமுதலிய ரசங்களில்

† சர்வகதத்தன்மை-விபுத்துவம். ‡ உண்டாகாததலின் என்றும் பாடமுண்டு. ¶ சாம்பிரதிக - அப்போதுள்ள.

தைலசப்தம்போல் * நிரூடகௌணத்தன்மையிலாவது கௌணத்திற்கும் முக்கியத்திற்கும் பேதநிச்சயமானது † நியதமாயிருப்பதால்.

என்னுடைய சரீரமென்று பேதந்தோன்றுவதால் கௌணத்துவ மிருக்கின்றதெனின்,

அது யுக்தமன்று; அகம்சப்தார்த்தத்திற்குத் தேகாதிகளினின்றும் விவேசனஞ் செய்து தேகத்திற்கும் ஆத்மாவிற்கும் சாதாரணதர்மத்தோடுகூடி விளக்கமிராமையின். இல்லாவிடின், லோகாயதமதம் உண்டாகாமலிருத்தல் வேண்டும்.

ஆனால், என்னுடைய சரீரமென்னும் பிரயோகமோ இராகுவினுடைய சிரசென்பதுபோல் உபசாரமாம்; என்னுடைய சரீரமென்று கூறுகின்றவனை நீயாரென்று வினவின், அவன் மார்பிற் கையைவைத்துக்கொண்டு கொம்பைப்பிடித்து மாட்டைக் காட்டுவதுபோல் இந்தநானென்று பிரதிவசனஞ் சொல்லுவதால் தேகத்தினிடத்தில் நானென்னும் ‡ பிரத்தியயம் சகலாநுபவசித்தமாயிருப்பதால்.

"தேகத்தினிடத்து ஆத்மஞானம் பிரமாணமாகக் கற்பிக்கப்பட்டது போலவே லௌகிகமான பிரத்தியட்சாதிகளும் ஆத்மஞானபரியந்தம் பிரமாணங்கள்" என்று கூறப்பட்டிருக்கின்றது.

ஆதலின், வியாபகமான பேதஞானம் நிவிர்த்தியாவதால் வியாப்பியமான கௌணத்துவம் நிவிர்த்தியாகின்றதென்பதில் யாதொரு தோஷமுமில்லை.

அபிஞ்ஞாரூபப பிரத்தியட்சத்தினால் ¶ பேதசித்தி வேண்டாம்; அந்த நானென்னும் பிரத்தியபிஞ்ஞையினாலேயோ பேதசித்தி யுண்டாகுமெனின்,

நீ சொன்னது சரியன்று; விகற்பத்தைச் சகிக்காமையின். இந்தப் பிரத்தியபிஞ்ஞை (1) பாமரர்களுக்குண்டாகின்றதா? (2) பண்டிதர்களுக் குண்டாகின்றதா ?

---

* நிரூட - எப்போதுமுள்ள. † நியதம்-சமவியாப்தி.

‡ பிரத்தியயம் - ஞானம்.

¶ பேதசித்தி வேண்டாம் - பேதநிச்சய முண்டாகவேண்டாம்.

(i) முதலாவதுபட்சங் கூடாது; தேகவெதிரிக்த(பின்ன)மான ஆத்மாவின் ஐக்கியத்தை விஷயமாக்கும் பிரத்திய பிஞ்ஞை யுண்டாகாமையின், இதற்குமாறாகக் காரண விசேடத்தினால் † சியாமவர்ண முடையதற்குச் செந்நிறம் சம்பவிப்பதுபோல் அற்ப பரிமாணமுடைய சரீரத்திற்கும் காரண விசேடத்தினால் மகத் பரிமாணத்துவம் அவிருத்தமென் றநுபவிப்பவர்களுக்கு அந்தச் சரீரத்திலேயே பிரத்தியபிஞ்ஞை சம்பவிக்கின்றமையின்.

(ii) இரண்டாவது பட்சமுங்கூடாது; ¶ வியவகாரகாலத்தில் பாமரசாதிருசியத்தை விடாமையாலும், பரோட்சப்பிராந்திக்குப் பரோட்சஞானத்தன்மை பொருந்தாமையாலும், "பசுவாதிகளோடு சமானம்" என்று பகவானாகிய பாஷியகாரர் கூறுவதாலும், "சாஸ்திரஞ்ஞர்கள் இங்ஙனம் விசாரிக்கின்றனர் ஞானிகளிங்ஙனம் விசாரிக்க மாட்டார்க" ளென்று பாமதிகாரர் கூறுவதாலு மென்க. ஆகையினால் ஆத்மகோசர ஞானத்திற்கு அத்தியாசத்தன்மை சித்தமாம்.

ஆருகதமதத்தை யநுசரித்து அகம் பிரத்தியபத்திற்குப் ‡ பிராமாண்யத்தை யொப்புக்கொள்ளுதற் பொருட்டு ஆத்மாவிற்குத் தேகபரிமாணம் அங்கிகரிக்கத் தக்கதென்று சொல்லுவது உசிதமன்று. மத்திமபரிமாணம் அவயவத்தோடு கூடியிருப்பதால் தேகாதிகளைப்போல் அநித்தியமாய்விடும்; ஆகவே, கிருதப்பிரநாசம் அகிர்தாப்பியாகமம் (செய்தவினை யழிந்து செய்யாதவினை தோன்றல்) என்னுந் தோஷம் சம்பவிக்கும்.

இத்தோஷபரிகார நிமித்தம் அவயவ சமுதாயம் ஆத்மாவென் றொப்புக்கொள்ளின், அப்போது (1) அவயவங்கட்குத் தனித்தனி சேதனத்துவமா? அல்லது (2) சமுதாயத்திற்கா? என்று அவனை வினவல் வேண்டும.

(i) முதலாவது பக்ஷங்கூடாது; நான்முந்தினவன் நான்முந்தினவனென்று பிரதான பாவத்தை யநுபவித்து வரும் அளவிறந்த சேதனங்கட்கு ஐக்கிய மதி (புத்தி) யிராமையின், ஒரே

† சியாமவர்ணம் - கருநிறம்

¶ வியவகாரகாலத்தில் பண்டிதர் பாமரருக்குச் சமானமா யிருத்தலின்.

‡ பிராமாண்யம் - பிரமையின் யதார்த்தத்தன்மை.

சமயத்தில் விருத்தமான தேசம் கிரியைமுதலியவற்றை யுடைத்தா யிருக்கின்றமையின் சரீரத்திற்கும் நாசமாவது கிரியையற்ற தன்மையாவது நேரிடுமாதலின்.

(ii) இரண்டாவது பட்சத்தில் சமுதாயத்திற்குச் சைதன்னியப் பிராப்தி i. சரீரோபாதிகமா? ii. சுவாபாவிகமா? iii. † யாத்ருச்சிகமா?

i. முதலாவதுபக்ஷங் கூடாது; ஓரவயவம் சின்னமாயிருக்கும் போது சிதாத்மாவிற்கும் அவயவம் சின்னமாய்விடும் என அசேதனத்துவம் வருமாதலின்.

ii. இரண்டாவது பட்சமுங் கூடாது; அநேக அவயவங்கட்கு ஒன்றற்கொன்று சாகித்திய நியமம் (சேர்ந்திருக்குந் தன்மை) காணப்படாமையின்.

iii. மூன்றாவது பட்சமுங்கூடாது;சம்யோகம்(கூட்டம்)போல் வியோகமு (பிரிவு)ம் யாத்ருச்சிக மாகையால் ‡ சுகத்தோடு போலச சத்தான அவயவங்கட்குக் காரணமின்றி அசேதனத்துவம் வருமாதலின்.

ஆத்மா அணுபரிமாண மென்று சங்கித்தல் கூடாது; பருத்திருக்கின்றேன், தீர்க்கமாயி (நீண்டி) ருக்கின்றேன் என்னும் பிரத்தியயம் பொருந்தாமற் போகுமாதலின்.

விஞ்ஞானத்தை ஆத்மாவென்று கூறுகின்றவர்கட்கு இது தோஷமன்று. பரிசுத்தமான அவயவ பிரமையின் மென்று சங்கித்தல் கூடாது;

எந்தநான் தூங்கினேனோ அந்தநான் விழித்துக்கொண்டிருக்கின்றேன் என்று * ஸ்திரகோசரமான அநுபாதமாத்திற்கு க்ஷணபங்கி விஞ்ஞானத்தைக் கோசரமாக வங்கீகரித்துப் பிடித்து அஃதின்மையின்கணஃதுண்மையின் ப்ரத்திவடிவ பிரத்தியாத்தி யாசம் முன்போலிருப்பதால்.

† யாத்ருச்சிகமா-யதேச்சையா (இஷ்டப்படியா).

‡ சுகமாக வசிக்கப்பட்ட அவயவங்கட்கு [illegible].

* ஸ்திர - ஸ்திரமான [illegible].

ஆதலின், இளைத்திருக்கின்றேன் கருத்திருக்கின்றேன் என்றற்றொடக்கத்து ஞானங்கட்குப் புத்தியோடு சாரூப்பியத்தைச் சொல்லுவதால் ஔபசாரிகமென்பதுந் தள்ளப்பட்டது.

† கௌணத்துவ வியாபகமான பேத ஞானம் சம்பவிக்க மாட்டாதென்பது முன்னரே விஸ்தாரமாகச் சொல்லப் பட்டது.

(5) சந்தேகத்திற்கு விஷயமான சாஸ்திரம் விஷயப் பிரயோசனத்துடன் கூடியது; அவித்தையாலுண்டான பந்த நிவிர்த்தி யுண்டாவதால்; தூங்கி விழித்தவனுடைய ஞானம் போல்.

எங்ஙனம் சொப்பனவஸ்தையில் மாயையினாற் கற்பிக் கப்பட்ட ஸ்திரீ முதலியவற்றா லுண்டான பந்த நிவிர்த்தியை யுண்டுபண்ணுகிற வுறங்கிவிழித்தவனுடைய போதத்திற்குக் கிருகமத்தியில் சுகமாய்ச் சயனத்தி லிருக்கிற தேகம் விஷயம்; அந்த விஷயத்திற்குத் தூங்குகின்றவனுடைய போதத்தினால் நிச்சயமின்மையின் (அந்தச் சாக்கிரஞானத்திற்குச்) சொப்பன மாயையினால் விர்த்தியடைந்த அனர்த்த நிவிர்த்தி பிரயோசனம்; அங்ஙனமே, மனோநிஜன்னிய பரோட்சஞான வாயிலாக அத்தியாசத்தினாலுண்டான கர்த்திருத்துவ போக்திருத்துவ முதலிய அனர்த்தங்களை நிஷேதிக்கின்ற சாஸ்திரத்திற்குச் சச்சிதானந்தைகரசமாயும் பிரத்தியகாத்ம வடிவமாயுமுள்ள பிரஹ்மம் விஷயம்; அந்தப் பிரஹ்மத்திற்கு அகமநுபவத்தினால் நிச்சயமின்மையின். (சாஸ்திரத்திற்கு) அத்தியாச நிவிர்த்தி பிரயோசனம். ஆகையினால், சாஸ்திரம் ஆரம்பித்தல் கூடாதென்பதற்கு ஹேதுவாகக் காட்டிய அபலத்துவம் அசித்தமாம்.

"சுருதியினாலறியக்கூடிய ஆத்மதத்துவமோ அகமநுபவத்தா லறியக்கூடிய தன்று" என்று சொல்லப்பட்டிருக்கிறது.

சந்தேக மிராமையின் ஆத்மா விசாரிக்கத்தக்க தன்றென்று கூறிய ஹேதுவுஞ் அசித்தமென்று சித்தித்தது.

218. சகலஜீவர்களும் நானிருக்கின்றேனென்று பிரத்தியகாத்மாவினுடைய அஸ்தித்துவத்தை யறிகின்றன ராயினும் ஒருவனும் நானில்லையென்று சந்தேகத்தை யடைகின்றதில்லை. அது

† கௌணத்துவம் - குணத்தன்மை.

நீயாயிருக்கிறாய் என்று † சாமாநாதிகரண்யமிருப்பதால்; பிரத்திய காத்மாவே பிரஹ்ம மென்பதால் ஆகையால் ஆத்ம தத்துவம் அசந்திக்தமென்று சித்திக்கின்றது. ஆயினும், “தர்மத்தைக்குறித்துச் சந்தேகப்பட்டவர் பலர்” என்னும் நியாயத்தினால் விசேஷ ஞானம் அவசியம் பொருந்தும்.

அங்ஙனமன்றோ, சைதன்னியத்தோடு கூடிய தேகம் ஆத்மாவென்று லோகாயதர்களும், இந்திரியங்களே ஆத்மா வென்று சிலரும், அந்தக்கரணம் ஆத்மா வென்று சிலரும், க்ஷண பங்குரமாய்ப் பரம்பரையா யிருக்கும் விஞ்ஞானம் ஆத்மாவென்று பௌத்தர்களும், தேகபரிணாமம் ஆத்மாவென்று ‡ ஜினர்களும், கர்த்திருத்துவமுதலிய தர்மங்களோடு கூடியதாயும் பரமேசுவரனிலும் பின்னமாயும் ஜீவாத்மா விருக்கின்றதென்று நையாயிகர் முதலாயினோரும், திரவியபோத சுபாவம் ஆத்மா வென்று(பட்ட) ஆசாரியர்களும், ஆத்மா போக்தாவன்றிக் கர்த்தாவன்றென்று சாங்கியர்களும், சித்ரூபன் கர்த்ருத்வாதி தர்மமற்றவன் பரமாத்மாவோடபின்னன் பிரத்தியகாத்மாவென்று வேதாந்திகளுங் கூறுகின்றனர்.

219. இங்ஙனம் பிரசித்தமான தர்மியினிடத்தில் விசேஷமான விப்பிரதிபத்தி(விவாதம்)வரும்போது அதன் விசேஷ சம்சயம் சம்பவிக்கும். இங்ஙனமாகச் சந்தேகஞ் சம்பவிப்பதால் பிரஹ்மத்திற்கு விசாரியத்துவம் சித்தம். ஆகையால், பிரஹ்மத்திற்கு விசாரியத்துவம் சம்பவிப்பதால் பிரஹ்ம விசாரவடிவமான பிரஹ்மமீமாம்சா சாஸ்திரம் ஆரம்பிக்கத் தக்கதென்பது யுக்தம்.

“எதனிடத்தினின்றும் இவ்வுலகத்தின் பிறப்பு நிதி பிரளயங்க ளுண்டாயின” என்றதற்கொடக்கத்துச் சர்வசாஸ்திரத்திற்கும் இதன் விசாராபேக்ஷைத் தன்மை யுண்மையால் இந்த அதிகரணம் (பிரஹ்மமீமாம்சா) சாஸ்திரத்தின் முதலத்தியாய சம்பந்தம்.

இப்படிப்பட்ட பிரஹ்ம மிருப்பதில் யாது பிரமாணம்?

(1) பிரத்தியட்சமா? (2) அநுமானமா? (3) ஆகமமா?

(i) பிரஹ்மத்தினிடத்தில் பிரத்தியட்சம் ஒருகாலும் பிரவிர்த்திக்க மாட்டாது; அதீந்திரியமாகையால்.

† [illegible]

‡ ஜினர் - ஜைனர்.

(ii) அநுமானமும் பிரவிர்த்திக்கமாட்டாது; வியாப்தியுடன் கூடிய லிங்கமிராமையின்.

(iii) ஆகமமும் பிரவிர்த்திக்க மாட்டாது; "எதனிடத்தினின்றும் வாக்குகள் நிவிர்த்தி யடைகின்றனவோ" என்னுஞ் சுருதியே வேதத்தா லறியக்கூடிய தன்மையை நிஷேதித்திருப்பதால்.

உவமானாதிகள் பிரவிர்த்திக்குமோ வென்னுமாசங்கைக்கே யிடனின்று; நியதமான விஷயத்தை யுடைத்தாயிருக்குந் தன்மையால்.

ஆகையால், பிரஹ்ம விஷயத்திற் பிரமாணம் சம்பவிக்கமாட்டா தெனின்,

அங்ஙனம் கூறற்க; பிரத்தியட்சாதிகள் சம்பவியாவிடினும் ஆகமம் (பிரமாணமாக) இருப்பதால்.

'எதனிடத்தினின்றும் வாக்குகள் நிவிர்த்தியடைகின்றனவோ' என்னும் சுருதி வாக்கிற்கு விஷயமாயிருக்குந் தன்மையை நிஷேதித்திருப்பதால் ஆகமம் எங்ஙனம் பிரமாண மாதல் பொருந்து மெனின்,

அங்ஙனமன்று; ‡ பிரஹ்மத்திற்கு வேதாந்த வேத்தியத்துவம் சுருதியே நிஷேதிக்கின்றது; சுருதியே விதிக்கின்றது.

வைதிகர்களுடைய புத்தி வேதத்தினாற் பிரதிபாதிதமான அர்த்தம் பொருந்தாமையின் வருத்தத்தை யடைவதில்லை; ஆனால், அது பொருந்துகின்ற மார்க்கத்தையே விசாரிக்கின்றது. ஆதலின் இரண்டும் பிரதிபாதிக்கத் தக்கனவாம்.

பிரஹ்மம் வேதத்திற்கு விஷயமன்றென்னும் நிஷேத வாக்கியங்கள் வாக்கியத்தினா லுண்டான விர்த்தியிற் பிரகாசமான ஸ்புரணவடிவமான பலம் சம்பவிக்கமாட்டா தென்னுங் கருத்தினால் பிரவிர்த்தித்தன.

விஷயபோதகமான வாக்கியங்களோ விர்த்தி ஜன்னிய ஆவரண பங்கவடிவமான பலம் சம்பவிக்குமென்னுங் கருத்தினாற் பிரவிர்த்தித்தன. "பிரஹ்மம் (ஜன்னியமான) பலமன்றி யிருப்பதால் வேதத்திற்கு விஷயமன்று; ஆத்மாகாரத்தைக் கொடுப்பதால் ஞானத்தில் பிரமேயமாய் விடுகின்றது" என்றும்,

‡ பிரஹ்மம் ஒன்றினாலும் அறியத்தக்கதன் றென்பது நிஷேதமும் வேதத்தா லறியக்கூடிய தென்பது விதியுமாம்.

"பிரஹ்மம் பிரமாணத்தாற் பிரகாசியமன்று; பிரஹ்மம் சுயம்பிரகாசமாயிருக்கின்றது. (வேதாந்த ஜன்னிய)விர்த்தியினால் ஆவரண பங்கமுண்டாவதால் பிரஹ்மம் பிரமேயமென்று சொல்லப்படுகின்றது" என்றும் பகவான்களாற் கூறப்பட் டிருக்கின்றன.

சித்தமான அர்த்தத்தில் வேதத்திற்குப் பிராமாண்யம் சித்தித்ததாயின், அப்போது (உன்னுடைய) மனோரதம் சித்திக்கும்.

பிராமாண்ய நிச்சயம் சங்கதி (சக்தியின்) ஞானாதீனமாயிருப்பதால் (அது சித்திக்காது). சங்கதிக் கிரகணமும் விருத்த வியவகாராதீனமா யிருக்கின்றது; விருத்தவியவகாரமும் உலகத்தில் கிரியையிலேயே நியதமா யிருக்கின்றது.

சப்தங்கட்குக் கிரியாவடிவமான அர்த்தத்தில் சங்கதி ஞானமாவது, சித்தார்த்தத்தைக் கூறுந் தன்மையாவது, அதிற் பிராமாண்யமாவது சம்பவிப்பதில்லை.

அசுவத்தன்மையில் கிரகிக்கப்பட்ட சக்தியையுடைய அசுவபதம் கோத்துவத்தையுங் கூறமாட்டாது; அதிற் பிராமாண்யத்தையு மடையமாட்டாது. ஆகையினால், கிரியையிற் கிரகிக்கப்பட்ட சக்தியை யுடைய சப்தங்கட்குக் கிரியையிலேயே பிராமாண்யமாம்.

முகவிகாச முதலிய லிங்கத்தி(குறியி)னால் சந்தோஷத்திற்கேதுவான பிரசித்தமான அர்த்தத்தை அநுமானஞ் செய்து எவ்விடத்திற் சப்தத்திற்கு சங்கதி ஞானம் ஏற்படுகின்றதோ அவ்விடத்திற் கிரியையன்றியே அவசியம் சப்தத்திற்குச் சித்தமான அர்த்தத்திற் பிராமாண்யம் ஒப்புக்கொள்ளப் படுகின்றது; "உனக்கு மகன் பிறந்தான்" என்றற் றொடக்கத்திடங்கள் போலும் எனின்,

நீ கூறிய துசிதமன்று; புத்திரனுடைய ஜன்மம்போன்று சந்தோஷத்திற் கேதுவான பத்தினியினுடைய சுகப் பிரசவாதிகளாய பலவிஷயங்கள் ஸ்மரிக்கப்படுவதால் பரிசேட நிச்சயம் பொருந்தாமையாலும், உனக்கு மகன்பிறந்தான் என்றற் றொடக்கத்துச் சித்தார்த்த பரமான பிரயோகங்களில் "துவாரம் துவாரம்" என்றற் றொடக்கத்திடங்களிற் போன்று காரியத்தை யத்தியாகாரஞ் செய்வதால் பிரயோகம் பொருந்துவதாலும் என்க.

வேதாந்தங்களுக்குச் சாஸ்திரத்துவப் பிரசித்தியின்னும் சித்தார்த்த பரத்துவ போதகத் தன்மையின்று; பிரவிர்த்தி நிவிர்த்திபரமான வாக்கியங்களுக்கே சாஸ்திர மென்னும் பிரசித்தி யிருப்பதால்.

"எதனால் புருஷனுக்கு நித்தியமான வாக்கியத்தாலாவது கற்பித வாக்கியத்தாலாவது பிரவிர்த்தியாவது நிவிர்த்தியாவது போதிக்கப்படுகின்றதோ அது சாஸ்திர மெனப்படும்" என்று பட்டாசாரியாரால் கூறப்பட்டிருக்கின்றது. இவ்வாக்கியங்கள் சொரூபபரமென்று கூறுவதிற் பிரயோசன மின்று; வேதாந்த சிரவணம்பண்ணின புருடனுக்கும் சாம்சாரிக தர்மங்களின் நிவிர்த்தி யாகாமையின். ஆகையினால், ஆத்மா அறியத்தக்க தென்று சொன்ன விதியுடன் வேதாந்தங்களை யேகவாக்கியமாகச் செய்து காரியபரமென் றங்கீகரிக்கத்தக்க தென்பது சித்தித்தது.

தலின், கேவல சித்தவடிவமான பிரஹ்மத்தி னிடத்தில் வேதாந்தங்கட்குப் பிராமாண்யம் சித்திக்கமாட்டா தெனின்,

இதற்குச் சமாதானஞ் சொல்லப்படுகின்றது.

சித்தமான அர்த்தத்தில் சக்தி சித்திக்கமாட்டாதென்பதில்லை; முன்சொன்ன நியாயத்தினால் சித்தபரமான உனக்கு மகன் பிறந்தானென்னும் வாக்கியத்தினாலும் சக்தி ஞானம் சித்திப்பதால்.

பரிசேஷ நிச்சயம் பொருந்தாது. பத்தினியின் சுகப் பிரசவ முதலியவற்றாலும் சம்பவிப்பதா லென்றுஞ் சொல்லற்க; புத்திரனுடைய பாதத்தினால் அடையாளஞ் செய்யப்பட்ட வஸ்திர தரிசனம்போல் நாயகியின் சுகப் பிரசவாதிகட்குச் சூசக அடையாளமிராமையின்.

புத்திரனுடைய ஜன்மமே அச் சுகப்பிரசவத்திற்குச் சூசகமென்று கூறின், முதற்றோன்றிய புத்திர ஜன்மத்திற்குப் பரித்தியாகம் பண்ணுவதிற் காரணமிராமையாலும் புத்திர ஜனனமே அதிக ஆனந்தத்திற் கேதுவாயிருப்பதாலு மங்ஙனங்கூறற்க.

"சுகதுக்கங்கட்குக் காரணம் புத்திர ஜன்மம் புத்திர நாசம் என்னு மிவற்றைவிட வேறில்லை" என்பது பிரசித்தம்.

"குழந்தையின் பாதங்களாற் குறிப்பிக்கப்பட்ட வஸ்திரத்தினாலேனும் தூதனது வசனத்தினாலேனும் காணப் பட்ட

சைத்திரனுடைய சுக வுற்பத்தியி னின்றும் புத்திர ஜன்மத்திற் குப் பரிசேஷ நிச்சய மிருத்தலின்" என்று சிற்சுகாசாரியர் கூறி யிருக்கின்றார்.

சித்தமான அர்த்தம் முக்கியார்த்த விஷயமாகையால், பிரயோகம் சித்திக்கவேண்டிய விஷயத்தில் அத்தியாகாரம் பொருந்தாது. (வேதாந்தம்) சாஸ்திரமென்னும் பிரசித்தியிருப்பதா லும் சொரூப பரமன்று (சொரூபத்திற் றாற்பரிய முடையதன்று) என்று பூர்வபட்சி கூறியதூம் அயுக்தம்; இதத்தைச் சொல்லுவ தாலும் அதற்குச் சாஸ்திரத்தன்மை பொருந்துகின்றமையின்.

பிரயோசன மில்லை யென்றுஞ் சொல்லுதல் கூடாது; வேதாந்த சிரவண மநநங்களா லுண்டான அத்விதீயமான ஆத்ம விஞ்ஞானப்பி யாசத்தினால் வித்தை (அகண்டாகார சாட்சாத் காரம்) உண்டாகும் போது சம்சாரத்திற் காதிகாரணமான அவித் தியாநிவிர்த்தி யுபலட்சிதமான பிரஹ்மாத்ம சொரூபமாய பரம புருஷார்த்தம் சித்திப்பதால்.

இதில் (பிரஹ்ம ஞானத்தில்) விதியும் சம்பவிக்கமாட் டாது; விகற்பம் பொருந்தாமையின். அங்ஙனமன்றே, (1) சாப்த ஞானமா விதிக்கத் தக்கது? அல்லது (2) பாவனா (தியானவடிவ) ஞானமா? (3) அல்லது சாட்சாத்காரவடிவ ஞானமா?

(i) முதலாவது பட்சங் கூடாது; பதபதார்த்த சம்பந்தத்தை யறிந்தவனும் சப்தசாஸ்திர நியாயசாஸ்திரங்களை யப்பியாசம் பண்ணினவனுமாகிய புருடனுக்கு விதியன்றியும் சப்தத்தாலே யே (ஞானம்) பொருந்துகின்றமையின்.

(ii) இரண்டாவது பட்சமுங் கூடாது; பாவனையானது ஞான † தாருட்டியத்திற்கு ஹேதுவென்பது அந்வய வியதிரேக சித் தப்பிராப்தமாயிருப்பதால் ‡ விதேயமன்று; அடையாததை யடை விப்பதற்கே விதித்தன்மை யங்கிகரிக்கப்பட்டிருத்தலின்.

(iii) மூன்றாவது பக்ஷத்தில் சாட்சாத்காரம் (1) பிரஹ்மசொ ரூபமா? அல்லது (2) அந்தக்கரண பரிணாமபேதமா?

(i) முதலாவது பட்சங் கூடாது; பிரஹ்மசொரூபம் நித்திய மாகையால் விதேயமன்று.

---

† தாருட்டியம்—திடத்தன்மை. ‡ விதேயம்—விதிக்கத்தக்கது.

(ii) இரண்டாவது பட்சமுங் கூடாது; ஆனந்த சாட்சாத்காரவடிவ மாகையால் பலமாயிருக்கின்றது; ஆதலின் விதேயமன்று.

ஆகையால், "அறியத்தக்கது" என்றற் றொடக்கத்துப் பதங்கள் விதிக்கு விஷய மாகாமையின், "அருகார்த்தத்தில் கிருத்ய திருச் பிரத்தியயங்கள் வரும்" என்று கிருத்ய பிரத்தியயங்கட்கு அருகார்த்தத்தில் விதியிருப்பதால் அருகார்த்தமாகவே வியாக்கியானஞ் செய்யத்தக்கதாம்.

(வேதாந்தங்கள்) உபக்கிரம உபசம்மார முதலிய சட்வித தாற்பரிய லிங்கங்களோடுகூடி யிருப்பதால் நித்திய சுத்த புத்த முக்த சுபாவப்பிரஹ்மாத்ம பரமென் றங்கீகரித்தல்வேண்டும். ஆகவே, பிரதேச (அவயவ) மற்ற பரமாணுவில் ஒரு பிரதேசத்தி லிருப்பதாக வங்கீகரிக்கப்பட்ட சம்யோகத்தை நிரூபிக்க முடியாமையின் அந்தச் சம்யோகத்தினு லேற்படுந் துவியணுகஞ் சித்திக்க வில்லை. அது சித்திக்கா திருக்கும் போது துவியணுகாதிக் கிரமமாக ஆரம்ப வாதம் சம்பவியாமையாலும், அசேதனமான பிரகிருதிக்கு மகதாதி ரூபமாய்ப் பரிணமம் சம்பவியாமையாலும் பரிணாமவாதம் சம்பவிக்க வில்லை.

(உலகத்) * கியாதியின் பாதம் பொருந்தாமையின் பிரபஞ்சம் சித்தின் விவர்த்தம் அநிர்வசநீய மென்று சித்தித்தது.

¶ சொரூபத்தை விடாது ரூபாந்தரத்தை (வேறு வடிவத்தை) யடைவது விவர்த்த மென்றும், சத்திய மித்தியாக்கியாவபாசம் (சத்திய வஸ்துவும் மித்தியா வஸ்துவும் கலந்து தோன்றுதல்) அதன் அத்தியந்தா பாவத்திலென்றும், அதன் அவபாசம் அத்தியாச மென்றும் பரியாயங்களாம்.

அவ்வத்தியாசம் அர்த்தாத்தியாசம் ஞானாத்தியாசமென் றிருவகைத்தாம்.

"பிரமாணதோஷம் சம்ஸ்காரம் என்னு மிவற்றாலுண்டான † அந்நியத்திற்கு ‡ அந்நிய ரூபத்துவமும் அதன் ஞான

* கியாதி - பிரதீதி (தோற்றம்).

¶ வடிவத்தைவிடாது வேறு வடிவத்தை யடைவது விவர்த்தம். சத்ய மித்யாக்யாவபாசமும், அபேதின்மையின்கண் அது தோற்றலும் அத்தியாச பரியாயமென்று தோற்றுகிறது

† கயிறு. ‡ பாம்பு

மும் என இருவகை அத்தியாசம் என்று வித்வான்களால் விரும்பப்பட் டிருக்கிறது" என்று கூறப்பட் டிருக்கின்றது.

மீண்டும், நிருபாதிகம் சோபாதிக மென்று அத்தியாசம் இருவகைத்து.

(i) தோஷத்தாலுங் கர்மத்தாலும் கலக்க மடைந்த அஞ்ஞானத்தி னுண்டாகியும் தத்துவஞான விரோதியாயும் இருக்கின்ற இந்தப்பிரமம் (பிராந்தி) நிருபாதிகம் என்றும்,

(ii) "உபாதி சந்நிதியினுற் பிராப்தமா (பெறப்பட்டதா)யும் கலக்கமடைந்த அவித்தையினுல் விர்த்தி யடைந்தும் உபாதி நிவிர்த்தியால் நிவிர்த்தி யடையக் கூடியதுமான பிரமம் சோபாதிகம்" என்றுஞ் சொல்லப்பட் டிருக்கின்றன.

அவற்றுள், சொரூபமாகக் கற்பிக்கப்பட்ட அகமாதி அத்தியாசம் நிருபாதிகம்.

"பிரஹ்மத்தி னிடத்திற் பிராந்தியா னுண்டான சம்சாரமானது நீலவர்ண முடைய (பிரஹ்மத்தைக் களங்க முடைய)தாகச் செய்கின்றது. இது போக்தாவாக விருந்து கடாகாசம் போன்று பேதத்தினுற் பிராந்தியுடையதா யிருக்கின்றது; சுபாவத்தினு லில்லை" என்றுஞ் சொல்லப்பட் டிருக்கின்றது.

ஆகையினுற்றான், பாஷியகாரர் சுத்தி இரஜதம்போற் ரேன்றுகின்றது, ஒரு சந்திரன் இரண்டு சந்திரன்போற்ரேன்றுகின்றுனென்று இரண்டு திருஷ்டாந்தத்தை யுதாகரித் திருக்கின்றூர்.

மற்றைய வெல்லாம் ‡ சாஸ்திரத்திலேயே ஸ்பஷ்டமாயிருக்கின்றன; விஸ்தாரமாகு மென்னும் பயத்தினு லிங்கெழுதப் படவில்லை.

220. திருக் திருச்சியங்கள் இரண்டே பதார்த்தங்க ளென்பது வேதாந்திகளுடைய சித்தாந்தம் என எல்லாம் சுத்தம்.

ஈண்டுப் பிராபாகரன் ஆக்ஷேபிக் கின்றுன்:—சுத்தி வெள்ளிபோற் ரேன்றுகின்றதென்னுந் திருஷ்டாந்தம் சரியன்று; இரஜதஞானத்திற்குச் * சுத்தியாலம்பனத்துவம் பொருந்தாதாதலின். அங்ஙனமன்றே, இஃதிரஜதம் என்னும் ஞானத்தில் சுத்திக்கு ஆலம்பனத்துவம் (1) புரோதேசத்தி (எதிரி)லிருப்பதினுல்

‡ உத்தரமீமாம்சையில். * ஆலம்பனத்துவம் - கிளிஞ்சலின் ரேற்றம்.

மாத்திரம் ¶ அவலம்பிக்கப் படுகின்றதா? அல்லது (2) காரணமா யிருப்பதினு லவலம்பிக்கப் படுகின்றதா? அல்லது (3) தோன்று வதா லவலம்பிக்கப் படுகின்றதா?

(i) முதலாவது பக்ஷங் கூடாது; புரோவர்த்தி (முன்னிருக்கின்ற) லோஷ்டாதிகளுக் (ஓடுமுதலியவற்றிற்) கும் ஆலம்பனத் துவம் வருமாகையால்.

(ii) வெள்ளியென்று போதிக்கிற கரண சம்ஸ்காரத்தின் உத்போதகத்துவம் (வெளிப்படுத்துந்தன்மை)யிருப்பதால் அதன் வாயிலாக இரஜதஞான காரணத்தன்மை யிருப்பதால் ஆலம் பனத்துவ மிருக்கின்றதென் றெண்ணுவதுஞ் சரியன்று; சட்சு ராதிகளும் காரணமாகையால் விஷயத்துவம் வருமாகையால்.

(iii) தோன்றுவதால் விஷயத்துவம் சொல்லப்படுகின்றதென் பதுஞ் சரியன்று; இரஜத ஞானத்திற்குச் சுத்திகாலம்பனத்துவம் பொருந்தாதாகையால்.

எந்த ஞானத்தில் எது தோன்றுகிறதோ அஃது அதற்கு ஆலம்பனமாம். இவ்விடத் துண்டானது இரஜதானுப வம்; அதற்குச் சுத்திகாலம்பனத்தைக் கற்பிக்கில் விரோதம் சம் பவிக்கின்றது.

"எந்த அர்த்தம் எந்தஞானத்திற் றோன்றுகின்றதோ அதுவே $ வேத்தியம்; மற்றதன்று † வேத்தியா வேத்தியத் துவ லட்சணம்".

"இஃது இரஜதம் என்னுமிடத்து இரஜதந் தோன்று கின்றது; அதுவே அந்த ஞானத்தினுல் வேத்தியமாகின்ற தன் றிச் சுத்தியன்று; சுத்தி விஷய ஞான மிராமையின்."

"யாதொரு காரணத்தினுல் ஒன்று தோன்றும் போது மற்றொன்று தோன்றுகின்றதில்லையோ அக்காரணத்தினுல் ஒன்று மற்றொன்றுகத் தோற்றுவது பிரதீதியினுலேயே தள்ளப்பட் டது" என்று நியாயவீதி என்னுங் கிரந்தத்திற் சாரிகாநாதர் றியிருக்கின்றனர்.

---

¶ அவலம்பிக்கப்படுதல் - விஷயமாதல்.

$ வேதன (ஞான) த்தா லறியப்படுவது வேத்தியம் (விஷயம்).

† வேத்தியம் அவேத்தியம்,

மேலும், மித்தியாஞான முண்டாவதில் சாமக்கிரி நன்றாக விருக்கவில்லை; (மித்தியா ஞானோற்பத்தியில்) (1) கேவலம் இந்திரியங்கள் காரணமா? அல்லது (2) தோஷசகித இந்திரியங்கள் காரணமா?

(i) முதலாவது பட்சங் கூடாது; இந்திரியங்கட்கு நல்ல (யதார்த்த) ஞானத்தை யுண்டுபண்ணுவதிற் சாமர்த்தியங் கண்டிருப்பதால். இல்லாவிடின், யதார்த்தமான இரஜதஞானம் ஒருகாலு முண்டாகாமற்போம்.

(ii) இரண்டாவது பட்சமுங் கூடாது; தோஷங்கட்குக் காரணத்திற் சுபாவ சித்தமான காரிய ஜனனசக்தியைப் பிரதிபந்திப்பதில் மாத்திரம் சாமர்த்திய மிருப்பதால்.

தோஷமுள்ள கொடிமுந்திரிகையின் பீஜமானது வடவிருட்சத்தை யுண்டுபண்ணச் சமர்த்தமன்று.

தைலத்நாற் றோஷமடைந்த சாலிபீஜம் (விதைநெல்) † அசாலியங்குரங்களை யுண்டு பண்ணச் சமர்த்த மாகாது; ஆனால் தன் காரியத்தை யுண்டுபண்ணாது.

காட்டுத்தீயினால் தக்தமான வேத்ர (பிரம்பு) பீஜம் கதலிகாண்ட (வாழைமர) ஜனகமாகக் காணப்படுகின்றதெனின், அதுசரியன்று; தக்தமான வஸ்து வேத்ர பீஜமன்று. ஆதலின் தோஷங்கள் விபரீதகாரியத்தை யுண்டு பண்ணுகின்றன வென்பதற்குத் திருஷ்டாந்தமாகாது.

பஸ்மக தோஷத்தோடுகூடிய ஜாடராக்கினிக்குப் பகுவன்ன பாகசாமர்த்தியம் காணப்பட்டிருக்கின்றதென்றொப்புக்கொள்ளுதல் கூடாது; அன்னபானாதி ஆகாரங்களின் பாகத்தில் ஜாடராக்கினிக்குச் சாமர்த்திய மிருப்பதால்.

" வேறுவிதமான அர்த்தத்தின் போதத்தினுடைய உற்பத்தியிற் காரணமில்லை; தோஷங்கள் காரணமென்றால் அற்றன்று; தோஷங்கட்குக் காரியசக்தி விகாதத்தன்மை யுண்மையின்.

" பஸ்மகாதிகளிடத்தில்காரியத்தைவிகாதஞ்செய்வதாலேயே தோஷத்தன்மை யிருக்கின்றது. ஜாடராக்கினிக்குஇரசத்தை யுண்டுபண்ணுவது காரியம்" என்று சொல்லப்பட்டிருக்கின்றது.

---

† அசாலி - கோதுமைமுதலியன.

மேலும், அர்த்தமிராதுள்ளபோதும் ஞானமுண்டா கின்றதாக வொப்புக் கொண்டால் அர்த்த மிருக்கின்ற விடத் திலும் ஞானங்கட்குத் தமக்கு விஷய வியபிசார சங்கையாகிய வங்குரஞ் சம்பவிப்பதால் நிரங்குச (தடையில்லாத) வியவகாரம் லோபத்தை யடையும் (கெடும்)".

"புத்தியானது ஒருகால் அர்த்தத்தை விட்டுப் பிரகாசித் தமே யாயின் வியபிசாரத்தோடு கூடிய தன்னர்த்தத்தில் அஃ தெங்ஙனம் விசுவாச காரணமாம்?" என்று கூறியிருக்கின்றனர்.

இரஜத † விஷயகமாயும் ஏகமாயும் விசிட்டமாயுமுள்ள ஞானத்தை யொப்புக்கொள்ளாவிடின் (இஃது இரஜதம் என்னும்) விசிட்ட வியவகாரஞ் சித்திக்கமாட்டாது. ஆகையால், அது சித் திக்கும் பொருட்டும் பிரமம் (பிராந்தி) ஒப்புக்கொள்ளத் தக்க தென்று கூறின் அது சரியன்று; இது வெள்ளியென்னும் கிர ஹண ஸ்மரணமென்னும் பெயருடைய போதத் துவயத்திற்கு வியவகார காரணத்துவம் அங்கீகரித் திருப்பதால்.

அங்ஙனமாயின், இது சுத்தியின் கண்டம்; அது வெள்ளி யென்னும் ஞானத்தினாலும் விசிட்ட வியவகார முண்டாகு மெனின்,

அதுவும் சரியன்று; ஆண்டு இஃதென்று முன்னிருக் கின்ற திரவியமாத்திர ஞானம் தோஷசகித சட்சு ஜன்னியமாகை யால் சுத்தித் தன்மையின் சம்பந்தமற்ற சாமானியக் கிரஹண வடிவமா யிருக்கின்றது;

இரஜத மென்னும் ஞானம் சன்னிகிதத்தை (சமீபத் தை) விஷயமாக்கியும் அதிஷ்டான சாமானிய ஞானத்தினா லுண் டாகியும் சாதிருசியத்தாற் ¶ போதிக்கப்பட்ட சம்ஸ்கார மாத்தி ரத்தா லுண்டாகியு மிருப்பதால்.

பரிசேடத்தாற் ஸ்மிருதி ரூபமாயிருக்கின்றது; இது தோஷத்தினா லுண்டாயிருப்பதால் கிரகிக்கப்பட்ட அந்தந்த அம்சத்திற்கு ‡ நிவிர்த்தி யுண்டாயிருப்பதால் அந்தஞானத்திற் குக் கிரஹணமாத்திரத் தன்மை பொருந்துவதால்.

---

† விஷயகம் - விஷயத்தை யுடையது.

¶ போதிக்கப்பட்ட - உத்போதகத்தையடைந்த.

‡ அம்சம் - சுத்திவெள்ளி.

"இவ்விடத்தி விரஜதத் தோற்றம் எங்ஙனம் பொருந்தும்? பேதமன்றிச் சுத்தி கிரகிக்கப்படுகின்றது. இரஜதபேத ஹேதுக்களான சுத்தியின் விசேடங்கள் எவையோ அவை யறியப்படவில்லை. அந்த ஹேதுக்க ளறியப் படாமையின் அந்த ஞானம் சாமானியரூபமா யிருக்கின்றது; பின்னர் இரஜதஸ்மரண முண்டாகின்றது; ஆயினும், மனோதோஷத்தினால் அஃதென்னு மம்சத்தின் ஸ்மரணமன்றி இரஜதத்தை விஷயமாகச் செய்து சுத்திபேத ஞானமன்றி ஸ்மரணமுண்டாகின்றது. ஆகையால் இரஜதத்தோற்றம் பொருந்துகின்றது. சமீபத்திலிராத இரஜதம் பிரத்தியட்சமாக மாட்டாது. ஹேதுவின்மையினாலும் அநுமிதியன்று. பரிசேடத்தினால் ஸ்மிருதியென்று நிச்சயிக்கப் படுகின்றது" என்று கூறப்பட் டிருக்கின்றது.

அற்றேல், இஃது இரஜதம் என்பதில் (1) ஒவ்வொன்றும் தனித்தனியே வியவகார காரணமா? அல்லது (2) சேர்ந்தா?

(i) முதலாவது பட்சங் கூடாது; தேச பேதத்தால் பிரவிர்த்தியின் பிரசங்கம் வருமாகையால்.

(ii) இரண்டாவது பட்சமுங்கூடாது; பிரவிர்த்திஞானம் ஏககாலத்திலுண்டாகக் கூடாதென்று ஏககாலத்தில் அனேக ஞானோற்பத்தியை நிஷேதித் திருப்பதால்.

ஞானத்துவயம் ஹேதுவென்பது அயுக்தமென்று கூறுவையாயின்,

அது சரியன்று; நாசத்தையடையாத இரண்டு ஞானம் சேர்ந்திருப்பது (கூடாதென) நிஷேதமிருப்பினும் நாசத்தை யடையக்கூடியதாயும் நாசத்தை யடையாமலு மிருக்கிற இரண்டு ஞானம் சேர்ந்திருப்பதை நிஷேதிக்காமையின் சேர்ந் திரண்டு ஞானமுண்டாவது பொருந்துகின்றமையின்.

அற்றேல், இரஜதார்த்தி (வெள்ளி விருப்பமுடையோன்) இரஜத ஞானத்தினால் இரஜதத்தில் பிரவிர்த்திக்கட்டும். எதிரிலிருக்கிறவஸ்துவில் எங்ஙனம் பிரவிர்த்தியுண்டாகக் கூடுமெனின்,

அது சரியன்று; சொரூபத்தாலும் விஷயத்தாலும் பேதத்தைக் கிரகிக்காமலுண்டான கிரகணஸ்மரணங்கள் சமீபத்திலிருக்கிற இரஜதவிஷயகமான ஞான சாதிருசியத்தினால் வாஸ்தவத்தில் ஒன்றற்கொன்று பின்னமாயிருந்தாலும் அபேதத்திற்கு

உசிதமான † சாமாநாதிகரண்ய வியவகார ஹேதுத்துவம்பொருந் துவதால்.

கிரஹண ஸ்மரணத்திற்குச் சந்நிகித இரஜதவிஷய ஞானசாதிருசியம் எங்ஙனமோ அங்ஙனங் கூறப்படும்.

சமீபத்திலிருக்கிற இரஜதத்தை விஷயமாகவுடைய ஞானம் இதமம்சம் இரஜதாம்சம் என்னுமிவற்றின் † அசம்சர்க்கத்தைக் கிரகிக்கவில்லை; அவ்விரண்டும் சம்பந்தப்பட் டிருப்பதால் அசம்சர்க்கமே பிரமையின்.

தன்னிடத்தி லிருக்கின்ற பேதத்தையுங் கிரகிக்கின்றதில்லை; ஒரே ஞானமாதலின். இங்ஙனங்கிரகண (ப்ரத்தியட்ச) ஸ்மரணங்களும் தோஷவசத்தால்இதமம்ச இரஜதாம்சங்களுக்கு அசம்சர்க்கமிருந்தாலும் அந்த ‡ அசம்சர்க்கத்தையும் பேதத்தையுங் கிரகிப்பதில்லை. ஆகையால் பேதாக்கிரகணமே (பேதத்தைக் கிரகிக்காமையே) சாரூப்பியம் (சாதிருசியம்).

" பேதமாகத் தோன்றாமலிருக்கின்ற இந்தக் கிரஹண ஸ்மரணங்கள் யதார்த்த இரஜத ஞானத்தினும் வாஸ்தவத்திற் பின்னமாயினும் இவை ¶ பேத ஞானத்திற்குச்சமானமாக விருப்பதால் பின்னமாகத் தோன்றுவதில்லை. யதார்த்தமான இரஜத ஞானமோ எதிரிலிருக்கிற வஸ்துவை விஷயமாக்கிக்கொண்டிருக்கின்றது. இந்தக் கிரஹண ஸ்மரணங்கள் அதனினும் பின்னங்களென் றறிந்துகொள்ளாமல் அபரோட்சமாகத்தோன்றுவதாலும், சமானமான அர்த்தக் கிரகணத்தாலும் பேதாக்கிரகம் நிரூபிக்கப் பட்டது. அதற்குச்சமானமான வியவகாரமும் அதனாலேயே பிரவிர்த்திக்கின்றது " என்று குருமத்தை யநுசரித்தவர்களாற் சொல்லப்பட் டிருக்கின்றது.

(ஆ.) இங்ஙனம் கிரகிக்கப்பட்ட விவேகமும் சமீபித்திருக்கின்ற ரூப்பிய (வெள்ளி) ஞானத்தின் சாரூப்பியமுமான கிரஹண ஸ்மரணத்துவயம் அயதார்த்த வியவகாரத்திற்கு ஹேதுவென்று சித்தித்தது.

---

† சாமாநாதிகரண்யம் - ஒருநிலைக்களத்துளதாந் தன்மை.

‡ அசம்சர்க்கம் - சம்பந்த மின்மை.

¶ பேதஞானம் - கிரகண ஸ்மிருதிகளுக்கு வேறான இது வெள்ளியென்னும் ஞானம்.

இந்த அயதார்த்த வியவகாரம் கிரஹண ஸ்மரண ஜன்னியமாயின், சங்கு மஞ்சள்வர்ணமுடையது என்றற்றொடக்கத்திடங்களில் அது சித்திக்கமாட்டாது; அவ்விடத்தில் கிரஹண ஸ்மரணங்க ளின்மையினெனின்,

அது சரியன்று ; பேதங்கிரகிக்கப்படாத கிரகணங்கட்கே யதார்த்த சம்சர்க்க ஞானசாரூப்பிய மிருக்கும் போது அவைகட்கு வியவகார காரணத்துவம் பொருந்து கின்றமையின். வேத்நீயமான (அறியப்பட்ட) கண்ணொளியிலிருக்கும் பித்தத்திரவியத்தின் மஞ்சள் வர்ணமானது தோஷவசத்தினுல் † திரவியரகிதமாகக் கிரகிக்கப்படுகின்றது; சங்கும் சுக்கிலகுணசம்பந்தமின்றித் தன்னுடைய சொரூபமாத்திரமாகக் கிரகிக்கப்படுகின்றது. சம்சர்க்கயோக்கியமான இவ்விரண்டு குணகுணிகளுடைய ‡ அசம்சர்க்காக்கிரக சாரூப்பிய மிருப்பதால் பீதமான சுவர்ண பிண்ட ஞானபேத மிராமையின் வியவகாரம் பொருந்துகின்றது.

“ சங்கு மஞ்சள் என்னும் ஞானத்தில் சட்சுவிலிருக்கிற பித்தத்தின் மஞ்சள் வர்ணம் திரவிய மற்றதாகத்தோஷவசத்தாற் கிரகிக்கப்படுகின்றது. அங்ஙனமே சங்கின் வெண்மையானது நேத்திரதோஷத்தினுற் கிரகிக்கப்படுவதில்லை; கேவலம் திரவியமாத்திரம் ரூபமற்றதாகத் தோன்றுகின்றது. குணத்திற்குத் திரவிய அபேட்சை, திரவியத்திற்குக் குண அபேக்ஷையிருக்கும் போது இவற்றின் ஞானம் அசம்பந்தமாகக் கிரகிக்கப்படுவதில்லை. சத்தியமான பித்தத்தின்தோற்றத்தினுல் இரண்டு ஞானமும் சமானமாகவேதோன்றுகின்றன. வியவகாரமும் அதற்குத்துல்லியமாவேயிருக்கின்றது. இங்ஙனம் இவ்விடத்திலும் (ஞானவியவகாரங்கள்) பொருந்துகின்றன” என்று சொல்லப்பட்டிருக்கின்றது.

அற்றேல், இதுவெள்ளியென்னும் பிராந்தி ஞானத்தை யாப்புக்கொள்ளாவிடின், இரஜதப்பிரசத்தியே (அடைவே) ன்மையின், இதுவெள்ளியன்றென்னும் நிஷேதம் எங்ஙனம் ரஜதாபாவத்தைப் போதிக்குமெனின்,

அது சரியன்று ; சுத்தியில் பேத அக்கிரகத்தினுலுண்டான இரஜத வியவகாரத்திற்கு நிஷேதத்தையொப்புக்கொண்டமையின் கற்பனுலாகவ மிருப்பதால்.

† திரவியரகிதமாக - பித்தத்திரவியத்தைவிட்டு.

‡ அசம்சர்க்காக்கிரக - சம்பந்தமின்மையைக்கிரகியாத.

“ மித்தியா பாவமாயினும் அதற்குச் சமானமான வியவகாரத்தைப் பிரவிர்த்திப்பதால் இரஜத வியவகாராம்சத்தில் மக்களை† விசம்வாதத்தை யடையச்செய்கிறது. (இதுவெள்ளியன்றென்னும்) பாதக ஞானத்திற்கும் பாதகத்துவம் ஒப்புக்கொள்ளப் பட்டிருக்கின்றது; உண்டான இரஜதவிவகாரத்தை நிவிர்த்திபண்ணுவதால்” என்று பஞ்சிகாப்பிரகாணத்திற் கூறப்பட்டிருக்கின்றது. ஆகையால் பிராசீனமான ஞானங்கள் சத்தியமாயிருக்கும் போது எங்ஙனம் பிரமம் என்னும் பிரசத்திகூடுமென்னுஞ் சங்கை தள்ளப்பட்டது; அயதார்த்த வியவகாரத்தைப் பிரவிர்த்தி செய்வதால் அது பொருந்துகின்றமையின்.

மேலும், இது வெள்ளியன்றென்னும் பாதகஞானம் அபாவத்தைக் கிரகிக்கமாட்டாது; பாவமன்றி அபாவத்தைக் கிரகிக்க முடியாமையின்.

அங்ஙனமாயின், நாஸ்தி என்னும் ஞானத்திற்கு யாது விஷயம்? இல்லாவிடின் மகாபானிக பட்சானுப் பிரவேசம் சம்பவிக்குமெனின்,

அது சரியன்று; அபாவம்: ‡ தர்மிப்பிரதியோகி நிரூபண அதீன நிரூப்பியத்தன்மையானே அவசியமொப்புக்கொள்ள வேண்டியதாயிருக்க, பிரதியோகிதிருசியமாயிருந்தாலும் ஸ்மிருதி விஷயமாயிருந்தாலும் அதிகரண மாத்திர புத்திக்கே யில்லையென்னும் வியவகாரம் பொருந்துவதால் வேறான அபாவகற்பனையில் பிரமாணமின்மையின்.

“சித்தமான வஸ்துவின் ஞானம் இருவகைத்து; ஒன்று ஸ்பஷ்டத்தை விஷயமாகவுடையது, மற்றொன்று தன்மாத்திரத்தை விஷயமாகவுடையது. தன்மாத்திரவிஷயமான ஞானமிருவகைத்தாகச் சொல்லப்பட் டிருக்கின்றது. திருசியமான பிரதியோகியி னிடத்திலும் கடாதிப் பிரதியோகிக்கும்” என்று அமிர்தகலை யென்னும் நூலிற் சொல்லப்பட் டிருக்கின்றது.

ஆகையினாற்றான் பிரபாகர மதாநுசாரிகளால் பிரமாண பராயணமென்னுங் கிரந்தத்தில் பிரத்தியட்சமுதலிய பிரமாணங்களைந்தேயென்று நிரூபிக்கப்பட்டிருக்கின்றது. இங்ஙனமாயின்,

† விசம்வாதம் - நிஷ்பலப்பிரவிருத்தி.

‡ தர்மி-அநுயோகி.

அபாவத்திற்கு அபாவத்தை யொப்புக்கொள்ளின் (அபாவமென்ஞென் றில்லையெனின்) நகாரத்திற்கு வையர்த்தியமும் (வியர்த்தத் தன்மையும்) சாஸ்திர விரோதமும் நேரிடுமெனின்,

அதுசரியன்று; ஐம்பத்தொரு வர்ணங் (எழுத்துக்) களின் மத்தியில் ஒருவர்ணத்திற்கும் அபாவார்த்தம் காணப்படாமையின் சத்தான நகாரவர்ணத்திற்கு அவ்வர்த்தம் பொருந்தாமையின். இங்ஙனங்கூறின் சாஸ்திரவிரோதமு மில்லை.

ததன்னிய (அதனினும் பின்னமான) ததபாவ(அதன் அபாவத்தில்) தத்விருத்த (அதற்குவிருத்தமான) அர்த்தங்களில் நகாரம் பிரயோகிக்கப்படுகின்றது என்பது சாஸ்திரத்தி னர்த்தம்.

அங்ஙனமன்றே, சேதனங்களின் மத்தியில் ஒன்றற் கொன்று சத்துருவுமன்று; மித்துருவுமன்று; உதாசீனமுமன்று; அங்ஙனமே அசேதனங்கட்குமாம். ததன்னியம் என்னும் பதத்தால் அதனது உதாசீனம் நகாரத்தின் பொருளாம். விருத்த பதத்தால் சத்துருவென்பது நகாரத்தின் பொருளாம். ததபாவ பதத்தினுல் மித்திரனென்பது நகாரத்தின் பொருளாம். ஆகவே, அப்பிராம்மணபதத்திலேயே இம்மூன்றர்த்தமும் பிரதீதியாகின் றன. சூத்திரனென்றால் உதாசீனன்; யவனவன் என்றால் சத்துரு; க்ஷத்திரிய னென்றால் மித்திரன். இங்ஙனம் நகாரப் பிரயோகம் பண்ணுமிடங்களி லெல்லா மறியவேண்டும். ஆகையினுலோரபாவமும் பாவபின்னமாகச் சம்பவிக்கமாட்டாது. ஆதலின், முற்கூறிய விதமாகப் பிரமபாதப் பிரசித்தியால் விவாதத்திற்கு விஷயமான ஞானங்கள் யதார்த்தங்கள் ; பிரத்தியயத் (ஞானத்)தன்மையால் ; தண்டியென்னும் ஞானம்போல என்று சித்தித்தது.

இதைச் சிலர் சகிக்கவில்லை; இவ்வுலகத்தில் எல்லாவற்றையும் பார்க்கிறபுருஷன் இஷ்டத்தைத் தெரிந்துகொள்ளுவதிலாவது இஷ்டசாதனத்தைத் தெரிந்து கொள்ளுவதிலாவது பிரவிர்த்திக்கின்றான். இரஜதத்தை யிச்சித்த புருஷனது சுத்திஞானம் அதன் ரூபத்தை (இரஜதத்தை) யநுபவிக்கச் சமர்த்தமாகாது; சுத்திக்கு இஷ்டத்தன்மையாவது இஷ்டசாதனத் தன்மையாவது இன்மையின்.

இரஜதஸ்மரணமும் எதிரிலிருக்கிறவஸ்துவில் பிரவிர்த்திக்கக் காரணமாகமாட்டாது; அந்த ஸ்மரணம் அநுபவாதீனமாயிருப்பதால் அநுபவதேசத்திலேயே பிரவர்த்தகத்தன்மையிருப்பதால். பேதாக்கிரகமும் வியவகாரகாரணமன்று; சேதனவியவகாரம் கிரகண நிபந்தனமா (ஏதுவா) யிருப்பதால்.

எதனுலிங்ஙனம் நிந்தைக்கிடமாவோமோ அதனுல் நாங்களொவ்வொன்றற்குங் காரணத் தன்மையைச் சொல்வதில்லை. ஆனுல் யதார்த்தமாயும், எதிரிலிருக்கின்றதாயுமுள்ள இராஜதத்தை விஷயமாகவுடைய ஞானத்தின் சாதிருசியத்தையுடையதாயும் பேதத்தைக் கிரகிக்கப் படாததாயுமுள்ள ஞானத்துவயத்திற்கு இது ‡ அநுக்தோபாலம்பமென்று கூறுவையாயின், இதுவும் உசிதமன்று; விகற்பம் பொருந்தாமையின். அங்ஙனமன்றே, யதார்த்த இராஜத ஞானசாதிருசியம் விளக்கமாயிருந்து பிரவர்த்தகமாகின்றதா ? சத்தாமாத்திரத்தாற் பிரவர்த்தகமாகின்றதா ?

முதலாவது விகற்பத்தில், பேதாக்கிரகத்திற்குப் பரியாயமாயும் இந்த ஞானங்கள் யதார்த்தஞானத்திற்குச் சதிருசியங்களென்று விசேஷாகாரமாகக் கிரகிக்கப்படுகிறதாயுமுள்ள சாரூப்பியத்திற்குப் பிரவிர்த்திகாரணத்துவமா? அல்லது அந்த ஞானங்கட்குச் சொரூபத்திலுைம் விஷயத்திலுைம் ஒன்றற்கொன்று பேதாக்கிரக மிருக்கின்றமையின் சாமானியாகாரமாகக் கிரகிக்கப்படுகிற சாரூப்பியத்திற்குப் பிரவிர்த்தி காரணத்துவமா?

முதலாவதுபட்சங் கூடாது; யதார்த்த ஞானம்போல் அதற்குச் சதிருசியமான ஞானத்திற்கு அதற்குசிதமான வியவகாரப் பிரவர்த்தகத்துவம் பொருந்தாமையின். கோ சதிருசியம் (சமானம்) கவயம் என்னும் ஞானம் கவயார்த்தியை (காட்டுப் பசுவை விரும்புவோனை)க் கவயத்திற் பிரவிர்த்திக்கச் செய்யமாட்டாது.

இரண்டாவதுபட்சமுங் கூடாது; வியாகாதம் வருவதால். அவ்விரண்டனது சம்பந்தமற்ற பேதமும், பேதஞானமும் அறிதல் முடியாதாகையால், பரிசேடத்தினுல் சத்தா மாத்திரத்தினுல் பேதாக்கிரகமாகிய சாரூப்பியத்திற்கு வியவகார காரணத்தன்மை யங்கீகரிக்கத் தக்கதாம.

‡ அநுக்தோபாலம்பம் - வாதி கூறுதலைத் தூஷிப்பது.

இஃதிங்ஙன மிருக்கட்டுமெனின், அப்போ திவ்விடத்தி லிது நிச்சயிக்கவேண்டும். இந்தப்பேதாக்கிரகமானது சமாரோப வுத்பாதனக் (ஆரோபத்தை யுண்டுபண்ணுங்)கிரமமாக வியவகார காரணமாக விருக்கின்றதா? அல்லது ஆரோபத்தை யுண்டுபண்ணு மல் சுயமாகவே (தானே) காரணமாக விருக்கின்றதா?

இரண்டாவது பட்சமே உத்தமம்; அதனுலேயே வியவ கார முண்டாவதால் ஆரோபம் கௌரவதோஷ துஷ்டமா மென்று சொல்லுதல் கூடாது; விசிஷ்ட வியவகாரம் விசிட்ட ஞானத்தினு லுண்டாவதென்னும் நியமமிருப்பதால் அஞ்ஞான பூர்வகத்துவம் பொருந்தாமையின்.

இந்த வியவகாரம் அஞ்ஞான பூர்வகமன்றென்று பிற னுடைய அபிப்பிராயத்தை யறியாத வொருவன் தன்னுடைய சித்தாந்தத்தினுற் சித்தமான அர்த்த முதலியவற்றுல் சங்கித் தானேயாயின் அவன் விடை கூறத்தக்கவனுவன். சுத்தியை விஷய மாகவுடைய ஞானத்திற்கு அனிஷ்ட விஷயத்தன்மை யுடை மையால் இரஜதப்பிரவிர்த்திக்கு ஹேதுவாகச் சம்பவியாமையா லும், இரஜத ஞானத்திற்கு இஷ்ட விஷயத்தன்மையுடைமையால் அந்வய வியதிரேகங்களால் பிரவிர்த்தி ஹேதுவாகச் சம்பவிப்ப தாலும், இதமர்த்தத்தோ டபின்னமான இரஜதஸ்மாணம் கிரஹ ணத்தை விட பின்னமாயிருந்தாலும் காரணமாகச் சொல்ல வே ண்டும். அங்ஙனஞ் சொல்லுதல் கூடாது; "அறிகின்றுன், இச்சிக் கின்றுன், பிறகு பிரவிர்த்திக்கின்றுன்" என்னும் நியாயத்தினுல் ஞானேச்சாப்பிரவிர்த்திகள் சமான விஷயமாகவே யிருக்கவேண் டும். ஆகவே, இதமாகார விர்த்திக்கு விஷயமானது முக்கிய ரஜ தார்த்தியின் இச்சாதீனமாயிருக்கின்றது; அன்றுயின், அன்னியத் தை யிச்சித்து அன்னியத்தை வியவகரிக் கின்றுன் என்னும் விரோதம் நேரிடும்.

ஆகையால், எது இதமாகார விர்த்திக்கு விஷயமோ அது இரஜத ஞானவிஷய மாகாதாயின், எங்ஙனம் இரஜதார்த்தி யானவன் அதை யிச்சிப்பன்? இரஜதத்துவத்தைக் கிரகிக்காமை யினு லென்று கூறின், இரஜதத்துவக்கிரகண மிராமையின் எக் காரணத்தாலிவன் உபேட்சிக்காம லிருக்கின்றுன்? ஏககாலத்தில் அதனுலுண்டான பேதாக்கிரகம் அபேதாக்கிரகமென்னு மிவற்று லுண்டான உபாதானம் (கிரகணம்)உபேட்சை (நிவிர்த்தி)யென்று

யிவற்றால் முன்னும் பின்னு மிழுக்கப்பட்ட புருடன் அலைந்து கொண்டிருப்பதால் இரஜதாரோப மின்றி உபாதான பட்சமே ஸ்தாபிக்கப்படமாட்டாது. ஆகலின், இச்சிக்காமலும் சொச்ச புத்தியுள்ள புருடனால் சமாரோபம் அங்கீகரிக்கத்தக்கது.

பேதாக் கிரகத்தினால் இதமாகாரவிர்த்தி விஷயத்தில் இரஜதத் தன்மையை யாரோபித்து அந்த இரஜதத்துவ ஜாதீயத்திற்கு உபகார ஹேதுத்தன்மையை ஸ்மரணஞ்செய்து இதமாகாரவிர்த்தி விஷயத்திற்கும் தத் (அந்த)ஜாதியத்துவமென்னும் ஹேதுவினால் இரஜதத்துவத்தை யநுமானஞ் செய்து இரஜதார்த்தி பிரவிர்த்திக்கின்றானென்னு முதலாவதுபட்சம் சிரேஷ்டம்.

இரஜதஸ்மரணம் காரண மென்று கூறும் பட்சத்தினும் தரும (சாத்திய)ஹேதுக்கள் கிரகிக்கப்பட்டிருப்பதால் இம்மார்க்கம் சமானமென்று கூறின், அதுவுஞ் சரியன்று; இரஜதத்துவமாகிய ஹேதுவிற்குப் பட்சதர்மத்துவ மின்மையின்.

பட்சதர்மதை யிராவிடினும் வியாப்திபலத்தினால் கமகத்தன்மையுண்டென்று சங்கிப்பையாயின் அதுவுங் கூடாது; வியாப்தி பட்சதர்மதைகளையுடைய இலிங்கத்திற்கே கமகத் தன்மை யங்கீகரித்திருப்பதால்.

“சம்பந்தத்தையறிந்த புருடனுக்கே இலிங்க விசிட்ட தர்மத்தி னேகதேச தரிசனமிருப்பதால் இலிங்கிவிசிட்டமான தர்மியையுடைய தேச புத்தி அநுமானம்” என்று சபரசுவாமி கூறுகின்றார்.

“எது † கம்மியத்திலும் ‡ கமகத்திலும் சொல்லப்படுகின்றதோ உபய சொரூபமான அதுவே அசித்தமான ஏகதேசத்தினால் கம்மியம் சித்திக்காததால் போதகமன்று” என்று ¶ஆசாரியரும் கூறியிருக்கின்றனர்.

உன்னுடைய பட்சத்திலும் எதிரிலிருக்கிற இதமர்த்தத்தில் பரமார்த்தத்தில் இரஜதத்துவ மின்மையின் இரஜதத்துவம் ¶¶ தர்மைகதேச மன்றென்று கூறுவதும் சரியன்று; “பட்சசுக்

† கம்மியம் - அடையப்படுவது; சாத்தியம். ‡ கமகம் - அடைவிப்பது; சாதனம். ¶ பட்டபாதர்.

¶¶ தர்மைகதேசம் - தர்மத்தி னேகதேசம்.

குத் தகுந்த பலி" என்னும் நியாயத்தினால் $ அநுமித்தியாபா சத்திற்கு அநுகுணமான ஏகதேச மிருப்பதால்.

அங்ஙனம் பிரயோகமும்:—விவாதத்திற்கு விஷயமான இரஜதஞானம் புரோவர்த்தியை (எதிரிலிருப்பதை) விஷயமாக வுடையது; இரஜதார்த்திக்கதில் நியமமாகவே பிரவிர்த்தி யுண்டாவதால்; எது மேற்கூறிய சாதன முடையதோ அது மேற்கூறிய சாத்திய முடையது. எங்ஙனம்? உபயவாதி சம்மதமான சத்திய ரஜத ஞானம்.

விவாதத்திற்கு விஷயமான சுத்தி இரஜதஞானத்திற்கு விஷயம்; † வியவதானமின்றி இரஜதார்த்தியின் பிரவிர்த்திக்கு விஷயமா யிருப்பதால்; அல்லது இரஜதபதத்திற்குச் சமானாதிகரணமான வேறுபதத்தால் கூறப்படுந் தன்மையால்; ‡ வஸ்து ரஜதம்போல்.

இரஜத ஞானம்¶ சுத்திகா விஷய மென்பதில் அநுபவ விரோத மிருக்கின்ற தென்று யாது கூறப்பட்டதோ அது அயுக்தம்; விகற்பம் பொருந்தாமையின். அங்ஙனமன்றோ, அதில் இரஜதாகார ஞானத்தைக் குறித்துச் சுத்தி யாலம்பன (விஷய) மென்பதில் அநுபவ விரோதம் காட்டப்படுகின்றதா? அல்லது இரஜதாகார ஞானத்தைக் குறித்து இதமம்ச ஞானத்திற்கு விரோதம் காட்டப்படுகின்றதா?

முதலாவதுபட்சங் கூடாது; ஒப்புக் கொள்ளாமையின் தள்ளப்பட்டது.

இரண்டாவது பட்சமுங் கூடாது; †† இதந்துவசமானாதிகரணமாயும் ‡‡ சாகசக்கிய விசிட்ட மாயுமுள்ள வஸ்துவிற்கு இரஜத ஞான விஷயத்துவத்தை யொப்புக் கொள்ளாதவனுக்கே அநுபவ விரோதம் வருவதாலும், இஃதிரஜத மென்னும் சமானாதிகரணத்தினால் எதிரிலுள்ள வஸ்துவில் $$ அங்குலி நிர்த்தேச பூர்வகமாக வுபாதான முதலிய வியவகாரங் கண்டிருப்பதாலு மென்க.

---

$ அநுமித்தியா பாசத்திற்கு - அனுமிதியினால் விளங்குவதற்கு.

† வியவதானம் - தடை. ‡ வஸ்து - உண்மை.

¶ சுத்திகா விஷயம்-சுத்தியை விஷயமாக வுடையது.

†† இதந்துவம்-இதுவெனுந் தன்மை. ‡‡ சாகசக்கிய-பளபளப்போடு கூடிய. $$ அங்குலிநிர்த்தேசம்-விரலால் சுட்டிக் காட்டுதல் வாயிலாகக் கிரகிப்பது.

தோஷங்கள் சாமாநியமாகக் காரிய ஜனன சக்திக்குப் பிரதிபந்தகமாகையால் விபரீதமான காரியத்தைச் செய்ய மாட்டாவென்று யாது கூறப்பட்டதோ அதுவும் யுக்த மன்று; காட்டுத் தீயினுல் தக்தமான வேத்திர பீஜாதிகளில் அங்ஙனங் காணப் பட் டிருப்பதால்.

கொளுத்தப்பட்டதற்கு வேத்திர பீஜத்தன்மை யின்றென் றெண்ணுதல் கூடாது; கருங்குடத்திற்குச் செம்மை மாத்திரத்தினுல் குடத்தி னிவிர்த்தி வருமாதலின்.

இது குடம் இது குடம் என்று அநுவ்ருத்தமான(தொடர்ச்சியான) ஞானம் பிரயோக மென்னு மிவைக ளிருப்பதால் கடத்துவ மிருக்கின்றதென்று கூறின், அதுவுங் கூடாது; இவ்விடத்தில் இது வேத்திரபீஜமென்று அவற்றிற்குச் சமானத்தன்மை யிருப்பதால்.

† பகுவன்ன பசனசாமர்த்தியம் ஜாடராக்கினிக்கேயன்றிப் பஸ்மகவியாதிக் கன்றென்று கூறுவதும் உசிதமன்று; ஜாடராக்கினிக்குச் சிறிது சிறிதாக அற்பபசனசாமர்த்தியமிருப்பினும் சீக்கிரமாக அதிக அன்ன பசனத்தைப் பண்ணுவதில் பஸ்மக வியாதி சகாயமன்றிப் பொருந்தாமையின். இல்லாவிடின் யாவருக்கும் அங்ஙனம் வருமாதலின்.

மேலும், ஞானங்கட்கு அஞ்ஞானத்தால் யதார்த்தவியவகார காரணத்துவ மிருந்தாலும் தோஷவசத்தினுல் அயதார்த்தகாரண வியவகாரத்தை யொப்புக்கொண்ட நீயே †பரியநுயோஜ்ய ஞகின்றாய். “எத்தோஷம் இருவருக்கும் சமானமாயிருக்கின்றதோ அதில் எவன் கேட்கத்தகுந்தவனு கின்றான்” என்று பாஷியத்திற் சொல்லப்பட்டிருக்கின்றது. இவ்விடத்திலும், “இருவருக்கும் எத்தோஷம் சமானமாயும், எப்பரிகாரம் சமானமாயுமிருக்கின்றதோ அப்படிப்பட்ட அர்த்தத்தை விசாரிப்பதில் ஒருவருக் கொருவர் தோல்வி யடையத்தக்கவரல்ல” றென்று சொல்லப் பட்டிருக்கின்றது. ஆயினும், என்னுடைய அநுமானத்திற்குயாது தோஷம் சொல்லப்பட்டது? அநுமான தூஷண மன்றிச் சந்தோஷத்தை யடையாம லிருப்பாயாயின் பாதம் வருகின்றது; அக்கினியின் அநுஷ்ணத்துவ அநுமானம் போல இந்நகால பரி

---

† பகுவன்னபசன-அளவிறந்த வுணவைச் சீரணிக்கச்செய்யும்.

யந்தம் யாதுஇரஜதமென்று தோன்றிற்றோ அவவாறாய (இதுவெள்ளி யென்னும்) முன் ஞானத்திற்கு அயதார்த்தத் தன்மையைக் காண்பிக்கும் இது சுத்தியென்னும் பிரத்தியட்சத்தால் யதார்த்தத்துவ அனுமானத்திற்கு அபகிருத (அபகரிக்கப்பட்ட) விஷயத் தன்மை யுண்மையின் பாத்தியத்துவம் (பாதிதவிஷயமுடைமை) சம்பவித்தலால்.

தனது (ஞானத்தினது) விஷயத்திற்கு வியபிசாரம் வருமாயின், எல்லா ஞானத்திலும் விசுவாசம் வாராது போமென்று யாது கூறப்பட்டதோ அஃதுசித மன்று. ஞானங்கள் சிலவிடத்தில் சம்வாதி வியவகார ஜனகமாயினும் எவ்விடத்திலும் அச்சங்கையாற் பிரவிர்த்தியின் நாசமில்லையென் றெங்ஙனம் உன்னுடைய மதத்திலோ அங்ஙனம் என்னுடைய மதத்திலும் இந்த மார்க்கம் மறுக்கப்படவில்லை; யோகக்ஷேமம் சமானமாயிருப்பதால்.

தௌதாதித மதத்தை யவலம்பித்து (மேற்கொண்டு) விதிவிவேகத்தை வியாக்கியானிக்கும் ஆசாரிய வாசஸ்பதி மிசிரரால் நியாயகணிகையென்னுங் கிரந்தத்தில் "போதகத் தன்மையானே சுவதப்பிராமாண்யம் அவ்வியபிசாரத்தாலன்று" என்று கூறப்பட்டிருக்கின்றது. ஆகையால் அவிசுவாச சங்கைக்கே யிடமின்று.

மாத்தியமிக (சூனியவாதி) மதத்தை யவலம்பித்து இரஜதாதிப் பிரமத்திற்கு விஷயம் அசத்தென்று கூறின், அதற்கு விடை கூறியாயிற்று; அசத்தானது அபரோட்சப் பிரதீதிக்கு அயோக்கியமா யிருப்பதாலும், அதைக்கிரகிக்க வேண்டுமென்னு மிச்சையினாற் பிரவிர்த்தி பொருந்தாமையாலும் என்க.

விஞ்ஞானமே, வாசனை முதலிய தனது காரண சாமர்த்தியத்தினா லடையப்பட்ட திருஷ்டாந்தத்தினால் சித்தித்த சுபாவ விசேஷத்தோடு கூடிய அசத் பிரகாசன சக்தியைத் தோற்றுவிக்கின்றது. அசத் பிரகாசன சக்தி, அவித்யா சம்விர்த்தி என்பன ஒருபொருட் கிளவியாம். ஆகையினால், அவித்தியா வசத்தால் அசத்துக்களும் தோன்றுகின்றன வென்று கூறின், அதுவும் சொல்லுதல் கூடாது; சக்கியம் நிரூபிக்க முடியாமையின். ஈண்டுச் சக்கியம் காரியமா? ஞாப்பியமா?

முதலாவது பட்சங் கூடாது; அசத்திற்குக் காரியத்துவம் பொருந்தாமையின்.

இரண்டாவது பட்சமுங் கூடாது; சக்கியத்தைக் காரணமாக வொப்புக்கொண் டிருப்பதால் ஞானத்தினும் வேருன அஞ்ஞானத்திற்கும் உபலப்தி (பிரதீதி) யின்மையின்; அல்லது உபலப்தி யிருப்பின் அதற்கும் * ஞாபகத் தன்மை யிருப்பதால் ஞானுந்தரத்தை யபேட்சிக்கின்றது; அப்போது அனவஸ்தை வருமாதலா லு மென்க.

இந்தத் தோஷத்தைப் பரிகரிக்க வேண்டுமென்னு மிச்சையினல் அசத்தின் விஞ்ஞான வடிவமே பிரகாசிக்கின்ற தென்று கட்சி செய்வாஞயின், அவ்விஷயத்தில் அந்தமூடன் மீண்டும் வினவத் தக்கவனுவன்.

அந்தச் ‡ சத சத்துக்களுக் குண்டான சம்பந்தம் நிருப்பிய நிருபக பாவமா? அல்லது அவிநாபாவமா?

முதலாவது பட்சங் கூடாது; அசத்திற்கு உபகார ஆதாரத்துவ மின்மையின் (அது) அநுபகாரியாய் விட்டமையால் நிருபகத்தன்மை(அதற்குப்) பொருந்தா தாதலின்.

இரண்டாவது பட்சமுங் கூடாது; அதனுற்பத்தி லட்சணத்தையுடைய † தூம தூமக்கொடிகட்குப் போலவாவது தாதாக்மிய லட்சணத்தையுடைய ¶ சிம்சுபா விருட்சங்கட்குப் போலவாவது சத் தசத்துகட்கு அவிநாபாவ சம்பந்தம் சம்பவியாமையின். ஆதலின் அசத்தான விஞ்ஞானமே பிரகாசிக்கின்ற தென்னும் அசத்வாதிகளின் வியவகாரம் அசந் $ பிரலாபமாம். ஆதலின் ஆரோப்ய மாணம் (ஆரோப விஷயம்) அசத்தன்று.

தோன்றுகின்ற இரஜதம் விஞ்ஞானவாதி மதத்தை யநுசரித்து ஞானவடிவாம். அதில் யுக்தி சொல்லப் படுகின்றது. எது எங்ஙனம் அநுபவிக்கப் படுகின்றதோ அது அங்ஙனந்தான்; அந்நியதாத்வமோ (வேறுகத் தோன்றுந் தன்மையோ), பலவத்தான (பலமுடைய)பாதகத்தின் சம்பந்தத்தால் ஒப்புக்கொள்ளப் படுகின்றது.ஆகையினுலிந்த அர்த்தம் உபயவாதி சம்மதம். அதில்

* ஞாபகம் - அறிவிப்பது.

‡ சத்து - விஞ்ஞானம்.

† தூமம் - புகை, தூமக்கொடி - தூமத்தைக் கொடியாகவுடைய தீ.

¶ சிம்சுபா விருட்சம் - விருட்ச விசேஷம் $ பிரலாபம்- அழுகை.

இது இரஜத மன்றென்று நிஷேதிக்கப் பட்ட இதமம்சத்தை யுடைய இரஜதம் அர்த்தாத் (பொருளால்) ஆந்தர (உள்)ஞானவடிவமா யிருக்கின்றது; இதந்துவத்தினால் நிஷேத மிருக்கும் போது † அநிதந்துவத்தினாலும் வெளியில் வியவஸ்தை பொருந்துமாதலின் (அதற்கு) ஞானகாரத்துவம் எங்ஙனங் கூடுமென்று கூறற்க; வியவகிதமாயும் அந்நியமாயு மிருக்கின்ற பதார்த்தத்திற்கு அபரோட்சத்துவம் பொருந்தாதிருக்கும்போது அபரோட்சமான விஞ்ஞானத்தையே கட்சியாகச் செய்யப்பட் டிருக்கின்றமையின். அங்ஙனமே பிரயோகமும்:—

விவாதபதம் (சந்தேகத்திற்கு விஷயமானது) விஞ்ஞானகாரம்; சம்பந்தமன்றி அபரோட்சத்தன்மை யிருப்பதால்; விஞ்ஞானம்போல என்று கூறியது பொருந்தாது; விகற்பத்தைச் சகிக்காமையின். பாதகஞானம் சாட்சாத் ஞானகாரத்தைப் போதிக்கின்றதா? அல்லது அர்த்தாத் (பொருளால்) போதிக்கின்றதா?

முதலாவது பட்சங்கூடாது; இரஜதவிவேகத்தைமாத்திரம் விஷயமாக வுடைய இது இரஜதமன்றென்னும் ஞானத்திற்கு ஞானபேதத்தை விஷயமாக வுடையதாக வொப்புக்கொள்ளின் அநுபவ விரோதம் வருவதால்.

இஃதிரஜதமன்றென்று இரஜதத்திற்கு புரோவர்த்தித்துவ பிரதிஷேதமா(முன்னிலைத் தன்மையை விலக்குதலா)னது ஞானகாரத்துவத்தைக் கற்பிக்கின்றது என்று கூறுவதும் சரியன்று; பிரசக்தப் (அடையப்பட்ட) பிரதிஷேத வடிவ பாதக ஞானம் அவ்விடத்திலேயே யிருப்பதால் பிரதிஷேதம் பொருந்திவிடுகின்றமையின்.

விஞ்ஞானாகாரத்துவத்தின் சாதனமும் அவிஞ்ஞானகாரமாயும்,வெளியிலிருப்பதாயும், சாட்சிப்பிரத்தியட்சத்தினாலறியக்கூடியதாயுமான பாவரூப அஞ்ஞானத்தி லிருப்பதால் சவ்வியபிசாரதோஷ முடையதாம்.

அந்நியதாக்கியாதி மதத்தை யநுசரித்து இரஜதம் தேசாந்திரத்தி லிருப்பதாக விருக்கவேண்டும்;இல்லாவிடின் அதற்கு நிஷேதப் பிரதியோகித்துவம் பொருந்தாதாகலின். பிராக்ஞாவா (அறிவுடையவ) னை எவனும் சசவிஷாணத்தை நிஷேதிக்கச் சமார்த்தனாகமாட்டான்.

‡ அநிதந்துவம்-இதுவன்றெனுந்தன்மை.

"வியாவர்த்தியமா (பிரித்துக் காட்டுவதா)ன அபாவத்தோடு கூடியிருக்குந்தன்மையே பாவசம்பந்தமான † விசேஷிதை; வஸ்துவிற்குப் பிரதியோகித்துவமாவது அபாவாபாவசொரூபத் தன்மை" என்று கூறப்பட்டிருக்கின்றது.

ஆகவே, அந்த இரஜதம் தேசாந்தரத்தி லிருப்பதாக வொப்புக் கொள்ள வேண்டுமென்று கூறுவதும் பிராமாணிகமன்று; அசத்தினுடைய சம்பந்தத்திற்குப்போல் இரஜதத்திற்கு நிஷேதப் பிரதியோகித்துவம் பொருந்து மாதலின்.

இஃதிரஜதமென்னும் ஞானம் ஏகமா? அநேகமா?

முதலாவதுபட்சங் கூடாது; அபசித்தாந்தம் வருமாகையாலும் சம்பவியாமையாலு மென்க.

அங்ஙனமன்றே, சக்தி இதமம்சம் இந்திரியசம்யோகமென்னுமிவற்றால் இதமாகார அந்தக்கரண பரிணாமமான வொரு ஞானமுண்டாகின்றது. அதில் இரஜதமானது விஷயமாக மாட்டாது; சம்பந்தமின்மையின், அதற்கு விஷயத்துவத்தை யொப்புக் கொள்ளின் சர்வஞ்ஞத்துவம் வருமாதலின். சட்சுவினுடைய அந்வய வியதிரேகத்தினா லுண்டாயிருப்பதால் அந்த ஞானம் அதனா லுண்டானதென்று கூறுவதும் சரியன்று; இதமம்ச ஞானோற்பத்தி அதைக் கிரகிக்காமலே பொருந்துகின்றமையின்.

அந்தஞானம் சம்ஸ்காரத்தினாலு முண்டாவ தன்று; இரஜத ஞானத்திற்கு ஜன்னிய ஸ்மிருதித்துவம் வருமாதலின்.

இந்திரிய தோஷம் அதன் காரணமென்று சொல்லுவதும் உசிதமன்று; இந்திரிய தோஷத்திற்குச் சுதந்தரமாக ஞானஹேதுத்துவம் பொருந்தாமையின்.

கிரஹண ஸ்மரணங்களைவிட வேறுபிரகாரமு மன்று. ஆகையால், இதமம்ச இரஜததாதாத்மியத்தை விஷயமாகவுடைய ஞானம் ஏகமாகவுங் கிடைக்க மாட்டாது; அநேகமாகவுங் கிடைக்க மாட்டாது. அக்யாதிமதம் வருதலினெனின், சமாதானங் கூறப்படுகின்றது:—முதலில் தோஷகலுஷிதமான (தோஷத்தாற் களங்கமான) சட்சுவினால் இதந்துவ மாத்திரத்தை விஷயமாகவுடைய அந்தக்கரணவிருத்தி யுண்டாகின்றது; பிறகு அந்த விருத்தியினால் [illegible]

† விசேஷிதை - [illegible]

ணியம் பிரகாசத்தை யடைகின்றது; பிறகு இதமம்ச சைதன்னி யத்திலிருக்கிற அவித்தையானது ராகாதி தோஷகளுஷிதமாய் இரஜதாகாரமாகப் பரிணமத்தை யடைகின்றது.

இதமாகார அந்தக்கரண பரிணமாவச்சின்ன சைதன்னியத்தி லிருக்கின்ற தாயும், இரஜதகோசரமான பரிணம சம்ஸ்காரத்தோடு கூடியதாயுமுள்ள அவித்தையானது இரஜத ஞானபாசாகாரமாகப் பரிணமிக்கின்றது. அவ்விரண்டு பரிணமங்களும் தமக்கு அதிஷ்டானமான சாட்சி சைதன்னியத்தினுல் † வியவதானமின்றிப் பிரகாசிக்கின்றன. விர்த்தியோடுகூடிய அவித்தைக்குச் சாக்ஷிபாஷியத்துவம் ஒப்புக்கொண்டிருப்பதால் வேறு விர்த்தியினுல் ‡ வேத்தியமின்மையால் அநவஸ்தாதோஷமின்று.

இஃதந்தக்கரண விர்த்தியென்றும் அவித்தியாவிர்த்தி யென்று மிரண்டு ஞானமாயிருப்பினும் பலம் விஷயாதீனமா யிருக்கின்றது; கடம் § ஞாதமென்று விஷயாவச்சின்னமாகவே பலம் தோன்றுவதால். அந்தவிஷயமும் சத்தியமாயும் மித்தையாயுமிருக்கின்ற இதமம்ச இரஜதாம்சங்களுக்குத் தாதாத்மிய மிருப்பதால் ஒன்றாயிற்று. ஆதலின், விஷயாவச்சின்ன ¶ பலமும் ஒன்றாயிருப்பதால் ஞானம் ஒன்றென் றுபசாரமாகச் சொல்லப் படுகின்றது.

"சுத்தியில் இதமம்ச சைதன்னியத்தி லிருக்கின்ற அவித்தையானது இராகாதிதோஷ சம்ஸ்காரத்தோடு கூடியிருந்து இரஜதாகாரமாய்ப் பரிணமிக்கின்றது. இதமாகார விர்த்தியவச்சின்ன சைதன்னியத்தி லிருக்கின்றதாயும் மேற்கூறிய வடிவமாயுமுள்ள அவித்தையானது இரஜத ஞானபாச வடிவமாக விவர்த்தத்தை யடைகின்றது. சத்திய வஸ்துவிற்கும் மித்தியா வஸ்துவிற்கும் ஐக்கியமிருப்பதால் அதன்விஷயம் ஒன்றென்பது வித்வத் சம்மதம். அதனினும் வேறுனபலம் ஒன்றாயிருப்பதால் ஞானம் ஒன்றென் றுபசாரமாகச் சொல்லப்படுகின்றது" என்று சொல்லப் பட்டிருக்கின்றது.

பஞ்சபாதிகை யென்னும் கிரந்தத்திலும் "பலம் ஒன்றாயிருப்பதால் ஞானம் ஒன்றென் றுபசரிக்கப்படுகின்றது" என்று கூறப்பட்டிருக்கின்றது.

---

† வியவதானம் - தடை ‡ வேத்தியம் - விஷயம்.
§ ஞாதம் - அறியப்பட்டது ¶ பலம் - சிதாபாசப் பிரகாசம்.

சுத்தியிற் றோன்றுகிற இரஜதத்தைச் சுத்திபோற் சத்தியமாக வொப்புக்கொண்டால் இஃது இரஜதமன்றென்னும் நிஷேதம் எவ்வா றுண்டாகுமெனின், அதுகூடாது; பிராதிபாசிக சத்தியத்துவ மிருந்தாலும் பாரமார்த்திக சத்தியத்துவ மிராமையின் பிரதிபன்னோபாதியில் (அதிகரணமாக ஒப்புக்கொள்ளப் பட்ட வஸ்துவில்) பிரதியோகித்துவம் சம்பவியாமையின்.

"பிரஹ்மத்திற்குப் பாரமார்த்திக சத்துவம் (உண்டு), ஆகாசாதிகட்கு அர்த்தக்கிரியாசாமர்த்தியமாயும் மாயோபாதிகமாயுமுள்ள சத்துவம் (உண்டு), இரஜதாதிகட்கு அவித்தியோபாதிகமானசத்துவம் உண்டு" என்று பஞ்சபாதிகா விவரணத்திற் சத்துவம் மூன்றுவகை யென்று கூறப்பட் டிருக்கின்றது.

"காலத் திரயத்தில், ஞாதுருகாலத்தில், பிரதீதி காலத்தில் பதார்த்தங்கட்குப் பாதமின்மையின் சத்துவம் மூன்றுவகை யென்று சொல்லப்பட்டிருக்கின்றது.

பிரஹ்மத்தி னுடைய சத்துவம் † தாத்விக மென்றும், ஆகாசாதிகளின் சத்துவம் வியாவகாரிகமென்றும், ரூப்யாதிகளின் (வெள்ளி முதலியவற்றின்) சத்துவம் பிராதிபாசிக மென்றுஞ் சொல்லப்பட்டிருக்கின்றன. லௌகிககாலத்தில் லௌகிகப் பிரமாணத்தினு லெது பாதிக்கப்படுகின்றதோ அது பிராதிபாசிக சத்துவம்; பிரமாதா விருக்கும் போதே பாதிக்கப்படுவதாம். வைதிக காலத்தில் வைதிகப்பிரமாணத்தால் எது பாதிக்கப் படுகின்றதோ அது வியாவகாரிக சத்துவம்; பிரமாதாவோடு கூடவே பாதிக்கப் படுவதாம்" என்று மற்றோரிடத்திலுஞ் சொல்லப்பட் டிருக்கின்றது.

ஆகையால், கியாதி பாத அந்யதா; அனுப பத்தியால் பிராந்திக்கு விஷயமாயும் மாயாமயமாயுமுள்ள இரஜதாதிகள் சதசத் விலட்சணத்தையுடைய அநிர்வசநீயமென்று சித்திக்கது.

"எது சத்துவா சத்துவங்களால் விசாரிக்க முடியவில்லையோ அதை யநிர்வாச்சியமென்று வேதாந்திகள் கூறுகின்றனர்" என்று சிற்சுகாசாரியர் கூறி யிருக்கின்றனர்.

---

† தாத்விகம், உண்மை, பாரமார்த்திகம் என்பன ஒருபொருட்கிளவி.

‡ மாயாவித்தைகள் தமது ஆசிரயத்திற்கு மோகஹேது வாயும் மோகஹேது வன்றாயு மிருப்பதால் பின்னமா யிருக்க, அவித்தியாமயமென்று சொல்லவேண்டிய விடத்து ஆரோப்பிய வஸ்து மாயாமயமென்று கூறுவது கூடாதெனின், நீ கூறியது அயுக்தம்; அநிர்வசநீயத்துவம், தத்துவாபாசம், பிரதிபந்தகத்துவ மென்றற் றொடக்கத்தனவாய லட்சண சமூதாயம் மாயாவித்தைகட்குச் சமானமா யிருப்பதால். மேலும், ஆசிரய சப்தத்தினால் திருஷ்டா சொல்லப்படுகின்றானா? கர்த்தா சொல்லப்படுகின்றானா?

முதலாவது பட்சங் கூடாது; மந்திர ஔஷத முதலிய நிமித்தத்தினால் மாயையைப் பார்க்கின்றவனுக்கு மோகங் கண்டிருப்பதால்.

இரண்டாவது பட்சமுங் கூடாது; § மாயாவித்துவத்திற்குப் பிரயோசகத்துவ மின்மையின், பாத நிச்சய மாத்ரா நிப்பிரதீகார போதங்கட்கே பிரயோஜகத் தன்மை யுண்மையின். அன்றேல், நொண்டி குருடர்கள் போன்று கருத்தாவும் மோகத்தையடைவன். இச்சாநுவிதான அநநு விதானங்களால் அவற்றிற்குப் பேதமென்றுங் கூறற்க; மாயையின் ஸ்தலத்தில் மணிமந்திர ஔஷதாதிப் பிரயோகம் போன்று, அவித்தையின் ஸ்தலத்திலும் ¶த்விசந்திர கேசோண்டூகாதி விப்ரம(பிராந்தி)நிமித்தமான அங்குல் யவஷ்டம்பாதிகளிலும் சுதந்திரங் காணப்படுதலின்.

அதனாலேயே ஆண்டாண்டுச் சுருதி சூத்திரபாஷ்யாதிகளில் மாயை அவித்தைகட்கு அபேதமாக வியவகாரம்பொருந்துகின்றது. சிறிது விக்ஷேபப் † பிராதான்யத்தாலும் ஆவரணப் பிராதான்யத்தாலும் மாயை யவித்தைகளின் பேதமும் அவ்வியவகாரமும் விரோதிக்கின்றதில்லை.

“மாயை அஞ்ஞானத்தை விட்சேபஞ் செய்வித்து முக்தேச்சாவச வர்த்தியா யிருக்கின்றது; அவித்தை தத்துவத்தை ஆச்சாதித்து (மறைத்து) அதனிச்சானுவிர்த்தியா யிருக்கின்றது” என்று கூறப்பட்டிருக்கின்றது.

அவித்தையிருப்பத்தில் யாது பிரமாணம்? நான் அஞ்ஞன், என்னையும் பிறரையும் அறியேன் என்றும் பிரத்தியட்சமே

‡ மாயை அவித்தை. § மாயாவித்துவம் - மாயாவித்தன்மை.

¶ த்விசந்திரன்—இரட்டைச்சந்திரன். † பிராதான்யம்—தலைமை

(பிரமாணம்); ஞானவிஷயமாய இஃது இஷ்டமான அர்த்தத்தை யடைவிக்க மாட்டாதெனின், இஃது அனுபலப்திவாதியின் சங்கை யன்றும்; அதற்குப் பரோக்ஷஞான ஹேதுத்தன்மை யிருப்பதால். இதுவும் பரோட்ச ஞானமே யெனின், லிங்கசப்தங்களால் அடை யாத அர்த்த ஜன்னிய மன்று; அவற்றிற்கு ஞானகரணத் தன்மை யுண்மையின். சாமக்கிரி காலத்தில் ஞானமுமில்லை; அனுபவிக்கப் படவு மில்லை.

அனுபலப்தியால் உண்டாகிற தெனின், இந்த அனுப லப்தியும் அறியப்படா திருந்து காரணமன்று; பிரதிக்ஷப் பிர மாணத்தினும் வேறானவற்றிற்கு ஞானகரணத்தன்மை நியமமா யிருத்தலின். அறியப்பட்டும் கரணமாயிருப்பதன்று; அனுபல ப்திக்கு அநவஸ்தை வருமாகையால்.

எங்ஙனம் தார்க்கிகர் மதத்தில் அபாவஞானத்தில் யோ க்கியானுபலப்தி சககாரியோ அங்ஙனம் எங்கட்குக் காணமென்று சங்கித்தல் கூடாது; ஞானகரணத்திற் போல சககாரியின்கண் ஞாதத்துவ அஞ்ஞாதத்துவ நியம மின்மையின், அல்லது † ஞே யாபாவத்தைக் கிரகிப்பதில் அங்ஙனம் காணமாயிருக்கட்டும், ஞானபாவ கிரஹணத்தில் கரணமாக மாட்டாதென்று கூறப் படும்.

ஆனல் பிரத்தியட்சத்தினுல் தர்மிப் பிரதியோகிகளின் ஞானம் இருக்கும் போது ஆத்மாவின்கண் ஞான மாத்திர அபா வத்தைக் கிரகித்தல் பிரத்தியட்சாபாவத்தினு லென்றும் சொல்லு தல் கூடாது; கடமுடைய பூதலத்தில் கடாபாவத்தைக் கிரகிப் பதுபோல ஞானமாத்திரத்தின் அபாவத்தைக் கிரகித்தல் முடியா மையின். தர்மிப் பிரதியோகிகளின் ஞானமிராத பட்சத்தில் காரணமின்மையின் யோக்கியானுபலப்தியினுலேனும் பலலிங்கா பாவத்தினுலேனும் ஆத்மாவின்கண் ஞானமாத்திர அபாவத் தைக் கிரகித்தல் துர்லபம்.

பரமதத்திலும் இந்நியாயமொக்கும். ஆகையால், இங் ஙனம் ஆத்மாவின்கண் பிரதியட்சத்தினுலாவது இதரப் பிரமா ணங்களாலாவது ஞான மாத்திர அபாவத்தின் கிரகணம் அமை யாதெனப் பெறப்பட்டது.

---

† ஞேயம்—விஷயம்.

ஞான விசேஷாபாவம் பிரத்தியக்ஷத்திறற் கிரகிக்கப் படுகின்றதெனின், ஸ்மரணுபாவமன்று; அபாவ ஞானத்தில் பிரதி யோகிஞானம் காரணமாகையால். அனுபவாபாவமும் அன்று; அது விலக்கத்தக்க தன்மையின். ஆத்மாவின்கண் கடானுபவா பாவம் பிரத்தியக்ஷ விஷயமென்று சொல்லுதல் கூடாது; ஆனால், நான் அஞ்ஞன் என்னும் ஞான சாமானிய வசனமானது ஜாநாதி (அறிகின்றான்) என்னும் ஞானவிசேஷ அனுபவத்தில் இலட்ச ணையால் வழங்கத்தக்கதாம்.

இலட்சணையும் சம்பந்தம் பொருந்தாதபோது சம்ப விக்கின்றது. சம்பந்தமும் அனுபவத் தன்மை ஞானத்தன்மை கட்கு ஏகவியக்தி † சமாவேசமேனும், வியாப்பிய வியாபக பாவ மேனும் அவசிய மிருக்கின்றதெனப் பொருந்தாமை காண் கின்றிலேம்.

அனுபவ மின்றெனின் பிரத்தியட்சத்திற்கு விஷயம் சம்பவிக்கின்றது. அதனாலேயே அதற்குப் பிரயோசனம் சித்திக் கின்றதெனின், நீகூறிய துண்மையே; இப்பிரயோசனம் பொருந் தாமையில்லை; அன்னியோன்னியாசிரயம் வருவதால்.

நான் அஞ்ஞன் என்னுமிடத்தில் இருக்கிற நகாரம் ஆத்மாவின்கண் ஞானமாத்திர அபாவத்தைக் கூறுவதின்று; ஞா னத்தோடு கூடிய அதில் அஃதின்மையின். அனுபவாபாவமு மின்று; ஞானமிருப்பதாகக் கூறியிருப்பதால், ஞானம் ஞானுபாவத் தைக் கூறாமையால். நிரர்த்தகமு (நிஷ்பிரயோஜனமு)ங் கூடா தென்னு மிதனாலேயே லட்சணையெனக் கூறிய லட்சணமே அவித்தை. அதனர்த்தமே சந்தேகமென்று கூறின், அதுபொருந் தாது; இரண்டு கோடியு (பட்சமு)ம் சமானமா யின்மையின். ஆண்டுப்பிரதியோகியின் நிவிர்த்தியினால் நகரத்தின் அர்த்தமாம்.

இங்ஙனம் ஈண்டுப் பிரதியோகி வியாப்பியமாயும் நிவர் த்தியமாயு முள்ள அர்த்தம் நகாரத்திற்கு வேறென, ஜாநாதி என்னும் வினைச்சொல்லோடு சேர்ந்த நகாரத்திற்கு ஓரிடத்தில் மேற்கூறிய லக்ஷணமுடைய அவித்தியா விஷயத்துவ சித்தியன் றிச் சந்தேகமில்லையென அவசியம் அங்கீகரிப்பதால் அதுவே (அவித்தையே) ஜாநாதி என்னும் வினைச்சொல்லோடு சேர்ந்த

† சமாவேசம் - சேர்க்கை.

ங்காரத்திற்கு யாண்டும் அதன் விஷயத்துவத்தைத் தெரிவிக்கின்றது. ஞானபாவகோடியாகிய மற்றது ஒழிகின்றதெனச் சந்தேகத்திற்கிடம் யாண்டுளது? (இல்லை). ஆகையால், இங்ஙனம் லக்ஷணைக்கு ஏது இராமலிருக்கும்போது அபாவ அபாவமும் ஆத்மாவின்கண் பிரத்தியட்சத்தினாற் கிரகிக்கப்பட மாட்டாது. ஆகையால் பரிசேஷத்தினால் மேற்கூறியலக்ஷணமுடைய அவித்தையே அஞ்ஞானென்னும் ஞானத்திற்கு விஷயமெனச் சித்தித்தது. அல்லது ஞானபாவ ஞானமிருக்கட்டும். இந்த அபாவமும் பிரதியோகியெவ்விடத்தில் நிஷேதிக்கப்படுகின்றதோ அதைவிட வேறு தத்துவமன்று; அதிகரண பாவமாயிருத்தலின். அன்னியசுபாவத்துவமோ வேண்டாம்; அன்னிய பாவத்துவமோ இருக்கட்டும்.

அதுவும் விரோத முடையது; பேதமிருப்பின் வாஸ்தவமாம். பேதமும் பிரமாணத்தினால்; பிரமாணமும் பிரதியோகியபாவத்தினால். அதிகரணத்தைப் பார்க்கினும் வேறு தத்துவமாகக் கடமில்லது பூதலம் என்னும் அபிக்ஞானம்போல் இதுவும் என்று ஆக்ஷேபித்தல் கூடாது. பிரதியோகியோடு கூட அதிகரணம் அனுபவிக்கும்போது இவை யுண்டாகமாட்டா. பிரதியோகிஸ்மரணமிருக்கும் போது அனுபவிக்கப்படுவதான அதிகரணத்திலோ உண்டாகலாம். இப்படிப் பொருத்த மிருக்கும் போது வேறு தத்துவத்தை விஷயமாகக்கற்பித்தல் கூடாது. கூடாதது யாதெனின், பாதகாபாவம் சொல்லப்பட்டே யுளது; பாதகமோ கற்பனா கௌரவமே. அங்ஙனமன்றோ, வேறு தத்துவம் ஒன்று கற்பிக்க வேண்டும். அதன் பிரத்தியக்ஷத்தின் பொருட்டு இந்திரிய சம்பந்தம் கற்பிக்கவேண்டும். அதுவும் சையோகமுதலியன சம்பவிக்கின்றதில்லையெனச் சம்யுக்த விசேஷணத்துவ முதலியன கற்பிக்கவேண்டும். இதைவிட மேற்கூறிய லக்ஷணமுடைய அதிகரணத்திற்கு வியவகார விஷயத்தில் அங்கீகாரம் சிரேஷ்டம். இவ்வாறாக, ஞானபாவத்தாலும் பிரதியோகி ஸ்மரண மிருக்கும் போது அனுபவிக்கப்படாமல் இருக்கிற அதிகரணம் ஞாதாவே. அதுவும் கேவலம் அந்தக் கரணமன்று; ஜடத்தன்மையால். கேவலமான ஆத்மாவும் ஞாதாவன்று; பரிணாமித்தன்மை யின்மையினாலும் குணத்தன்மை யின்மையினாலுமென்க.

ஆகையால், இரண்டிற்கும் பேதாத்தியாசமும் ஆத்மாத்தியாசமும் மேற்கூறிய லக்ஷணமுடைய அவித்தை ஆதயா

வென் றேற்பட்டது. அவித்தையின்கண்ணேயே நான் அஞ்ஞன் என்னும் பிரதீதி பிரமாணம்.

அனுமானமும் பிரமாணம்:—விவாதத்திற்கு விஷயமான பிரமாண ஞானம் தன்து பிராகபாவத்தினும் வேறாகவும், தனது விஷயத்தை மறைக்கிறதாகவும், தன்னால் நிவிர்த்திக்கப் படுகிறதாகவும், தனது தேசத்திலிருக்கிற தாகவு முள்ள † வஸ்து அந்தர பூர்வகமாயிருக்கின்றது; அப்பிரகாசித அர்த்தத்தைப் பிரகாசிப்பிக்குந் தன்மையால்; அந்தகாரத்தில் (இருட்டில்) முதலிலுண்டான விளக்கினொளிபோல. வஸ்து பூர்வகம் என்று கூறின், ஆத்ம வஸ்து பூர்வம் இருப்பதால் அர்த்தாந்தரம் (வேறர்த்தம்) வருகின்றது; அதற்காக வஸ்து வந்தர மென்று கூறப் பட்டது.

ஆயினும், விஷயமான வஸ்து வந்தரத்தில் அர்த்தாந்தரம் நேரிடுகிறது. அதற்காகத் தனது தேசத்தி லிருக்கின்றது என்று கூறப்பட்டது. அதிருஷ்டாதிகளை விலக்குதற் பொருட்டுத் தன்னால் நிவிர்த்திக்கப்படுகின்றது என்று கூறப்பட்டது. உத்தர ஞானத்தினால் நிவிர்த்திக்கப்படும் பூர்வ ஞானத்தை விலக்குதற் பொருட்டுத் தனது விஷயத்தை மறைக்கின்றது என்று கூறப்பட்டது. பிராகபாவத்தை விலக்குதற்பொருட்டுத் தனதுபிராகபாவத் தினும்வேறென்று கூறப்பட்டது. பிராகபாவவியதிரிக்த (வேறு) பூர்வகமென்று சொன்னால் விஷயத்தினால் அர்த்தாந்தரம் வருகிறது. அதன்பொருட்டுத் தனது விஷயத்தை மறைப்பதென்று சொல்லப்பட்டது. அவ்வாறுய அந்தகாரத்தை (இருளை) விலக்குதற் பொருட்டுத் தன்னால் நிவிர்த்திக்கப்படுவ தென்று கூறப்பட்டது.

விஷயத்திலுள்ள ‡ அஞ்ஞாதத் தன்மையை விலக்குதற் பொருட்டுத் தனதுதேசத்தி லிருக்கின்றதென்று கூறப்பட்டது. மித்தியா ஞானத்தை விலக்குதற் பொருட்டு வஸ்துவந்தரமென்று கூறப்பட்டது. தாரைபாய் வருகின்ற ஞானத்தில் வியபிசாரத்தை விலக்குதற் பொருட்டு அப்பிரகாசித மென்று கூறப் பட்டது.

---

† வஸ்து அந்தரம்-வேறுவஸ்து; பூர்வகம்-முன்னிலை.

‡ அஞ்ஞாதம் - அறியப்படாமை.

மத்தியிலுள்ள தீபப்பிரபை(விளக்கொளி)யில் சாத்திய சாதன வைதுரியத்தை (நீக்குந்தன்மையை)விலக்குதற் பொருட்டு முதலிலுண்டான தென்று விசேஷணங்கொடுக்கப்பட்டது. ஆரிய கிரணத்தினுல் வியாப்தமான தேசத்திலுள்ள தீபப்பிரபையை நிவி ர்த்தித்தற் பொருட்டு அந்தகாரமென்று கூறப்பட்டது. ஞான சாதகமான பிரமாணத்தில் வியபிசாரமாமென்றுசங்கியாதொழிக; அங்கீகரித்ததைக் குறித்து அசத்துவ நிவிர்த்தி மாத்திரத்திற்குப் பிரமாணமாகச் செய்யப்பட்டமையின். "அநுமானுதிகளால் அசத்துவநிவிர்த்தி செய்யப்படுகிறது" என்று கற்பதருகாரரால் தேவதாதிகரணத்திற் கூறப்பட்டிருக்கின்றது.

அற்றேல், திருஷ்டாந்தம் சாதன விகலமா (குறைவா) மெனின், அது கூடாது; பிரகாசசப்தத்தினுல் தமோவிரோதி யாகாரத்தின் விவட்சை (கூறும் விருப்பம்) இருத்தலின்.

"ஈண்டு ஹேது திருஷ்டாந்தங்கட்கு ஏகப்பிரகாசரூப மான சம்பந்தமின்மை சங்கித்தல் கூடாது; தமோவிரோதி யாகிய ஆகாரமோ பிரகாச சப்தத்தாற் கூறப்படுகின்றது. அந்த ஆகாரத்தினுல் இரண்டிடத்தும் ஐக்கிய மிருக்கின்றது" என்று விவரண விவரணக்கிரந்தத்தில் சகஜசர்வஞ்ஞ விஷ்ணுபட்டோ பாத்தியாயரால் கூறப்பட்டிருக்கின்றது.

"அப்பிரகாசிதமான வஸ்துவின் பிரகாசவியவகார ஹேதுத்தன்மை ஹேதுசப்தத்தினர்த்தம். அதுவும் இரண்டி டத்தும் அநுகதமாயிருத்தலின் (தொடர்ந்திருப்பதால்) அசித்தி யாதி தோஷமின்று" என்று நரேந்திரகிரி ஸ்ரீசரணரால் கூறப் பட்டிருக்கின்றது.

அது "மீண்டும் அல்லது அதிசயமாக அந்தத்தில் விசு வமாயா நிவிர்த்தி" என்றற் றொடக்கத்துச் சுருதியினுலும், "யோகி ஹிருதயத்தில் எவரைத் தியானம் பண்ணும்போது விஸ்தார மான அவித்தையாய மாயையைத் தாண்டுகின்றாரோ, ஒன்றற் கும் விஷயமற்றவராயும் வித்தியா சொரூபியாயுமுள்ள அவரை நமஸ்காரம் பண்ணுகின்றேன்" என்னும் ஸ்மிருதியினுலும் கூறப் பட்டுளது. க்ஷபணகனுடைய பாதத்தைப் பிரமாணமாகவும் சரண மாகவும் வைத்துக்கொண்டு பேதாபேதவாதியட்குப் பாவவடி வான அஞ்ஞானமில்லை, ஆதலால் ஞானப்பாவாந்தா விருக்கின்ற

தென்று எது பாஸ்கராசாரியாராற் கூறப்பட்டதோ அஃதிதனுல் தள்ளப்பட்டது. அங்ஙனமே " பரரூபத்தை நோக்காமலிருப்பது யாதோ அதுவே அவித்தை" என்று பாஸ்கராசாரியராற் செய் யப்பட்ட சாரீரகமீமாம்சா பாஷியத்திற் கூறப்பட்டிருக்கின்றது.

பாவவடிவமான அஞ்ஞானத்தை யங்கீகரியாத பட்சத் தில் ஜீவேசுவராதி விபாகம் பொருந்தாமற்போம்.

பரமாத்மாவின் பாவிகமான (உண்டாகின்ற) அம்சம் ஜீவனென்று சொல்லுதல் கூடாது; நிஷ்களம், நிஷ்கிரியம், சாந் தம், நிரவத்யம் (தோஷமற்றது), நிரஞ்சனம் (அவித்தையற் றது) என்றற் றொடக்கத்து சுருதிவிரோதம் வருவதால்.

சில சாக்தர்கள் "மாயாசப்தத்தின் அர்த்த பூதமாயும், ஜகத்காரணமென வங்கீகரித்திருப்பதாயும், சத்தியமாயுமுள்ள சத்தியை அங்கீகரித்து மாதுலிங்கம், கதை, கேடையமென்னு மிவற்றைத் தரித்த மகாலட்சுமி அந்தமாயைக்கு முதலாவது அவதாரம்"என்று வர்ணிக்கின்றார்கள்."அந்தமகாலட்சுமியும் காள ராத்திரி, சரசுவதியென்னு மிரண்டு சக்திகளை யுண்டுபண்ணிப் பிரம்மாவான புருஷனையும் ஸ்ரீதேவியான ஸ்திரீயையும் உண்டு பண்ணினுள். தான் மிதுனத்தை (கூட்டத்தை) யுண்டு பண்ணித் தன்னுடைய பெண்களைப் பார்த்து நான் மிதுனத்தை யுண்டுபண் ணினதுபோல் நீங்களும் மிதுனத்தை யுண்டுபண்ணவேண்டு மென்று கூறினுள். பிறகு காளராத்திரி விஷ்ணுவானபுருஷனையும், கௌரியென்னும் பெண்ணையும் உண்டுபண்ணினுள்; சரசுவதி தேவியும் மகாதேவனுன புருஷனையும், ஸ்வரா என்னும் பெண் ணையும் உண்டு பண்ணினுள். அதன்பிறகு ஆதியான மகாலட்சுமி யானவள் விவாகம்பண்ணினுள் பண்ணியும்வைத்தாள். இங்ஙனம் பிரம்மாவிற்கு ஸ்வரா என்பவளையும், விஷ்ணுவிற்கு ஸ்ரீயென்ப வளையும், சிவனுக்குக் கௌரியென்பவளையும் கொடுத்து † சக்தி யுக்தர்களான அவர்கட்குச் சிருஷ்டி ஸ்திதி சம்மாரமென்னுங் கர்மங்களையுங் கொடுத்தாள்" என்றுங் கூறுகின்றார்கள். இந்த மதம் சுருதியாதி மூலப் பிரமாணமின்மையின் தன்னுடைய யுக்தி மாத்திரத்தாற் கற்பிக்கப்பட்டதென்று சொரூபப் பிரகாரமே நிரா கரிக்கத் தக்கது. ஆகையால் இஃது உபேட்சிக்கத் தக்கதாம்.

† சக்தியுக்தர்களான-சக்தியோடுகூடியவர்களான.

ஆகவே, பிரத்தியகாத்மாவினிடத்திற் றோன்றுகிற பிரமாத்ருத்துவ முதலிய பிரபஞ்சம் அநிர்வசநீய அநாதி அவித்தையின் காரியமே. ஆகையால் அதிகமாய்க் கூறியதமையும்.

அற்றேல், பிரமாத்ருத்வ முதலியவற்றிற்கு † ஆவித்தியகத்துவம் யாதுபற்றிக் கூறப்பட்டது? பிரஹ்ம ஞானத்தினால் நிவிர்த்தியடையும் பொருட்டா? அல்லது ஜீவனுக்குப் பிரஹ்ம பாவத்தின் பொருட்டா?

முதலாவது பட்சங்கூடாது; சாஸ்திரப் பிராமாண்யத்தினாலேயே சத்திய வஸ்துவிற்கும் ஞானத்தினால் நிவிர்த்தி பொருந்துமாகையாலும் உபலம்பமா (வெளிப்படையா) தலாலுமென்க.

அங்ஙனமன்றோ, "பிரம்மஹத்திசெய்தவன் சேது தரிசனத்தால் பிரம்மஹத்தியினின்றும் விடுபடுகின்றான்" என்றற்றொடக்கத்து வாக்கியங்களால் பாபம் நிவிர்த்திக்கப்படுகின்றது. விஷயத்தில் தோஷ தரிசனத்தினால் ராகம் தகிக்கப்படுகின்றது; கருடத்தியானத்தினால் விஷம் சாந்தியையடைகின்றது.

இங்ஙனங் கர்த்திருத்வாதி பந்தம் பாரமார்த்திகமாயினும் தத்துவ ஞானத்தினால் நிவிர்த்தி யடைகின்றது.

இரண்டாவது பட்சமுங்கூடாது; ‡ ஔபாதிகமான ஜீவத்தன்மைக்கு உபாதி நிவிர்த்தி வரும்போது பிரஹ்ம பாவம் சம்பவிக்கின்றது. ஆகையினால் பந்தம் ஆவித்தியகத்துவமென்று கூறியது தோஷமுடையதெனின்,

அற்றன்று; இது நிர்த்தோஷமுடையது; ஆத்மாவைப் போன்ற சத்தியவஸ்துவிற்கு ஞானத்தால் நிவிர்த்தி பொருந்தாமையாலும், பந்தத்திற்கு மித்தியாத்தன்மை யன்றிச் சாஸ்திரப் பிராமாண்யத்தாலும் நிவிர்த்தி சித்திக்கமாட்டாமையாலுமென்க.

சாஸ்திரமும் "லோகத்தி லறியப்பட்ட சாமர்த்தியமுடையசப்தம் வேதத்திலும் போதகமா யிருக்கின்றது" என்னும் நியாயத்தினால் லோகத்தி லறியப்பட்ட பதசக்தியையும் பதார்த்தத்திற் கிருக்கிற யோக்கியதையையு மங்கீகரித்துப் பிரவிர்த்திக்கின்றது.

---

† ஆவித்தியகத்துவம்-அவித்தையின் காரியத்தன்மை.

கம் - உபாதியுடையது.

அன்றாயின், "ஆதித்யன்யூபம்" "யஜமானன் பிரஸ்தரம்" என்றற் றொடக்கத்து வாக்கிய சமுதாயத்திற் குள்ளபடி கேட்கப்பட்டிருக்கிற அர்த்தத்திற் பிராமாண்யம் வருமாகையாலென்க.

வைதிகமானகிரியைகள் பிரத்தியட்சத்தில் நாசமடைவதால் அவற்றில் பரலோகபலத்தைக் குறித்துச் சாதனத் தன்மையானது வேறு விதத்தாற் பொருந்தாமையின் அபூர்வ மங்கிகரித்ததற்கும் அநுபபத்தி சம்பவிக்கின்றது.

லோகத்திலும் சுக்திவியக்தியின் தத்துவம் அபிவியக்தமாயிருக்கும்போது தள்ளத்தக்கதான ஆரோபித இரஜதத்திற்கு மித்தியாத்துவத்தைக் காணும்போது அந்தத் திருஷ்டாந்தத்தைப்பற்றலால் ஆத்தியந்திகமான தத்துவ சாட்சாத்கார வித்தையினால் நிவிர்த்திக்கக்கூடிய ஆவித்தியகமான பந்தத்திற்கு மித்தியாத்தன்மை அநுமானம் சம்பவிப்பதால்;

விமத (சந்தேகவிஷய)மான பிரபஞ்சம் மித்தை; அதிஷ்டான தத்துவ ஞானத்தால் நிவிர்த்தியடைவதால்; சுத்திருப்யம் போல் என்பது அநுமானம்.

விமதமான பிரபஞ்சம் சத்தியம்; தோன்றுகிறபடியால் என்னும் பிரதிப் பிரயோகத்தில் சமானபலத்தன்மையிருத்தலின் பாதப்பிரதிரோதமாம். பிரதிரோதபயத்தால் † அன்யதரதோஷத்வம் சம்பவித்தலி னென்று கூறற்க; கானனீர் முதலிய விடங்களில் வியபிசாரம் வருவதால்.

பாதிக்கப்படாமலிருக்குந் தன்மை யென்னும் விசேஷணங் கொடுப்பதால் தோஷமின்றென்று கூறுவையாயின் அங்ஙனங் கூறற்க; விசேஷணம் சித்தியாமையின்.

இவ்விஷயமாக வினாவில் நீ விடைகூறத்தக்கவனாகின்றாய்.

சிலபுருஷர்களுக்குச் சிலகாலம் அபாதிதமாயிருக்குந் தன்மை ஹேதுவிற்கு விசேஷணமாகச் செய்யப்படுகிறதா? அல்லது சர்வப்பிரகாரத்தாலும் பாதமற்றதன்மை ஹேதுவிற்கு விசேஷணமாகச் செய்யப்படுகின்றதா?

முதலாவதுபட்சங் கூடாது; "அநுமானஞ் செய்யத்தக்க சமர்த்தர்களால் பிரயாசத்தினால் அர்த்தம் அநுமிக்கப்படி.

† அன்யதரம்-இரண்டிலொன்று.

னும் அஃது இவர்களினும் வேறான சமர்த்தர்களால் வேறு விதமாகப் பொருந்தச் செய்யப்படுகின்றது" என்னும் நியாயத்தினால் மூன்று நான்குபுருஷர்களால் பிரதிபாதனஞ் செய்யப்பட்டிருந்தாலும் வேறுஞாதாவினால் வேறுபிரகாரத்தை யங்கீகரித்துப் பிரதிபாதனம் பண்ணப்படுவதால்.

இரண்டாவது பட்சமுங்கூடாது; சர்வப் பிரகாரத்தினாலும் பாதமற்றதன்மை அசர்வஞ்ஞனால் (கிஞ்சிஞ்ஞனால்) அறிய முடியாமையின். இங்ஙனமாயின், ஞானாத்மாவிற்கும் சத்தியத்துவம் அறியப்படவில்லையென்று கூறுவையாயின், அங்ஙனங் கருதற்க; "அது சத்தியம் அஃது ஆத்மா" என்று வேதம் கூறுவதால்.

பிரபஞ்சத்திலும் இந்த நியாயம் பொருந்துமென் றெண்ணற்க; அப்படிப்பட்டசுருதி காணப்படாமையின், மாறாக அத்விதீயத்தைப் பிரதிபாதிக்கிற சுருதிக்குப் பிரபஞ்ச மித்தியாத் தன்மையிலேயே பட்சபாத மிருத்தலின்.

அற்றேல், கல்பனாமாத்திர சரீரமான பட்ச, சபட்ச, விபட்சாதிகள் சர்வ சுலபமாகையால் ஜய (வெற்றி) பராஜய (தோல்வி) வியவஸ்தையினால் வாதகதையென்பது எங்ஙனம் பொருந்தும்?

இதில் என்ன ஆட்சேபம்; "இங்ஙனம் மூன்று நான்கு ஞானத்தின் உற்பத்தியே தவிர அதிகமானஞானமில்லை" என்னும் நியாயத்தினால் மூன்றுநான்கு கட்சியினால் முடிவடைந்ததாயும் அநந்த ஆபாச லட்சண * லங்கிதமாயுமுள்ள தூஷணபூஷணங்களை அவ்விடத்தில் கதைக்கு அங்கமாக வங்கீகரிக்கப்பட்டிருப்பதால்.

ஆகையினாற்றான் "வியாவகாரிகமான பிரமாண சத்தையைக் கிரகித்துக்கொண்டு விசாரம் ஆரம்பிக்கப்படுகின்றது" என்று கண்டனகாரராற் கூறப்பட்டிருக்கின்றது.

பேதக்கிராகிகமான பிரமாணங்களோடு அத்வைத சுருதிக்குக் † கீழ்ப்பட்டதன்மை யிருக்கின்றதென்று சங்கித்தல் கூடாது; பிரஹ்மம் பாரமார்த்திகமாகையால் அந்தப் பாரமார்த்திக தத்துவத்தைப் போதிக்கிற பிராமாண்யத்தையுடைய சுருதிக்கும் வியாவகாரிகப் பிராமாண்யத்தையுடைய பிரத்தியட்சாதிகட்கும்

* லங்கிதம்-குறிக்கப்படுவ துடையது.

† கீழ்ப்பட்டதன்மை - பாதிக்கப்படுந்தன்மை.

விஷயம் பின்னமாயிருப்பதால் ஒன்றற்கொன்று பாத்திய பாதக பாவம் சம்பவியாமையின்.

"அங்ஙனமே அத்வைத சுருதியைப் பாதிப்பதிற் பிரத்தியட்சம் சமர்த்தமன்று; உன்னுடைய மதத்திலும் அநுமானாதிகளும் சமர்த்தமன்று. கையிற்கிடைத்த சிந்தாமணியைச் சமுத்திரத்தி லெறிய விரும்புவையாயின், அப்போது இந்தச்சுருதிக்குப் பாதக சாதனத்தைத் தேடும்பொருட்டுப் புத்தியைச்செலுத்துக" என்றிதுவுங் கண்டனகாரராற் கூறப்பட்டிருக்கின்றது.

ஞானமானது அஞ்ஞான நிவர்த்தகமென்று எதனாற் சொல்லப்பட்டிருக்கின்றதோ அதனால் தத்துவஞானத்தினால் இந்தப் பந்தத்திற்கு நிவிர்த்தியுண்டாகும் பொருட்டு அஞ்ஞான கல்பிதமென் றொப்புக் கொள்ளல்வேண்டும். சத்தியமான பாவத்திற்கும் சேதுதரிசனத்தினால் நிவிர்த்தியுண்டாமென்று யாது கூறப்பட்டதோ அஃது அயுக்தம். விகிதமான கிரியாநுஷ்டானத்தினாலுண்டான தர்மம் நிச்சயமாக அதர்ம நிவர்த்தகமாகையால் "தர்மத்தினால் பாபத்தை நிவிர்த்திக்கிறான்" என்னும் சுருதியினால் பிரமாணவஸ்துவின் பாதந்திரசாலியான தரிசனக்கிரியைக்கு விகிதமான புருஷப் பிரயத்னாதீனத்தன்மை யின்மையின் விதானம் (விதி) சம்பவிக்கமாட்டாது; "அந்தமகோததியில் ஸ்நாநம் பண்ணிப் பிரம்மஹத்தியினா லுண்டான தோஷத்தைவிடுகின்றான்" என்றற் றொடக்கத்து ஸ்மிருதியினால் விதிக்கப்பட்ட பிரம்மசரியமாகிய அங்கத்தோடுகூடின தூரதேசகமனசாத்தியமான பிரம்மஹத்தி நிவிர்த்தியாகிய பலத்தையுடைய சேதுஸ்நானத்திற்குப் † பிரசம்சார்த்தத் தன்மையுண்மையின் எதனுடைய தரிசன மாத்திரத்தாலேயே பாவநிவிர்த்தி யுண்டாகின்றதோ அதில் ஸ்நானஞ்செய்வதால் என்னபிரயோசன முண்டாமென்று கேட்பானேன்? அன்றாயின், தூரதேச கமனத்திற்கு நிஷ்பிரயோசனத்தன்மை சம்பவிக்கும்; ஆண்டுள்ள கர்த்தப (கழுதை) முதலியவற்றிற்கும் அனர்த்த நிவிர்த்தி சம்பவிக்குமாதலாலும் அந்தஜனுக்கு அநர்த்த நிவிர்த்தி சம்பவியாது போய்விடுமாகையாலு மென்க.

அற்றேல், "அக்நிசயனம், கபிலை, இராஜா, பதிவிரதை, சந்நியாசி, சமுத்திர மென்னு மிவையாவும் தரிசனமாத்

† பிரசம்சார்த்தம் - கொண்டாடல்.

திரத்திஞல் பரிசுத்தம்பண்ணும். ஆதலின் இவர்களை நித்தியமும் தரிசித்தல்வேண்டும்'' என்று சிலவிடத்தில் தரிசனக்கிரியைக்கும் விதி காணப்படுகின்றதெனின்,

அதுகூடாது; அவ்விடத்திலுமிந்த அநுபபத்தியிஞலே யே அக்நிசயன முதலிய சிஷ்ருஷையிலேயே தாத்பரிய நிச்சய மிருப்பதால்: விஷயத்தில் தோஷத்தைக் கண்டிருப்பதால் ராகத் திற்கு விரோதிபூதமான அநபிரதி யென்னும் பேருடைய வைரா க்கிய முண்டாவதால் ராகம் நிவிர்த்தியாகும்போது அதனுடைய அதரிசன மாத்திரமாம்; ஆகையால் வியபிசாரமின்று.

கருடத்தியான முதலியவற்ருல் சத்தியமான விஷாதி நிவிர்த்தியாகின்றனவென்று யாதுகூறப்பட்டதோ அதுவும் விதிக் கப்படவில்லை. அவ்விடத்திலும் மந்திரப் பிரயோகம் முதலிய கிரியைக்கே விஷாதி நிவர்த்தகத்தன்மை யுளதாதலாலும், தியா னத்திற்குப் பிரமாத்தன்மை யின்மையாலுமென்க.

ஔபாதிகமான ஜீவத்தன்மைக்கு உபாதி நிவிர்த்தியி ஞல் நிவிர்த்தி வரும்போது பிரஹ்மத்துவம் பொருந்துகின்றமை யின் அதற்காக அனர்த்த மித்தியாத்துவமில்லை யென்று யாது கூறப்பட்டதோ அதுவும் ஆற்று வெள்ளத்திலகப்பட்டுச் செல்லு கின்றவன் நாணலைப் பிடித்ததையொக்கும்; விகற்பத்தைக் சகி யாமையின்.

உபாதியைச் சத்திய மென்றுகருதிப் பிரஹ்மபாவம் கூறப்படுகின்றதா? அல்லது மித்தியாத்துவங்கருதிக் கூறப்படு கின்றதா?

முதலாவது பட்சங்கூடாது; பிரமாண மின்மையின். இரண்டாவது பட்சமுங் கூடாது; இஷ்டமுடைமையின்.

ஆதலின், பேதம் ஆவித்தியக மென்று சுருதியின்கண் அத்விதீயத்துவம் பொருந்தும் பொருட்டுச் சொல்லப்பட்டிருக் கின்றதே யன்றி மற்றொன்றைக் கருதியன்று.

ஆத்ம தத்துவம் வாஸ்தவத்தில் சர்வோபத்திரவ மற்ற தாயின் அது தேகாதிவடிவ காராக்கிருக(சிறைக்கோட்ட)த்தைச் செய்து செய்து அடிக்கடி அதில் ஏன் பிரவேசித்தல் வேண்டும்?

இது வெகு அசாரம்; அவித்தை அநாதியென்பத ஞலேயே யுத்தரம் கூறப்பட் டிருத்தலின். ஆகையிஞல், புத்தி

சாலியால் நிவிர்த்தியுபாயம் தேடத்தக்கதே யன்றி ஆச்சரிய மடையத் தக்கதன்று.

ஆகையால், தத்வமஸ்யாதி வாக்கியத்தினா லுண்டான வித்தையினால் அவனது அவித்தை நிவிர்த்தியாகும்போது நிரதிசயாநந்த வடிவ ஆத்மலாபமாகிய பரமபுருஷார்த்தம் சித்திக்கின்றது.

“ஆத்மலாபத்தைவிடப் பரமில்லை” என்று ஆபஸ்தம்ப ஸ்மிருதியிற் கூறப்பட்டிருக்கின்றது.

அற்றேல், இந்த ஆத்மா நித்யப்பிராப்தர்; தாமே தமக்கு அப்பிராப்தராகா ரெனின்,

வாஸ்தவம். ஆயினும், அந்த அநாதிமாயை † க்ஷீரோதகம் போல் தனியே யிருக்கமாட்டாது. ஆகவே, எங்ஙனம் வேடராதிகளால் தங்கள் புத்திரர்களுடன் பால்ய முதற்கொண்டு வளர்க்கப்பட்ட இராஜகுமாரன் அச்சாதியுடையவனாகத் தன்னை யறிந்து காலாந்தரத்தில் தனது பந்துக்களால் நீ வேடனன்று க்ஷத்திரியகுலத்திற் பிறந்தவ னென்று போதிக்கப்பட்ட பிறகு தன்னிடத்திற் றன்னை யெவ்வா றடைந்தானோ அவ்வாறே வேசியைப் போன்ற அநாதி அவித்தையினால் அன்னிய சுபாவத்தை யடைந்த ஆத்மா மாதுர்ஸ்தானத்தை யடைந்த தத்துவமஸியாதி சுருதியினால் சுபாவத்தை யடைகின்றது.

“நீசர்களுடைய (வேடர்களுடைய) கிருகத்தில் அவர்களுடைய குமாரர்களோடு வெகுகாலம் வளர்ந்த இராஜகுமாரன் தன்னை அச்சாதிய னென்று அறிந்தான்; அஞ்ஞானத்தால் பந்தாதிகளோடு சேர்ந்து வசித்த புருஷன் அதுபோலாகின்றான்; சுகதுக்கங்களோடு கூடியவனாகத் தன்னை மித்தையாகவே நினைக்கின்றான். துஷ்டர்களைச் சிக்ஷிக்கின்றவனாகவும், தாதாவாகவும், போகபரனாகவும், சர்வ வியாபகனாகவு மிருக்கின்றவன் யாவன் அவ்வாசனே நீயாகின்றாய் யென்று இரக்ஷிக்கிறவன் வாயினாற் கேட்டு எங்ஙனம் குழந்தையானது ராஜாவாய் வெற்றியின் பொருட்டே முயற்சிக்கின்றதோ அங்ஙனம் புருஷனும் தத்துவமஸி யென்னும் சுருதியால் போதிக்கப்பட்டுப் பாபத்தை நிவிர்த்தித்துப் பிரஹ்மமேயாகின்றான்” என்று பெரியோர்கள் கூறுகின்றார்கள்.

---

† க்ஷீரோதகம் - பாலோடு கூடியநீர்.

பிரஹ்மபாவமாகிய தாதாத்மியம் (ஒற்றுமை) இருவருக்கா? அல்லது ஒருவருக்கா?

முதலாவது பக்ஷங் கூடாது; அத்வைத பங்கம் வருவதால். இரண்டாவது பக்ஷமுங் கூடாது; சம்பவியாமையா லென்று பரவாதிகளா லெது ஆக்ஷேபிக்கப் பட்டதோ அது சரியன்று, தத்துவமஸியாதிகட்கு அவித்தையினுற் கற்பிக்கப்பட்ட பேத நிவிர்த்தியில் கருத்தாகையால் தாதாத்மியங் கூறுவதிற் பிரா மாண்யம் பொருந்துகின்றமையின். "இருவருக்குந் தாதாத்மிய மில்லை; ஒருவருக்குமில்லை; அத்வயமா யிருப்பதால். இங்ஙன மாயின் சுருதிக்கு அப்பிரமாண்ய மில்லை; ஆரோப நிவிர்த்தி மாத்திரத்தினுல்" என்று வித்துவான்களால் அந்தப் † பரியனுயோக பரிகாரங்கள் கூறப்பட்டிருக்கின்றன.

ஆகையினுல், தத்துவமஸி யென்று தத்துவம் பதார்த்த சோதனமான பாவனு பலத்தா லுண்டான சாக்ஷாத் காரத்தினுல் அநாதியான அவித்தியா நிவிர்த்தி வரும்போது சச்சிதானந்தகரசப் பிரஹ்மமாகின்றன்.

ஆகையால், முதற் சூத்திரத்திற் கூறிய பிரஹ்ம விசாரம் யுக்தம். (வேதாந்தசாஸ்திரத்திற்கு) "அஞ்ஞாதமான பிரஹ்மம் விஷயம்; ஞாதமான (அறியப்பட்ட) அதுவே பிரயோஜனம்; முமுக்ஷு அதிகாரி, சம்பந்தம் சங்கதியால் கருதிக்குண்டு".

‡ "ஜன்மாத்யஸ்ய யத:" என்று இரண்டாவது சூத்திரத்தில் சொரூபலக்ஷண தடஸ்தலக்ஷணங்களால் பிரஹ்ம மானது நிரூபிக்கப்பட்டது. அதற்குள், சொரூபத்தி லடங்கியிருப்பதாயும் வியாவர்த்தகமாயு மிருப்பது சொருபலட்சணம். அது "சத்தியம், ஞானம், அனந்தம், பிரஹ்மம்" என்றுற்ரெடுக்கத்தவேதாந் தங்களில் கூறப்பட்டிருக்கிறது. இந்த லக்ஷணம் சத்தியஞானாதி யான சொரூபத்தி லடங்கியதாயும் வியாவர்த்தகமாயு மிருக்கின் றது.

"அதிவிஸ்தாரம் இந்தப் புஸ்தகத்தில் அடங்காதெனவே" என்று [illegible] விசாரணை [illegible] கூறுகின்றனர்.

† [illegible]

‡ [illegible] என்பது.

ஜகத்தினது ஜன்ம ஸ்திதி த்வம்சங்கள் எதனால் சித்திக்கின்றனவோ அது சொரூப தடஸ்தலக்ஷணங்களாற் காட்டப்பட்டது.

$ "சாஸ்திர யோநித்வாத்" என்னும் மூன்றாவது சூத்திரத்தில் முதலாவது வர்ணகத்தால் ஆறாம் வேற்றுமைத் தொகையை யனுசரித்துச் சர்வஞ்ஞத்தன்மை கூறப்பட்டது.

இரண்டாவது வர்ணகத்தால் அன்மொழித் தொகையையு மனுசரித்துப் பிரஹ்மத்திற்கு வேதாந்தங்கள் பிரமாணங்களென்று கூறப்பட்டன.

¶ "தத்துசமந்வயாத்" என்னும் நான்காவது சூத்திரத்தில் முதலாவது வர்ணகத்தினால் வேதாந்தங்களுக்குப் பிரஹ்மத்தினிடத்திலே தாற்பரிய மிருக்கிறதென்று நிரூபிக்கப்பட்டது.

இரண்டாவது வர்ணகத்தினால் வேதாந்தங்கள் உபாசனா விதிக்கு சேஷ (அங்க) மாகவே பிரஹ்மம் பிரதிபாதிக்கப்பட்ட தென்பது தள்ளப்பட்டது.

ஈண்டு மார்க்கமாத்திரம் காட்டப்பட்டது; எஞ்சியது சாஸ்திரத்திலேயே வெளிப்படை.

எல்லாம் சுத்தம்.

---

சர்வதரிசன சிரோலங்கார ரத்தினமாய சாங்கரதரிசனம் முற்றிற்று.

---

ஸ்ரீ சாயணாசாரிய ரருளிச்செய்த
சர்வதரிசன சங்கிரகம் முற்றிற்று.

குருவே துணை.

---

$ சாஸ்திரத்தினுடைய காரணமென்பது ஒருபொருள்; சாஸ்திரம் காரணம் எதற்கு என்பது மற்றொருபொருள்.

¶ அதுவோ சமன்வயத்தாலென்பது.

# வேதாந்த புஸ்தகசாலையும்,

## சச்சிதானந்த அச்சியந்திரசாலையும்,

## கோமளேசுவரன்பேட்டை, சென்னை.

## NEW EDITIONS

---

### பெருந்திரட்டு.

இந்நூல் சாஸ்திரரூபமாக 137 நூல்களினின்றுந் திரட்டப்பட்ட 2813 செய்யுட்களையுடையது. இது கலைக்கட்டளை அநுபவக்கட்டளை யென்று மிருபெரும் பிரிவுகளும், 28 பனைகளும், 218 அதிகாரங்களுமாக வகுக்கப்பட்டுள்ளது. 7 பிரதிகளைக்கொண்டு பரிசோதித் தச்சிடப்பட்டிருக்கின்றது.

குறுந்திரட்டோடுகூடிய புதியபதிப்பு. விலை ரூபாய் மூன்று.

---

### தர்க்கபரிபாஷை (விரிவான குறிப்புரையுடன்).

சர்வவித்தைக்குந் தீபமாயும், சகல கர்மங்கட்கு முபாயமாயும், சகல தர்மங்கட்கு மாசிரயமாயுமுள்ள தர்க்கசாஸ்திரம் சம்ஸ்கிருதத்திற் பிரபலமாயிருப்பதுபோல் தமிழிலின்மையின் அக்குறை நிவிர்த்தித்தற்பொருட்டுத் துறைமங்கலம்—சிவப்பிரகாச சுவாமிகளால் மொழி பெயர்க்கப்பட்ட தர்க்கபரிபாஷை சட்தரிசனங்களு ளொன்றாகிய நியாய சாஸ்திரத்தை யநுசரித்துப் பிரமாணமுதல் நிக்கிரக மீறாயுள்ள சோடச (பதினாறு) பதார்த்தங்களை சங்கிரகமாக விரூபிப்பதாயிருத்தலின், அது பிரஹ்மஸ்ரீ-விஷ்ணுபுரம்—ஸ்ரீராமசந்திர சாஸ்திரியாரவர்களா லுன்னிலையிற் பரிசோதித்துச் செப்பஞ்செய்யப்பட்டுத் தர்க்கபரிபாஷை செய்யும் யாவருக்கும் பிரமாண முதலியவற்றின்பதார்த்தஞானம் எளிதி லுண்டாகுமாறு அவசியம் வேண்டு மிடங்களில் விரிவாகக் குறிப்புரை யெழுதப்பட்டுள்ளது. விலை ரூபாய் ஒன்று.

---

### ரிபுகீதைத்திரட்டு (குறிப்புரையுடன்).

மகா இதிகாசங்களு ளொன்றாகிய சிவரகசியத்தில் ஆறாவது அம்சத்திலுள்ள ரிபுகீதை வடமொழி யெல்லார்க்கே யன்றித் தமிழருக்கு முபயோகமாகாதிருத்தலை நோக்கி உலகநாதசுவாமிக ளவர்களால் 1924 பாடலாகத் தமிழில் மொழிபெயர்த் தருளப்பட்டது. அது நவீனர்க்க ளியாவருக்கும் பெரிதும் உபயோகமாகும்படி விஷயங்கொருக்கம் விடாது 874 பாடலாகத் திரட்டப்பட்டு அவசியமான விடங்களிற் குறிப்புரையெழுதப்பட்டு அச்சிடப்பட்டிருக்கின்றது. இது முமுட்சுக்க ளொவ்வொருவராலும் அத்தியாவசியகமாய் விரும்பத்தக்க தென்பது மிகுப் ரசிக்கும்.

காலிக்கோ பைண்டு - விலை ரூபாய் ஒன்று.

---

சம்ஸ்கிருதமொழிபெயர்ப்புப் புத்தகங்கள்.
இதுகாறும் தமிழில் வாராதவை.

## சித்தாந்தபிந்து. விலை அணு 8.

இது ஸ்ரீசங்கரபகவத் பாதாசாரிய சுவாமிகளருளிச்செய்த தசசுலோகியின் வியாக்கியானம். இவ்வியாக்கியானம்செய்தவர் ஆரியபாஷையில் மகாக்கியாதிபெற்ற மதுசூதன சரசுவதி சுவாமிகள். இப்புஸ்தகம் ஆத்மா இன்னது அநாத்மா இன்னது என்பது பற்றிச் சுருதியாதிப் பிரமாணங்களுடன் யுக்தி சகிதமாக நன்கு விளக்கிக் கூறுகின்றமையின், வேதாந்த சாஸ்திரத்திற் கொரு திறவுகோல் போல்வதாம். இதில் அறிய வேண்டிய விஷயங்களெல்லாம் சுருக்கமாகவும் விளக்கமாகவும் பண்டிதர் முதல் பாமரரீறுயுள்ள யாவரும் நன்குணருமாறு விளக்கப்பட்டிருக்கின்றன. இப்புஸ்தகம் ஒவ்வொருவர்கையிலும் அத்தியாவசியகமாயிருக்கத்தக்கதென்பது அதனது விஷய அட்டவணையைப் பார்க்க நன்கு விளங்கும்.

## வேதாந்தபரிபாஷை.

இது வேதாந்த வித்வத் சிரோமணி யென்று மிகப் பிரசித்தி பெற்றவரான தர்மராஜ தீட்சிதரா லியற்றப்பட்டது. இஃதெட்டுப் பரிச்சேதமுடையது. இந்நூல் வேதாந்தத்திற் குரிய பிரமாணங்க ளிவ்வளவென்பதும் அவற்றின் பயனும் வேறு அநுபவ ரகசியங்களும் தெளிவா யறிந்து கொள்ளலாம். விலை அணு 10.

## தோடகமென்னும்
## வேதசாரசமுத்தரணம்.

ஸ்ரீசங்கரபூஜ்ய பகவத்பாதாசாரிய சுவாமிகளின் முக்கிய சீடருளொருவராகிய ஆனந்தகிரி யென்னும் ஸ்ரீதோடகாசிரியரவர்கள் தமது குருபரன் திருவருளால் பாதங்கடோறும் நன்கு சகணங்கள் வாய்ந்த தோடக சந்தத்தால் மறைமுடி வியாசவையுந் தொகுத்துச் சுருதிசார சமுத்தரணம் என்னு மிந்நூலை வடமொழியிற் றிருவாய்மலர்ந்தருளினர். அருமையும் அருளும்வாய்ந்த விந்நூல் தேவவாணி யுணர்ந்தார்க்கே யன்றித் தமிழ் மக்களுக்குப் பயன்படா திருப்பது கருதி, ஸ்ரீ கோவிலூர் மடாதிபதியா யெழுந்தருளியிருக்கும் ஸ்ரீமத் வீரசேகர ஞானதேசிகர் பாதசேகராகிய ஸ்ரீசுப்பையா சுவாமிகளவர்களால் தமிழில் செய்யுள் வடிவமாக மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. விலை அணு நான்கு.

வேதாந்த புஸ்தகசாலையும், சச்சிதானந்த அச்சியந்திரசாலையும்,
கோமளேசுவரன்பேட்டை, சென்னை.

---

சம்ஸ்கிருத மொழிபெயர்ப்புப் புத்தகங்கள்.
இதுகாறும் தமிழில் வாராதவை.

*ஜகதீசபட்டாசாரிய ரருளிய தருக்காமிர்தமும்*
*ஸ்ரீ மதுசூதன சரஸ்வதி சுவாமிகளருளிய பிரஸ்தானபேதமும்.*
*இவ்விரண்டும் சம்ஸ்கிருதத்தி னின்றும் கோவிலூர் மடாலயம்*
ஸ்ரீ சுப்பைய சுவாமிகளவர்களால்
*மொழிபெயர்க்கப்பட்டன.* விலை அணா எட்டு.

---

## பிரபோதசந்திரோதய நாடகம்.

*இது ஸ்ரீகிருஷ்ணமிசிரரா லியற்றப்பட்டது; சம்ஸ்கிருதத்தினின்றும் பிரஹ்மஸ்ரீ விஷ்ணுபுரம் - இராமசந்திர சாஸ்திரியா ரவர்களால மொழி பெயர்க்கப்பட்டது. வசனம். விலை அணா* 10.

---

## சிவமஹிம்நஸ்தோத்திரம்.

*இது கந்தர்வர்கட் கிறைவராகிய ஸ்ரீபுட்பதந்தாசிரிய ரவர்களால் ஸ்ரீமகாதேவரது அனந்தகல்யாணகுணங்களைத் தொகுத்து முப்பத்தாறு சுலோகவடிவமாகத் திருவாய்மலர்ந்தருளப்பட்டது.*

*இதற்கு ஸ்ரீ அத்வைதசித்தியாதி கிரந்தகர்த்தரும் சர்வஞ்ஞ சூடா* மணியுமாகிய ஸ்ரீமதுசூதனசரசுவதி சுவாமிகளவர்களால் *மிகவுமருமையா தோர் வியாக்கியானஞ் செய்யப்பட் டிருக்கின்றது. பூர்வாசிரியர்களும் மிந்நூற்குப் பாஷியமியற்றி யிருக்கின்றனர். அநேகாசிரியர்களும் அரும்பெரும் வியாக்கியானமும், சுபோதினி யென்னும் சிறியவியாக்கியா னமும் இன்னும்பலவியாக்கியானங்களுமிந்நூற்குள. இத்தகைய அருமை வாய்ந்த விந்நூல் தேவவாணியிலிருப்பதால் அவ்வும்பர்வாணியுணர்ந்தார்க் கன்றித் தமிழ் மக்கட்குப் பயன்படாமையை யுணர்ந்து அவ்வேதுமுனை மாறு ஷெ கோவிலூர்மடாலயம் ஸ்ரீ சுப்பைய சுவாமிகளவர்களால் தமி ழில் செய்யுள் வடிவமாக மொழிபெயர்க்கப்பட்டது. விலை அணா மூன்று.*

---

## மநநமாலை.

*இதில் ஸ்ரீசதாசிவப் பிரஹ்மேந்திரர் திருவாய்மலர்ந்தருளிய அத்* வைதரசமஞ்சரி - ஆத்ம வித்தியா விலாசம், *சொரூபாநுசந்தானமென்னு* சொரூபசாரம், *தத்துவராய ரருளிச்செய்த சசிவர்ணபோதம் முதலிய யிருக்கின்றன. பாக்கெட்சைஸ்* - விலை அணா 2.

---

கோ. வடிவேலுசெட்டியார்.
தமிழ்ப்பண்டிதர்.

25—2—1910. கோமளேசுவரன்பேட்டை, சென்னை.